த. பா. நி. (க.வெ.) வரிசை எண் — 465

# அந்நியச் செலாவணி

ஆசிரியர்
த. இராயர், பி.காம். (ஹானர்ஸ்), எம்.ஏ.,
வணிகவியல் பேராசிரியர்,
திரு. கொழஞ்சியப்பர் அரசினர் கலைக் கல்லூரி,
விருத்தாசலம்.



தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனம்

First Edition—June, 1973

T.N.T.B.S. (C.P.) No. 465



FOREIGN EXCHANGE

T. RAYAR

Price Rs. 7-85

'Published by the Tamil Nadu Text Book Society under the Centrally Sponsored Scheme of Production of books and literature in regional languages at the University level, of the Government of India in the Ministry of Education and Social Welfare (Department of Culture), New Delhi.'

*Printed by*

BHAGAT PRINTERS,
407, M. K. N. ROAD,
ALANDUR, MADRAS-600016.

# அணிந்துரை

திரு. இரா. நெடுஞ்செழியன்
(தமிழகக் கல்வி—உள்ளாட்சித்துறை அமைச்சர்)

தமிழைக் கல்லூரிக் கல்வி மொழியாக ஆக்கிப் பதின்மூன்ருண்டுகள் ஆகிவிட்டன. குறிப்பிட்ட சில கல்லூரிகளில் பி.ஏ. வகுப்பு மாணவர்கள் தங்கள் பாடங்கள் அனைத்தையும் தமிழிலேயே கற்றுவந்தனர். 1968ஆம் ஆண்டின் தொடக்கத்தில் புகுமுக வகுப்பிலும் (P.U.C.), 1969ஆம் ஆண்டிலிருந்து பட்டப் படிப்பு வகுப்புகளிலும் அறிவியல் பாடங்களையும் தமிழிலேயே கற்பிக்க ஏற்பாடு செய்துள்ளோம். தமிழிலேயே கற்பிப்போம் என முன்வந்துள்ள கல்லூரி ஆசிரியர்களின் ஊக்கம், பிற பல துறைகளிலும் தொண்டு செய்வோர் இதற்கெனத் தந்த உழைப்பு, தங்கள் சிறப்புத் துறைகளில் நூல்கள் எழுதித் தர முன்வந்த நூலாசிரியர்கள் தொண்டுணர்ச்சி இவற்றின் காரணமாக இத் திட்டம் நம்மிடையே மகிழ்ச்சியும் மன நிறைவும் தரத்தக்க வகையில் நடைபெற்று வருகிறது. இவ்வகையில், கல்லூரிப் பேராசிரியர்கள் கலை, அறிவியல் பாடங்களை மாணவர்க்குத் தமிழிலேயே பயிற்றுவிப்பதற்குத் தேவையான பயிற்சியைப் பெறுவதற்கு மதுரைப் பல்கலைக்கழகம் ஆண்டுதோறும் எடுத்து வரும் பெருமுயற்சியைக் குறிப்பிட்டுச் சொல்லவேண்டும்.

பல துறைகளில் பணிபுரியும் பேராசிரியர்கள் எத்தனையோ நெருக்கடிகளுக்கிடையே குறுகிய காலத்தில் அரிய முறையில் நூல்கள் எழுதித் தந்துள்ளனர்.

வரலாறு, அரசியல், உளவியல், பொருளாதாரம், தத்துவம், புவியியல், புவியமைப்பியல், மனையியல், கணிதம், இயற்பியல், வேதியியல், உயிரியல், வானியல், புள்ளியியல், விலங்கியல், தாவரவியல், பொறியியல் ஆகிய எல்லாத் துறைகளிலும் தனி நூல்கள், மொழிபெயர்ப்பு நூல்கள் என்ற இரு வகையிலும் தமிழ் நாட்டுப் பாடநூல் நிறுவனம் வெளியிட்டு வருகிறது.

இவற்றுள் ஒன்முன, 'அந்நியச் செலாவணி' என்ற இந் நூல் தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனத்தின் 465 ஆவது வெளியீடாகும். கல்லூரித் தமிழ்க் குழுவின் சார்பில் வெளியான 35 நூல்களையும் சேர்த்து இதுவரை 500 நூல்கள் வெளிவந்துள்ளன. இந் நூல் மைய அரசு கல்வி, சமூக நல அமைச்சகத்தின் மாநில மொழியில் பல்கலைக்கழக நூல்கள் வெளியிடும் திட்டத்தின்கீழ் வெளியிடப்படுகிறது.

உழைப்பின் வாரா உறுதிகள் இல்லை; ஆதலின், உழைத்து வெற்றி காண்போம். தமிழைப் பயிலும் மாணவர்கள் உலக மாணவர்களிடையே சிறந்த இடம் பெறவேண்டும். அதுவே தமிழன்னையின் குறிக்கோளுமாகும். தமிழ்நாட்டுப் பல்கலைக் கழகங்களின் பல்வகை உதவிகளுக்கும் ஒத்துழைப்புக்கும் நம் மனம்கலந்த நன்றி உரியதாகுக.

இரா. நெடுஞ்செழியன்

# முன்னுரை

பன்னாட்டு வணிகரின் அன்றாடப் பன்னாட்டு வணிகத்தில் 'அந்நியச் செலாவணி' (Foreign Exchange) உன்னத இடம் வகிக்கிறது. கல்லூரியில் படிக்கும் மாணவர்கள் மட்டு மல்லாமல், வணிகர்களும், பொது மக்களும் அந்நியச் செலாவணி நடவடிக்கைகளை நன்கு அறிந்திருத்தல் வேண்டும். ஆங்கிலத்தின் மூலம் கற்றுத் தெளிய வாய்ப்பில்லாத அனைவரும் இவ்வந்நியச் செலாவணியின் இயல்பினையும் சிறப்பினையும் அறிந்துகொள்ள ஒரு வாய்ப்பினை ஏற்படுத்தவேண்டும் என்ற ஓர் நல்லெண்ணத் துடனே இந் நூல் எழுதப்பட்டுள்ளது.

'அந்நியச் செலாவணி' மிகவும் சிக்கல் வாய்ந்தது. பல விதப் பன்னாட்டுச் சட்டதிட்டங்களையும் நுணுக்கங்களையும் இவ்வந்நியச் செலாவணி உள்ளடக்கிக் கொண்டிருக்கிறது. தமிழ்நாட்டுப் பாட நூல் நிறுவனம் இவ்வந்நியச் செலாவணி யைப் (Foreign Exchange) பற்றி நூல் ஒன்று எழுதித் தருமாறு பணித்தது. இந் நூல் தமிழ்ப் பாடநூல் நிறுவனத்தின் பதிப்பாக வருகிறது. தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனத்துக்கும், அனைத்துத் துறைகளிலும் வழிகாட்டியாகச் சிறந்து, ஓங்கி, உயர்ந்து வளர்ந்து திகழும் தமிழக அரசுக்கும் எனது உளங் கனிந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்ளுகிறேன்.

இந் நூலில் பணம், அயல் நாட்டு மாற்றுகள், அயல் நாட்டுச் செலாவணி மாற்று அங்காடி, பன்னாட்டுச் செல்லுகள், அயல்நாட்டு மாற்றுக்கான சிறப்புச் சொற்கள், அயல் நாட்டு வணிகத்தில் பயன்படுத்தப்படும் பத்திரங்கள், ஒப்பந்தங்கள், அந்நியச் செலாவணி மாற்று விகிதம் நிர்ணயித்தல், இந்தியாவில் அயல் நாட்டுச் செலாவணிச் சிக்கல்கள், அயல் நாட்டு மாற்று இடர்களைக் களைதல், மாற்றுக் கட்டுப்பாடு, இந்தியாவில் மாற்றுக் கட்டுப்பாடு, நாணயக் கடிதங்கள், பன்னாட்டு நிதி நிறுவனங்கள் ஆகிய பதின்மூன்று தலைப்புகளில் அந்நியச் செலாவணி நடவடிக்கைகள் விளக்கப்பட்டுள்ளன. பலரும் நன்கு அறிந்துகொள்ளும் பொருட்டு முக்கிய ஆங்கிலச் சொற்களும் சொற்றொடர்களும் ஆங்காங்கே தமிழ்க் கலைச் சொற்களுக்குப் பக்கத்தில் குறிப்பிடப்பட்டுள்ளன. இக் கலைச் சொற்களில் உள்ள குற்றங் குறைகளுக்கு ஆசிரியரே பொறுப் பாவார்.

ஆசிரியர்

# பொருளடக்கம்

# 1. பணம்

## (Money)

### பண்ட மாற்றுமுறை

### (Barter System)

ஆதிமனிதனின் வாணிபம் முழுவதும் பண்ட மாற்ருகவே நிகழ்ந்தது. வேடன் தன்வசமுள்ள பச்சைத்தோல், இறைச்சி முதலியனவற்றை உழவனுக்குப் பரிவர்த்தனை செய்து தானியம், வைக்கோல் முதலானவற்றைப் பெற்ருன். மேலும் வளர்ச்சி அடைந்த நிலையில் இவ்விருவரும் தங்கள் பண்டங்களைச் சிற்றூர்த் தொழில் வினைஞனின் (Craftsman) பண்டங்களுக்கு விற்று வந்தனர். இப் பண்டமாற்று வாணிபத்தில் இரண்டு அல்லது மூன்று சிறந்த பண்டங்களின் தராதர மதிப்பு தெரிந்திருக்கக் கூடும். எடுத்துக்காட்டாக, ஒரு கலம் நெல்லுக்கு ஒரு புள்ளி மானைப் பண்டமாற்ருகப் பெறலாம் என்ற நியதி நீண்டகாலமாக மரபு வழக்கிலுள்ளதாகக் கொள்ளலாம். ஆனால், வாணிகத்தில் அதிகம் ஆளப்படாத பண்டங்களின் மதிப்பை எவ்வாறு நிர்ணயிப்பது? ஒரு மான் தோலுக்கு எத்தனை மரக்கால் நெல் மாற்ருகக் (exchange) கொடுக்கப்படவேண்டும்? அதுபோல் ஒரு பசுங்கன்றுக்கு எத்தனை மாங்கனிகள்? ஓர் இளம் மனைவிக்கு எத்தனை மான்கள்? இவை தனிப் பண்டமாற்றில் உள்ள, எளிதில் களைய முடியாத பிரச்சினைகள். பணத்தின் முதற்பணி இப் பிரச்சினைகளுக்குத் துணைபுரிவதே. பண்டங்கள் யாவும் ஒரு பண்டத்தின் மதிப்பளவால் நிர்ணயிக்கப்படுகின்றனவென வைத்துக் கொள்வோம். இப் புள்ளிமானல் எப்பொருளும் மதிப்பளவை செய்யப்படும். இதன்மூலம் இரண்டு பண்டங்களின் மாற்றுப் பேரம் எளிதாக நிர்ணயிக்கப்படுகிறது. ஒரு வேட்டை வில்லுக்கு இரண்டு புள்ளிமான்கள்; 100 மாங்கனிகளுக்கு ஒரு புள்ளிமான்; ஒரு கலம் நெல்லுக்கு ஒரு புள்ளிமான்; அழகிய

இளம் மனைவிக்கு 100 புள்ளிமான்கள். இவ்வாறு ஒவ்வொரு பொருளுக்கும் மாற்றுப் பேரம் நிர்ணயிக்கப்படுகிறது. இப் புதிய அமைப்பு நமக்குச் சர்வ சாதாரணமாகத் தோன்றலாம்.

நீளத்தை அளக்க அடி அல்லது மீட்டரையும், நிறையை அளக்கக் கிலோகிராமையும், வெப்பத்தை அளக்க வெப்ப மானியையும், தானியங்களை அளக்க லிட்டரையும் தோற்றுவித்ததைப் போன்றே பொருள்களின் மதிப்பை அளக்க இப் புதிய கண்டுபிடிப்புத் தோன்றியது. நூறு மாங்கனிகளுக்கு ஒரு கலம் நெல்; ஒரு கலம் நெல்லுக்கு ஒரு புள்ளிமான்; ஒரு புலித் தோலுக்கு ஆறு புள்ளிமான்கள் என்றால் ஒரு புலித்தோலுக்கு ஆறு கலம் நெல் என்று அறிகிறோம். சாதாரணப் பண்டமாற்று நிலையிலிருந்து பணக் கணக்கு முறையை மனிதன் அமைக்க முயன்றிருப்பது இதன் மூலந்தானெனத் தெரிகிறது.

## பண்டமாற்றின் இடர்ப்பாடுகள்

1. பண்ட மாற்றுமுறையில் இரண்டு விருப்பங்களின் சந்திப்பு (Double coincidence of wants) நிகழ்தல் வேண்டும். எடுத்துக்காட்டாக, கண்ணன் என்பவர் ஆடை கொடுப்பவராகவும், மணிவண்ணன் என்பவர் ஆடு கொடுப்பவராகவும் வைத்துக் கொள்வோம். ஆடு வைத்திருக்கும் மணிவண்ணனுக்கு ஆடை வேண்டியிருக்கலாம். அதே போன்று ஆடை வைத்திருக்கும் கண்ணனுக்கு ஆடு வேண்டியிருந்தால்தான் அவ்விருவரும் தம்மிடையே உள்ள பொருள்களை மாற்றிக் கொள்ளக்கூடிய வாய்ப்பும், தம் தேவைகளை நிறைவேற்றிக் கொள்ளக்கூடிய வழியும் பிறக்கும். அவ்வாறில்லாமல் ஆடை வைத்திருக்கும் கண்ணனுக்கு ஆடு அல்லாமல் மாடு வேண்டியிருப்பின் இவ்விருவரிடையே பண்டமாற்று நிகழ்தலரிது. ஆடு வைத்திருக்கும் மணிவண்ணனுக்கு ஆடை தேவைப்பட்டும் அதனைப் பெறமுடியாத நிலையில் உள்ளார். இதனை விருப்பங்கள் இரண்டின் சந்திப்பு (Double coincidence of wants) நிகழவில்லை எனலாம். இவ்விருவரின் விருப்பங்கள் இரண்டும் பொருந்தா நிலையில் உள்ளதால் பண்டமாற்று நிகழாது. ஆகவே, இதனைப் பண்ட மாற்றுமுறையின் பெருங்குறை எனலாம்.

2. பண்டமாற்றுமுறையில் பண்டங்களின் மதிப்பைப் பொது அளவுகோல் கொண்டு (Common measure of values) அளக்க வழியில்லை. முன் கூறிய எடுத்துக்காட்டில் உள்ளதுபோல் ஓர் ஆட்டுக்கும், ஒரு மாட்டுக்கும், ஒரு வேட்டிக்கும் உள்ள மாற்று மதிப்பை நிர்ணயிப்பது மிகவும் கடினம். இரண்டு

பண்டங்களின் மதிப்பை நிர்ணயிப்பதே கடினம் என்றால் பல பண்டங்களுக்கிடையேயுள்ள மாற்று மதிப்பைக் கணக்கிடுவது அதனினும் அரிதாகும்.

3. பண்ட மாற்றுமுறையில் பெரிய அளவு மதிப்புள்ள பொருள்களைச் சிறிய அளவு மதிப்புள்ள பொருள்களுக்கு மாற்றுவதில் பல இடர்ப்பாடுகளிருந்தன (Indivisibility of certain commodities). மேலும், முன் கண்ட எடுத்துக்காட்டை எடுத்துக் கொண்டால் ஓர் ஆட்டுக்கு ஐந்து வேட்டிகள் என்ற விகிதம் இருப்பதாகக் கொள்வோம். ஆடு வைத்திருப்பவருக்கு ஒரு வேட்டி மட்டுமே வேண்டியிருந்தால் அவர் ஆட்டைத் துண்டித்துத் தரமுடியாது. ஆகவே, பண்டங்களைப் பிரிக்க முடியாத நிலையில் பண்ட மாற்றுமுறை வசதியற்றதாக இருந்திருக்கிறது.

4. பண்டங்களைச் சேர்த்து வைக்கும் தொல்லையும் மிகுதி. எடுத்துக்காட்டாக, ஒரு பழ வியாபாரி சர்க்கரை வியாபாரியுடன் பண்டமாற்று செய்வதாகக் கொள்வோம். சர்க்கரை வியாபாரிக்குப் பழம் தேவைப்படாத நேரங்களில் மற்றவர்கள் அதனைப் பெற விரும்பாவிடில் அதனைச் சேர்த்து வைத்துப் பின்னர்ப் பயன்படுத்துவது என்பது இயலாது. ஏனென்றால் காலம் கடந்தால் பழங்கள் அழுகிக் கெட்டுவிடும். அதாவது பண்டம் மதிப்பிழந்து போய்விடும்.

மேற்சொன்ன குறைகளைப்போக்க நாகரிக முயற்சியால் படிப்படியாகப் பணம் (Money) கண்டுபிடிக்கப்பட்டது. தேவையான எந்தப் பொருளையும் பணம் கொடுத்து வாங்கலாம். தேவைக்கதிகமாகத் தயாரிக்கும் எந்தப் பொருளையும் விற்கலாம். இரு விருப்பங்கள் சந்திக்க வேண்டிய அவசியமே இல்லை. சிறிய அளவு மதிப்பு பெரிய அளவு மதிப்பு உள்ள பண்டங்களை அவற்றிற்குரிய காசுகொடுத்து வாங்கலாம். எந்தப் பொருளுக்கும் உள்ள மதிப்பைத் தக்க விலை கூறி அளவிடலாம். பணத்தைச் சேர்த்து வைப்பதும் எளிது. அது எளிதில் விரைவில் மதிப்பிழப்ப தில்லை. இவ்வாறு பண்டங்களை வாங்கவும், விற்கவும் ஏற்ற வகையில் உள்ள பணத்தின் இலக்கணம், முக்கியப்பணிகள், தன்மைகள் ஆகியவற்றை ஆராய்வோம். பொறித்துறையில் (Mechanics) சக்கரமும், விஞ்ஞானத்தில் நெருப்பும், அரசியலில் வாக்குச் சீட்டும் அடிப்படையான கண்டுபிடிப்புக்களாக இருப்பவை போன்று வாணிகத்துறையில் பணமும் ஓர் இன்றியமையாத கண்டுபிடிப்பாகும்.

## பணம் — இலக்கணம்

பணத்தைப் பற்றிக் கூறும் பிரபலப் பேராசிரியர்கள் அனைவரும் பணத்தின் பணிகளைப் பற்றிக் குறிப்பிடுகின்றனரே அன்றிப் பணத்தின் இலக்கணத்தைப் பற்றிக் குறிப்பிடவே இல்லை. பணம் எதைச் செய்கிறதோ அதுவே பணம் (Money is that Money does) என்று திரு. எஃப். ஏ. வாக்கர் கூறுகிறார். எந்தப் பொருள் ஒன்று மாற்று மத்திமத்திற்காகக் (medium of exchange) குறிப்பிட்டுப் பயன்படுத்தப்படுகின்றதோ அதுவே பணமாகும் என்று திரு. எஃப். எம். டெய்லர் சொல்லுகிறார். பரவலாக எந்த ஒன்று பொருள்களுக்காகச் செலுத்துவதற்கும் மற்ற வியாபாரப் பொறுப்புக்களை நிறைவேற்றுவதற்கும் ஏற்றுக் கொள்ளப்படுகிறதோ அதுவே பணமாகும் என்று திரு. டி. கெச். ராபர்ட்சன் என்பவர் விளக்குகிறார். மற்ற பொருள்களின் மதிப்பை அளக்கும்போது அளவையாகப் பயன்படுத்தப்படும் பொருளே பணமாகும் என்று திரு. கெஸ்ட்டோவ் காசல் குறிப்பிடுகிறார். எப் பொருள் ஒன்று மத்திமமாகவும் அல்லது மதிப்பு அளவையாகவும் பெரும்பாலும் ஏற்றுக் கொள்ளப்பட்டுப் பொதுவாகப் பயன்படுத்தப்படுகிறதோ அதுவே பணம் என்று திரு. ஆர். பி. கென்ட் என்பவர் உரைக்கிறார். எந்தப் பொருள் ஒன்று மாற்று மத்திமமாக எளிதில் கைமாறக் கூடியதாகவும் பின்னர் அடைக்கப்படும் கடன்களுக்காகப் பெற்றுக் கொள்ளப் படுவதாகவும் உள்ளதோ அதுவே பணமாகும் என்று திரு. ரிச்செர்ட்பீன் என்பவர் விளம்புகிறார். ''பணம் மாற்று மத்திமமாகவும், (அதாவது கடனை அடைக்கும் சாதனமாக) அதே சமயத்தில் மதிப்பளவையாகவும், மதிப்பின் நிலைக்களனாகவும் பொதுவாக ஏற்றுக் கொள்ளப்படுகிற (generally acceptable) ஏதாவது ஒரு பொருள் என்று விளக்கப்படலாம்'' என்று திரு. ஜியோஃபரி கிரௌத்தர் கூறுகிறார். ஆகவே, பணம் என்பது ஒரு மாற்று மத்திமமாகவும், மதிப்பளவையாகவும், பின்னர் செலுத்தப்படும் கடன்களுக்கு ஒரு தரக்கோலாகவும், மதிப்பு நிலைக்களனாகவும், மதிப்பை இடம் விட்டு இடம் மாற்றி எடுத்துச் செல்லவும் மிகவும் வசதியாக விளங்குகிறது.

## பணத்தின் பணிகள்
### (Functions of Money)

1. மாற்று மத்திமம் (Medium of exchange); 2. மதிப்பளவை (Measure of value); 3. பின்னர் செலுத்தும் கடன்களுக்கு ஒரு தரக்கோல் (Standard of deferred payment);

4. மதிப்பு நிலைக்களன்; 5. மதிப்பை இடம் விட்டு இடம் எடுத்துச் செல்லல் (transfer of value); 6. சமூக வருவாயைப் பகிர்ந்தளித்தல் (distribution of social income); 7. இறுதிநிலைப் பயன்பாட்டுச் செலவுகளைச் சமமாக்குதல் (equalisation of marginal utility of expenditure); 8. நாணய அல்லது கடன் அமைப்பின் அடிப்படை (basis of credit system); 9. செல்வத்தை ஒரே தன்மையதாகவும் எளிதில் மாற்றக் கூடியதாகவும் செய்தல் (imparting uniformity and liquidity to wealth).

1. **பணம் ஒரு மாற்று மத்திமமாகப் (Medium of exchange) பணியாற்றுகிறது:** பொருள்களின் மதிப்பு விலையாகக் குறிக்கப் படுகிறது. அவ் விலையைப் பணமாகச் செலுத்திப் பொருள்களை வாங்கலாம். இதுபோன்று ஒருவர் தான் புரியும் பணிகளுக்கு ஊதியமாகப் பணத்தைப் பெறலாம். ஆகவே, பண்டங்களுக்கும், பணிகளுக்கும் மாற்றாக எவரும் ஏற்றுக் கொள்ளக்கூடிய சாதனமாக விளங்குவது பணம். பணத்தைக் கொண்டு பொருள்களை வாங்கலாம்; பொருள்களை விற்றுப் பணம் பெறலாம்.

2. **ஒரு மதிப்பளவையாகப் (Measure of value) பணிபுரிகிறது பணம்:** ஒவ்வொரு பொருளின் மதிப்பையும் பணமாகிய அளவு கோல் கொண்டு அளக்கலாம். இவ்வாறு அளக்கப்படும் மதிப்பை விலை என்று கொள்கிறோம். பற்பல பண்டங்களுக்கிடையேயுள்ள மதிப்பை ஒப்பிட பணம் வகை செய்வதால் பணம் ஒரு பொது மதிப்பளவையாக அமைந்துள்ளது.

3. **கடன் பேரில் பொருள்களை வாங்கவும் விற்கவும் பணம் வகை செய்கிறது.** பணத்தின் மதிப்பு மாறாமலிருக்குமென்றால்தான் பொருள்களை விற்பவர் கடன் பேரில் விற்பார். அக் கடன் திருப்பித் தரப்படும்பொழுது பொருள்களை விற்றபோது அதற்கிருந்த மதிப்பு இருக்கும் என்ற நம்பிக்கைதான் கடன் நடவடிக்கைகளுக்கு அடிப்படையாக அமைந்து இருக்கிறது. கடனைத் திருப்பிப் பெறும்பொழுது பணத்தின் மதிப்பு குறைந்துபோகும் என்றுணர்ந்தால் எவரும் கடன் கொடுக்க முன்வரமாட்டாராதலால் **பணம் பின்னர் செலுத்தப்படும் கடன்களுக்கு ஒரு தரக் கோலாக (Standard of deferred payment) அமைந்துள்ளது.**

4. **பணத்தைச் சேர்த்து வைப்பது பண்டங்களைச் சேர்த்து வைப்பதைவிட எளிதான காரியம்.** சில பண்டங்களுக்கு நாளாக ஆக மதிப்பு குறைந்து பின்னர் மதிப்பே இல்லாமலாகலாம். ஆனால், பணத்தின் மதிப்பு பெரும்பாலும் நிலையானதாக

இருக்கிறது. மதிப்பிழப்பின்றிப் பணத்தைச் சேர்த்து வைக்கலாம். ஆகவே, மதிப்பு நிலைக்களன் (store of value) என்ற சிறப்பு பணத்துக்குண்டு.

5. பணத்தை மாற்றிக் கொடுத்தல் பண்டங்களை மாற்றிக் கொடுத்தலைவிட எளிது. பண்டங்கள் பெரியனவாகவும் சிறியன வாகவும் இருக்கலாம். அவற்றைப் பிற இடங்களுக்கு எடுத்துச் செல்வதும் கடினமான வேலையே. ஆகவே, பண்டங்களின் மதிப்பைப் (transfer of value) பணமாக மாற்றி இடம் விட்டு இடம் மாறி எடுத்துச் செல்வது மிகவும் எளிதாகிறது.

6. சமூக அல்லது நாட்டு வருவாயை உற்பத்திக் காரணி யாளர்களுக்கு பகிர்ந்தளிப்பதற்குப் பணம் வழிவகை செய்கிறது. தொழிலாளிகள், நிலக்கிழார்கள், முதலாளிகள், தொழில் முயல் வோர் ஆகியோர் கூட்டுறவு இல்லாமல் நவீன உற்பத்தி செழித் தோங்காது. அவ்வாறு கூட்டாக உற்பத்தி செய்த பொருள்கள் மேற்சொன்ன காரணியாளர்களுக்குப் பொதுவானது. இக் கூட்டு அல்லது பொதுப் பொருளை, பணத்தின் துணையில்லாமல் உற்பத்திக் காரணியாளர்களுக்குப் பகிர்ந்தளிப்பதென்பது எளிதன்று. நாட்டுப் பொருள்களைப் பற்பல மக்களுக்குப் பகிர்ந் தளிப்பதன்மூலம் பணம் பொருளாதார வளர்ச்சிக்குத் தூண்டு கோலாக அமைகிறது.

7. இந் நவீன காலத்தில் பணத்தின் துணைகொண்டுதான் சரக்குகளை வாங்க முடிகிறது. நுகர்வோர்க்குப் பொருள்களின் இறுதிநிலைப் பயன்பாடுகளை அளப்பதற்கும், உற்பத்தியாளர் களுக்கு உற்பத்திக் காரணிகளின் இறுதிநிலை விளைவுகளை அளப்ப தற்கும் பணம் துணைபுரிகிறது. ஆகவே, நுகர்வோர் பணத்தின் துணையால் ஒவ்வொரு பொருளின் இறுதிநிலைப் பயன்பாட்டை அளந்தறிந்து தங்களுக்குத் தேவையான பொருள்களை வாங்கி மிகுதியான பயன்பாடுகளை அடைகின்றனர். இவ்வாறே உற்பத்தி யாளர்கள் உற்பத்திக் காரணிகளின் இறுதிநிலை விளைவை அறிந்து கொண்டு ஒவ்வொரு காரணியையும் தங்களுக்குகந்தவாறு மாற்றி அமைத்துக்கொண்டு உச்ச அளவில் பொருள்களை உற்பத்தி செய்கின்றனர்.

8. கடன் முறை தற்காலப் பொருளாதார வளர்ச்சிக்கு மிகவும் இன்றியமையாதது என்றால் இக் கடன் முறையே பணத்தின் அடிப்படைதான். பணத்தின் அளிப்பு அதிகரிப்பு அல்லது அளிப்புக் குறைப்பால் கடன் அளவும் பெருகுகிறது அல்லது சுருங்குகிறது.

9. பலவிதமான செல்வங்களைப் பணம் ஒரே தன்மைய தாகவும் எளிதில் மாற்றக் கூடியதாகவும் செய்கிறது. நீர் எப்பானையில் ஊற்றப்பட்டாலும் அப்பானையின் வடிவம்பெறுவது போல் பணமாக மாற்றி வைக்கப்பட்டிருக்கும் செல்வத்தைக் கொண்டிருப்பவன் எப்பொருளையும் வாங்கிக் கொள்ளலாம்.

## பணத்தின் தன்மைகள்

ஆரம்ப காலத்தில் மனிதன் ஆடு, மாடு, பன்றி, மான் முதலானவற்றை மாற்று மத்திமமாகப் பழக்கத்தில் வைத் திருந்தான். பின்னர் பொன், வெள்ளி, செம்பு, தாமிரம், நிக்கல் தாள் முதலானவற்றைப் பணமாகப் பழக்கத்தில் வைத்துள்ளனர். நல்ல பணசாதனத்துக்கு இருக்க வேண்டிய தன்மைகளை இனி ஆராய்வோம்.

1. பணமாகப் பயன்படுத்தப்படும் பொருள் எளிதில் எடுத்துச் செல்லக் கூடியதாக (portability) அமைதல் வேண்டும். சிறிய அளவினதாயினும் பெருமதிப்புடைய பொருளாக இருத்தல் வேண்டும். இதற்குகந்ததாகப் பொன், வெள்ளிப் பணங்களும் செலாவணித் தாள்களும், காசோலைகளும் (cheques) அமைந்துள்ளன.

2. மக்கள் எல்லோரும் மாற்றுச் சாதனமாக ஏற்றுக் கொள்ளக்கூடிய (acceptability) சாதனமே பணமாகப் பயன் படுத்தப்படவேண்டும். பொன், வெள்ளி நாணயங்கள் உலக மக்களனைவராலும் பணமாகவும், நகைகளாகவும் ஏற்றுக் கொள்ளப்படுகின்றன.

3. பணமாகப் பயன்படுத்தப்படும் சாதனம் எளிதில் அறிந்து கொள்ளக்கூடியதாக அமைதல் வேண்டும். பொன் வெள்ளி நாணயங்களுக்கு இத்தன்மை உண்டு. மற்ற உலோக நாணயங்களிலிருந்து இவற்றைப் பிரித்தறியலாம்.

4. பணமாகப் பயன்படுத்தப்படும் பொருள் விரைவில் அழிந்து போகாமல் நீடித்த பயனுடையதாகவும் (durability) இருத்தல் வேண்டும். ஆளுக்கு ஆள் கைமாறும்பொழுதும், நீடித்து வைத்திருக்கும்பொழுது தன்மை மாறுமலும், சேத மடையாமலும் இருக்கும் பொருளே பணமாகக் கையாளப் படவேண்டும். பொன், வெள்ளி நாணயங்கள் நீடித்துழைக்கும் தன்மையன.

5. பணமாகப் பயன்படுத்தும் சாதனம் ஒரே தன்மையுடை யதாய் (homogeneous) இருத்தல் வேண்டும். ஒரே மதிப்புள்ள

அனைத்துக் காசுகளும் அதே மதிப்புடையதாக இருத்தல் வேண்டும். எடுத்துக்காட்டாக, 22 காரட் பொன் நாணயம் காசாகப் பயன்படுத்தப்படுமானால் அனைத்துப் பொன் நாணயங்களும் 22 காரட் உள்ளதாகவும் ஒரே மதிப்புடையதாகவும் அமைந்திருக்க வேண்டும்.

6. சிறுசிறு பிரிவுகளாகப் (divisibility) பிரிக்கக்கூடிய சாதனத்தைப் பணமாகப் பயன்படுத்த வேண்டும். பிரிவுக்கு ஏற்றபடி மதிப்பும் விகிதப்படி அமைதல் வேண்டும். இவற்றை உருக்கி நட்டமில்லாமல் ஒன்று சேர்க்கும்படியும் அமைய வேண்டும்.

7. எந்த உலோகத்தை விரும்பிய உருவத்திலும் விரும்பிய வேலைப்பாடுகளுடனும் உருக்கி அச்சாகச் செய்ய முடியுமோ (mallability) அதையே பணச் சாதனமாகப் பயன்படுத்தத் தகுதியுடையதாக்க வேண்டும்.

8. பணமாகப் பயன்படுத்தப்படும் சாதனம், பிற பண்டங்களின் மதிப்பை அளவிடக்கூடிய தரக்கோலாக அமையவேண்டும். ஆகவே, அதன் மதிப்பு நிலையானதாக (stability) இருக்கவேண்டும். இதனால் பணமாகப் பயன்படுத்தப்படும் சாதனம், மதிப்பு ஏற்றத் தாழ்வு ஏற்படாத ஒன்றாக அமைய வேண்டும்.

பொன், வெள்ளி ஆகிய உலோகங்களுக்கு மட்டுமே மேற்சொன்ன தன்மைகள் உண்டாகையால், அவை கிடைத்தற்கரியது ஆகிவிட்டபடியால், புழக்கத்திலும் அவற்றைக் காண்பதரிதாகி விட்டது.

## பணத்தின் வகைகள்
## (Kinds of Money)

பற்பல விதமாகப் பொருள்கள் உலகத்தின் பல பகுதிகளிலும் வெவ்வேறு காலங்களில் பணமாகப் பயன்படுத்தப்பட்டு வந்தன. கிரேக்க நாட்டில் எருதுகளும், திபெத்தில் தேயிலையும், ஜப்பானில் அரிசியும் பணமாகப் பயன்படுத்தப்பட்டன. சில பெருமளவுடையதாகவும், அழியுந்தன்மையதாகவும், எளிதில் எடுத்துச் செல்ல முடியாதவையாகவும் இருந்தன. ஆகவே, விலையுயர்ந்த உலோகங்களான பொன்னும் வெள்ளியும் பணமாகப் பயன்படுத்தப்பட்டு வந்தன. பின்னர் இவை சிறு சிறு நாணயங்களாக வார்ப்படம் செய்யப்பட்டன. பின்னரே தான் நாணயங்கள் பணமாகப் பயன்படுத்தப்பட்டன.

1. கணக்கலகு (Unit of Account): இது ஒரு பண அலகாகும். விலை, கடன், மற்ற கடன் சார்ந்த பொறுப்புகள் யாவும் இந்தியாவில் ரூபாய்கள், அமெரிக்காவில் டாலர்கள், ஃபிரான்சில் ஃபிராங்குகள், இங்கிலாந்தில் பவுண்டுகள் என்று கொள்ளப்படுகின்றன.

2. உண்மையான பணம் (Actual Money): இது மதிப்பு நிலைக் களனாகவும், மாற்று மத்திமமாகவும், புழக்கத்திலுள்ள உண்மையான காசுகளையும், செலாவணித் தாள்களையும் குறிக்கின்றது. எடுத்துக்காட்டு: ஒரு ரூபாய் நாணயம், ரூ. 2, 5, 100, 1000 செலாவணித் தாள்கள்.

3. உலோக நாணயங்கள் (Metallic Money): இந்நாணயங்கள் பொன், வெள்ளி, தாமிரம், செம்பு முதலிய உலோகங்களால் பல வேலைப்பாடுகளுடனும், முத்திரைகளுடனும் பல எண்ணலகுகளிலும் வார்ப்படம் செய்யப்படுகின்றன. (எ.கா.): ஒரு ரூபாய், 50, 25, 20, 10, 5, 3, 2, 1 காசுகள்.

4. தாள் நாணயம் (Paper Money): அரசு, வங்கி ஆகியவற்றால் அச்சடிக்கப்படுகிற செலாவணி நோட்டுகளைத் தாள் நாணயம் என்கிறோம். (எ.கா.): ஒரு ரூபாய் நோட்டு மட்டும் இந்திய அரசினரால் அச்சடிக்கப்படுகிறது. மற்ற ரூ. 2, 5, 10, 20, 100, 1000, 10,000 மதிப்பளவுள்ள நோட்டுகள் யாவும் இந்திய ரிசர்வ் வங்கியால் அச்சடிக்கப்படுகின்றன.

5. முழுமதிப்புடைய பணம் (Full Bodied Money): எந்த ஒரு நாணயத்தின் இயல் அல்லது உலோக மதிப்பும், முக மதிப்பும் சரிசமமாக இருக்கின்றனவோ அந் நாணயமே முழு மதிப்புடைய பணமாகும்.

6. பதிலிப் பணம் (Representative Money): முழு மதிப்புடைய திட்டப் பணத்திற்குப் பதிலாகப் பயன்படுத்தப்படும் பணத்தைப் பதிலிப் பணம் எனலாம். இப் பணத்தை எப்பொழுது வேண்டுமானாலும் திட்டப் பணமாக மாற்றிக் கொள்ளலாம். செலாவணி நோட்டுகளைப் பதிலிப் பணமாகக் குறிப்பிடலாம். இவற்றைக் கையாள்வதும், சேர்த்துவைப்பதும் எளிது. இவை பொன், வெள்ளி ஆகிய உலோகங்களால் ஆக்கப்படுகின்றன.

7. மாற்றுரிமையுடைய பணம் (Convertible Money): இது தேவை உள்ளபோது காசு அல்லது நாணயமாக மாற்றக் கூடிய பணத்தைக் குறிக்கிறது.

8. மாற்றுரிமையற்ற பணம் (Fiat Money-Incorvertible Money): காசுகளாக மாற்ற முடியாத பதிலிப் பணத்தை இது

குறிப்பிடுகிறது. எடுத்துக்காட்டாக ஒரு ரூபாய்த் தாள் பணம். எந்த ஒரு தாள் நாணயம் பொன் அல்லது வெள்ளியாக மாற்ற முடியாது என்று அறிவிக்கப்படுகிறதோ அதனை ஃபியட் பணம் என்கிறோம்.

9. சட்டமுறைப் பணம் (Legal Tender Money): கடன்களை அடைக்கப் பயன்படுத்தப்படும் பணமே சட்டமுறைப் பணம் எனலாம். இந்தியாவில் புழக்கத்திலுள்ள ரூ. 1, 2, 5, 10, 20 100, 1000 நோட்டுகளும், ஒரு ரூபாய், அரை ரூபாய் நாணயங்களும் முழுச் சட்டமுறைப் பணங்களாகும்.

10. விருப்பப் பணம் (Optional Money): வணிக வழக்கில் உள்ள காசோலை, (cheque) உண்டியல் (Bill of-Exchange), உறுதிப் பத்திரம் (promisory note) முதலியவற்றைக் கடனைக் கொடுத்தவர் தன் விருப்பத்திற்குகந்தவாறு பணமாக ஏற்றுக் கொள்ளலாம். அல்லது ஏற்றுக்கொள்ளாமலும் இருக்கலாம். ஏற்றுக் கொள்ளவேண்டும் என்ற கட்டுப்பாடும் இல்லை. ஆகவே, இவற்றை விருப்பப் பணம் என்கிறோம்.

11. ஒப்புப் பணம் (Token Money): இது மதிப்புக் குறைவான உலோகங்களைக் கொண்டு செய்யப்படும் நாணயமாகும். இதனுடைய முகமதிப்பு உலோக மதிப்பைவிட அதிகமாக இருக்கும். சில்லறை மாற்றாக நிக்கல், செம்பு, தாமிரம் போன்ற உலோகக் கலப்பைக் கொண்டு இவை செய்யப் படுகின்றன. 1, 2, 3, 5, 10, 20, 25, 50 பைசா நாணயங்களும் ஒப்பு நாணயங்களாகும். இந் நாணயங்களைத் துணைப் பணம் (Subsidiary Money) என்றும் கூறுவதுண்டு.

12. வைப்புப் பணம் அல்லது பாங்குப் பணம் (Deposit Money): தற்காலப் பாங்குகளால் இவ் வைப்புப் பணம் உண்டாக்கப் படுகின்றது. வாடிக்கையாளருக்குப் பாங்கினால் திருப்பிக் கொடுக்க வேண்டிய கடன்களை இது குறிக்கிறது. வாடிக்கையாளர்களின் பணம் அல்லது காசோலையைப் பாங்கிற்குக் கொடுத்தால் இவ் வைப்புப் பணம் உண்டாகிறது.

## பணத் திட்டம்
### (Monetary Standard)

பணப் பொருளாதாரத்தில் புழக்கத்திலிருக்கும் திட்டப் பணத்தையே பண முறைத்திட்டம் என்று கொள்கிறோம். எந்த நாடாவது பொன்னையோ அல்லது வெள்ளியையோ பண அலகாகப் பயன்படுத்தப்படும் பொருளாகக் கொண்டால் அந்

நாடு பொன் அல்லது வெள்ளித் திட்டத்தின்கீழ் (gold or silver standard) உள்ளது எனலாம். அந்நாடே இரண்டு உலோகங்களையும் திட்டப் பணமாகக் கொண்டிருந்தால் அந் நாடு (bimetallic or double standard) இரட்டை உலோக நாணய முறையில் விளங்குகிறது எனலாம். அந் நாடு தாள் பணத்தைத் திட்டப் பணமாகக் கொண்டிருந்தால் அத் திட்டத்தைத் தாள் நாணயத் திட்டம் (Paper standard) எனலாம்.

## இரட்டை உலோக நாணயத் திட்ட முறை
## (Bi-Metallism)

இத் திட்டத்தின்கீழ் பொன்னும் வெள்ளியும் ஒரே நேரத்தில் திட்டப் பணமாகப் பயன்படுத்தப்படுகின்றன. ஒன்றுக்கு மற்றொரு நாணயத்தை மாற்றிக் கொள்ளலாம். கடனைத் திருப்பிக் கொடுப்பதற்கும் இந் நாணயங்கள் பயன்படுத்தப்படுகின்றன. இந் நாணயங்களைக் கொண்டு பொருள்களை வாங்கலாம் அல்லது விற்கலாம். உண்மையிலேயே தாள் நாணயம் புழக்கத்திலிருந்தாலும் அதற்குப் பதிலாக பொன் அல்லது வெள்ளி நாணயமாக மாற்றிக் கொள்ளலாம்.

சிறப்பியல்புகள்: (1) இத் திட்டத்தின்கீழ் இரு உலோகங்கள் புழக்கத்திலிருக்கவேண்டும். (2) இவ்விரு உலோகங்களுக்குள்ள தொடர்பு, நாணயச்சாலை விகிதத்திற்கு (mint ratio) உகந்தவாறு அமைந்து இருக்கவேண்டும். (3) இவ்விரு உலோகங்களின் நாணயங்கள் வரையறையற்ற சட்ட திட்ட நாணயமாக இருத்தல் வேண்டும் (standard and unlimited legal tender). (4) இவ்விரு உலோகங்களில் எதில் வேண்டுமானாலும் சுயேச்சையான நாணயங்கள் தயாரித்துக்கொள்வதாக இருத்தல் வேண்டும். (5) சுயேச்சையான இறக்குமதி, ஏற்றுமதி இவ்விரு உலோகங்களுக்கிருத்தல் வேண்டும்.

## கிரஷாம் விதி
## (Gresham's Law)

முழு மதிப்புள்ள திட்ட நாணயங்களும், பெயரளவு மதிப்புள்ள (nominal value) ஒப்பு நாணயங்களும் ஒன்றாகப் புழக்கத்திலிருக்கும்போது, மக்கள் நல்ல மதிப்புள்ள நாணயங்களைத் தம்மிடம் இருத்திக்கொண்டு பழைய, தேய்ந்த, ஒப்பு நாணயங்களையே புழக்கத்தில் வைத்துக்கொள்வர். இதேபோன்று பொன் நாணயங்கள் புழக்கத்திலிருந்த காலத்தில் அரசு நாணயச்

சாலையிலிருந்து வரும் புத்தம் புதிய நாணயங்களைத் தம் கையில் இருத்திக்கொண்டு பல காலம் புழக்கத்திலிருந்துவரும் தேய்ந்த நாணயங்களையே மேலும் புழங்கி வந்தனர். இப் போக்கையே சர் தாமஸ் கிரஷாம் என்ற நிபுணர் 'கெட்ட பணம் நாளடைவில் நல்ல பணத்தைப் புழக்கத்திலிருந்து வெளியேற்றிவிடும்' என்று கூறினார். கெட்ட பணம் என்று குறிப்பிடுவது தேய்ந்த பணத்தையும், முகமதிப்பைவிட உண்மை மதிப்புக் குறைந்த ஒப்பு நாணயத்தையும் எனலாம்.

## தனி உலோக நாணய முறை
## (Mono-Metallism)

தனி உலோக நாணயமுறை என்பது ஒரே உலோகம் நாணயமாகப் புழக்கத்தில் உள்ளதைக் குறிப்பது. வெள்ளியோ, பொன்னோ தனி உலோக நாணய முறையில் கையாளப் பட்டு வந்தது. முதன் முதலாக வெள்ளி இம் முறையில் இருந்தது. எடையிலும், அளவிலும் நிலையான உயர்மதிப்பை உடைய பொன், வெள்ளிக்குப் பதிலாகப் பின்னர் தனி உலோக நாணய மாகப் பயன்படுத்தப்பட்டது. 1873-ல் பெரும்பாலான நாடு களில் வெள்ளி இம் முறையில் இருந்து வந்தது. 1893-க்குப் பிறகு இந்தியாவில் வெள்ளிக்குப் பதிலாகப் பொன் நாணயம் பயன் படுத்தப்பட்டது.

## பொன் திட்டம்
## (Gold Standard)

முதன் முதலாக 1816-ல் இங்கிலாந்துதான் பொன் திட்டத்தைக் கடைப்பிடித்தது. மற்ற வளம் மிகுந்த நாடுகளும் இத் திட்டத்தைப் பிறகு கடைப்பிடித்தன. மற்ற ஏழை நாடுகளும் பொன் மாற்றுத் திட்டத்தின்கீழ் பொன் திட்டத்தின் நலன்களை எல்லாம் பெற்றுவந்தன. ஆனால், முதல் உலகப்போரின் கேடுகள் இத் திட்டத்திற்கு இடையூறாய் நின்று மாற்ற முடியா தாள் நாணயத் திட்டத்திற்குக் கொண்டுவந்து விட்டது. பண அலகின் மதிப்பும், பொன் நாணயங்களின் எடையின் மதிப்பும், குறிப்பிட்ட ஒரே நிலையில் ஒரு நாடு வைத்திருப்பதைப் பொன் திட்டம் எனலாம். பொன் திட்டம் ஒரு மதிப்பளவையாகவும், நாட்டின் பண அலகு பொன்னாக மாற்றவும் அல்லது ஒரு குறிப் பிட்ட அளவு பொன்னாகவும் நிர்ணயிக்கப்பட்டுள்ளது. ஒரு நாட்டின் செலாவணிப் பணத்தின் அளவை ஒழுங்குபடுத்துவதும் அயல் நாட்டு மாற்று வீதத்தை நிலைக்கச் செய்வதும் பொன்

திட்டத்தின் சிறப்புச் செயல்களாகும். பொன் திட்டத்தின்கீழ் உள்ள பொன் நாணயம் (gold coin), பொன் கட்டி (gold bullion), பொன் மாற்றுத் (gold exchange) திட்டங்கள் பிணைந்து செயல் படவேண்டும்.

## உள்நாட்டுப் பொன் திட்டத்தின் நலன்கள்
## (Advantages of domestic gold standard)

1. ஒரு நாட்டின் செலாவணிப் பண அளவை நேர்முகமாக ஒழுங்குபடுத்துவதன்மூலம் நாட்டு மக்களின் நம்பிக்கையை இத் திட்டம் பெறுகிறது. அளவிற்கு மிகுதியான செலாவணித் தாள்களை வெளியிடாமலிருப்பதற்கும் பண மதிப்பிழப்பு நிகழாம லிருப்பதற்கும் இத் திட்டம் உத்திரவாதமளிக்கிறது.

2. இத் திட்டம் தன்னியக்கமுடையது. அதாவது பொன்னின் எடை மதிப்பிற்குகந்தவாறு செலாவணித் தாள் களின் அளவும் பெருக்கமடைகிறது அல்லது குறைகிறது.

3. இத் திட்டத்தால் உள்நாட்டு விலையின் அளவும் நிலைபேர் உடைதாய் இருக்கிறது.

## உள்நாட்டுப் பொன் திட்டத்தின் குறைகள்

1. ஒரு நாட்டின் செலாவணிப் பணமுறை இத் திட்டத்தால் நெகிழ்ச்சி அற்றதாய் விளங்குகிறது. போர் நெருக்கடிக் காலங் களிலும், பொருளாதார நெருக்கடிக் காலங்களிலும் அல்லது பொருளாதார முன்னேற்றத் திட்டங்களிலும் மக்களின் வாழ்க்கைத் தரத்தை உயர்த்தும் பொருட்டுச் செலாவணிப் பணத்தின் அளவை மிகுதிப்படுத்த முடியாது. அதாவது இந் நெகிழ்ச்சி அற்ற திட்டம், போர், பொருளாதார முன்னேற்றத் திற்கும் தடையாக விளங்குகிறது. இத் திட்டம் இயல்பான காலங்களில்தான் பயன்படும். இத் திட்டம் ஒரு நாட்டு அரசின் பணச் சீர்திருத்த உரிமையைப் பாதிக்கிறது.

2. இத் திட்டம் ஒரு நாட்டின் பொருளாதார முன்னேற்றத் திற்கு இடையூறாக அமைகிறது. பொன் கையிருப்பின் அளவிற்குகந்தவாறு செலாவணிப் பணத்தின் அளவும் நிர்ண யிக்கப்படுகிறது. புதிய தங்கச் சுரங்கங்கள் கண்டுபிடிப்பால் கூடுதலான பொன் கிடைக்கப்பட்டுச் செலாவணிப் பணத்தின் அளவும் கூடிப் பணப்பெருக்கம் அல்லது வீக்கம் (inflation) ஏற்பட்டுப் பொருள்களின் விலையும் கூடும். பொன்னின் இருப்பளவு குறைவதால் பணவாட்டம் அல்லது சுருக்கம்

(deflation) ஏற்பட்டுப் பொருள்களின் விலையும் குறைகிறது. மக்களின் பொருளுற்பத்தித்திறனைக் கவனிக்காமல் பொன்னின் அளவைக் கொண்டே ஒரு நாட்டின் செலாவணிப் பணத்தின் அளவு நிர்ணயிக்கப்படுகிறது.

3. இவ்வுள்நாட்டுப் பொன்திட்டம் நாட்டின் பொருளாதாரத்தில் நிலையற்ற விலைப் பிரச்சினையை உண்டாக்குகிறது. நாட்டின் பணஅலகு குறிப்பிட்ட அளவு பொன்னிருப்பால் கட்டுப்படுத்தப்பட்டிருப்பதால் பொன்னின் அளவுக்குகந்தவாறு பண அளவும் வேறுபடுமாதலால் விலையிலும் மாற்றம் ஏற்படுவது இயற்கையே.

## பன்னாட்டுப் பொன் திட்டத்தின் நலன்கள்
## (Advantages of International Gold Standard)

பன்னாட்டுப் பொன்திட்டம் உள்நாட்டுப் பொன்திட்டத்தை விடச் சிறந்ததும், உயர்ந்ததும், முக்கியம் வாய்ந்ததுமாகும்.

1. இத் திட்டம் பன்னாட்டு மாற்று மத்திமமாகவும், மதிப்பளவையாகவும் திகழ்கிறது.

2. இத் திட்டம் அயல்நாட்டு மாற்று வீதத்தை நிலைபேருடையதாக்குகிறது. ஒவ்வொரு நாட்டின் ஒப்பளிப்புடன் அந்த நாட்டின் பணஅலகு ஒரு குறிப்பிட்ட தரமும், அளவும், எடையும் உள்ள பொன்னால் நிர்ணயிக்கப்பட்டு அப் பொன்னை வரையறையற்ற அளவில் பன்னாட்டுப் பொன் திட்டத்திலடங்கிய நாடுகள் வாங்கவோ அல்லது விற்கவோ செய்யலாம். எடுத்துக் காட்டாக, ஒரு பவுண்டின் மதிப்பு 113 குன்றிமணிகள் (grams) எடையுள்ள தங்கத்திற்குச் சமம் என்று கொள்வோம். ஒரு அமெரிக்க டாலரின் மதிப்பு 23·22 குன்றிமணிகள் எடையுள்ள பொன்னுக்குச் சமம் என்றால் ஒரு பவுண்டின் மதிப்பு 4·665 டாலர்களுக்குச் சமமாகும். £.1=$.4·665. இவ்வாறு நிலையான மாற்று விகிதம் கடைப்பிடிக்கப்பட்டு வந்தால் இலாப நட்டமில்லாமல் பன்னாட்டுக் கடன் வாங்கும் அல்லது அளிக்கும் பழக்கமும், பன்னாட்டு வியாபாரமும் தங்குதடையற்று நிகழும்.

3. இந் திட்டத்தின்கீழ் பொருள்களின் விலைகள் பல நாடுகளிடையே நெருங்கிய தொடர்பு கொண்டிருக்கின்றன. எந்தக் காலத்திலாவது ஒரு நாட்டு விலையில் மாற்றம் ஏற்பட்டால் பொன்னின் குறுக்கீட்டால் விலையின் மாற்றம் சரி செய்யப் படுகிறது.

4. பண அளவு குறைவாயுள்ள நாடுகள் செய்யும் கேடுகளுக்கு இத் திட்டம் தடையாகத் திகழ்கிறது. இத் திட்டம் எந்த நாட்டிலும் போர்க்காலத்திற்குப் பிறகு ஏற்படும் மிகுதியான பணவீக்கத்திற்குத் தடையாக இயங்குகிறது.

## பன்னாட்டுப் பொன் திட்டத்தின் குறைகள்

1. இத் திட்டம் பணவாட்டத்தின் (deflation) அடிச்சுவடாக அமைகிறது. பொன்னை இழக்கும் நாடு கடன்களைச் சுருக்கிப் பணவாட்டத்தில் அவதிப்படும்போது பொன் பெறும் நாடு கடனைப் பெருக்கிப் பணவீக்கத்தை (inflation) ஏற்படுத்த வேண்டிய கட்டாயமில்லை. உலகப் போரின்போது இங்கிலாந்திலிருந்து பொன் வெளியேற்றப்பட்டபோது வருவாயில் பண வாட்டம் ஏற்பட்டு வேலையில்லாப் பிரச்னையும் உருவாகியது. ஆனால், பொன்னைப் பெற்றுக்கொண்ட அமெரிக்கா பணத்தை மிகுதியாக்கிப் பணவீக்கத்தை ஏற்படுத்தவில்லை.

2. ஒரு நாட்டில் ஏற்படும் பணவீக்கமோ (inflation) அல்லது பணவாட்டமோ (deflation) மற்ற நாடுகளுக்கு விரைவில் பரவுகிறது. இதனால் மற்ற நாடுகளும் இக் குறைபாட்டின் இடையூறுகளைப் பங்கிட்டுக் கொள்ள வேண்டிய கட்டாயத்திலுள்ளன.

3. இத் திட்டம் கடனை விரிவடையச் செய்தாலோ அல்லது சுருக்கினாலோ, இதற்குத் தன்னியக்கச் சக்தி இருந்த போதிலும், இப் பொன் திட்டத்தின்கீழ் உள்ள நாடுகளின் நிலையான பொருளாதாரத்திற்கு இடையூறாக அமைகிறது.

4. இப் பொன் திட்டம் நிலையான மாற்றுக்காக நிலையான விலையை விட்டுக்கொடுக்கச் செய்கிறது. நிலையான விலையும், நிலையான மாற்றும் இத் திட்டத்தின்கீழிலுள்ள எதிர்த்துருவங்களாகும்.

5. இந் நவீன உலகில் பொருளாதார எழுச்சியில் முழு வேலையளிப்பு இன்றியமையாததாக இருக்கும்போது இத் திட்டம் ஒரு காலப் பொருத்தக்கேடாகும் (anarchonism).

6. விலையுயர்ந்த பொருளாகிய பொன் தேக்கி வைக்கப் பட்டிருப்பது தவிர்க்கப்பட வேண்டிய ஒரு வீண் செலவாகும்.

7. இத் திட்டம் ஒழுங்கற்ற நிலைக்கு வித்தாயுள்ளது.

8. வளர்ச்சியுறும் பொருளாதாரத்திற்கு இத் திட்டம் ஏற்றதன்று.

## பொன் திட்டத்தின் வகைகள்

பத்தொன்பதாம் நூற்றுண்டுவரையில் மதிப்பு வாய்ந்த பொன்னே பெரும்பாலான நாடுகளில் நாணயமாகப் புழக்கத்தில் இருந்து வந்திருக்கிறது. பல நாடுகளும் இரட்டை உலோக நாணய முறையைக் கைவிட்டுத் தனி உலோக நாணய முறையில் பொன்னே நாணயமாகக் கடைப்பிடித்து வந்திருக்கின்றன. ஒரு நாட்டின் செலாவணியிலுள்ள பணம் பொன்னுக்குச் சமமாக நிர்ணயிப்பதைப் (fixed parity with gold) பொன் திட்டம் என்கிறோம். அதாவது பொன்னின் விலை ஒரு நாட்டுச் செலாவணிப் பணத்துடன் நிர்ணயிக்கப்பட்டிருக்கிறது. இத் திட்டத்தின்கீழ் பன்னுட்டுக்கான மாற்று மத்திமமாகவும், மதிப் பளவையாகவும் பொன் கையாளப்பட்டு வந்திருக்கிறது. ஆகவே, ஒரு நாட்டிலிருந்து மற்றொரு நாட்டுக்குச் பொன் தடையில்லாமல் சுயேச்சையாகச் சென்று வந்திருக்கிறது. ஆகவே, உள்நாட்டுப் பொன்னின் விலைமதிப்பும் அயல்நாட்டுப் பொன்னின் விலை மதிப்போடு சம நிலையில் இருத்தப்பட்டிருக்கிறது. ஒரு நாட்டுச் செலாவணியில் பணத்திற்கும், பொன்னுக்கும் சமநிலைப்படுத்து வதுதான் இத் திட்டத்தின் சிறப்பியல்பாகும். இந் நூற்றுண்டு வரைப் பொன் திட்டம் பல மாற்றங்களுக்கு இலக்காகியது.

## பொன் புழக்கத் திட்டம்
### (Gold Circulation Standard)

இத் திட்டம் முதல் உலகப்போரின்போது பழக்கத்திலிருந்தது. இத் திட்டத்தின்கீழ் ஒரு நாட்டின் செலாவணிப்பணம் முழு மதிப்பு உடைய நாணயமாகச் சுயேச்சையாக அச்சடிக்கப்பட்டுப் புழக்கத்தில் இருந்தது. மற்ற செலாவணிப் பணங்களாகிய தாள், ஒப்புப் பணங்களைப் பொன்னுக மாற்றிக் கொள்ளலாம். முதல் உலகப்போருக்குமுன் 113·0016 கிரேன்கள் பொன் கொண்ட முழு மதிப்புடைய பொன் நாணயம் புழக்கத்தில் இருந்து வந்தது. ஆகவே, பொன் நாணயத்தை உருக்கி நகைகள் செய்யலாம், அங்காடியில் விற்கலாம்.

பொன் நாணயத் திட்டம் (Gold Coin Standard): 1. இத் திட்டத்தின் கீழ் ஒரு குறிப்பிட்ட தரமும், அளவும் உள்ள பொன் திட்டப் பண அலகாக இருந்து வந்திருக்கிறது.

2. பொன் வரையறுக்கப்படாத சட்ட முறைப் பணமாகக் கருதப்பட்டது.

3. அனைத்துக் கடன் பணங்களும் சட்ட முறைப் பணங்களும் தேவையானபோது பொன் நாணயங்களாக மாற்றப் படக் கூடியன.

4. இத் திட்டத்தில் தங்குதடையற்ற நாணயப் புழக்கம் நிலவ வேண்டும்.

5. தங்குதடையற்ற சுயேச்சையான பொன் ஏற்றுமதி இறக்குமதி நிலவ வேண்டும்.

பொன் நாணயத் திட்டத்தின் குறைகள்: (1) இத் திட்டத்தில் பொன் நாணயம் முழு மதிப்புடன் புழக்கத்திலுள்ளதால் மக்களிடையே நல்லெண்ணத்தையும் நம்பிக்கையையும் தோற்று விக்கிறது. (2) பண நிர்வாகத்தினரின் குறுக்கீடுகள் இல்லாமல் பொன் நாணயங்கள் புழக்கத்திலுள்ளன. (3) நிரந்தரமான மாற்று மதிப்பு உடையதால், மிகுதியான செலாவணிப் பணங்கள் அச்சிட்டு வெளியிடப்படும்போது ஏற்படக்கூடிய விலை ஏற்றத்தைப் பற்றி மக்கள் அஞ்ச வேண்டியதில்லை.

பொன் கட்டித் திட்டம் (Gold Bullion Standard): முதல் உலகப் போருக்குப் பிறகு இப் பொன் கட்டித் திட்டம் செயல்பட்டு வந்தது. இத் திட்டம், ஒரு குறிப்பிட்ட மதிப்பில் பொன் கட்டியாக எளிதில் மாற்றப்படக்கூடிய தாள் பணங்களும், ஒப்பு நாணயங்களும் புழக்கத்தில் இருப்பதைக் குறிக்கும்.

பொன் கட்டித் திட்டத்தின் சிறப்பியல்புகள்: (1) ஒரு குறிப் பிட்ட அளவு பொன் ஒரு குறிப்பிட்ட காலத்தில் மதிப்பளவை யாகக் கொள்ளப்படுகிறது. (2) இத் திட்டத்தில் பொன் நாணயங்கள் புழக்கத்தில் இல்லை. ஆனால், ஒரு குறிப்பிட்ட அளவில் பொன் கட்டிகளாக மாற்றப்படக்கூடிய தாள் பணங் களும், ஒப்பு நாணயங்களுமே புழக்கத்தில் இருக்கும். (3) அரசுக் கருவூலங்களோ, மைய பாங்குகளோ சட்டமுறைப்படி நிர்ணயிக்கப்பட்ட விலையில் குறிப்பிட்ட தரமுள்ள பொன்னை வாங்குகின்றன. (4) தடையற்ற சுயேச்சையான பொன் ஏற்றுமதி, இறக்குமதி இத் திட்டத்தில் நிலவுகின்றன. (5) இத் திட்டத்தால் செலாவணிப் பணங்கள் பொன் இருப்பைவிட மிகுதியான விகிதத்தில் வெளியிடப்படுகின்றன. அதாவது புழக்கத்தில் உள்ள மொத்தச் செலாவணிப் பணங்களின் மதிப்பில் ஒரு குறிப்பிட்ட குறைந்த அளவு விகிதத்திலேயே பொன் இருப்பு வைக்கப்பட்டிருக்கும்.

பொன் கட்டித் திட்டத்தின் நிறைகள்: (1) இத் திட்டத்தால் பணத்திற்கும், காப்பிருப்பிற்கும் சிக்கனமாகப் பொன் பயன்

படுத்தப்படுகிறது. (2) செலாவணிப் பணங்களிடையே ஒரு நெகிழ்ச்சியை ஏற்படுத்துகிறது. (3) குறைந்த அளவு பொன் உடைய நாடுகளும் இத் திட்டத்தை மேற்கொள்ளலாம்.

குறைகள் : (1) ஒவ்வொரு பண அலகும் பொன்ஞக மாற்றப் படமாட்டா. (2) குறைந்த அளவிலேயே பொன் இருப்பு வைத்துள்ளதாலும், செலாவணிப் பணங்களனைத்திற்கும் மாற்ருகப் பொன் கிடைக்காததால் இத் திட்டம் மக்களின் நம்பிக்கைக்குப் பாத்திரமானதல்ல.

பொன் மாற்றுத் திட்டம் (Gold Exchange Standard) : பொன் நாணயத்தையும் வெளியிடாமல், பொன் காப்பிருப்பும் வைத்துக் கொள்ளாமல் ஒரு நாட்டின் செலாவணித் தாள்கள் பொன் கட்டித் திட்டத்தின்கீழ் உள்ள மற்ருெரு நாட்டின் செலாவணித் தாள்களாக மாற்ற நிர்ணயித்திருக்கும் முறையே பொன் மாற்றுத் திட்டம் எனக் கொள்கிருேம். பொன் மிகுதியாக வைத்திராத ஏழை நாடுகள் இத் திட்டத்தைக் கையாளலாம். 1922, ஏப்ரலில் ஜெனீவா மாநாட்டில் இத் திட்டம் நிறைவேற்றப்பட்டது.

இத் திட்டத்தின்கீழ் பொன் நாணயங்கள் புழக்கத்தில் இல்லை. மாற்று மத்திமமாகப் பொன் பயன்படுத்தப்படவில்லை. தாள் நாணயங்களும் குறைந்த மதிப்புடைய உலோக நாணயங்களும் புழக்கத்திலுள்ளன. பண நிர்வாகத்தினருக்கு இந் நாணயங்களைப் பொன்ஞக மாற்றிக் கொடுக்க வேண்டிய பொறுப்புகளில்லை. இத் திட்டத்தின்கீழ் உள் நாட்டுப் பணத்திற்கும், பொன்னள விற்கும் தொடர்பில்லை. ஆகவே, பொன்னுக்குத் தங்குதடையற்ற அங்காடியும் இல்லை. பண நிர்வாகத்தினர் மூலமாகவே உள் நாட்டுச் செலாவணித் தாள்களை, பொன்ஞக மாற்றப்படக்கூடிய அயல் நாட்டுச் செலாவணித் தாள்களாக மாற்றிக் கொள்ளலாம். 1903-ல் பிலிப்பைன் நாடும், 1877-ல் ஆலந்தும், ரஷ்யா, ஆஸ்திரேலியா, அங்கேரி நாடுகள் 1892-லும், இந்தியா 1893—1931-லும் கடைப்பிடிக்க முற்பட்டன.

பொன் மாற்றுத் திட்டத்தின் நிறைகள் : 1. சிக்கனமாக, இத் திட்டத்தைப் பொன் காப்பிருப்பு இல்லாமலேயே ஏழை நாடுகள் கூட எளிதாகக் கடைப்பிடிக்கலாம்.

2. பொன் மாற்று நாட்டிற்கு இச் செலாவணித் திட்டம் ஒரு நெகிழ்ச்சியை அளிக்காது.

3. பொன் செலாவணித் திட்டத்திற்குரிய அனைத்து நிறை களும் இத் திட்டத்திற்கும் உண்டு.

4. வெளி நாட்டுப் பொன்னில் முதலீடு செய்வதன்மூலம் ஒரு நாடு இலாபம் அடைகிறது. பன்னாட்டுச் செல்லுகள் அனைத்தும் இத் திட்டத்தின்கீழ் எளிதில் நடைபெறுகின்றன.

குறைகள்: 1. பொன் காப்பிருப்பை இத் திட்டத்தின்கீழ் ஒரு நாடு பெற்றிராததால் பொது மக்களின் நம்பிக்கையை இத் திட்டம் இழக்கிறது.

2. இது தன்னியக்கமுடையதல்லாததால் பொன் திட்டத்திற்குரிய சிறப்பியல்புகள் அனைத்தும் இத் திட்டத்திற்கு உண்டு என்று சொல்ல முடியாது.

3. உள்நாட்டுச் செலாவணிப் பணத்தின் தரம் அயல் நாட்டுச் செலாவணிப் பணத்தின் தயவில் உள்ளது.

4. பொன் காப்பிருப்பு, அயல் நாட்டுக் காப்பிருப்பு முதலிய பல காப்புகள் உள்ளதால் இத் திட்டத்தை நிர்வகிப்பதும் கடினம்.

பொன் காப்பிருப்புத் திட்டம் (Gold Reserve Standard): பொன் திட்டத்தைக் கைவிட்டபின்னர் அதற்கு மாற்றாக பிரிட்டன், அமெரிக்கா, ஃபிரான்சு, சுவிட்சர்லாந்து, பெல்ஜியம், நெதர்லாந்து போன்ற நாடுகள் இப் பொன் காப்பிருப்புத் திட்டத்தைக் கடைப்பிடிக்க முற்பட்டன. உலக வணிகர்களின் செயல்களாலும் அதனால் ஏற்படும் முதலின் இடப் பெயர்ச்சியாலும் பருவ கால நாணய மாற்று ஏற்றத் தாழ்வாலும் (seasonal exchange fluctuation) நாணய மாற்று வீதத்தில் ஏற்படக்கூடிய ஏற்ற இயக்கத்தைப் போக்கவே 1932-ல் இங்கிலாந்து, நாணய மாற்றுச் சமநிலை நிதிக் கணக்கு (Exchange Equalisation Fund Account) ஒன்றை ஏற்படுத்தியது.

ஃபிராங்கின் மதிப்புக் குறைப்பிற்குப் (devaluation) பிறகு இங்கிலாந்து, அமெரிக்கா, ஃபிரான்சு ஆகிய மூன்று நாடுகளும் அவ்வப்போது கிடைக்கும் வளங்களைக் கொண்டு அந் நாடுகளின் நாணய மாற்றில் எவ்வித மாற்றங்களும் நிகழாதவாறு பார்த்துக் கொள்ள முக்கூட்டு (Tripartite Agreement) ஒப்பந்தத்தில் இறங்கின. இவ்வொப்பந்தத்தை நிறைவேற்றும் பொருட்டு ஒரு நாட்டில் உள்ள நாணய மாற்றுச் சமநிலை நிதியானது இவ்வொப்பந்தத்தில் கண்டுள்ள நாடுகளில் உள்ள நாணய மாற்றுச் சமநிலை நிதிக்குப் பொன்னையோ அல்லது அயல் நாட்டுச் செலாவணிப் பணத்தையோ வாங்கும் அல்லது விற்கும். இந் நிதியின் வாயிலாகப் பொன் திட்டத்தின் நன்மைகளையும், பன்னாட்டு

வாணிகத்தில் வளர்ச்சிகளையும் அடையலாம். இவ்வித ஏற்பாட்டிற்குத்தான் பொன் காப்பிருப்புத் திட்டம் (Gold Reserve Standard) என்று பெயர்.

## தாள் பணத்திட்டம்
## (The Paper or Fiat Standard)

பொன் அல்லது வெள்ளியாக மாற்றவியலா தாள் பணம் (inconvertible paper money) புழக்கத்தில் உள்ள திட்டப் பண முறையைத்தான் தாள் பணத்திட்டம் (Paper Standard) என்றழைக்கிறோம். அதிக வரி விதிக்க விரும்பாத நாடுகள் போர்க்காலங்களில் இத் தாள் பணங்களை மிகுதியாக வெளியிடுகின்றன. கி.பி. 1790-ல் சீனாவில் சுங்க்கு அரசினர் தாள் பணத்தை வெளியிட்டனர். 1690-ல் அமெரிக்காவும், 1729-ல் ஃபிரான்சும், தாள் பணத்தை வெளியிட்டன. தாள் பணத் திட்டத்தின்கீழ், தாள் பணங்களும், உலோக நாணயங்களும் திட்டப் பணங்களாகவும் வரையறுக்கப்படாத சட்ட முறைப் பணங்களாகவும் புழக்கத்தில் இருந்து வந்தன. பொன்னுடனோ வெள்ளியுடனோ இப் பணத்திற்கு நேரடித் தொடர்பு இல்லை. இத் தாள் பணத்தைப் பொன் அல்லது வெள்ளியாக மாற்ற முடியாது. புழக்கத்தில் இருக்கும் இப் பணத்தின் அளிப்பு பண அதிகாரிகளால் கட்டுப்படுத்தப்படுகிறது. இப் பணத்தின் அளிப்பு பொருளாதாரத் தேவைக்கு ஏற்றவாறு சரிப் படுத்தப்படுகிறது. பன்னாட்டு வாணிபத்திற்கான நாணய மாற்று விகிதம் அந்தந்த நாட்டுச் செலாவணிப் பணத்தின் வாங்கும் திறன் சமநிலை (purchasing power parity) அடிப் படையில் தீர்மானிக்கப்படுகிறது.

1945-ல் ஏற்படுத்தப்பட்ட பன்னாட்டுப் பண நிதியின் (International Monetary Fund) நியதிப்படி பல்வேறு தாள் பணங்களுக்கு இடையேயுள்ள மாற்று விகிதம் அந்தந்த நாட்டுச் செலாவணித் தாளின் முகமதிப்புக்கு (par value) உகந்தவாறு தீர்மானிக்கப் படுகிறது.

தாள் பணத்தின் அகமதிப்பு (intrinsic value) அதன் சட்ட மதிப்பைவிடக் குறைவாய் உள்ளதாலும், அதனைப் பொன் அல்லது வெள்ளியாக மாற்ற முடியாததாலும் இப் பணத்தை ஃபியட் (fiat) பணம் என்று கொள்ளலாம். ஆகவே இத் திட்டத்தை ஃபியட் திட்டம் (Fiat Standard) என்றும் கூறலாம்.

**தாள் பணத்திட்டத்தின் நலன்கள் (Advantages of paper-standard):** 1. பொருளாதார வளர்ச்சிக்கு இத் தாள் பணத்

திட்டம் பயனளிக்கிறது. இப் பணத்திட்டத்தின் வாயிலாக நிலையான விலைக் கொள்கைகளுக்கும், முழு வேலை வாய்ப்பிற்கும், நிரந்தரத் தொழில் வளர்ச்சிக்கும் வழிவகை ஏற்படுகிறது.

2. பொன் அளவு மிகுதியாகக் குறைவதால் ஏற்படக்கூடிய பண வாட்டத்தின் (deflation) விளைவுகளையும், அவற்றால் ஏற்படக் கூடிய மிகுந்த மந்த நிலைமையையும் (depression) இத் திட்டம் போக்குகிறது.

3. தேவைக்குத் தக்கபடி ஒரு நாடு தனது போர் நெருக்கடி களுக்குகந்தவாறு தாள் பணத்தை அச்சடித்துப் பயன் படுத்தலாம்.

4. இம் முறை ஒரு சிக்கனமான பணத்திட்டமாதலால் ஏழை நாடுகள் கூட இத் திட்டத்தை எளிதில் கடைப்பிடிக்கலாம்.

5. பொன் திட்டத்துடன் ஒப்பு நோக்கும்போது இத் தாள் பணத்திட்டம் மாற்று விகிதத்தில் மிகவும் பயனுள்ள ஒழுங்கு நிலையுள்ளதாகும்.

**தாள் நாணயத்திட்டத்தின் குறைகள்:** 1. இத் திட்டம் உள் நாட்டு விலை ஏற்றத்தினால் அவற்றின் மாற்றுக்களில் நிலையாமையை (exchange instability) உண்டாக்குகிறது. நிலை யில்லா மாற்றானது பன்னாட்டு வாணிபத்தில் பெருங் குறையாகும்.

2. இத் திட்டத்தால் அரசு தேவைக்கதிகமான தாள் பணத்தை வெளியிட ஊக்குவிக்கிறது. உலகில் இத் திட்டத்தால் மிகுதியான பணவீக்கம் (hyper inflation) ஏற்படுகிறது. மக்களின் நல்லெண்ணத்தையும், நன்மதிப்பையும் பெறுவதற்காகப் பெரும்பாலான அரசுகள் வரி விதிப்பதற்குப் பதிலாகச் செலா வணித் தாள்களை மிகுதியாக வெளியிட்டு, செலவுகளைச் சரிக் கட்டுகின்றன. இம் மாற்றவியலாத் தாள் நாணயத்தை அளவுக் கதிகமாக வெளியிடும்போது அதன் மதிப்பு குறைந்து பொது மக்களின் நம்பிக்கையையும் இழக்க நேரிடுகிறது.

3. தாள் பணத்தால் விலைமாற்றம் மிகுதியாகிறது. பண வீக்கம் (inflation) பணவாட்டத்தால் (deflation) மக்கள் மிகவும் துன்பப்பட்டனர்.

4. தாள் பணத்திட்டம் ஒழுங்காக நிர்வாகம் நடைபெறும் நாடுகளின் துணையையும் உதவியையும் வேண்டியிருப்பதால் இத் தாள் பணத் திட்டத்தால் பன்னாட்டுப் பொருளாதார ஏற்றத் தாழ்வுகளைச் சரிக்கட்ட முடியாது.

5. தற்காலப் பொருளாதார முன்னேற்றத்தில் ஒரு நாடு மற்ற நாடுகளின் துணையையும் உதவியையும் வேண்டியிருப்பதால் இத் தாள் பணத்திட்டத்தால் பன்னாட்டுப் பொருளாதார ஏற்றத் தாழ்வுகளைச் சரிக்கட்ட முடியாது.

## செலாவணித் தாள்கள் வெளியிடப்படும் முறைகள்
## (Methods of Notes Issue)

(i) எளிய வைப்பு முறை (Simple Deposit System): பொன் அல்லது வெள்ளி அல்லது இரு உலோகங்களும் தாங்கப் பட்டோ வெளியிடப்படும் தாள் பண முறைக்கு எளிய வைப்பு முறை என்று பெயர். இத் திட்டம் செலாவணித் தாள் வெளியிடும் கொள்கைகளின் அடிப்படையில் அடங்கியுள்ளது. ஆனால் இம் முறை தற்போது செயல் முறையில் இல்லை.

(ii) உயர்ந்தபட்ச நம்பிக்கை வெளியீட்டு முறை: உலோகக் காப்பிருப்பின் தாங்குதலுடனோ, அல்லாமலோ பண அதிகாரிகள் ஓர் உயர்ந்தபட்ச அளவுக்கு மேல் செலாவணித் தாள்கள் வெளியிடக் கூடாது என்று நிர்ணயித்திருப்பதை 'உயர்ந்தபட்ச நம்பிக்கை வெளியீட்டு முறை' எனலாம். இம் முறை 1870-1928 வரையில் ஃபிரான்சு, 1939-41 வரையில் இங்கிலாந்து, ஜப்பான் ஆகிய நாடுகள் கடைப்பிடித்தன.

(iii) அறுதியிட்ட நம்பிக்கை வெளியீட்டு முறை: (Fixed Fiduciary Issue System): சட்டத்தில் குறிப்பிட்டுள்ள அளவில், அரசு, பிணைப் பத்திரங்களுக்கு ஈடாகச் செலாவணித் தாள்களை வெளியிட மைய பாங்கிற்கு இம் முறை அதிகாரமளிக்கிறது. இந்த அளவிற்குமேல் வெளியிடப்படும் செலாவணித் தாள்கள் யாவும் பொன் வெள்ளி காப்பிருப்பால் தாங்கப்பட்டிருக்க வேண்டும். முதன் முதலாக இங்கிலாந்தில் 1844-ல் இத் திட்டம் கையாளப் பட்டது.

(iv) விகித அளவான செலாவணித்தாள்கள் வெளியீட்டுக் காப்பிருப்பு முறை (Proportional Reserve System of Note Issue): இத் திட்டத்தின் அடிப்படையில் வெளியிடப்படும் மொத்த செலாவணித் தாள்களில் 40 சதவிகிதம் பொன், வெள்ளியினாலும் மற்ற 60 சதவிகிதம் ஒப்புதல் அளிக்கப்பட்ட பிணைப் பத்திரங் களாலும் தாங்கப்படுகின்றன. போர் நெருக்கடிக் காலங்களில் இவ்வளவுக்கு மேலும் நோட்டுகளை வெளியிடலாம். எதிர்பாராத தேவையின்போது இம் முறை நெகிழ்ச்சியுடையதாய் இருக்கிறது.

(v) மிகக் குறைந்த அளவு காப்பிருப்புடன் செலாவணித் தாள்கள் வெளியீட்டு முறை: (The Minimum Reserve System of

Note Issue): செலாவணித் தாள்கள் வெளியீட்டதிகாரிகளால் வெளிடப்படும் செலாவணித் தாள்களின் மொத்த அளவு ஒரு மிகக் குறைந்த அளவு பொன் காப்பிருப்பால் தாங்கப்பட்டிருக்க வேண்டும். எந்த அளவு செலாவணித் தாள்கள் வெளியிட்டாலும் இக் குறைந்த அளவு விகிதத்தில் பொன்னால் தாங்கப்பட்டிருக்க வேண்டும். இந்திய ரிசர்வு பாங்கு குறைந்தது ரூ. 200 கோடிக்குக் காப்பிருப்பு வைத்து இருக்கவேண்டும். இதில் ரூ. 115 கோடி பொன்னாக இருத்தல் வேண்டும்.

(vi) சதவிகித வைப்புமுறைச் செலாவணி வெளியீடு (The Percentage Deposit Systerm of Note Issue): இத் திட்டத்தின்கீழ் வெளியிடப்படும் செலாவணித் தாள்கள் யாவும் ஒரு குறிப்பிட்ட சதவிகிதம், பொன், வெள்ளி காப்பிருப்பால் தாங்கப்பட்டிருக்க வேண்டும். 1956 வரை இந்தியாவில் 40 சதவிகிதம் செலாவணித் தாள்கள் பொன்னாலும், 60 சதவிகிதம் ஸ்டெர்லிங்காலும் தாங்கப்பட்டு வந்தன.

(vii) விருப்ப ஊதிய அல்லது மிகை ஊதிய வைப்பு முறைச் செலாவணித் தாள் வெளியீடு (The Bonus Deposit System of Note Issue): இச் செலாவணித் தாள்கள் மிகக் குறைந்த கால வரையுள்ள அரசினர் கருவூல உண்டியல்களால் தாங்கப்படுகின்றன. இம் முறை இந்தியாவில் 1902-ல் கடைப்பிடிக்கப் பட்டது.

# 2. அயல்நாட்டு மாற்றுக்கள்
(Foreign Exchange)

## அயல்நாட்டு மாற்றுக்கள்-இலக்கணம்

ஒரு நாட்டிலுள்ள ஒரு மனிதன் அதே நாட்டில் வேறொரு இடத்திலுள்ள மற்றொரு மனிதனுக்குப் பணம் செலுத்த வேண்டியிருப்பின் இவ்வுள்நாட்டுச் செல்லுகள் மிகவும் எளிதாகும். காசுகள், செலாவணித் தாள்கள், பாங்குச் செக்குகள் அனைத்தும் ஒருவிதப் பழக்கப்பட்ட செல்லுகள்தான். கடனாளி, இருக்குமிடத்திலிருந்து கடனீந்தோர் இருக்குமிடத்திற்குப் பணத்தை அனுப்ப வேண்டுமே தவிர வேறெந்தப் பிரச்சினையும் இச் செல்லுகளில் இல்லை. ஆனால், கடனாளி ஒரு நாட்டில் இருந்து கடனீந்தோர் பிறிதொரு நாட்டில் வசிக்கும்போதுதான் இவ்வெளிநாட்டுச் செல்லுகளில் பிரச்சினைகள் எழுகின்றன. பணத்தை இடமாற்றம் செய்யும் பிரச்சினைகள் மட்டுமல்லாமல் ஒரு நாட்டுப் பணத்தை மற்றொரு நாட்டுப் பணத்திற்கு மாற்றுதல் செய்து தரவேண்டிய பிரச்சினையும் எழுகிறது. ஒரு நாட்டுப்பணம் அந்நாட்டின் மாற்று மத்திமமாகவும், மதிப்பளவையாகவும் திகழ்கிறது. ஆனால், இப் பணம் வேறு நாட்டில் இவ்வகையில் திகழ முடியாது. ஆகவே, நாடுகளிடையே பணம் செலுத்துதலுக்கு அயல் நாட்டு மாற்று முறைகள் தேவைப்படுகின்றன.

அயல் நாட்டு மாற்று (foreign exchange) என்ற சொற்றொடர் ஒரு நாட்டுச் செலாவணித் தாளுக்கு மற்றொரு நாட்டுச் செலாவணித் தாள் மாற்றப்படும் முறைகள், அவ்வாறு மாற்றுவதற்குரிய காரணங்கள், எவ்வடிவத்தில் இம் மாற்றுக்கள் நடைபெறுகின்றன, எவ்விகிதத்தில் இந் நாணய மாற்றுக்கள் செயல்படுகின்றன என்பனவற்றைக் குறிக்கிறது. (The term foreign exchange covers the methods by which the currency of one country is exchanged for that of another, the causes which make such exchanges necessary, the forms in which such

exchanges are conducted, and the rates at which the exchanges are affected-K. K. Andley.)

அயல் நாட்டு மாற்று என்ற சொற்றொடர் பன்னாட்டு நிதி நிலைமைகளையும் செல்லுகளையும் குறிக்கிறது. (1) இச் சொற்றொடர் ஒரு நாட்டின் செலாவணித் தாள் மற்ற நாடுகளின் செலாவணித் தாள்கள் அல்லது பணத்தை ஒப்பு நோக்கும் பொழுது பயன்படுத்தப்படுகிறது. ரூபாய்த் தாள்களை வைத்திருக்கும் இந்தியனுக்கு அமெரிக்க 'டாலர்'களும், இங்கிலாந்து 'பவுண்டு ஸ்டெர்லிங்கு'களும், ஃபிரான்சு 'ஃப்ராங்கு'களும், மேற்கு ஜெர்மனி 'மார்க்கு'களும், ஜப்பானின் 'என்'களும் அயல் நாட்டு மாற்றுக்களாகும். (2) இச் சொற்றொடர் பன்னாட்டு வாணிகத்தில் பயன்படுத்தப்படும் பத்திரங்களான மாற்று உண்டியல்கள் (bills of exchange), வங்கிப் பணவிடை (bank draft), பயணிகள் செக்குகள் (travellers cheques) முதலானவற்றைக் குறிக்கிறது. (3) இச் சொற்றொடர் அயல் நாட்டுக் கடன்களை அடைக்கும் முறைகளையும் குறிப்பிடுகிறது. ஒரு நாட்டின் செலாவணித் தாள்களாக மாற்றப்படும் வழிவகைகளைக் குறிப்பிடுகிறது. (4) இச் சொற்றொடர் ஒரு நாடு இருப்பில் வைத்திருக்கும் அயல் நாட்டுச் செலாவணித் தாள்களையும் குறிப்பிடுகிறது. அயல் நாட்டு மாற்றுப் பணம் என்பது பொதுவாக ஒரு நாட்டுப் பணத்திற்கு மற்றொரு நாட்டுப் பணம் எவ்வாறு மாற்றப்படுகிறது என்பதையே குறிக்கும். இம் மாற்றுக்கள் ஏன் நிகழ்கின்றன, ஒரு நாட்டுப் பணத்தின் மதிப்பு மற்றொரு நாட்டின் பண மதிப்புடன் எவ்வாறு நிர்ணயிக்கப்படுகிறது, அம் மாற்று மதிப்பில் ஏற்றத்தாழ்வு ஏற்படுவதற்குரிய காரணங்கள் யாவை என்பனவற்றையும், அயல் நாட்டுக் கடன்களை அடைப்பது, எவ்வாறு அவை செலுத்தப்படுகின்றன, அச் செல்லுகளில் ஈடுபட்டிருக்கிற நிறுவனங்களான பாங்குகள், அயல் நாட்டு மாற்றுக்களில் ஈடுபட்டிருப்பவர்கள், தரகர்கள் முதலானவர்களையும் இச் சொற்றொடர் (foreign exchange) குறிப்பிடுகிறது.

அயல் நாட்டுச் செலுத்து உண்டியல் வசூலும், மாற்றமும் (Collection and negotiation of bills payable abroad): அயல் நாடுகளில் உள்ள நிறுவனங்களின்மேல் எழுதப்படும் உண்டியல்கள், வசூலிப்பிற்காக அல்லது மாற்றலுக்காக அடிக்கடி பாங்குகளிடம் கொடுக்கப்படுகின்றன. கேட்பு உண்டியல் (Demand bill) அல்லது தவணை உண்டியல் (Usance bill) உள் நாட்டுச் செலாவணியிலோ அல்லது அயல் நாட்டுச் செலாவணியிலோ எழுதப்படுகிறது. உண்டியல் வசூலுக்கு அனுப்பப்பட்டால் பாங்கு தனது தொடர்பு அல்லது பதிலாள் பாங்கு மூலமாகவோ, எழுதப்பெறுவோனல்

வரவேண்டிய பணத்தை, வசூல் செய்யும் பணியைப் புரிகிறது. உண்டியல் எழுதுவோன் நாட்டிற்கு அப் பணத்தை மாற்றிக் கொடுக்கிறது. மாற்றும் பொருட்டு அளிக்கப்படும் உண்டியல்களை பாங்குகள் மொத்தமாக வாங்குகின்றன.

ஏற்றுமதியாளர் உண்டியல்களை நேராகத் தனது அயல் நாட்டுப் பதிலாளரிடம் வசூலுக்கு அனுப்புகிறார் அல்லது ஒரு பாங்கு மூலமாக அனுப்புகிறார். பல்வேறு பத்திரங்களும் உண்டியல் களுடன் இணைக்கப்படுவதற்குகந்தவாறு இறக்குமதி நாட்டின் விருப்பத்திற்குகந்தவாறு ஏற்றுமதியாளர் செயல் புரிதல் வேண்டும். ஒரு பாங்கு மூலமாக உண்டியல் வசூலுக்கு அனுப்பப் பட்டால் பத்திரங்களில் உள்ள தவறுகளை எடுத்துக் காட்டுவது பாங்கின் பொறுப்பல்ல. ஆனால், உண்டியல் வசூலிக்கப்படும் போது முடிவுபெறுப் பத்திரங்கள் வசூலில் தாமதம் ஏற்படுத்து வதாலும் பாங்குகளுக்கும் இன்னல் விளைவிப்பதாலும், இவ்விதங் களில் பாங்குகள் வழக்கமாகத் துணை புரிகின்றன.

வசூல் செய்யும் பொருட்டுத் தன்னுடைய வாடிக்கையினரால் அளிக்கப்படும் உண்டியல்களைப் பாங்கு தனது அயல் நாட்டுத் தொடர்பு பாங்கிற்கு வசூலுக்காக அனுப்புகிறது. பணம் வசூலாயிற்று என்ற செய்தி பாங்கிற்கு ஆதாரப்பூர்வமாகக் கிடைக்கும்வரையில் பாங்கு தனது வாடிக்கையினரின் கணக்கில் வரவு வைப்பதில்லை. இவ்விதத்தில் பாங்கு வசூல் செய்யும் பாங்காக மட்டுமே செயல் புரிகிறது. வசூலுக்கு அனுப்பப்பட்ட உண்டியல் வசூலாயிற்று என்ற செய்தி தொடர்பு பாங்கிடமிருந்து கிடைத்தவுடன் செலவு போக பாக்கித் தொகையைப் பாங்கு தனது வாடிக்கையினர் கணக்கில் வரவு வைக்கிறது. இவ்வுண் டியல்களின் பேரில் பாங்கு ஏதாவது கடன் கொடுத்திருந்தால் வசூலித்த பணத்திலிருந்து அக் கடனைக் கழித்துக் கொண்டு பாக்கித் தொகையை வாடிக்கையினரின் விருப்பத்திற்குகந்தவாறு அவர் கணக்கில் வரவு வைக்கிறது. உண்டியல் வசூல் செய்யப்படும் போது பாங்கிற்கு இன்னல்களும், செலவினங்களும் ஏற்படுவதால் நாணயமுள்ள அறிமுகமான வாடிக்கையாளர்களுக்குமட்டுமே உண்டியல் வசூல் செய்யப்படுகிறது. தவணை உண்டியலாக இருப்பின் அயல் நாடுகளில் முத்திரைச் செலவுகளாகும். உண்டியல் ஏற்கப்படாமலிருந்தால் அல்லது மறுக்கப் பட்டால் உண்டியல் மறுப்புச் சான்று அளித்தல் வேண்டும். உண்டியலுக்குப் பணம் செலுத்தப்படாமல் இருந்தால் இதனைச் சார்ந்த சரக்குகள் கப்பல்களிலிருந்து இறக்கப்பட்டு அயல் நாடு களில் சேமித்து வைக்கப்பட்டிருக்க வேண்டும். ஒப்பந்தத்தில் கண்டவாறு சரக்கினை ஏற்றிக் கப்பலில் அனுப்பக்கூடிய பழக்க

மில்லா வாடிக்கையினரால் எழுதப்பட்ட உண்டியல்களை வசூலிக்கும்போது பாங்குகளுக்கு நம்பிக்கையின்மையும் சந்தேகமும் ஏற்பட்டுவிடும்.

வசூலுக்காக உண்டியல்கள் பாங்கரிடம் ஒப்படைக்கப்பட்ட பிறகு வசூலித்த பணம் தன் பெயரில் பாங்கரால் வரவு வைக்கப் படும்வரையில் ஏற்றுமதியாளர் பொறுத்திருக்க வேண்டும். இந்த இடை நேரத்தில் ஏற்றுமதியாளர் அவ்வுண்டியல்களின்மீது பாங்கரிடமிருந்து கடன்பெற ஏற்பாடு செய்து கொள்ளலாம். கடனளிக்க பாங்கு ஏற்றுக் கொண்டால் அக் கடன்கள் பொதுவாக மூன்று விதங்களில் ரூபாய்ச் செலாவணியிலேயே அளிக்கப் படுகின்றன. (1) ஒவ்வொரு உண்டியலின் முழு மதிப்பிற்கும் நூற்றுக்கு நூறு பங்கு கடன் அளிக்கப்படுவது; (2) வசூலுக்கு அனுப்பப்பட்ட உண்டியலில் ஒரு குறிப்பிட்ட சதவீதத்திற்குக் கடன் அளிப்பது; (3) வசூலுக்கு அனுப்பப்பட்ட உண்டியலில், வசூலிக்கப்படாத உண்டியல்களின் மொத்தத் தொகையின் ஒரு குறிப்பிட்ட சதவீதத்திற்குக் கடன் அளிப்பது.

**ஒவ்வொரு உண்டியலின் முழு மதிப்பில் நூற்றுக்கு நூறு பங்கு வீதத்தில் கடன் வழங்குவது (The cent percent advance against each bill):** உண்டியலின் முழு மதிப்புடன் உண்டியல் எழுதப் படுவோன் அதற்குரிய வட்டி, (வசூலிக்கும் பாங்கிற்கும் அதன் தொடர்பு பாங்கிற்கும் செலுத்தக்கூடிய) வசூல் கட்டணம், தவணை உண்டியலாக இருப்பின் அயல் நாடுகளில் செலுத்தக் கூடிய முத்திரைக் கட்டணம், மற்ற கட்டணங்களையும் உண்டியல் எழுதப்படுவோனாலேயே செலுத்தப்பட வேண்டும் என்று குறிப் பிட்ட ரூபாய் உண்டியல் ஒன்று எழுதப்பட்டு, கழிவு செய்வதற் காகக் கீழ்க்கண்ட ஆணையுடன் பாங்கிடம் அளிக்கப்பட்டால், அவ்வுண்டியலைக் கழிவு செய்து உண்டியலின் முழு மதிப்பிற்குப் பாங்கு கடனளிக்கும். உண்டியலின் முழு மதிப்பிற்குரிய பணத் திற்கு மட்டுமல்லாமல் கடனளிக்கப்பட்ட நாளிலிருந்து அயல் நாட்டில் பணம் கொடுக்கப்படும் நாள்வரையில் உள்ள இடைப்பட்ட காலத்திற்குரிய வட்டியையும் உண்டியல் எழுதப்படு வோனிடமிருந்து பாங்கு எதிர்பார்க்கிறது. கடனுக்குரிய வட்டியை உண்டியல் எழுதுவோன் செலுத்த வேண்டியதாக இருப்பின் வேறு நிலை உருவாகிறது. அப்பொழுது உண்டியலின் முழுத் தொகைக்கும் கடன் அளிக்கப்பட்டு உண்டியல் வசூலாகும் வரையில் அதற்குரிய வட்டி தள்ளி போடப்படுகிறது. போர், வேலை நிறுத்தம், மாற்றுக்கட்டுப்பாடு, அயல் நாட்டுச் சட்டங்கள், போக்குவரத்து முதலியவற்றால் உண்டியல் வசூல் தடைப்பட்டால் நிரந்தரத் தள்ளுபடி விதிப்பது என்பது கடினமாகும். இந் நிலை

களில் உண்டியலின் முழு மதிப்பிற்குக் கடன் அளிக்கப்பட்டு, உண்டியல் வசூலாகும்போது வசூல் கட்டணம், வட்டி முதலியன வற்றை உண்டியல் எழுதுவோனிடம் பெற்றுக் கொள்வது சிறந்த முறையாகும். இத் தருணத்தில் பாங்கு வட்டிக் காலத்தை ஊகித்துணர வேண்டும். நம்பிக்கையுள்ள வாடிக்கையாளருக்கே இச் சலுகை அளிக்கப்படும்.

**உண்டியலின் ஒரு குறிப்பிட்ட சதவீதத்திற்குக் கடன் அளித்தல் (Percentage advance against a bill of exchange):** பொதுவாக நடைமுறையில், பாங்கு, உண்டியலின் முக மதிப்பில் நூற்றுக்கு 60 அல்லது 70 அல்லது 80 அல்லது 90 பங்கு அளவு, வாடிக்கை யாளரின் நாணயம், நிதி நிலைமைக்குகந்தவாறு கடன் அளிக்கிறது. உண்டியல் வசூல் தொகையிலிருந்து கடன், வட்டி மற்ற கட்டணங்கள் எல்லாவற்றையும் கழித்துக் கொண்டு பாக்கித் தொகையை வாடிக்கையினரின் கணக்கில் பாங்கு வரவு வைக்கும். சில உண்டியல் எழுதுவோர் உண்டியலின் பாதித் தொகைக்கே கடன் பெற்று வட்டியைக் குறைவாக்கி உண்டியல் வசூலாகும் காலத்தைப்பற்றிய அனைத்து ஊக வேலைகளும் தவிர்க்கப் படுகின்றன. பாங்குகள் பகுதிக் கடன்களையே விரும்புவதேதற் கெனில், பாங்கிற்கும், தொடர்பு பாங்கிற்கும் எதிர்பாராச் செலவுகள் ஏற்படின் அவற்றைக் கடனளிக்காக உண்டியலின் தொகை சரிக்கட்டுவதற்குரிய பாலமாக அமைகிறது.

**வசூலாக வேண்டிய உண்டியலில் ஒரு குறிப்பிட்ட சதவீதத்திற்குக் கடன் அளித்தல் (Percentage advance against all pending collections):** வசூலிக்கப்பட வேண்டிய அனைத்து உண்டியல்களில் ஒரு குறிப்பிட்ட சதவீதத்திற்குகந்தவாறு பாங்குகள் கடன் அளிக்கின்றன. உண்டியல் வசூலாகும் தவணைக்கு உகந்தவாறு, உண்டியல் எழுதுவோர் கடன் பேரில் பணம் பெற்றுக் கொள்ளக் கூடிய தொகையின் அளவைப் பாங்கு நிர்ணயிக்கும். இம் மாதிரிக் கடன்கள் பாங்கிற்குச் சிறந்த நாணய அரணாக அமைந்திருக் கின்றன. ஏனென்றால் வசூலிக்கப்படும் உண்டியல் தொகையளவு கேட்புக் கடன்களின் மொத்த மதிப்பைவிட மிகுதியாக இருக்கும். பாங்கு நிலைமைக்குகந்தவாறு கடன் அளவை நிர்ணயித்து விருப்பத்திற்குகந்தவாறு கடனைத் திருப்பிக் கேட்கும். ஆனால், வசூலாகும் உண்டியலின் உண்மை மதிப்பிற்கும் அதன் (உள்ள) முகமதிப்பிற்கும் தவறாக, பாங்கு மதிப்பிடக் கூடாது. பாங்குப் புத்தகத்தில் குறிப்பிட்ட வசூலாகா உண்டியல்கள் முழுவதுமோ அல்லது ஒரு பகுதியோ வசூலாகா. ஆகவே, வசூலாகா உண்டி யல்கள் பெருமளவில் இல்லாமல் பாங்கு எச்சரிக்கையாக இருக்க வேண்டும்.

**உண்டியல்கள் மாற்று** (Negotiation of bills of exchange): அயல்நாட்டு இறக்குமதியாளர்களின்மேல் எழுதப்படும் உண்டியல்கள் மாற்றப்படும் பொருட்டு அடிக்கடி பாங்கிடம் அளிக்கப்படுகின்றன. அதாவது பாங்கு அவ்வுண்டியல்களை வாங்கி அதன் முகமதிப்புக்கு நிகராக வைத்துக் கொள்வதாகிறது. பாங்கு உண்டியலை வாங்கும்போது அதன் வசூல் செலவு, இடைப்பட்ட கால வட்டி முதலியவற்றைச் சரிக்கட்டிக் கொள்கிறது. ரூபாயில் உண்டியல் எழுதப்பட்டால் சராசரி வீதத்தில் கழிவு கணக்கிடப்படும்போது இச் செலவுகள் சரிக்கட்டப்படுகின்றன. உண்டியல்கள் அயல்நாட்டுச் செலாவணியில் எழுதப்பட்டால் இச் செலவுகள் மாற்று வீதத்தில் சரிக்கட்டப்படுகின்றன.

அயல்நாட்டுப் பாங்கிடம் ஆரம்பிக்கப்பட்ட நாணயக் கடிதத்தின் பேரிலேயே உண்டியல் மாற்றப்படுகின்றன அல்லது நம்பிக்கையுள்ள வாடிக்கையாளருக்கு நாணயக் கடிதம் இல்லாமலேயே உண்டியல்கள் மாற்றப்படுகின்றன. நாணயக் கடிதத்தின் பேரில் அதன் நிபந்தனைக்குட்பட்டு யற்ற பத்திரங்களும் சேர்க்கப்பட்டு மாற்றப்பட்டால் பாங்கு எந்தவித இடருக்கும் ஆளாகாது. நாணயக் கடிதம் இல்லாமல் மாற்றப்படும் உண்டியலுக்கு வாடிக்கையாளரின் நாணயத்தை நம்பியே இருக்க வேண்டியுள்ளது.

உள்நாட்டுச் (ரூபாய்) செலாவணியில் எழுதப்படும் உண்டியல்கள் மாற்றப்படாமல் கழிவு செய்யப்படுகின்றன. ஏனென்றால் உள்நாட்டுச் செலாவணியில் உண்டியல் எழுதப்பட்டால் மாற்று வீதம் செலுத்த வேண்டியதில்லை. இதற்குப் பதிலாக பாங்கு, கழிவுக் கட்டணம் நிர்ணயிக்க வேண்டும். கழிவுக் கட்டணம், வசூல் கட்டணம், முத்திரைக் கட்டணம் முதலியன.

**அயல்நாடுகளில் செலுத்து உண்டியல் வசூல்** (Collection of bills payable abroad): வசூலுக்காக உண்டியல் ஒன்றைப் பாங்கு பெறும்போது உண்டியல் எழுதுவோரின் பதிலாளாகவும், அவர் ஆணையின்படியும் செயல்படுகிறது. இவ்வாணைகள் வெளிப்படையாகவும் வசூல் செய்வதற்குரிய அனைத்து நடவடிக்கைகளுக்கும் தொடர்புடையதாகவும் இருத்தல் வேண்டும். இவ்வாணைகள் எழுத்துமூலம் பெறப்படுகின்றன. வாடிக்கையினரால் பூர்த்தி செய்யப்படக்கூடிய தங்கள் சொந்தப் படிவங்களையே (forms) பாங்குகள் வைத்துள்ளன. இவ்வாணைகள் உண்டியலுடன், வசூல் செய்யும் பாங்கால், அதன் அயல்நாட்டுத் தொடர்பு பாங்கிற்கு அனுப்பப்படுகின்றன.

1. குறிப்பிட்ட பதிலாளையோ அல்லது தொடர்பு பாங்கையோ அமர்த்துவதற்குரிய வாடிக்கையாளரின் இணக்கத்தை முதற்கண் பெறுதல் வேண்டும். கிளை பாங்கோ அல்லது தொடர்பு பாங்கோ இல்லாத இடத்தில் உண்டியல் எழுதப்பட்டால் வாடிக்கையாளரின் பொறுப்பிலேயே வசூல் செய்யக் கூடிய பாங்கின் பெயரைக் குறிப்பிடுமாறு வாடிக்கையாளர் கேட்டுக் கொள்ளப்படுவார். உண்டியல் வசூல் செய்யும் பாங்கு உண்டியலைத் தன்னுடைய கிளை அல்லது தொடர்பு பாங்கிற்கோ, இவை இரண்டும் இல்லாவிடில் வேறு எந்தப் பாங்கிற்கோ அனுப்பிவைக்கும். ஆனால், சிலநேரங்களில் உண்டியல் எழுதப் படுவோரின் விருப்பத்தை நிறைவேற்றும் பொருட்டு அயல் நாட்டுப் பதிலாள் பாங்கின் பெயரைக் குறிப்பிடுவார். அவ்வாறு குறிப்பிட்ட பாங்கு நம்பிக்கையானது என்று வசூல் செய்யும் பாங்கு கருதாவிடில் இதனை உண்டியல் எழுதுவோருக்கு அறிவிக்கும். இது உண்டியல் வசூல் செய்யும் பணியைக்கூட மறுக்கலாம். அவ்வயல் நாட்டுப் பாங்கைப்பற்றி எக்குறையும் இல்லாவிடில் வசூல் செய்யும் பணிக்கு அதனைப் பயன்படுத்திக் கொள்ளலாம். அயல்நாட்டுப் பதிலாள் பாங்கின் பெயரை உண்டியல் எழுதுவோன் குறிப்பிடும்போது அக்கிளைப் பாங்கின் அசட்டைக்கும், சிறு குற்றங்களுக்கும் வசூல் செய்யும் பாங்கு பொறுப்பாளியல்ல என்று உண்டியல் எழுதுவோன் எழுத்துமூலம் வசூல் செய்யும் பாங்கிற்கு எழுதிக் கொடுத்தல் வேண்டும்.

2. உண்டியல் ஏற்கப்படாததால் அல்லது பணம் செலுத்தப்படாததால் உண்டியல் மறுக்கப்பட்டால் எவ்வித நடவடிக்கை எடுக்க வேண்டுமென்று வாடிக்கையாளர் தெளிவான ஆணை ஒன்று பிறப்பிக்க வேண்டும். உண்டியல் ஏற்பு அல்லது செலுத்துதல் நடக்குமாறு உண்டியலில் குறிப்பிட்ட தொகை குறைக்கப்படுமா என்பதையும் குறிப்பிடவேண்டும். இது சம்பந்தமாக அயல் நாட்டுப் பதிலாள் எவ்வளவு தூரம் நடந்து கொள்ளலாம் என்பதையும் தெரிவிக்க வேண்டும்.

உண்டியல் மறுக்கப்பட்டவுடன் மறுப்புச் சான்று பெற வேண்டுமா, வேண்டாமா என்றும் வாடிக்கையாளர் குறிப்பிடவேண்டும். உண்டியல் மறுப்புச் சான்று பெறும்போது அதன் செலவை வாடிக்கையாளர் ஏற்க வேண்டும். உண்டியல் ஒன்று தவணை நாளில் அளிக்கப்பட்டது என்றும், உண்டியல் ஏற்பு அல்லது பணம் செலுத்துதல் மறுக்கப்பட்டது என்றும் சான்றுறுதி அதிகாரியால் (notary public) எழுத்தால் எழுதப்படுவதே மறுப்புச் சான்றாகும். இச் செய்தி, தொடர்புள்ள அனைத்து நபர்களுக்கும் தெரிவிக்கப்படுகிறது. உண்டியல் மறுக்கப்பட்டது

உண்மை என்றும், நீதி மன்றத்தில் உண்டியல் மறுக்கப்பட்டது என்பதை நிரூபிக்கப்படுவதற்குரிய சான்றாகவும் அமைகிறது.

சில சந்தர்ப்பங்களில் மறுப்புச் சான்றை ஏற்றுமதியாளர் பயனுள்ளதாகக் கருதுவதில்லை. இதனால் செலவும், இறக்குமதியாளர்பற்றிக் கெட்ட எண்ணமும் உருவாகும். இறக்குமதியாளர் தவணை நாட்களில் உண்டியலுக்குரிய பணத்தைச் செலுத்தாமல் அதற்குப் பின்னரும் செலுத்தலாம். இத் தவறுகள் இருந்த போதிலும் ஏற்றுமதியாளர் அவருடைய வாடிக்கையாளராகத் தொடர்ந்திருக்க முற்படுவார்.

உண்டியல் மறுக்கப்பட்டவுடன் உண்டியல் எழுதுவோனுக்குத் தெரியப்படுத்தல் வேண்டும். உண்டியல் மறுப்புச் செய்தி கடல் தந்தி அல்லது விண்வெளி அஞ்சல்மூலமாகப் பிறப்பிக்கப்பட வேண்டும் என்று உண்டியல் எழுதுவோன் பாங்குக்கு அறிவிக்க வேண்டும். சில சந்தர்ப்பங்களில் எழுதுவோர் அனுப்பும் ஆணையில் 'கடல் தந்திச் செலவு இவ்வுண்டியலில் அடங்கா' என்று குறிக்கப்பட்டிருக்கும். உண்டியல் மறுப்புச் சான்று குறித்த நாளில் கிடைக்காவிடில், குறித்த நாளில் உண்டியல் மறுக்கப்படவில்லை என்பது பொருளாகும். சில உண்டியல் எழுதுவோர் எவ்வளவு பணம் உண்டியலுக்காக வசூலாயிற்று என்று கடல் தந்தி மூலம் அறிய முற்படுவர். உண்டியல் வசூலாகி எழுதுவோர் கணக்கில் வரவு வைக்கப்படுவதற்குமுன் இவ்வுண்டியல்களின் பெயரில் உண்டியல் எழுதுவோர் கடன் பெற முற்படுவர்.

3. உண்டியல் ஏற்கப்படாததாலோ, உண்டியலுக்குரிய தொகை செலுத்தப்படாததாலோ உண்டியல் மறுக்கப்பட்டால் உண்டியலில் அடங்கிய சரக்கின்மேல் பாங்கு எவ்வித நடவடிக்கை எடுக்கவேண்டும் என்று உண்டியல் எழுதுவோர் ஆணை பிறப்பிக்க வேண்டும். உண்டியலில் அடங்கிய சரக்குகள் கப்பலில் இருந்து எடுக்கப்பட்டுப் பண்டகங்களில் வைக்கப்பட்டுக் காப்பீடு செய்யப்பட வேண்டுமா என்றும் உண்டியல் எழுதுவோன் குறிப்பிட வேண்டும். சரக்கின் விலை மதிப்பு குறைவாக இருப்பின், வாடிக்கையினரின் ஆணையின்பேரில் அவர் கணக்கில் பற்று வைக்கலாம். இறக்குமதித் தீர்வை மிகுதியாலும், மற்ற கட்டணங்களாலும், செலவு மிகுதியாகி, வாடிக்கையாளர் கணக்கில் பணம் மிகுதியாக இல்லாவிடில் உடனே 'இறுதிநிலைப் பணம்' (margin money) பயன்படுத்தப்பட வேண்டும் என்று பாங்கு விரும்பும். தன் தொடர்பு பாங்கிற்கு இச் செலவுகளுக்காகப் பாங்கு பொறுப்பாகும். ஆகவே, பாங்கு தனது வாடிக்கையாளரிடமிருந்து அச் செலவுக்குரிய பணம் பெறும்.

4. உண்டியல் எழுதப்படுவோருக்கு வட்டியில் தள்ளுபடி (Rebate of interest to the drawee): உண்டியல் முதிர்ந்த தேதிக்குள் உண்டியல் எழுதப்படுவோன் அவ்வுண்டியலை எடுத்துக்கொண்டு பணம் கொடுத்து விட்டால் வட்டியில் தள்ளுபடி செய்துகொடுக்க வேண்டும். எவ்வீதத்தில் தள்ளுபடி செய்து கொடுக்கவேண்டும் என்று உண்டியல் எழுதுவோன் பாங்கிற்குத் தெரிவிக்க வேண்டும். உண்டியலில் குறிப்பிட்ட தொகையை முதிர்வு தேதிக்குள் அத் தொகையை அவன் செலுத்திவிட்டால் அந் நாளி லிருந்து முதிர்வு தேதிக்குள்ள காலத்திற்கு அவனுக்கு வட்டியில் தள்ளுபடி செய்து கொடுக்க வேண்டும். ஆனால், இத் தள்ளுபடித் தொடர்பாக பாங்கிற்கு உண்டியல் எழுதுவோன் தெளிவான ஆணை பிறப்பிக்க வேண்டும்.

5. வசூலான தொகை மாற்றம் (Transfer of proceeds): உண்டி யலில் குறிப்பிட்டுள்ள தொகை வசூலிக்கப்பட்டவுடன் அயல் நாட்டிலிருந்து உள்நாட்டிற்கு மாற்றப்படுவதற்கு எவ்விதத்தில் (சாதாரண அஞ்சல் அல்லது விண்வெளி அஞ்சல் அல்லது கடல் தந்தி மூலமாக) மாற்றப்படவேண்டும் என்று வசூல் செய்யும் பாங்கிற்குத் தெளிவான ஆணை பிறப்பிக்க வேண்டும். அஞ்சல் செலவு, கடல் தந்தி முதலானவற்றால் செலவுகளும், மாற்றல் காலத்தில் வட்டி இழப்பும் ஏற்படுகின்றன. இது சம்பந்தமாக உண்டியல் எழுதுவோன் தகுந்த முடிவுக்கு வந்து பாங்குக்கு ஆணை பிறப்பிக்க வேண்டும்.

6. உண்டியல் எழுதப்படுவோனுக்குப் பத்திரங்கள் அளித்தல் (Release of documents to the drawee): பத்திரங்கள் சேர்ந்த தவணை உண்டியல்களில் (usance bill) பொதுவாக உண்டியல்கள் ஏற்கப்பட்டவுடனோ, பணம் செலுத்தப்பட்டவுடனோ பத்திரங்கள் ஏற்பாளருக்குக் கொடுக்கப்பட்டுவிடும். இது சம்பந்தமாக பாங்கு என்ன நடவடிக்கை எடுக்க வேண்டுமென்று உண்டியல் எழுதுவோன் பாங்கிற்கு ஆணை பிறப்பிக்க வேண்டும். ஏற்புழிப் பத்திர முறையில் (D/A) உண்டியல் ஏற்கப்பட்டவுடனே பத்திரங்கள் கொடுக்கப்பட்டு விடுகின்றன. இம் முறையில் இடர்கள் இருந்த போதிலும் இதனை உண்டியல் எழுதுவோர் ஏற்பர். ஏனென்றால், ஏற்பாளர் உண்டியலுக்குரிய பணத்தைச் செலுத்தாவிடில், ஏற்பாளர் உண்டியல் எழுதுவோருக்குப் பரிகாரம் செய்யவேண்டும். ஆகவே, உண்டியல் எழுதுவோர் செலுத்து வழிப்பத்திர முறையையே விரும்புகின்றனர்.

7. உற்றுழி உதவுவோன் (Case-in-need): உற்றுழி உதவு வோனை (Case-in-need) உண்டியல் விடுப்பவர் நிர்ணயிக்கும்போது

அவன் அதிகார வரம்பையும் நிர்ணயிக்க வேண்டும். உற்றுழி உதவுவோன் அயல்நாட்டிலுள்ள தனியாளாக அல்லது நிறுவனமாக இருக்கலாம். இவர் ஏற்றுமதியாளரின் பதிலாளாகச் செயல்படுவார். இறக்குமதியாளனை அணுகி உண்டியலை எடுத்துக் கொள்ளும்படிச் செய்ய இப் பதிலாள் துணைபுரியலாம். சிறுசிறு சரிக்கட்டல்கள் இப் பதிலாள் செய்யலாம். இறுதிக் கட்டங்களில் வேறு எந்த இடங்களிலும் விற்பனை செய்யும் பொருட்டுச் சரக்குகள் இப் பதிலாளிடம் கொடுக்கப்பட்டுவிடும். உண்டியல் விடுப்பவரால் நியமிக்கப்பட்ட உற்றுழி உதவுவோனின் அதிகார வரம்பு சரிவர விளக்கப்பட்டிருக்கும்.

8. பணம் செலுத்நுதலில் தள்ளிவைப்பு (Deferment of payment): சரக்கு இறக்குமதி செய்யுமிடத்திற்குச் சரக்குக் கப்பல் போய்ச் சேரும்வரையில் இறக்குமதியாளரிடம் உண்டியல் சேர்ப்பிப்பதைத் தள்ளிப் போடலாமா என்று உண்டியல் விடுப்பவர் பாங்கிற்குத் தெரிவிக்கவேண்டும். இக் காலத்தில் உண்டியலும் பத்திரங்களும் விண்வழி மூலமாக அனுப்பப்பட்டுச் சரக்கு மட்டும் கப்பல் மூலம் செல்வதால் உண்டியலும் பத்திரங்களும் போய்ச் சேர்ந்த பல நாட்களுக்குப் பின்னரே சரக்கு போய்ச் சேர்கிறது. சரக்கு போய்ச் சேர்வதற்கு முன்னரே இறக்குமதியாளர் உண்டியலுக்குரிய பணத்தைச் செலுத்த முன் கூட்டியே மறுத்துவிடலாம். வசூல் செய்யும் பாங்கும், அதன் தொடர்பு பாங்கும் இது சம்பந்தமாக தெளிவான ஆணை பெற்றிருக்க வேண்டும். சில சந்தர்ப்பங்களில் இறக்குமதியாளர் மொத்தச் சரக்குகளில் ஒரு பகுதி சரக்கினைமட்டுமே எடுத்துக்கொண்டு அதற்குகந்தாற்போல் பணம் செலுத்த முற்படுவர். இம் முறை அனுமதிக்கப்படலாமா என்று பாங்கு அறிந்திருக்க வேண்டும்.

9. செலவுகள் மீட்பு (Recovery of expenses): உண்டியல் வசூல் செலவுகளை யார் ஏற்க வேண்டுமென்று உண்டியல் விடுப்பவர் குறிப்பிடவேண்டும். மொத்தத் தொகையுடன் இச் செலவையும் உண்டியல் எழுதப் பெற்றவரிடமிருந்து வசூலிக்கப் படவேண்டுமா அல்லது வசூலாகும் தொகையில் இருந்து கழித்துக்கொள்ள வேண்டுமா என்று தெளிவுபடுத்தவேண்டும். இச் சந்தர்ப்பங்களில் முன் மதிப்பிட்ட செலவுகள் சரக்கின் மதிப்புடன் சேர்க்கப்பட்டு மொத்த விலையின் ஒரு பகுதியாக இச் செலவுகள் ஆகின்றன. இச் சந்தர்ப்பங்களில் பாங்கிற்கு ஏற்பட்ட செலவுகள் உண்டியல் விடுப்பவரின் பொறுப்பு ஆதலால் அதற்கு உகந்தவாறு பாங்கருக்கு உண்டியல் விடுப்பவர் தெரிவிக்கிறார்.

அயல் நாடுகளில் செலுத்நுதற்குரிய உண்டியல் கைமாறல் (Negotiation of bill payable abroad): அயல் நாடுகளில் உள்ளவர்

களின்மேல் எழுதப்பட்ட உண்டியல்கள் கைமாறுவதற்காக (விற்பனை அல்லது தள்ளுபடி) அடிக்கடி பாங்கிடம் அளிக்கப்படு கின்றன. அவ்வித உண்டியல்கள் இந்திய ரூபாய்களிலோ, அயல் நாட்டுச் செலாவணிகளிலோ எழுதப்படுகின்றன. உண்டியல் விடுப்பவரின் நன்மைக்காக அயல் நாட்டுப் பாங்கினுல் ஆரம்பிக்கப்பட்ட நாணயக் கடிதத்தின்பேரில் உண்டியல் விடுக்கப்படலாம். அல்லது அவ்வித நாணயக் கடிதம் இல்லா மலும் இருக்கலாம். நாணயக் கடிதத்தின்பேரில் கடன் நிபந்தனைகளுக்கு உட்பட்டு நாணயக் கடிதத்திற்குகந்த பத்திரங் களுடன் உண்டியல் எழுதப்பட்டால் உண்டியல் கைமாறலின் போது பாங்குக்கு எவ்வித இடையூறும் இராது. நாணயக் கடிதத்தின் பேரில் எழுதப்படா உண்டியல்கள், வாடிக்கையாளர் அவ்வுண்டியலில் அடங்கிய ஆட்களின் நிலைமை சரியில்லை என்று கருதினுல், கைமாறலுக்குப் பாங்கினுல் ஏற்றுக்கொள்ளப்படா. எழுதப்படுவோனுல் உண்டியல் மறுக்கப்பட்டால் உண்டியல் எழுதுவோனிடமிருந்து அதற்குரிய பணத்தை வசூலித்துக் கொள்ளலாம் என்கிற உறுதிப்பாடு பாங்கரிடம் இருக்க வேண்டும்.

உண்டியல் கைமாற்றலுக்காக ஏற்றுக் கொள்ளப்பட்டவுடன் அவ்வுண்டியலின் பிணையத்தின்பேரில் உண்டியல் கை மாறும் செலவுகளான வட்டி, கழிவு ஆகிய மற்ற செலவுகள்போக பாக்கி யுள்ள முழுத் தொகையையும் வாடிக்கையாளருக்குப் பாங்கு அளித்துவிடும். ஆனுல், உண்டியல் கைமாறும்போது பாங்கு அவ்வுண்டியலை முறைப்படியும், மதிப்பிற்காகவும் பெற்றதாகக் கருதப்படும். இது உண்டியல் கைமாறுதலுக்கும், வசூலுக்காக அளிக்கப்படும் உண்டியலின்பேரில் கடன் கொடுக்கப்படுவ தற்கும் உள்ள வேறுபாட்டை உணர்த்துகிறது. பாங்கு நூற்றுக்கு நூறு பங்கு கடன் அளித்தபோதிலும் பிந்தியதில் உண்டியல் எழுதுவோனின் சொத்தாகவே விளங்குகிறது.

உள்நாட்டுச் செலாவணியில் எழுதப்படும் உண்டியல்கள் மாற்றுவீதச் செலவு ஏதுமில்லாமல் கழிவு செய்யப்படுகின்றன. இக்கழிவுச் செலவுகளில் வசூல் செய்யும் பாங்கு, அதன் தொடர்பு பாங்கின் வசூல் செலவுகள், முத்திரை வரிகள், வட்டி முதலான செலவுகளும் அடங்கும். அயல்நாட்டுச் செலாவணியில் எழுதப் படும் உண்டியல்கள், உண்டியல் வசூல் செலவு, இடைக்கால வட்டி அடங்கிய மாற்றுவீதத்தைக் குறிப்பிடுகிறது.

உண்டியல் கைமாறும்போது பாங்கரால் கவனிக்கப்பட வேண்டிய வைகள் : 1. உண்டியல் எழுதுவோனின் மதிப்புநிலை அறிக்கை

ஒன்றைப் பாங்கு பெறுதல் வேண்டும். வாடிக்கையாளரின் ஒழுக்கம், நிதிநிலைமை பற்றிய முழுத் தகவல்களையும் பாங்கு அறிந்திருக்க வேண்டும். இக் காரணத்திற்காகப் பாங்குகள் பொதுவாக வாடிக்கையினர்பற்றிய கருத்துப் பட்டியல் (opinion list) பதிவேடு ஒன்று வைத்திருக்கின்றன. இவ்வேட்டைக்கொண்டு வாடிக்கையினரின் நன்னடத்தை, நிதி வரலாறு, அவரின் முந்திய நடவடிக்கைகள் அனைத்தையும் அறிந்து கொள்ளலாம். இக் கருத்துப் பட்டியல் திறமை வாய்ந்த வல்லுநர்களால் தயாரிக்கப்படுகிறது. குறைபாடற்ற வாடிக்கை யாளருக்குப் பாங்கு உண்டியல்களை மாற்றித் தருகிறது.

இது போன்றே உண்டியல் எழுதப்பெறுவோனின் ஒழுக்கம் நிதிநிலையைப் பற்றிய அறிக்கை ஒன்றைப் பெறுதல் அவசிய மாகும். உண்டியல் எழுதப் பெறுவோனால் உண்டியல் மறுக்கப் படும்போது உண்டியல் எழுதுவோனிடம் புகலிடம் கிடைக்கு மாறுலும் அந் நிலைமை உருவாகாமல் இருக்க பாங்கு முயற்சிக் கிறது. அயல் நாட்டு இறக்குமதியாளர்கள் பற்றிய விவரம் அறிய எளிதில் முடியாது. உண்டியல் எழுதப்படுவோனின் மதிப்பு நிலை அறிக்கையைப் பெறும்வரையில் உண்டியல் எழுது வோனின் கையொப்பத்தையே நம்பி இருத்தல்வேண்டும்.

2. கைமாறுவதற்காக அளிக்கப்படும் உண்டியல் தொகையும் இதற்கு முன் கைமாறியதற்காகவும், கடனுக்காகவும் கொடுபட வேண்டிய தொகைகள் சேர்த்து வாடிக்கையாளருக்கு அனுமதிக் கப்பட்ட அளவுக்கு அதிகமாகவும் இருக்கக்கூடாது. ஒவ்வொரு வாடிக்கையாளருக்கும் அளிக்கப்படும் கடன் அளவைப் பாங்குகள் நிர்ணயிக்கின்றன. உண்டியல் கைமாறுவதாலும், அதற்காக அளிக்கப்படும் கடன் தொகையும் இத் தொகையில் அடங்கும். ஆகவே, இத் தொகையின் அளவுக்குள் இருக்கும் உண்டியல் களையே பாங்குகள் ஏற்றுக் கொள்கின்றன.

3. பத்திரங்கள் சேர்ந்த உண்டியலாக இருப்பின் அப் பத்திரங்கள் அவற்றிலடங்கிய சரக்கின் உரிமையைச் சரிவரப் பெற்றிருக்க வேண்டும். ஒப்பந்தத்தின் நிபந்தனைகளுக்குட்பட்டு நாணயக் கடிதத்திற்குகந்தவாறு பத்திரங்கள் எழுதப்பட்டு உள்ளனவா என்று பாங்கு அறிதல் வேண்டும். பத்திரங்களில் ஏதாவது தவறு நேர்ந்திருப்பின் உண்டியல் மறுப்பிற்குக் காரணமாகும். உண்டியலில் அடங்கிய சரக்குகள், அளவிலும் தரத்திலும் நன் முறையில் உள்ளனவா என்றும் பாங்கு பார்த் தறிதல் வேண்டும். உண்டியல் ஏற்கப்படாமல் போனாலும் அல்லது செலுத்தப்படாமல் போனாலும் அயல் நாட்டுச் சந்தை

களில் எளிதில் விற்பனை செய்யக்கூடிய சரக்குகளாக இருத்தல் வேண்டும்.

4. வெற்று உண்டியல் காட்சி உண்டியலாக இருப்பின், இதனைச் சேர்ப்பித்தவுடனே உண்டியல் எழுதப்படுவோன் பணம் செலுத்த வேண்டும். அவ்வாறு பணம் செலுத்தப்பட்டவுடன் சரக்குகள் அவனிடம் ஒப்படைக்கப்படும். இதன் பிறகு, பாங்கு, ஏற்றுமதியாளரின் நிலையையும், இறக்குமதியாளரின் நாணயம், வகையுள்ள தன்மையையும் நம்பியே இருத்தல் வேண்டும். வாடிக்கையாளரின் நிலைமையைச் சரிவர ஆய்ந்தறிந்தபிறகே இவ்வித உண்டியல்களைப் பாங்கு ஏற்றுக் கொள்ளலாம்.

5. இவ்வகை உண்டியல்கள் கைமாறுதலின்போது அடமானக் கடிதங்கள், நம்பிக்கைக் கடிதங்கள்போன்ற சில பத்திரங்களைப் பாங்குகள் பெற்றுக் கொள்கின்றன. பாங்கிற்குப் பிணையமாகக் கைமாறும் உண்டியல்களையும் அவற்றைச் சார்ந்த பத்திரங்களையும் இக் கடிதம் பாங்கிடம் ஈடு வைக்கிறது. இவ்வித பத்திரங்களைப் பாங்கு வற்புறுத்திக் கேட்காவிட்டாலும் இவை பாங்கின் இடர்ப் பாட்டைக் கண்டிப்பாகத் தவிர்க்கிறது.

உண்டியல் கைமாறும் வீதம் (Rate of negotiation), தட்டை வீதத் தள்ளுபடி (Flat rate of discount): இயல்பான காலங்களில் ஒரு நாட்டிலிருந்து மற்றொரு நாட்டுக்குச் சென்றடையும் காலம், அவ்வுண்டியல் வசூலிக்கப்படும் காலம், வசூலான பணம் மீண்டும் ஏற்றுமதி நாட்டிற்கு வந்தடையக்கூடிய காலம் சரிவர மதிப்பீடு செய்யப்படலாம். அயல் நாட்டிலுள்ளவர்கள்மேல் எழுதப்படும் உண்டியல் தட்டை வீதங்களில் கழிவு செய்யப்படுகின்றன.

உண்டியல் கைமாறும் வீதத்தை அளந்தறியும்போது உண்டியலில் உள்ள ஆட்களின் நிதி நிலைமை, உண்டியல் செலுத்தப் படக்கூடிய அயல் நாட்டுச் செலாவணி நிலைமை முதலியனவற்றை முக்கியமாகக் கவனிக்க வேண்டும். சந்தேகமற்ற உண்டியல், எழுதப்படுவோன்மீதுள்ள உண்டியல்கள் அயல் நாட்டிலுள்ள அறியாத வியாபாரியின்மேல் எழுதப்படும் உண்டியல்களைவிடச் சிறந்தது. நிலையற்ற செலாவணியுடைய நாட்டிலோ, மாற்றுக் கட்டுப்பாடு உள்ள நாட்டிலோ எழுதப்படும் உண்டியல்கள் நிலையான செலாவணி, ஒருங்கமைந்த பாங்குகள் உடைய நாட்டில் எழுதப்படும் உண்டியல்களைவிடக் குறைந்த விலையே அளிக்கும். உண்டியல் கைமாறும்போது உண்டியலை வாங்கும் பாங்கு உண்டியல் வசூலிக்கப்படும் காலம்வரையில் ஒரு குறிப் பிட்ட வீதத்தில் கடனளிக்கிறது. இவ்வீதத்தைக் கணக்கிடும் போது அக் காலத்திற்குரிய வட்டி, வசூலிக்கும் செலவுகள்

முதலானவற்றை அப் பாங்கு கவனத்தில் கொள்கிறது. இவைகளை எல்லாம் சேர்த்து, தட்டை அல்லது அனைத்து வீதங்களும் கணக்கிடப்படுகின்றன. இது முழுமையான அல்லது பெறுமான வீதம் ஆகும். ஆனால், இது ஓராண்டுக்குரிய வீதமல்ல. இவ்வீதத்திலேயே உண்டியல் கழிவு செய்யப்படுகிறது. இவ்வாறு கழிவு செய்யப்பட்ட உண்டியலின் தற்போதைய மதிப்பிற்கே ஏற்றுமதியாளருக்கு அக்குறிப்பிட்ட காலத்திற்குக் கடனளிக்கப்படுகிறது.

அஞ்சல் முறை சரியற்ற நிலையிலும், மாற்றுக் கட்டுப்பாடுகளினால் உண்டியல் செலுத்துதல் தாமதப்படுமானால் முன் கூட்டியே வட்டி வசூலிக்கப்படும் காலத்தைக் கணக்கிடுவது எளிதல்ல. ஆகவே, தட்டை வீதத் தள்ளுபடி (flat rate) பாங்குகளால் தவிர்க்கப்படுகிறது. இந் நிலைமையில் உண்டியல் வசூலிக்கப்பட்ட பிறகே பாங்கு வட்டியையும் வசூலிக்கிறது. தட்டை வீதத்தைக் கணக்கிடும்போது கீழ்க் கண்டவைகளைப் பாங்கு கருத்தில் கொள்ள வேண்டும் :

1. வட்டி வீதமும், வட்டி செலுத்தப்படக்கூடிய காலமும்;

2. உண்டியல் கைமாற்றுப் பாங்கின் உண்டியல் வசூலிக்கும் செலவு;

3. அயல் நாட்டில் செலுத்தப்படக்கூடிய முத்திரை வரி;

4. அயல் நாட்டுத் தொடர்புப் பாங்கினால் உண்டியல் வசூலிக்கப்படும் செலவுகள்;

5. அஞ்சல் தாமதத்திற்கும், எதிர்பாரா நிகழ்ச்சிகளுக்கும் உகந்த தள்ளுபடி;

6. இந் நடவடிக்கைகளில் பாங்குகளின் இலாபம்.

அயல் நாட்டில் நிலவும் வீதத்திலேயே வட்டி வீதம் நிர்ணயிக்கப்படுகிறது. உண்டியல் கைமாற்றும் பாங்கு அயல் நாடுகளில் அவ்வுண்டியலை மறு தள்ளுபடி செய்கிறது. அத் தள்ளுபடி வீதம் அவ்வுண்டியலுக்குரிய வட்டியைக் கணக்கிடும் வீதமாகும். சில சந்தர்ப்பங்களில் இவ் வீதம் மாறுபட்டு வெவ்வேறு பாங்குகள் வெவ்வேறு வீதங்களில் கணக்கிடப்படுகின்றன. உண்டியலின் போக்கு, அதற்குரிய சரக்கின் இயல்பு, தன்மை, உண்டியல் எழுதுவோனின் தொழில் அளவு முதலானவற்றைப் பொறுத்தும் தள்ளுபடி வீதம் மாறுபடும். மற்ற செலவுகளாலும் வேறுபாடு ஏற்படலாம். தள்ளுபடி செய்யும் பாங்கு தனது நீண்டகால நம்பிக்கையுடைய வாடிக்கையாளருக்குத் தன் சொந்தச் செலவு

களைச் சேர்க்காமல் விட்டு விடலாம். உண்டியல் தள்ளுபடி செய்யும் பாங்கின் அயல் நாட்டுத் தொடர்பு பாங்கு அதிகமாக உண்டியல் வசூல் கட்டணம் வசூலித்தால் அதனை இரண்டு பாங்கு களும் பகிர்ந்து கொள்ளும். சில நாடுகளில் முத்திரை வரி மிகக் குறைவாக இருப்பின் அதனைப் பாங்குகளே கட்டிக் கொள் கின்றன. காட்சி உண்டியல்களில் இக் கட்டணம் மிகக் குறைவே. பாங்குகள் தங்கள் சொந்தக் கழிவிலிருந்தே இதனைக் கொடுக்கின்றன.

தட்டை வீதம் நிர்ணயிக்கப்படும் முறைகள்: உண்டியல் ஒன்று 90 நாட்கள் தவணையில் இந்தியச் செலாவணியான ரூபாயில், இலண்டனில் எழுதப்பட்டு, தள்ளுபடிக்காகப் பம்பாய்ப் பாங் கிடம் அளிக்கப்படுவதாகக் கொள்வோம். ஒவ்வொரு முறையில் பயண நாள் 10 நாட்களாகக் கொண்டு மற்றவற்றைக் கீழே கண்டுள்ளபடிக் கொள்வோம்.

| | | |
|---|---|---|
| பம்பாய்ப் பாங்கின் வசூல் கட்டணம் | $\frac{1}{8}\%$ = | 0·125 |
| இலண்டன் பாங்கின் வசூல் கட்டணம் | $\frac{1}{16}\%$ = | 0·0625 |
| இலண்டனில் உண்டியலின் முத்திரை வரி- மைலுக்கு | $\frac{1}{2}\%$ = | 0.05 |
| வட்டி $90+10+10=110$ நாட்களுக்கு | 4% = | 1·2005 |
| | மொத்தம் = | 1·438 |

தட்டை வீதங்கள் $\frac{1}{8}$ ஷில்லிங்கில் குறிப்பிட்டால், $\frac{1}{8}$-க்கும் நெருங்கிய வீதம் $1\frac{1}{2}$ ஆகவே பாங்கில் உண்டியல் கைமாறுவதற்கு $1\frac{1}{2}\%$ வீதம் குறிப்பிடுவார்.

உண்டியலின் தற்கால முகமதிப்பு ரூ. 10,000 என்ருல்

| | | |
|---|---|---|
| வாடிக்கையாளரின் கணக்கில் வரவு வைக்கப்படுவது | ரூ. | 10,000 |
| கழிவு $1\frac{1}{2}\%$ ............................................ | ரூ. | 150 |
| மீதி | ரூ. | 9,850 |

திருப்பிச் செலுத்தல்கள் (Return remittances): உண்டியல் கை மாறும்போது அயல் நாட்டிலிருக்கும் தனது பதிலாள் பாங்கிடம் அனுப்பப்படுகிறது. அப் பதிலாள் பாங்கு உண்டியல் எழுதப் படுவோனிடம் ஏற்புக்காகவும் பின்னர் செலுத்தப்படுவதற் காகவும் அவ்வுண்டியலைச் சேர்ப்பிக்கிறது. உண்டியல் சேர்ப் பிக்கும் பாங்கிஞல் பெறப்படும் தொகை உண்டியல் கைமாற்றுப் பாங்கிற்குக் கிடைக்கா. ஆனல், இது ஏற்றுமதி நாட்டிற்கு அனுப்பப்பட்டுவிடும். இம் மாற்றுதல் தந்தி மாற்று அல்லது

பாங்குப் பணவிடை மூலமாக உண்டியலில் கண்டுள்ள ஆணைப்படி நடைபெறுகிறது. தந்தி மாற்று மூலமாக அனுப்பப்படும் பணம் உண்டியல் மாற்றுப் பாங்கிற்கு உடனுக்குடன் கிடைக்கிறது. ஆனால் 30, 60 அல்லது 90 நாட்களில் முதிர்வடையக் கூடிய பண விடைகள் தள்ளுபடி நடைமுறைக்கு இலக்காகி அதற்காக ஆகும் தள்ளுபடி வீதத்தையும் கணக்கில் கொள்ள வேண்டும். உண்டியல் கைமாறுவதற்காக அனுமதிக்கப்படும் தட்டை வீதத்தில் உள்நாட்டு அயல் நாட்டு நடவடிக்கைகள் முழுவதும் அடங்கியுள்ளன.

(எ.கா): ரூ. 200-க்கு மதிப்புடைய 90 நாட்கள் காட்சி உண்டியல் ஒன்று நியூயார்க்கில் எழுதப்பட்டுக் கைமாறுவதற்காகப் பம்பாய்ப் பாங்கிடம் அளிக்கப்படுகிறது என்று கொள்வோம். 'உண்டியல் அளிக்கும் பாங்கின் எழுதிய வீதத்தில் சேர்ப்பிக்கும் நாளில் 90 நாட்கள் காட்சி உண்டியல் பம்பாயில் செலுத்தப்பட வேண்டும்' என்றும் அவ்வுண்டியலில் கண்டிருக்கும். இவ்வுண்டியலின்மேல் கடனளிக்கும் வீதம் 5%. இதனைத் தள்ளுபடி செய்யும் வீதம் $2\frac{1}{2}$%; பாங்குக் கழிவு $\frac{1}{4}$%; அமெரிக்கா, இந்தியா முத்திரை வரி மைலுக்கு $\frac{1}{2}$%. அஞ்சல் மூலமாக உண்டியல் போய்ச் சேர்வதற்கு ஒவ்வொரு வழிக்கும் 20 நாட்கள். சலுகை நாட்களும் அனுமதிக்கப்படுகின்றன (ஒரு ஆண்டுக்கு அமெரிக்காவில் 360 நாட்கள்; இந்தியாவில் 365 நாட்கள்).

அயல் நாட்டு மாற்று நடவடிக்கைகளைக் கருதாமல் மற்ற நடவடிக்கைகளைக் காண்போம். பம்பாயிலுள்ள உண்டியல் மாற்றுப் பாங்கினால் எடுத்துக் கொள்ளப்பட்ட உண்டியல் நியூயார்க்கிலுள்ள அதன் தொடர்பு பாங்கிற்கு அனுப்பப்படுகிறது. இத் தொடர்பு பாங்கு உண்டியல் எழுதப்படுவோனிடம் சேர்ப்பித்து அவனுடைய ஒப்புதலைப் பெறுகிறது. உண்டியல் முதிர்வு நாளில் உண்டியல் எழுதப்படுவோன் 90 நாட்களில் பம்பாய்ப் பாங்குப் பண விடையை வாங்கிப் பம்பாய்ப் பாங்கிற்கு அனுப்புகிறார். பம்பாய்க்கு அப் பண விடையை $2\frac{1}{2}$% வீதத்தில் உண்டியல் எழுதப்படுவோன் பாங்கில் தள்ளுபடி செய்யலாம் அல்லது முதிர்வு நாள்வரையில் வைத்திருந்து பிறகு பணத்தைப் பெறலாம். தட்டை வீதத்தில் தள்ளுபடி கணக்கிடும்போது உண்டியல் மாற்றுப் பாங்கு $90+20+20=130$ நாட்களுக்கு 5% வட்டி வீதம் கணக்கிடுகிறது. அமெரிக்காவில் ஆண்டுக்கு 360 நாட்கள் என்ற அடிப்படையில் வட்டி கணக்கிடப்படுகிறது. உண்டியல் திருப்பிச் செலுத்தலில் கழிவு ஆண்டுக்கு 365 நாட்கள் என்ற அடிப்படையில்

கணக்கிடப்படுகிறது. கழிவு, உண்டியல், முத்திரை வரி, உண்டியல் திருப்பிச் செலுத்தலில் தள்ளுபடி அனைத்தும் வட்டியில் அடங்குகிறது.

| | | | |
|---|---|---|---|
| 130 நாட்களுக்கு வட்டி: ஆண்டுக்கு | @ 5% | = | 1·806 |
| அமெரிக்காவில் முத்திரை வரி ..... | @ $\frac{1}{2}$% | = | 0·05 |
| பாங்குக் கழிவு ......... | @ $\frac{1}{4}$% | = | 0·025 |
| திருப்பிச் செலுத்தலில் 90 நாட்கள் தள்ளுபடி: ஆண்டுக்கு .......... .. | @ $2\frac{1}{2}$% | = | 0·616 |
| | மொத்தம் | = | 2·497 |

8% வீதத்தில் நெருங்கிய தட்டை வீதம் $2\frac{3}{4}$% எனக் குறிப்பிடப்படுகிறது.

| | | | |
|---|---|---|---|
| உண்டியல் எழுதுவோனால் பெறப்படும் தொகை | | | ரூ. 20,000 |
| கழிவு = தள்ளுபடி.................. ... | @ $2\frac{3}{4}$% | ரூ. 550 | 560 |
| ,, = இந்திய முத்திரை.......... | @ $\frac{1}{2}$% | ரூ. 10 | |
| | | மீதி ரூ. | 19,440 |

குறிப்பு: இந்திய முத்திரை வரி தட்டை வீதத்தில் கணக்கிடப் படாமல் தனிப்பட்ட முறையில் கணக்கிடப்படுகிறது.

அயல் நாட்டுச் செலாவணியில் எழுதிய உண்டியல் கைமாறல் (Negotiation of bills drawn in foreign currency): அயல்நாட்டுச் செலாவணியில் எழுதிய உண்டியல் மாற்றப்படும்போது உண்டியல் எழுதியவனுக்குப் பாங்கு உள்நாட்டுச் செலாவணியில் பணம் கொடுக்கிறது. ஆகவே வட்டி, முத்திரை வரி, பாங்குக் கழிவு ஆகிய அனைத்துக் கட்டணங்கள் அடங்கிய மாற்று வீதத்தைக் கணக்கிடும்போது அயல்நாட்டுச் செலாவணியில் நிலைமையும் கணக்கில் கொள்ளப்படுகிறது. செலாவணி நிலையற்றதாக இருப்பின் அல்லது அயல்நாட்டிலிருந்து செலாவணி மாற்றத்திற்குத் தடையேதுமிருப்பின் மற்ற நிலைமைகளில் இருப்பதைவிட மாற்று வீதம் பொதுவாகக் கூடுதலாக இருக்கும். மாற்று வீதம் கணக்கிடப்படும்போது கீழ்க்கண்ட இனங்கள் சேர்த்துக்கொள்ளப்படுகின்றன:

1. அடிப்படை மாற்று வீதம் அயல்நாடுகளில் தந்தி வழி மாற்று (T.T.) வீதம் அல்லது கேட்புப் பண விடை வாங்குதற்குப் பாங்கு வீதமாகவும் இருக்கும். கேட்புப் பண விடை வீதம் அடிப்படை வீதமாக எடுத்துக் கொள்ளப்பட்டால் அஞ்சல்

மூலம் அயல்நாட்டிற்கு அப் பண விடை செல்லும் காலம் கணக்கில் சேர்த்துக் கொள்ளப்படா. ஏனென்றால், அக் காலம் ஏற்கனவே அடிப்படை வீதத்தில் கணக்கிலெடுத்துக் கொள்ளப் படுகிறது. தந்தி வழி மாற்று வீதம் (T.T.) அடிப்படை வீதமாக இருப்பின் அக் காலம் கணக்கில் எடுத்துக் கொள்ளப்படுகிறது.

2. அயல் நாடுகளில் உண்டியல் மறு தள்ளுபடி செய்து மாற்றும் தேதியிலிருந்து பணம் பாங்குக்கு வரும்வரையில் உள்ள காலத்திற்கு வட்டி வீதம் கணக்கிடப்படுகிறது. இவ்வீதத்தில் உண்டியல் முதிர்வடையும் காலம், அஞ்சல் மூலம் ஆகும் காலம், சலுகை நாட்கள் ஆகியவையும் அடங்கும். அஞ்சல் மூலம் ஏற்படும் தாமத நாட்களும், மற்ற எதிர்பாராமல் நிகழும் கால தாமதத்திற்கும் வழி வகையுண்டு.

3. அயல் நாட்டுச் செலாவணியில் செலுத்தக்கூடிய முத்திரை வரி.

4. அயல் நாட்டுப் பாங்கின் வசூல் செலவுகள்.

5. இந் நடவடிக்கையில் உள்நாட்டுப் பாங்கின் கழிவு.

நீண்ட கால உண்டியல் (30 நாட்கள் அல்லது அதற்கு மேல்) வாங்குவதற்குப் பாங்குகளால் குறிக்கப்படும் வீதம் நீண்ட கால வீதம் எனப்படும். மேற்கண்ட செலவினங்களுக்கு அனுமதி யளித்துத் தந்தி வழி மாற்று வீதம் அல்லது கேட்புப் பண விடை மாற்று வீத அடிப்படையில் மாற்று வீதம் கணக்கிடப்படுகிறது. இக் கணிப்பு நேர்முகமாகவோ அல்லது மறைமுகமாகவோ குறிப் பிடப்படுகிறது. அயல் நாட்டுச் செலாவணியில் எழுதிய நீண்ட கால உண்டியலைப் பாங்கு எவ்வீதத்தில் வாங்குகிறது என்பதைக் காண்போம்:

90 நாட்கள் தவணைக் காலக் காட்சி உண்டியல் ஒன்று ஸ்டெர்லிங்கில் எழுதப்பட்டு மாற்றலுக்காகப் பாங்கிடம் அளிக்கப் படுவதாகக் கொள்வோம். இலண்டன் மேலுள்ள பம்பாய்த் தந்தி வழி மாற்று வீதம் $13\frac{1}{4}$—$13\frac{3}{8}$. இலண்டனில் அவ்வுண்டியல் ஓர் ஆண்டுக்குத் தள்ளுபடி செய்யும் வீதம் 4%, அஞ்சல் காலம் 7 நாட்கள், சலுகை நாட்கள் 3 என இலண்டனில் அனுமதிக்கப் படுகிறது. முத்திரை வரி இங்கிலாந்தில் ஒரு மைலுக்கு $\frac{1}{2}$%. வசூலிக்கும் பாங்கு வசூல் கட்டணம் மைலுக்கு $\frac{1}{4}$% ஆக வசூலிக் கிறது. பம்பாய்க்கு $\frac{1}{3}\frac{3}{2}$ பென்னிகள் வீதத்தில் வசூலிக்கிறது.

இம் முறையில் அஞ்சல் கால 7 நாட்கள் + உண்டியல் கால 90 நாட்கள் + 3 சலுகை நாட்களும் சேர்ந்து 4%-மாக வட்டி கணக்கிடப்படுகிறது. அதாவது 100 நாட்களுக்கும் தந்தி மாற்று மூலம் ஒரு ரூபாய் வாங்கும் வீதம் $13\frac{3}{8}$ பென்னிகள்

ஆகும். மேலும் பாங்கு ஒரு ரூபாயில் வட்டி, முத்திரை வரி, பதிலாள் கழிவு, இலாபம் முதலியவற்றிற்கு அதிக பென்னிகளை எடுத்துக்கொள்ளும். முடிவாக வாங்கும் வீதம் கீழ்க்கண்டவாறு கணக்கிடப்படுகிறது.

| | | | |
|---|---|---|---|
| தந்தி மாற்று வீதம் ........ | $13\frac{3}{8}$ பென்னிகள் | = | 13·375 |
| கூட்டு : 100 நாட்களுக்கு வட்டி: ஆண்டுக்கு | @ 4% | = | ·146575 |
| ,, : முத்திரை வரி | @ $\frac{1}{2}$%—(13·375 பென்னிகள் மேல்) | = | ·006687 |
| ,, : பதிலாள் கழிவு | @ $\frac{1}{4}$%—(13·375 பென்னிகள் மேல்) | = | ·003343 |
| ,, : பாங்கு இலாபம் | $\frac{1}{32}$ பென்னிகள் வீதம் | = | ·03125 |
| | மொத்தம் | = | 13·562855 |

ஆகவே, பாங்கின் ஒரு ரூபாய் வாங்கும் வீதம் 13·65660 அல்லது $13\frac{9}{16}$ பென்னிகள் ஆகும்.

மேற்கண்ட எடுத்துக்காட்டில் குறிப்பிட்ட மாற்று வீதம் மறைமுக மாற்று வீதமாகும். அதாவது ஓர் உள்நாட்டுச் செலாவணி அலகின் மதிப்பு அயல்நாட்டுச் செலாவணியில் உணர்த்தப்படுகிறது. மாற்று வீதம் நேர்முகமாகக் குறிப்பிடுதலைக் கீழே காண்போம். நியூயார்க்கிலுள்ள பாங்கு ஒன்று இலண்டனிலுள்ள 60 நாட்கள் காட்சி உண்டியல் ஒன்றை வாங்க முற்படுகிறது என்று கொள்வோம். இலண்டனில் தள்ளுபடி வீதம் $4\frac{1}{2}$%; முத்திரைச் செலவுமைலுக்கு $\frac{1}{4}$ %; பாங்கு இலாபம் மாற்று வீதத்தில் $\frac{1}{32}$ செண்டுகள். உண்டியல் நியூயார்க்கிலிருந்து இலண்டன் போய்ச்சேர 5 நாட்கள் ஆகின்றன. 3 சலுகை நாட்களும் அனுமதிக்கப்படுகிறது. இவ்விதம் கீழ்க்கண்டவாறு கணிக்கப்படுகிறது. வட்டியும் மற்ற செலவினங்களும் தந்தி மாற்று வீதத்தில் கழித்துக் கொள்ளப்படுகின்றன.

| | | |
|---|---|---|
| தந்தி வழி மாற்றுவீதம்—ஒரு பவுண்டுக்கு டாலர்... | | 2·40 |
| கழி : வட்டி 60 + 5 + 3 = 68 நாட்களுக்கு @ $4\frac{1}{2}$% | = 0·020125 | |
| இலண்டனில் முத்திரை வரி @ $\frac{1}{4}$% | = 0·0006 | |
| பாங்கு இலாபம் $\frac{1}{32}$ செண்டுகள் : | = 0·0003125 | ·0210375 |
| | 0·0210375 டாலர்கள் = | 2·3789625 |

ஒரு பவுண்டுக்கு 2·3789625 அல்லது $2{\cdot}37\frac{7}{8}$ டாலர்கள் மாற்று வீதம் என்று குறிப்பிடப்படுகிறது.

# 3. அயல்நாட்டுச் செலாவணி மாற்று அங்காடி

## (The Foreign Exchange Market)

செலாவணி மாற்று அங்காடி: ஒரு பொருளின் அங்காடி என்பது அப் பொருளை வாங்குபவர்கள் விற்பவர்களின் தொகுதியைக் குறிக்கும். அதுபோல் அயல்நாட்டுச் செலாவணிகளை நாணயப் பத்திரங்கள்மூலம் வாங்குபவர்களும் விற்பவர்களும் அடங்கிய தொகுப்பு அயல்நாட்டு மாற்று அங்காடி எனக் கருதப்படுகிறது. பாங்குகள், தள்ளுபடி நிலையங்கள் (Discount houses) மாற்றுத் தரகர்கள் (Exchange brokers) போன்ற பலவித நிறுவனங்கள் அயல்நாட்டு மாற்று அங்காடியில் உள்ளன. அயல்நாட்டு மாற்றுத் தொழிலை ஏதோ ஒரு நேரத்தில் தொழிலாகக் கொண்ட வணிகர்கள், அயல் நாட்டுப் பிணையங்களை வாங்குபவர்கள், விற்பவர்கள் முதலானவர்களும் உள்ளனர்.

இங்கு அங்காடி (market) என்ற சொல் பரந்த அளவில் பயன்படுத்தப்படுகிறது. வாங்குபவர்களும் விற்பவர்களும் நேருக்குநேர் சந்தித்து நிகழ்த்தும் தொழிலிடத்தைக் குறிப்பது. (எ. கா): பாங்கு மாற்றல்கள் இந்த நவீன காலத்தில் பொதுவாக அயல்நாட்டு மாற்றுக்கள், அஞ்சல், தொலைபேசி, தந்தி, கடல் தந்தி, கம்பியில்லாத் தந்தி மூலமே நிகழ்கின்றன. தற்காலத்தில் செய்தித் தொடர்பின் வழிவகைகள் மிகுதியாக இருப்பதால் பரப்பளவும் அதிகமாகி அயல்நாட்டுப் பேரங்களும் பரவலாகத் திகழ்கின்றன.

இரண்டாம் உலகப் போருக்குப் பிறகு பலநாடுகளில் மாற்றுக் கட்டுப்பாடு புகுத்தப்பட்டபோது அயல் நாட்டு மாற்று அங்காடி இங்கு விவரிப்பதுபோல் செயல்படவில்லை. ஆட்சியாளர்கள் மாற்று வீதங்களை நிர்ணயிக்கிறார்கள். இறக்குமதியாளர்களுக்குக்

கிடைக்கக்கூடிய அயல் நாட்டுச் செலாவணியை அவர்களே ஒதுக்குகிருர்கள். குறிப்பிட்ட வியாபாரிகளுக்குமட்டும் தாங்கள் ஈட்டிய அயல் நாட்டுச் செலாவணிகளை விற்கக் கோரப்படு கிருர்கள். அயல் நாடுகளில் கடன் வாங்குவதையும் கடன் அளிப்பதையும் ஒழுங்குமுறை செய்கிருர்கள். அயல் நாட்டு மாற்று அங்காடி இரண்டாம் உலகப்போருக்கு முன்னிருந்தது போல் இப்போது செயல்படவில்லை.

அயல்நாட்டு மாற்று அங்காடியில் வாங்குபவர்களும், விற்பவர் களும்: பாங்குகளால் ஏற்படுத்தப்பட்ட சிறந்த அயல் நாட்டு நாணய மாற்றுத் துறைகளே, அயல் நாட்டு நாணய மாற்று அங்காடியின் தலையாயக் கொள்முதல் விற்பனை நிலையங்களாகச் செயல்படுகின்றன. இப் பாங்குகள் தங்கள் அயல்நாட்டுக் கிளைகள் அல்லது தொடர்புப் பாங்குகளிடம் தங்கள் அந்நியச் செலாவணி நிலுவைகளை வைத்திருக்கின்றன. பண விடைகளை விற்பதன்மூலமும் அயல்நாட்டு ஏற்றுமதியாளர்களின் உண்டி யல்களை ஏற்பதன்மூலமும் அந்நிலுவைகளிலிருந்து பணத்தை எடுத்துக் கொள்கின்றன. உள்நாடு, அயல் நாடுகளிலுள்ள வாடிக்கையாளரின் பண விடைகளை வாங்குவதன்மூலமும், உண்டியல்களை வசூல் செய்வதன்மூலமும் அந்நிலுவைகளை நிரப்பிக் கொள்கின்றன.

அயல்நாட்டு நாணய மாற்றுத் தொழிலில் ஈடுபடும் பாங்குகள் அத்தொழிலில் சிறப்புத் தேர்ச்சி பெற்ற வணிகர்களை வேலைக்கமர்த்திக் கொள்கின்றன. ஒவ்வொரு வகைச் செலா வணியிலும் சிறப்புத் தேர்ச்சி பெற்ற வணிகர்களையும் அமர்த்திக் கொள்கின்றன. இவ் வணிகர்கள் பொதுவாக ஒரு குறிப்பிட்ட செலாவணியின் 'ஓட்ட நிலையை' (running position) தடுக் கிருர்கள். அதாவது அவர்கள் ஈடுபாடு கொண்டுள்ள எந்தச் செலாவணி அளவுக்கதிகமாக வாங்கப்பட்டாலும், அளவுக்கு அதிகமாக விற்கப்பட்டாலும் பார்த்துக் கொள்கிருர்கள். ஒரு குறிப்பிட்ட இடத்திலுள்ள பாங்கின் நிலுவைகள் ஒரு நாளின் இறுதியில் இயல்பான மட்டத்திற்கு மிகாமலும், குறையாமலும் இருக்கச் செய்கின்றனர். இதனை உறுதியாகக் கண்டறிய ஒவ்வொரு வணிகரும் ஒரு குறிப்பிட்ட தினத்தில் ஒவ்வொரு இடத்திலும் தொடக்க இருப்பைக் காட்டும் பட்டியல் போன்ற (நிலைமைத் தாள்—position sheet) ஒன்றை வைத்துக் கொள்கிருர். ஏதாவது ஒரு செலாவணி அதிகமாக வாங்கப்பட்டிருந்தாலும் அல்லது விற்கப்பட்டிருந்தாலும் அதனைச் சரிபடுத்தற்குரிய நடவடிக்கைகள் உடனே மேற்கொள்ளப்படும்.

அயல்நாட்டு நாணய மாற்றுத் தரகர்கள்மூலம் அயல்நாட்டு நாணய மாற்று வணிகர்கள் ஒருவருக்கொருவர் தொடர்பு கொள்கின்றனர். அயல்நாட்டுச் செலாவணிகளை வாங்குபவர்களையும் விற்பவர்களையும் இத்தரகர்கள் இணைக்கிறார்கள். அவர்கள் தாங்களாகவே வாங்குவதோ, விற்பதோ இல்லை. வணிகர் ஒருவர் அயல்நாட்டுச் செலாவணியை வாங்க விரும்பினால் தனது தேவையையும் அதற்கு எவ்வளவு விலை கொடுக்க விரும்புகிறார் என்பதையும் தொலைபேசிமூலம் தரகர் ஒருவருக்குத் தெரிவிக்கிறார். விற்பனையாளர் விலைக் குறிப்பீட்டை அறிந்து கொண்டு அச் செலாவணியை விற்பனை செய்யக் கூடியவருடன் தரகர் தொடர்பு கொள்கிறார். விற்பனையாளர் குறிப்பிட்ட விலையும், வாங்குபவர் அளிக்கக்கூடிய விலையும் ஒன்றாக இருந்தால் செலாவணி விற்கப்பட்டது என்று விற்பனையாளரிடமும், தேவையான செலாவணி வாங்கப்பட்டது என்று கொள்முதல் செய்பவரிடமும் தரகர் அறிவிப்பார். இரு விலைகளிலும் ஏதாவது வேறுபாடு காணப்பட்டால் இரு வணிகர்களும் ஏற்றுக் கொள்ளக்கூடிய விலையில் சரிக்கட்ட இருவரையும் இணங்கச் செய்கிறார். வார்த்தை அளவில் பேரம் முடிந்தவுடன் வாங்குபவருக்கு விற்பவர் பெயரையும், விற்பவருக்கு வாங்குபவர் பெயரையும், எவ்வீதத்தில் வாணிகம் முடிந்தது என்றும் வெளிப்படுத்தி, விற்பனையாளருக்கும் வாங்குபவருக்கும் தரகர் 'தரகர் ஒப்பந்தக் குறிப்பை' (broker's contract note) அனுப்புகிறார். இவ்வடிப்படையில் அயல்நாட்டு நாணய மாற்று வாணிகம் நடைபெறுகிறது.

அயல் நாட்டு நாணய மாற்று அங்காடியில் நாணயப் பத்திரங்கள் வாங்குபவர்களும் விற்பவர்களும் வாடிக்கையாளர்களாக இருக்கின்றனர். ஏனென்றால், அவர்கள்தான் அயல் நாட்டினரிட்மிருந்து செல்லுகளைப் பெறுகிறார்கள் அல்லது அவர்களுக்குச் செல்லுகளைச் செலுத்துகிறார்கள். சரக்கு ஏற்றுமதியாளர்களால் உண்டியல்களும், பணவிடைகளும் விற்கப்படுகின்றன. தனிப்பட்டவர்களும், நிறுவனங்களும் அயல் நாடுகளில் பிணையங்களை (securities) விற்கின்றனர். அவர்கள் அயல் நாடுகளிலுள்ள தங்கள் முதலீடுகளிலிருந்து வட்டி, இலாப ஈவுகளைப் பெறுகிறார்கள். அயல் நாடுகளிலிருந்து சுற்றுலா வருபவர்கள் தாங்கள் கொண்டு வரும் பயணக் காசோலைகள், பணவிடைகள், தங்கள் நாட்டுச் செலாவணித் தாள்கள், காசுகள் முதலானவற்றை இந் நாட்டிலுள்ள பாங்குகளில் விற்கின்றனர். அயல் நாடுகளிலுள்ள பாங்குகள், தனியார்கள், நிறுவனங்கள் ஆகிய யாவும் இந் நாட்டுக் குறுங்கால வைப்புகளில் நிதி

செலுத்துகின்றன. அயல் நாட்டு மூலதன அங்காடிகளிலிருந்தும் அயல்நாட்டு அரசுகளிடமிருந்தும் கடன் வாங்குகின்றன. இவர்கள் எல்லாம் நாணய மாற்று அங்காடியில் அயல் நாட்டுச் செலாவணிகளை விற்பவர்களாவார்கள்.

சரக்கு இறக்குமதியாளர்கள், அயல் நாட்டுப் பங்குத் தொகுப்புப் பிணையங்களை வாங்குபவர்கள், அயல் நாட்டு முதலீட்டாளர்களுக்கு இலாப ஈவு வட்டி செலுத்தும் தொழிலகங்கள், அயல் நாடுகளுக்குச் சுற்றுலா செல்பவர்கள் ஆகிய அனைவரும் அயல்நாட்டுச் செலாவணிகளை வாங்குபவர்களாவார்கள். அயல் நாட்டுப் பாங்குகளில் குறுங்கால நிதியை வைப்பாக வைத்திருப்பவர்களும் அயல் நாட்டுப் பண விடைகள் வாங்குகின்றனர். அரசு சரக்கு இறக்குமதி செய்தாலும், அயல்நாட்டு அரசுகளுக்குக் கடன் தந்தாலும், அவ்வயல் நாடுகளுக்குப் பணம் செலுத்த அயல்நாட்டுச் செலாவணிகளை வாங்குகிறது. தடையற்ற அயல் நாட்டு மாற்று அங்காடியில் ஊக வணிகர்களும் (speculators) வாங்குபவர், விற்பவர்களாகத் திகழ்கிறார்கள். அவர்கள் உண்மையாகச் செலுத்தக்கூடிய அல்லது பெறக்கூடிய அயல் நாட்டுச் செல்லுகள் எவையும் இல்லை. மாற்று வீதத்தில் ஏற்படும் சிறு மாற்றத்தின் மூலம் இலாபமடைய அவர்கள் அயல் நாட்டுச் செலாவணிகளை வாங்குகிறார்கள் அல்லது விற்கிறார்கள். மாற்று வீதம் மிகவும் ஏற்ற இறக்கத்தில் இருக்கும்போது இவர்கள் மிகவும் சுறுசுறுப்பாக இயங்குகிறார்கள்.

அயல் நாட்டு நாணய மாற்று அங்காடி நடவடிக்கைகள்: வணிகர்களுக்கும் வாடிக்கையாளர்களுக்குமிடையேயும் அயல் நாட்டுச் செலாவணிகளை வாங்குதல் விற்றல்களே அயல் நாட்டு நாணயமாற்று அங்காடியின் நடவடிக்கைகளாகும். வணிகர்கள், உண்டியல்கள், பணவிடைகள்மூலம் அயல் நாட்டுச் செலாவணிகளை வாடிக்கையினரிடமிருந்து வாங்கி அயல்நாட்டுப் பாங்குகளில் வரவு வைத்து அவர்கள் அயல் நாடுகளில் செல்லுகளைப் பெற வழி செய்கிறார்கள். அந் நாட்டினருக்குச் செல்லுகளைச் செலுத்த வேண்டி மற்ற வாடிக்கையினருக்குப் பத்திரங்களை விற்பதன்மூலம், அவர்கள் பெற்ற செலாவணி நிலுவைகள் கையாளப்படுகின்றன. அயல்நாட்டுச் செலாவணியின் விற்கும் விலை, வாங்கும் விலையைவிடத் தொழில் பாங்கிற்குச் சிறு இலாபம் கிடைக்கும் பொருட்டுச் சற்றுக் கூடுதலாக இருக்கும்.

இம் மாதிரியான நடவடிக்கைகள் ஊக வணிகத்தைச் சார்ந்ததன்று. ஒரு வணிகர் ஒரு நடவடிக்கையை மேற்கொண்டால் அதனைச் சரிக்கட்டக்கூடிய எதிர் நடவடிக்கையை எதிர் நோக்கு

கிறுர். ஒரு வாடிக்கையாளருக்குச் செலாவணியை விற்கும்போது வேருெருவரிடமிருந்து கொள்முதல் செய்வதன்மூலம் அவ் விற்பனையைச் சரிக்கட்ட முயற்சிக்கிறுர். அதுபோது செலாவணிக் கொள்முதல், செலாவணி விற்பனையால் சரிக்கட்டப்பட வேண்டும். (எ.கா.): செக்குக் கொள்முதல், தந்தி மாற்றங்களின் (Telegraphic transfer) விற்பனையால் சரிக்கட்டப்படவேண்டும். இச் சமன் செய்யும் முறைகள்மூலம் மிகுந்த அளவு இலாபம் ஈட்டக்கூடிய வாய்ப்பை வணிகர்கள் எதிர்பார்க்கிறுர்கள்.

வணிகர்களுக்குள்ளே நடைபெறும் நடவடிக்கைகள் 'அங்காடி' (Market) வணிகம் என்றழைக்கப்படும். வாடிக்கை யினருடன் ஈடுபடும் நடவடிக்கைகளைக் காட்டிலும் இவை மிகக் குறைவே. வாடிக்கையினருடன் ஈடுபடும் நடவடிக்கைகள் அளவிலும், தன்மையிலும் மாறுபடுகின்றன. அங்காடி வணிகம் வழக்கமாக உயர்ந்த அளவிலும் தந்தி மாற்றங்களாகவுமே நிகழ்கின்றன.

ஒரு குறிப்பிட்ட இடத்திலுள்ள தங்கள் நிலுவைகளைக் (balances) கூட்டும் பொருட்டோ, குறைக்கும் பொருட்டோ அல்லது நிலுவைகளை ஓர் இடத்திலிருந்து மற்ருேரிடத்திற்கு மாற்றும் பொருட்டோ பாங்குகள் அடிக்கடி வாணிகத்தை மேற் கொள்கின்றன. ஒரு குறிப்பிட்ட செலாவணியின் நிலுவை குறைவாக இருக்கிறது என்றுணரும் பாங்கு அதே நாட்டிலுள்ள அல்லது வேறு நாட்டிலுள்ள மற்ருெரு பாங்கிடமிருந்தோ அல்லது வேறு நாட்டிலுள்ள அதன் தொடர்புப் பாங்கிடமிருந்தோ அச் செலாவணியை வாங்கி அக் குறைபாட்டைச் சரிக்கட்ட முயலும். (எ.கா.): இங்கிலாந்து பாங்கு ஒன்று தனது டாலர் நிலுவை குறைந்து செல்வதை உணரலாம். இங்கிலாந்திலுள்ள வேருெரு பாங்கிடமிருந்தோ, ஃபிரான்சு பாங்கிடமிருந்தோ அது டாலர்களை வாங்கி அக் குறைபாட்டைச் சரி செய்து கொள்ளலாம். செலாவணி விற்கும் பாங்கு அமெரிக்காவிலுள்ள அதன் தொடர்புப் பாங்கிடம் தனது கணக்கைப் பற்று வைக்கும் படியும், கொள்முதல் செய்யும் பாங்கின் கணக்கை வரவு வைக்கும் படியும் தந்திமூலம் தெரிவிக்கும். கொள்முதல் செய்யும் பாங்கு விற்பனை செய்யும் பாங்கின் ஸ்டெர்லிங் கணக்கில் வரவு வைக்கும். இதுபோல் அமெரிக்காவிலுள்ள அதன் தொடர்புப் பாங்கிட மிருந்து கொள்முதல் செய்யும். அமெரிக்கத் தொடர்பு பாங்கு இங்கிலாந்து பாங்கின் டாலர் கணக்கில் வரவு வைக்கும். இங்கிலாந்து பாங்கு, அமெரிக்க பாங்கின் ஸ்டெர்லிங் கணக்கில் வரவு வைக்கும். இந்த நடவடிக்கைகள் எல்லாம் ஏற்கனவே ஏற்றுக்கொண்ட மாற்று வீதங்களிலேயே நடைபெறும்.

ஓர் இடத்திலிருந்து மற்றோர் இடத்திற்கு நிலுவைகள் மாற்றப்படும்பொருட்டுப் பாங்குகள் மற்ற பாங்குகளுடன் அங்காடி வணிகத்தில் ஈடுபடுகின்றன. அமெரிக்காவிலும் ஃபிரான்சிலும் வைப்புகளை வைத்திருக்கும் இங்கிலாந்து பாங்கு ஒன்று ஃபிராங்குகளுக்குக் குறைவான தேவையும், அமெரிக்க டாலர்களுக்கு அதிகத் தேவையும் கொண்டுள்ளதாகக் காணும்போது அமெரிக்க டாலர் கணக்கில் வரவு வைத்துக்கொண்டும் ஃபிராங்குகள் வைப்பின் ஒரு பகுதியைத் தொடர்பு பாங்குக் கணக்கிற்கு மாற்றிக் கொண்டும், இங்கிலாந்து பாங்கு அவ்வமெரிக்கத் தொடர்புப் பாங்கிற்கு 'ஃபிராங்குக் கடல் தந்தி' ஒன்றை விற்கும்.

அங்காடி வணிகத்தைப் பாங்குகள் பதிலாள் நடவடிக்கைகள் போன்று ஏற்று நடத்துகின்றன. ஒரு குறிப்பிட்ட விலையில் குறிப்பிட்ட அளவு மூன்றும் நாட்டுச் செலாவணியை வாங்கும்படி அயல் நாட்டுத் தொடர்பு பாங்கு ஒன்று, உள் நாட்டுப் பாங்கு ஒன்றை வேண்டிக் கொள்ளலாம். கூடியவரை சாதகமான வீதத்தில் பாங்கு இவ் வணிகத்தை மேற்கொள்ளுகிறது.

இசைவாணைகளும் வரம்புகளும் (Sanctions and Limitations): வணிகர் ஒரு வாடிக்கையினரிடமிருந்து ஒரு பத்திரத்தை வாங்கும்போது விற்பனையாளரின் செல்வாக்கையும் ஆராய்கிறார். ஒரு குறிப்பிட்ட நேரத்தில் பாங்குகள் தங்களுக்கிடையே ஒவ்வொன்றும் மற்றவற்றுடன் அனுமதிக்கப்பட்டு வைத்திருக்கும் மொத்த பொறுப்புகளின் நிலுவைகளுக்கும் எல்லையுண்டு. வாடிக்கையாளரின் செல்வாக்குக் குறைந்தால் அவரிடம் அனுமதிக்கப்பட்டிருக்கும் பண அளவின் வரம்பும் குறைந்து விடுகிறது. எழுதப்பெறுவோரின் அல்லது பெறுவோரின் செல்வாக்கை நோக்கும்போது உண்டியலை விற்கும் வாடிக்கையாளரின் செல்வாக்கை மிகுதியாகக் கவனிக்க வேண்டியுள்ளது. விற்பனைக்காக வாடிக்கையினரால் அளிக்கப்படும் நாணயப் பத்திரத்தின் தன்மையையும் அளந்தறிய வேண்டியுள்ளது. தந்தி மாற்றங்கள் (Telegraphic transfers) வாங்குவதில் குறைந்த இடர்ப்பாடே உள்ளது. ஏனென்றால், அயல் நாட்டில் பணம் செலுத்தும்போது ஏற்படும் தவறுகள் சில மணிகளுக்குள்ளாகவே தெரிந்து விடுகின்றன. விற்பனையாளரிடமிருந்து பணத்தைத் திருப்பிப்பெற உடனே தகுந்த நடவடிக்கைகள் எடுக்கப்படுகின்றன. பண விடைகள், உண்டியல்கள், வெட்டுச் சீட்டுகள், குறுக்குப் பத்திரங்கள் முதலியனவற்றில் இடர்ப்பாடுகள் மிகுதியாக உள்ளதால் வாடிக்கையாளரின் செல்வாக்குகள் மிகவும் இன்றியமையாததாகும். ஆகவே, ஒவ்வொரு நடவடிக்கைக்கும், ஒவ்வொரு

வாடிக்கையாளருக்கும் தனித்தனி வரம்பு நிர்ணயித்து எந்தவகை நடவடிக்கையின் மொத்த நிலுவைகளின் அளவும் அனுமதிக்கப் பட்ட வரம்பிற்கு மிகக் கூடாது.

மதிப்பு நாள் (Value date): அயல் நாட்டு நாணய மாற்று வணிகத்தில் பணம் செலுத்த வேண்டியது எந்த நாளோ அந்த நாளே மதிப்பு நாள் (Value date) ஆகும். இரண்டு வணிகர் களுக்கிடையே பேரத்தை முடிவு செய்தவுடனே மாற்றுத் தரகர் ஒவ்வொருவருக்கும் மற்றவர் பெயரைக் குறிப்பிட்டு 'ஒப்பந்தக் குறிப்பை' அனுப்பி அதில் செல்லுகள் செலுத்த வேண்டிய மதிப்பு நாளையும் குறிப்பிடுகிறூர். அயல் நாட்டில் செலாவணி சேர்த்தல் அல்லது பெறுதல் அந்த நாளில் நிகழ்கின்றன. அதே நேரத்தில் உள் நாட்டிலும் செல்லுகள் செலுத்த வேண்டும் அல்லது பெற வேண்டும்.

தந்தி மாற்றங்களால் [T.T] செலுத்தப்படும்போதும் இரண்டு இடங்களுக்கும் மதிப்பு நாள் ஒன்றே. அதாவது இரண்டு இடங்களிலும் ஒரே நாளில் அந்தந்த நாட்டுச் செலாவணிப் பணம் செலுத்தப்படவேண்டும். ஆகவே, இதில் நட்டமோ அல்லது இலாபமோ இல்லை. இவ்வாறு செலுத்துதலை 'மதிப்பு ஈடு செய்யப்பட்டது' என்றும், பணம் 'இங்கும் அங்கும் ஒரே நாளில்' என்றும் அழைக்கப்படுகிறது. மதிப்பு நாளில் செலாவணி அளிக்கப்படாவிட்டால் மதிப்பு நாளிலிருந்து உண்டியல் செலுத்தும் நாள்வரைக் கணக்கிட்டு வட்டி கொடுக்கநேரிடும்.

## பன்னாட்டுப் பேரங்கள்

பன்னாட்டுக் கடன்கள் ஏற்படுவதற்குரிய மூலகாரணங்கள் :

இந்தியாவில் அந்நியச் செலாவணி அளிப்பு, தேவைக்குரிய காரணங்கள் :

| அந்நியச் செலாவணி அளிப்பிற்குரிய காரணங்கள் | அந்நியச் செலாவணி தேவைக்குரிய காரணங்கள் |
|---|---|
| வணிக இனங்கள் | |
| 1. புலனுகும் ஏற்றுமதிகள் அல்லது ஏற்றுமதியாகும் பணிகள். பொன்னும் வெள்ளியும் சேர்ந்த ஏற்றுமதிப் பொருள்கள். | 6. புலனுகும் இறக்குமதிகள் அல்லது இறக்குமதிப் பண்டங்கள். பொன்னும் வெள்ளியும் சேர்ந்த இறக்குமதிப் பொருள்கள். |

2. புலனாகா ஏற்றுமதியாகும் பணிகள். அயல்நாட்டினருக்கு இந்தியர்களால் செய்யப்படும் பணிகள்.

(அ) விமான, கப்பல் பணிகள்.

(ஆ) நிதி, பாங்கு, இன்சூரன்சு அறிவுரை கூறுதல் முதலிய பணிகள்.

(இ) அயல்நாட்டுச் சுற்றுலாவினர், மாணவர்கள், வணிகர்களுக்காகச் செய்யப்படும் பணிகள்.

(ஈ) இந்திய மூலதனத்தைப் பயன்படுத்தி அயல் நாட்டினரால் அளிக்கப்படும் வட்டி, இலாப ஈவு முதலியன.

7. புலனாகா இறக்குமதிகள் அல்லது இறக்குமதிப் பணிகள்.

அயல் நாட்டினரால் இந்தியர்களுக்குச் செய்யப்படும் பணிகள்.

(அ) விமான, கப்பல் பணிகள்.

(ஆ) நிதி, பாங்கு, இன்சூரன்சு, அறிவுரை கூறுதல் முதலிய பணிகள்.

(இ) இந்திய நாட்டுச் சுற்றுலாவினர், மாணவர்கள், வணிகர்கள் முதலியவர்களால் அயல் நாட்டில் அளிக்கப்படும்பணிகள்.

(ஈ) அயல் நாட்டு மூலதனத்தைப் பயன்படுவதால் இந்தியர்களால் செலுத்தப்படும் வட்டி, இலாப ஈவு முதலியன.

## மாற்று இனங்கள்

3. மூலதன வருவாய்கள் இந்தியர்களின் வருவாய்களுக்கு அயல்நாட்டுச் செலாவணி ஏற்படுத்தக்கூடிய மூலதனப் பேரங்கள்.

(அ) இந்தியர்களுக்குச் சொந்தமான ஈடுகள், மற்ற சொத்துகள் அயல்நாட்டில் விற்பனையாதல்.

8. மூலதனச் செல்லுகள்: அயல் நாட்டினரால் இந்திய ரூபாயில் செலுத்தக்கூடிய மூலதனப் பேரங்கள்.

(அ) இந்தியர்களால் வாங்கப்படுகிற அயல் நாட்டு ஈடுகள், அயல்நாட்டினருக்குரிய குறுகிய காலக் கடன்களடங்கிய சொத்துகள்.

(ஆ) அயல் நாட்டிலிருந்து கடன் வாங்குதல் இந்திய பாங்குகளில் அயல் நாட்டினரின் வைப்புகள்.

(இ) அயல் நாட்டினருக்கு அளிக்கப்பட்ட கடனைத் திருப்பி அடைத்தல்

4. ஒருதலை அல்லது கைம் மாறு கருதாப் பேரங்கள். அயல்நாட்டினரால் இந்தியர் களுக்கும், நிறுவனங்களுக்கும் அளிக்கப்படும் நன்கொடை கள், இழப்பீடுகள். அனுப்பப் பட்ட பணங்கள். பங்குத் தொகைகள் முதலியன.

5. மொத்த வருவாய்கள்.

(ஆ) அயல் நாட்டினருக்குச் சொந்தமான இந்திய ஈடுகள் திரும்பவும் வாங்குதல்.

(இ) அயல் நாட்டினரால் அளிக்கப்பட்ட கடனைத் திருப்பி அடைத்தல்.

9. அயல் நாட்டினருக்கு இந்தியர்கள், இந்திய நிறு வனங்களால் அளிக்கப்படும் நன்கொடைகள், இழப்பீடு கள், பணச் செலவுகள், பங் குத் தொகைகள் முதலியன.

10. மொத்த செலவுகள்

இப் பட்டியலில் கண்ட 1, 6-ல் புலனாகும் பொருள்கள் விற்பனை யாகி ஏற்றுமதியால் கிடைக்கும் வருவாய்களும், இறக்குமதியால் செலுத்தக்கூடிய செலவுகளும் அடங்கியுள்ளன. இவ்விரண்டு இனங்களும் ஒரு நாட்டின் பன்னாட்டுப் பேரங்களில் மிகுதியான அளவுடையதாக இருப்பதால் இவை புலனாகும் வணிகமாகும்.

இரண்டாவது இனம் அயல் நாட்டினருக்கு ஒரு நாடு செய்யும் பணியால் ஏற்படுகிற வருவாய்களைக் குறிக்கிறது. புலனாகா வருவாய்களும் நடப்பு வருவாய்களுமான — போக்குவரத்துப் பணிகள், கப்பல் சத்தம், பயணிகள் கட்டணம், வணிகப் பணிகள், நிதிப் பணிகள், பாங்குக்கழிவு, இன்சூரன்சுக் கட்டணம் சுற்றுலாவினரைச் சார்ந்த பணி ஆகியவை இதில் அடங்கும். எதிர் இனம் இவைபோன்ற பணிகளுக்குச் செலுத்தப்படும் செலவு களைக் குறிக்கிறது. 1, 2, 6, 7 ஆகிய இனங்கள் நடப்பு வணிகப் பண்டங்கள் பணிகளுக்குக் கிடைக்கக்கூடிய வருவாய்களையும், செலுத்தக்கூடிய செலவுகளையும் குறிக்கின்றன.

மூலதன மாற்று இனங்கள்: கடன் கொடுப்பதாலும், சொத் துகளை வாங்குவதாலும் அதற்கீடான உடனடி இறக்குமதிப் பொருள்களும் பணிகளும் உடனே வருவதில்லை. ஆனால், எதிர்

காலத்தில் அவைகளுக்குப் பலனை எதிர்பார்க்கலாம். கைம்மாறு கருதா உதவிகளுக்கு எவரும் பலனை எதிர்நோக்குவதில்லை.

இந்திய ரூபாய்களை வாங்குதல் அல்லது அயல் நாட்டுச் செலாவணிகளை விற்றல்: அயல் நாட்டுச் செலாவணிகளின் அளிப்பிற்கு மாறாக இந்திய ரூபாய்களின் தேவையை உண்டு பண்ணும் காரணிகள்:

1. ஏற்றுமதிப் பொருள்களும், மறு ஏற்றுமதிப் பொருள்களும்.

2. இந்தியக் கப்பல்கள், விமானங்களுக்கு அயல் நாட்டினரால் அளிக்கப்படும் கட்டணங்கள், அயல் நாட்டுப் பயணிகளால் இந்தியக் கப்பல்களுக்குச் செலுத்தப்படும் கட்டணங்கள், இந்தியத் துறைமுகங்களைப் பயன்படுத்துவதற்கு அயல் நாட்டுக் கப்பல்களுக்குரியோர் செலுத்தும் கட்டணங்கள்.

3. இந்திய இன்சூரன்சுக் கம்பெனிகளுக்கு அயல் நாட்டினர் செலுத்தும் தவணைக் கட்டணங்கள், இந்தியாவில் நட்டஈடு கோருபவர்களுக்கு அயல் நாட்டு இன்சூரன்சுக் கம்பெனிகள் செலுத்தும் செல்லுகள்.

4. அயல் நாட்டு மக்கள், தொழில்கள், கார்ப்பரேஷன்கள், அரசுகள் முதலியவற்றிற்குப் பாங்குகள் செய்யும் பணிகளுக்காக இந்திய பாங்குகள் விதிக்கும் கட்டணங்கள். இக் கட்டணங்களில் வணிக நாணயக் கடிதங்கள் அனுப்புவதற்குரிய கழிவுகள், மாற்று உண்டியல்கள் வசூலிப்பதற்குரிய கழிவுகள், அயல் நாட்டுப் பாங்குகள் வைத்திருக்கும் நிலுவைகள் (balances) முதலியவற்றிற்கு உரிய வட்டிகள் முதலியன அடங்கும்.

5. அயல் நாட்டு வாடிக்கையினருக்காக இந்திய பங்குத் தரகர்கள் (stock brokers), இந்திய பங்குத் தொகுப்புகள், பங்குகளை வாங்கி விற்பதற்காக விதிக்கப்படும் கழிவுகள்.

6. இந்திய ஈடுகளை (securities) வாங்கியதற்காக அயல் நாட்டு மக்கள், தொழிலகங்கள், கார்ப்பரேஷன்கள் முதலியவற்றால் அளிக்கப்படும் பணங்கள்.

7. அயல் நாட்டுச் சுற்றுலாவினர்களாலும், அயல் நாட்டிலிருந்து வந்து தற்காலிகமாக இந்தியாவில் குடியிருப்பவர்களாலும் ஆகும் செலவுகள்.

8. வணிகத் தொடர்பற்ற காரணங்களுக்காக அயல் நாட்டிலிருப்பவர்கள், இந்தியாவில் இருக்கும் அவர்களின் உறவினர்கள்,

மற்றும் அவர்களை நம்பி வாழ்பவர்களுக்கும் அனுப்பப்படும் பணங்கள்.

9. அயல் நாட்டு அரசுத் தூதரகத்திற்கும், அயல் நாட்டு ஆட்சிப் பேராட்களுக்கும், ஆட்சி முறைக்கும் இந்தியாவில் அயல் நாட்டு அரசுகளால் செலவிடப்படும் பணங்கள்.

10. அயல் நாடுகளில் பணிபுரியும் இந்தியர்களால் இந்தியா விற்கு அனுப்பப்படும் வருவாய்கள்.

இவை போன்றே இந்திய மக்களால் இந்திய ரூபாய்களை விற்றல் அல்லது அயல் நாட்டுச் செலாவணியை வாங்குதலுக்காக ஏற்படும் பேரங்களினுல் — அயல் நாட்டுச் செலாவணியின் தேவைக்காக இந்திய ரூபாய்களின் அளிப்பிற்குரிய காரணிகளை ஆராய்வோம்.

1. சரக்கு இறக்குமதிகள்.

2. அயல் நாட்டுக் கப்பல்களுக்கும், விமானங்களுக்கும் சரக் கேற்றிச் செல்வதற்காக இந்தியர்களால் அளிக்கப்படும் கட்டணங் கள், அயல் நாட்டுக் கப்பல்களுக்கு இந்தியப் பயணிகளால் கொடுக்கப்படும் போக்குவரத்துக் கட்டணம். இந்தியக் கப்பல் களுக்குரியவர்கள் அயல் நாட்டுத் துறைமுகங்களைப் பயன்படுத்து வதற்காகச் செலுத்தப்படும் துறைமுகக் கட்டணங்கள்.

3. அயல் நாட்டு இன்சூரன்சுக் கம்பெனிகளுக்கு இந்திய மக்களால் செலுத்தப்படும் அனைத்து இன்சூரன்சுக் கட்டணங்கள், அயல் நாட்டு மக்களுக்கு இந்திய இன்சூரன்சுக் கம்பெனிகளால் செலுத்தப்படும் உரிமைத் தொகைகள் (claims).

4. இந்திய மக்கள், தொழிலகங்கள், கூட்டுருக்கள் (Corporations) அரசு முதலியவற்றிற்குச் செய்யும் பாங்குப் பணி களுக்காக அயல் நாட்டுப் பாங்குகளால் விதிக்கப்படும் கட்டணங் கள், வணிக நாணயக் கடிதங்கள் அனுப்புவதற்குரிய கழிவுகள், மாற்று உண்டியல்கள், வசூலிப்பதற்குரிய கட்டணங்கள், இந்தியாவில் அயல் நாட்டுப் பாங்குகள் வைத்திருக்கும் நிலுவை களுக்குரிய வட்டி முதலியவை மேற்சொன்ன கட்டணங்களில் அடங்கும்.

5. இந்திய வாடிக்கையினருக்கு அயல் நாட்டுப் பங்கு தாரர்கள் பங்குத் தொகுப்புகளையும், பங்குகளையும் வாங்கி விற்பதற்காக அத் தரகர்களால் வசூலிக்கப்படும் கழிவுகள்,

6. அயல் நாட்டு ஈடுகளை (securities) அரசு ஈடுகள் இந்தியாவிற்கு வெளியே இருக்கும் கம்பெனிகளின் பங்குத் தொகுப்பு, பங்குகள், கடன் பத்திரங்கள், இந்திய மக்கள், தொழிலகங்கள், கூட்டுருக்கள் (Corporations) அல்லது அரசு வாங்கியதற்காகச் செலுத்தப்படும் பணம்.

7. அயல் நாடுகளில் சுற்றுலா செய்வதற்கும் தற்காலிகமாகத் தங்குவதற்கும் இந்தியர்களுக்கு ஆகும் செலவுகள்.

8. வணிகத் தொடர்பற்ற காரணங்களுக்காக இந்தியாவில் வசிக்கும் அயல் நாட்டினரால் அவர்கள் நாட்டினிலுள்ள உறவினர்களுக்கும், அவர்களை நம்பி வாழ்பவர்களுக்கும் அனுப்பும் பணம்.

9. அயல் நாட்டிலிருக்கும் இந்திய அரசுத் தூதரகத்திற்கும் ஆட்சிப் பேரங்களுக்கும் (Consulars), ஆட்சி முறைக்கும் இந்திய அரசுக்காகும் செலவுகள்.

10. இந்தியாவில் பணிபுரியும் அயல் நாட்டினர் அவர்கள் நாடுகளுக்கு அனுப்பும் பணங்கள்.

ஒரே நாட்டில் வசிக்கும் மக்களுக்குள்ள பேரங்களுக்கு அதே நாட்டுச் செலாவணிகளைக் கொண்டு தீர்வு காண்பதென்பது எளிதாகும். ஆனுல், பணத்தைப் பெறுபவர்களும், கொடுப்பவர்களும் வெவ்வேறு நாடுகளில் தங்கியிருந்தால் அப் பேரங்களுக்குத் தீர்வு காண்பதென்பது மிகவும் சிக்கல் வாய்ந்ததாகும். ஏனென்ருல், ஒவ்வொரு நாடும் வெவ்வேறு விதமான செலாவணியைக் கொண்டுள்ளன. பணத்தைக் கொடுப்பவர் தன்னுட்டுச் செலாவணியிலேயே பணம் கொடுக்க முயல்வார். அதுபோல் பணம் பெறுபவர் தன்னுட்டுச் செலாவணியிலேயே பணம் பெற முயல்வார். இச் சிக்கலைப் போக்க ஒரு சாதனம் தேவை. அயல் நாட்டு மாற்றே (Foreign Exchange) இச் சாதனமாகும். இந்திய ரிசர்வ் பாங்கினுல் அனுமதிக்கப்பட்ட இந்திய பாங்குகள் வெவ்வேறு நாட்டுச் செலாவணிகளை மாற்றிக் கொடுக்கும் தொழிலான அயல் நாட்டு மாற்றுத் தொழிலை நடத்துகின்றன.

இரண்டு நாடுகள் வெவ்வேறு விதமானச் செலாவணிகளைக் கொண்டிருந்தாலும், ஒரே விதமானச் செலாவணிகளைக் கொண்

டிருந்தாலும் அயல் நாட்டு மாற்று மிகவும் அவசியமாகும். (எ.கா): அமெரிக்கா—கனடா: டாலர்கள்; இந்தியா—பாகிஸ்தான்: ரூபாய்கள்; இங்கிலாந்து—நியூசிலாந்து: பவுண்டு.

இந்திய ரூபாயும் பாகிஸ்தான் ரூபாயும் அல்லது அமெரிக்க டாலரும் கனடா டாலரும் அல்லது இங்கிலாந்து பவுண்டும் நியூசிலாந்து பவுண்டும் வெவ்வேறு விதமான அடிப்படையுள்ள செலாவணியில் அந்தந்த நாட்டிற்குள்மட்டும் புழக்கத்தில் உள்ளன. ஒரு நாட்டுச் செலாவணி வேறொரு நாட்டில் பொதுவாகப் புழக்கத்தில் இருக்கமுடியாது. ஆகவே, அயல் நாட்டு மாற்றுவீதத்தில் ஏற்ற இறக்கங்கள் ஏற்படுகின்றன. பன்னாட்டுப் பேரங்களுக்குத் தீர்வுகாண அயல் நாட்டு மாற்று அங்காடியினால் தான் முடியும்.

## அயல் நாட்டுக் கொடுப்பல் நிலை அல்லது செலுத்து நிலை
### (Balance of Payment)

அயல்நாட்டுக் கொடுப்பல் நிலை என்னும் சொற்களைப் பன்னாட்டுத் தொடர்புடைய நடவடிக்கைகளுக்கும் சேர்த்து அதிகமாகப் பயன்படுத்துகிறோம். ஒரு குறிப்பிட்ட கால எல்லைக்குள் (ஓர் ஆண்டுக்குள்) ஒரு நாட்டிலிருந்து மற்ற நாடுகளுக்குச் செல்லக்கூடிய செல்லுகளையும், மற்ற நாடுகள் அந் நாட்டிற்குச் செலுத்தக்கூடிய செல்லுகளின் பட்டியலே அயல்நாட்டுக் கொடுப்பல் நிலையாகும். ஓர் ஆண்டில் ஒரு நாட்டு மக்கள் அயல் நாட்டு மக்களிடமிருந்து பெறக்கூடிய உரிமைகள் (claims), அவ்வயல் நாட்டு மக்கள் முதற் குறிப்பிட்ட நாட்டு மக்களிடமிருந்து பெறக் கூடிய உரிமைகள் கொண்ட அனைத்துப் பேரங்களும் இப் பட்டியலில் அடங்கும்.

ஒரு நாட்டு மக்கள் அயல் நாட்டினருக்குச் செலுத்தக்கூடிய செல்லுகளடங்கிய பேரங்கள் அயல் நாட்டுக் கொடுப்பல் நிலையில் 'பற்றுகள்' (debits) என்றும், அந் நாட்டு மக்களுக்கு அயல் நாட்டினர் செலுத்தக்கூடிய செல்லுகள் அடங்கிய பேரங்கள் 'வரவுகள்' (credits) என்றும் இக் கொடுப்பல் நிலைப்பட்டியலில் உணரப்படுகிறன. சரக்குகளை இறக்குமதி செய்வதால் உண்டாகும் செல்லுகளைப் 'பற்றுகள்' (debits) என்றும், சரக்குகளை ஏற்றுமதி செய்வதால் கிடைக்கக் கூடிய செல்லுகளை

'வரவுகள்' (credits) என்றும் அழைக்கிறேம். இச் செல்லுகளை மூலதன, பணிகளடங்கிய பேரங்களுக்குப் பயன்படுத்தும்போது சற்று எச்சரிக்கையாகவே இருத்தல் வேண்டும். ஒரு நாடு மற்ருெரு நாட்டில் கடன் எழுப்பினுல் கடன்பெறும் நாட்டிற்குக் கடனளிக்கும் நாடு பணம் கொடுக்க வேண்டியுள்ளதால் கடன் பெறும் நாட்டிற்கு இக் கடன் 'வரவு' இனமாகவும், கடன் அளிக்கும் நாட்டிற்குப் 'பற்று' இனமாகவும் கருதப்படுகிறது. பின்னர் வட்டியும், முதலுமாக அக் கடன் தொகையைக் கடன் பெற்ற நாடு கடனீந்த நாட்டிற்குத் திருப்பிக் கொடுக்கும்போது அச் செல்லுகள் (payments) கடன்பெற்ற நாட்டிற்குப் 'பற்று' களாகவும், கடனீந்த நாட்டிற்கு 'வரவு'களாகவும் கொள்ளப் படுகின்றன. கப்பல், பாங்கு, இன்சூரன்சு முதலிய பணிகளுக்காக ஒரு நாட்டு மக்கள் அயல் நாட்டினரிடமிருந்து பெறும் செல்லுகள் அந் நாட்டுக் கொடுப்பல் நிலைப்பட்டியலில் 'வரவு' இனங் களாகவும், செலுத்தும் நாட்டிற்குப் 'பற்று' இனங்களாகவும் இருக்கும். ஒரு நாடு செல்லுகளைப் பெறும்போது கடனீந்தோ ஞகவும், அதனைச் செலுத்தும்போது கடஞளியாகவும் விளங்கு கிறது. உள்வரும் செல்லுகள் எல்லாம் வரவுகளாகவும் வெளிச் செல்லும் செல்லுகள் எல்லாம் பற்றுகளாகவும் கருதப்படு கின்றன. ஓர் ஆண்டின் அனைத்து 'வரவுகள்' 'பற்றுகள்' அடங்கும் பட்டியலே அயல் நாட்டுக் கொடுப்பல் நிலையாகும். அயல் நாட்டுக் கொடுப்பல் நிலைப்பட்டியல் ஒரு நாட்டின் அயல் நாட்டுச் சொத்துகள், பொறுப்புகள் அடங்கிய இருப்பு நிலைக் குறிப்பு அன்று. மாருக ஒரு குறிப்பிட்ட காலத்தில் அயல் நாடுகளிலிருந்து வரும் அந் நாட்டின் வரவுகள் ஓட்டத்தையும், அவ்வயல் நாட்டினருக்கு அளிக்கும் செல்லுகள் ஓட்டத்தையும் குறிக்கும். இரட்டைப்பதிவுக் கணக்கு விதிகளுக்கு ஏற்ப ஒரு குறிப்பிட்ட காலத்தில் ஒரு நாட்டின் வருவாய்களும் செலவுகளும் சரி சமமாக இருத்தல் வேண்டும். ஒரு நாட்டின் வருவாய்கள் மற்ற நாடுகளுக்குச் செல்லுகளாகவும், மற்ற நாடுகளின் வருவாய்கள் இந் நாட்டுச் செல்லுகளாகவும் விளங்குகின்றன. உள்நாட்டுப் பேரங்களைப் போன்ற பன்ஞட்டுப் பேரங்களும், பண்டங்கள், பணிகளின் கொள்முதல் (இறக்குமதி), விற்பனை (ஏற்றுமதி) உரிமைக் கொள்முதல், விற்பனை, ஒரு தலை மாற்றுக்கள் அடங்கிய பன்ஞட்டுக் கொடுப்பல் நிலைப்பட்டிய லாகவே இருக்கும்.

## அயல் நாட்டுச் செலுத்து நிலையில் அடங்கிய இனங்கள்

| வருவாய்கள் (Receipts) வரவுகள் (Credits) | செல்லுகள் (Payments) பற்றுகள் (Debits) |
|---|---|
| 1. பண்டங்கள், பணிகளின் ஏற்றுமதி. | 1. பண்டங்கள், பணிகளின் இறக்குமதி. |
| (i) சரக்குகள். | (i) சரக்குகள். |
| (ii) பணிகள். | (ii) பணிகள். |
| (iii) அயல் நாட்டு முதலீடுகளினால் வருவாய். | (iii) உள்நாட்டு முதலீடுகளினால் அயல் நாட்டு வருவாய். |
| 2. நெடுங்கால உரிமைகள் விற்பனை. | 2. நெடுங்கால உரிமைக் கொள்முதல். |
| (i) சாதாரண உரிமைகள். | (i) சாதாரண உரிமைகள். |
| (ii) கடனுரிமைகள். | (ii) கடனுரிமைகள். |
| 3. குறுங்கால உரிமை விற்பனை. | 3. குறுங்கால உரிமைக் கொள்முதல். |
| (i) வைப்புக்கள். | (i) வைப்புக்கள். |
| (ii) மற்றவை. | (ii) மற்றவை. |
| 4. பொன் விற்பனை. | 4. பொன் கொள்முதல். |
| 5. ஒரு பக்க வருவாய்கள்—நன்கொடைகள், மானியங்கள். | 5. ஒருதலைச் செல்லுகள் நன்கொடைகள், மானியங்கள். |
| 6. தவறுகளும், விடப்பட்டவைகளும். | 6. தவறுகளும், விட்டுப் போனவைகளும். |

ஒரு நாட்டின் அயல் நாட்டுக் கொடுப்பல் நிலை அந் நாட்டின் பன்னாட்டுப் பொருளாதார நிலையை விளக்குகிறது. வளர்ச்சியுறும் நாடுகளின் அயல் நாட்டுக் கொடுப்பல் நிலை வளர்ச்சியுற்று முன்னேற்றமடைந்து மூலதனக் கடன் நிதியுதவியளிக்கும் நாடுகளிடையே நம்பிவாழும் பொருளாதார முன்னேற்ற நிலைமையையே குறிக்கிறது. அதிக அயல் நாட்டு முதலீடுகளையும், அதிக அளவு இலாப ஈவும் வட்டியும் பெற்றுக் கொண்டிருக்கும் சிறந்த நிலையிலுள்ள வளர்ச்சி அடைந்த நாடுகளின் அயல் நாட்டுக் கொடுப்பல் நிலை அந் நாட்டு மக்கள் தங்கள் கடந்தகால ஏற்றுமதிகளால் எவ்வளவு தூரம் பலன் எய்தி வாழ்கிறார்கள் என்பதைக் காட்டுகிறது. ஒரு நாட்டின் அயல் நாட்டுக் கொடுப்பல் நிலை அந் நாட்டின் பன்னாட்டு நிதி நிலைமையை அளப்பதற்கும் உகந்தவாறு அந் நாட்டின் பன்னாட்டுப் பொருளாதார நிலைமையை மதிப்பிடுவதற்குகந்த அளவுகோலாக அமைகிறது.

இவ்வயல் நாட்டுக் கொடுப்பல் நிலை ஒரு நாட்டுப் பொருளாதார நிலைமையின் அளவுகோலாக இருந்த போதிலும் இதன்மூலம் வேறு பல செய்திகளைத் தெரிந்து கொள்ள முடியாது. அதாவது ஒரு நாட்டின் சாதகக் கொடுப்பல் நிலை அந் நாட்டின் பொருளாதார வளர்ச்சியையோ, அல்லது ஒரு நாட்டின் பாதகக் கொடுப்பல் நிலை அதன் பொருளாதார வகையற்ற தன்மையையோ குறிப்பதாகாது. பற்றுக்குறை அயல் நாட்டுக் கொடுப்பல் நிலை மட்டும் அயல் நாட்டு அங்காடியில் அதன் வகையற்ற தன்மையைக் குறிப்பதன்று. ஒருவர் அதன் காரணங்கள், எதிர்கால வாய்ப்புகளை ஆய்ந்தறிதல் வேண்டும். அதிக காலம் பற்றுக்குறை நீடித்தால் அந் நாட்டின் அடிப்படைக் கட்டங்களையே அந் நீடிப்பு விளக்கும். சாதகக் கொடுப்பல் நிலையுள்ள நாடும் அனைத்து விதங்களிலும் சிறந்திருக்கும் என்று பொருளன்று. ஏழை நாடுகள்கூட அயல் நாட்டுக் கடன், சாதாரண மூலதன உள்ளோட்டத்தினால் சாதகக் கொடுப்பல் நிலையுடையதாக இருக்கலாம். ஏழை நாடுகளுக்கு அதிக நிதியுதவியளிப்பதால் அமெரிக்கா போன்ற முன்னேற்றம் அடைந்த நாடுகள்கூட பாதகக் கொடுப்பல் நிலையுடையதாக இருக்கலாம். ஆகவே, அயல் நாட்டு நிதியுதவிகளைப் பெறும் பொருளாதாரத்தில் பிற்பட்ட கடனாளி நாடுகள் சாதகக் கொடுப்பல் நிலையுடையதாகவும், கடனளித்த நாடு கடனளிக்கும்போது பாதகக் கொடுப்பல் நிலை கொண்டதாகவும் இருக்கலாம். ஆகவே, பற்றுக்குறை அல்லது உபரி அயல் நாட்டுக் கொடுப்பல் நிலை ஒரு நாட்டின் பொருளாதார வளர்ச்சியையோ பொருளாதார வளர்ச்சியற்ற தன்மையையோ காட்டும்

குறியீட்டெண் அன்று. ஏனென்றால், பற்றுக்குறை அயல் நாட்டுக் கொடுப்பல் நிலையைக் கொண்ட கடனீந்த நாடு பொருளாதார வளர்ச்சியில் முன்னேற்றமடைந்து இருக்கலாம். அது போன்றே உபரி அயல் நாட்டுக் கொடுப்பல் நிலையைக் கொண்ட கடன்பெற்ற நாடு பொருளாதார முன்னேற்றத்தில் வளர்ச்சியடைந்திருக்கிறது என்று கொள்ள முடியாது. ஒரு நாட்டின் பொருளாதார நிலையைக் கண்டறிவதற்கு அதன் அயல் நாட்டுக் கொடுப்பல் நிலையின் பற்றுக்குறை அல்லது உபரியை மட்டும் நோக்குவது போதாது. அவ்வயல் நாட்டுக் கொடுப்பல் நிலையின் பற்றுக்குறை அல்லது உபரியின் காரணங்களைக் கண்டறிய வேண்டும்.

## அயல் நாட்டுச் செலுத்து நிலையும் வணிகச் செலுத்து நிலையும் (Balance of Payment vs Balance of Trade)

ஒரு நாட்டின் இறக்குமதி ஏற்றுமதியில் புலனாகும், புலனாகா இனங்களும் அடங்கும். புலனாகா இனங்கள், கப்பல், பாங்கு, இன்சூரன்சு முதலியவற்றின் பணிகளுக்காகப் பன்னாட்டு வணிகத்தில் பெறக்கூடிய செல்லுகள் (payments), கொடுக்கக்கூடிய செல்லுகளையும் குறிக்கும். எப்பொழுதும் புலனாகக்கூடியதும், நிறுக்கக்கூடியதும், எண்ணக்கூடியதுமான இறக்குமதி, ஏற்றுமதிப் பொருள்களே வணிகக் கொடுப்பல் நிலையில் இடம் பெறும். ஆனால், அயல் நாடுகளிலிருந்து வரக்கூடிய அல்லது அயல் நாடுகளுக்குச் செலுத்தக்கூடிய அனைத்துச் செலுத்துகளால் (payments) ஏற்படும் மொத்த ‘பற்றுகள்’, மொத்த ‘வருவாய்களை’ அயல் நாட்டுக் கொடுப்பல் நிலை குறிக்கும். ஆகவே, வணிகக் கொடுப்பல் நிலை அயல் நாட்டுக் கொடுப்பல் நிலையின் ஒரு பகுதியே. வணிகக் கொடுப்பல் நிலை என்பது ஒரு நாட்டு இறக்குமதி ஏற்றுமதிப் பொருள்களின் மதிப்பிலுள்ள வேறுபாட்டைக் குறிப்பதாகும். இது அயல் நாட்டுக் கொடுப்பல் நிலையில் உள்ள பெருவாரியான இனமாகும். கப்பல், பாங்கு, இன்சூரன்சு, சுற்றுலாப் பணிகளுக்கும், வட்டிகள், கடன்கள், அரசுச் செலவுகள், பொன், மூலதனப் பெயர்ச்சி, நன்கொடைகள், மானியங்கள், கப்பங்கள் முதலானவற்றிற்கு ஒரு நாடு பெறும் அல்லது அளிக்கும் செல்லுகள் (payments) அயல் நாட்டுக் கொடுப்பல் நிலையில் உள்ள மற்றொரு பெருவாரியான இனமாகும்.

ஒரு நாட்டில் சாதக வணிகக் கொடுப்பல் நிலை நிலவிய போதிலும் அதன் அயல் நாட்டுக் கொடுப்பல் நிலைப் பற்றுக் குறையைக் காட்டலாம். (எ.கா.): இங்கிலாந்தின் வணிகக்

கொடுப்பல் நிலை பாதகமாக இருந்தபோதிலும் நீண்ட காலத்திற்கு அதன் அயல் நாட்டுக் கொடுப்பல் நிலை சாதகமாக இருந்தது. ஏனென்றால், புலனாகும் இறக்குமதிப் பொருட்களுக்கு இங்கிலாந்து பிறநாடுகளுக்குச் செலுத்தவேண்டிய செல்லுகளுக் கதிகமாக அது முன்னரே பிறநாடுகளுக்கு அளித்த பணிகளுக்கும், முதலீடுகளுக்கும் உரிய வட்டி முதலியவற்றால் அந் நாடுகளிலிருந்து கிடைக்கும் செல்லுகள் மிகுதியாகவே இருந்தன. ஒரு நாட்டின் அயல் நாட்டுக் கொடுப்பல் நிலை அந் நாட்டின் உண்மையான பொருளாதார நிலையை முழுவதும் வெளிப் படுத்தாமற் போனாலும் வணிகக் கொடுப்பல் நிலை அந்த அளவு கூட வெளிப்படுத்துவதில்லை.

## அயல் நாட்டுச் செலுத்து நிலைச் சமன்பாடு

ஒரு குறிப்பிட்ட காலத்தில் ஒரு நாட்டின் அயல் நாட்டுச் செல்லுகளின் வரவு, செலவுகளின் சமன் நிலையைக் குறிப்பதே அயல் நாட்டுச் செலுத்து நிலைச் சமன்பாடு (Equilibrium in the Balance of Payment) எனப்படும். ஒரு நாட்டின் மொத்த வரவுகளும், மொத்த பற்றுகளும் சரிசமமாக இருந்தால் அதன் அயல் நாட்டுக் கொடுப்பல் நிலை சமன்பாட்டில் இருக்கிறது என்று பொருள்படும். ஒரு நாட்டின் மொத்த அயல் நாட்டு வருவாய்கள் மொத்த செல்லுகளைவிட அதிகமாக இருந்தால் அதன் அயல் நாட்டுக் கொடுப்பல் நிலை சாதகமாக அல்லது செய்வினை நிலையில் இருக்கிறது என்று பொருள்படும். ஒரு நாட்டின் மொத்த பற்றுகள் மொத்த வரவுகளைவிட மிகுதியாக இருந்தால் அந் நாட்டின் அயல் நாட்டுக் கொடுப்பல் நிலை பாதகமான அல்லது எதிரான அல்லது செயலற்ற நிலையில் இருக்கிறது என்று பொருள்படும்.

ஒரு நாட்டின் மொத்த பற்றுகளும், வரவுகளும் சம நிலையில் இருப்பதைச் சமன்பாடு என்றழைக்கிறோம். அதாவது ஒரு நாடு செலுத்திய மொத்த செல்லுகளும் பெற்ற மொத்த செல்லுகளும் சரிசமமாக இருத்தல் வேண்டும்.

நடப்புக் கணக்கில் உள்ள நிகர நிலுவை மூலதனக் கணக்கில் உள்ள எதிர் நிகர நிலுவையினால் நிவர்த்தி செய்யப்படும். நடப்புக் கணக்கில் ஒரு நாடு வெளிநாடுகளிலிருந்து பெறக் கூடியதைவிட அதிகமாக அந் நாடுகளுக்குச் செலுத்தவேண்டி யிருந்தால் இவ்விடைவெளி-பொன் ஏற்றுமதி, அயல் நாடுகளில் முன்னரே குவிந்திருந்த நிலுவைகளைத் தருவித்தல், மற்ற நாடுகளி

லிருந்து நெடுங்கால, குறுங்காலக் கடன்கள் பெறுவதன்மூலம் சரி செய்யப்படும். அண்மைக்காலம்வரை, கடனாகவும், மானிய மாகவும் அளிக்கப்பட்ட அயல் நாடுகளின் உதவியினால் இந்தியா போன்ற நாடுகள் தங்கள் அயல் நாட்டு நடப்புச் செலவுகளைச் சரிக்கட்டி வந்திருக்கின்றன. நடப்பு இறக்குமதிகள் ஏற்றுமதிகளை அதிகப்படுத்தியும், பலவித ஒப்பந்தத்தின் அடிப்படையில் அமெரிக்கா, இங்கிலாந்து, ரஷ்யா போன்ற நாடுகள் அளிக்கும் கடன்களினால் பற்றுக்குறையைச் சரிக்கட்டியும் இந்தியா உணவுப் பொருள்களையும், மூலதனப் பொருள்களையும் வாங்கி இறக்குமதி செய்கிறது. நடப்புக் கணக்கில் உள்ள பற்றுக்குறை இவ்வாறு மூலதனக் கணக்கில் உள்ள உபரியினால் சரிக்கட்டப்படுகிறது. பற்றுகள் வரவுகளைச் சரிசமநிலையில் இருத்த-அதிகமான பொன் பெயர்ச்சியும் வெளிநாடுகளில் ஒரு நாட்டின் நிலுவைகளை எடுத்தல், குறுங்கால நெடுங்கால அதிகக் கடன்கள் ஆகியவை பயன் படுத்தப்படுகின்றன. நீண்ட காலத்தில் பொன் பெயர்ச்சியுற்று அயல் நாட்டு நிலுவைகளில் ஏற்ற இறக்கமற்றுத் தொடர்ந்து கடன் பெறுதல், கொடுத்தல் இன்றிச் சமன் செய்து கொள்ளப் படும். ஒரு நாட்டின் வரவுகள், செல்லுகளின் நிலைமையைக் குறிப்பதே சமன்பாடாகும். மேற் சொல்லப்பட்ட வழிவகைகள் சரி செய்யும் சாதனங்களாகப் பயன்படுத்தப்பட்டால் அயல் நாட்டுக் கொடுப்பல் நிலை செயலுள்ள அல்லது செயலற்ற தன்மையில் இருக்கிறது என்று பொருள்படும்.

பல ஆண்டுகளாக இந்தியா பாதக அயல்நாட்டுக் கொடுப்பல் நிலையைக் கொண்டதாக இருந்து வந்திருக்கிறது. நாம் அயல் நாடுகளிலிருந்து எந்திரத் தளவாடப் பொருட்களையும், கச்சாப் பொருட்களையும் உணவுப் பொருட்களையும் வாங்குவதற்கு அதிகமான பணத்தைச் செலவு செய்ய வேண்டியிருக்கிறது. இந்தியாவின் நடப்பு இறக்குமதிகள் ஆண்டுக்காண்டு நடப்பு ஏற்றுமதிகளைவிடக் குறைந்துகொண்டு செல்கின்றன. இவ்விடை வெளி பெருவாரியான அயல்நாட்டுக் கடன்களாலும் புனரமைப்பு வளர்ச்சிக்குமான பன்னாட்டுக் கடன்களாலும் அயல் நாட்டிலுள்ள நிலுவைகளைத் திரும்பப் பெறுவதாலும் பன்னாட்டு நாணய நிதியி லிருந்து (I.M.F.) அயல் நாட்டுச் செலாவணியை வாங்குவதன் மூலமும் அமெரிக்கா, ரஷ்யா, பிரிட்டன் முதலான நாடுகளி லிருந்து கிடைக்கும் நிதியுதவிகளாலும் நிரப்பப்படுகிறது.

தன்னாட்சி உரிமை (Autonomus) அயல் நாட்டு மாற்றுச் செலாவணி அளிப்பும் அவ்வயல்நாட்டுச் செலாவணியின் தன்னாட்சித் தேவையும் சரிசமமாக இருந்தால் ஒரு நாட்டின்

அயல் நாட்டுக் கொடுப்பல் நிலை சமன்பாடுடையது என்று சொல்லப்படுகிறது. பண அதிகாரிகள் மாற்றுவீதத்தை நிலைத் திருக்கச் செய்தாலும், இச் சமன்பாட்டை அடைவதற்கு அவர்கள் பொன்னையோ, அயல் நாட்டுச் செலாவணி யையோ, வாங்கவோ விற்கவோ முற்படாமல் இருந்து மாற்று வீதங்கள் மாறுபாடடைந்து அவற்றின் போக்கு சமன் பாட்டை நோக்கிச் செல்லும் நிலையே சமன்பாட்டு நிலையாகும். அயல் நாட்டுக் கொடுப்பல் நிலை பற்றுக்குறை அல்லது உபரியாக இருந்தால் சமன்பாடற்றது என்று சொல்லப்படும். அயல் நாட்டுச் செலாவணியின் தன்னாட்சித் தேவை அளிப்பின் வேறுபாடு நேர்நிலையானதாக (positive) இருந்தால் இச்சமன்பாடற்ற நிலைமை சாதகமாக அல்லது உபரியாக இருக்கிறது என்றும், அவ்வேறுபாடு எதிர்மறையானதாக (negative) இருந்தால் பாதகமாக அல்லது பற்றுக்குறையாக இருக்கிறது என்றும் சொல்லப்படுகிறது.

நிலையான பன்னாட்டுப் பொருளாதாரத் தொடர்பையும், நீண்டகால பன்னாட்டு வணிகச் சரிசம முன்னேற்றத்தையும் கவனிக்கும்போது அயல் நாட்டுக் கொடுப்பல் நிலையின் சமன் பாடற்ற தன்மை—பற்றுக்குறை (deficit) அல்லது உபரி (surplus) சமன்பாடற்ற தன்மை மிகவும் வருந்தத்தக்கதாகும். ஏனென்றால், பற்றுக்குறை அயல் நாட்டுக் கொடுப்பல் நிலை அதன் உபரிநிலையை விட மிகவும் பயங்கரமானது. இதனைச் சரிசெய்துகொள்ளும் சுமை உபரி நாடுகளைவிடப் பற்றுக்குறை நாடுகளின்மேல்தான் அதிகமாக விழும். இருந்தபோதிலும் ஒரு நாட்டின் அயல் நாட்டுக் கொடுப்பல் நிலையின் பற்றுக்குறை மற்றொரு நாட்டின் உபரியாக இருக்குமாதலால் இச் சமன்பாடற்ற நிலையிலுள்ள உபரி அல்லது பற்றுக்குறை நீடித்திராது.

## சமன்பாடற்ற நிலைமைக்குரிய காரணங்கள்

1. ஒரு நாட்டு உற்பத்திப் பொருள்களின் தேவையிலிருந்து மற்றொரு நாட்டின் உற்பத்திப் பொருள்களுக்குத் தேவை மாறினா லும் மூலதன மாற்றங்களினாலும் அயல் நாட்டுக் கொடுப்பல் நிலையிலும் வருவாய் மட்டத்திலும் மாற்றம் ஏற்படுகிறது.

2. பல நாட்டுச் செலவு மட்டங்களும் விலை மட்டங்களும் மாறியிருக்கின்றன.

3. அயல் நாட்டுக் கொடுப்பல் நிலையில் உள்ள இடர்ப் பாடனது அதன் நடப்புக் கணக்கைப் பாதிக்காமல் ரொக்க

நிலையை மட்டுமே பாதிக்கிறது. உள்நாட்டு அயல் நாட்டுச் செல்வந்தர்கள் தங்கள் சொத்துகளின் வைப்பில் மாற்றம் செய்யும்போது இவ்விடர்ப்பாடு நிகழ்கிறது.

## அயல் நாட்டுச் செலுத்து நிலையில் உள்ள சமன்பாடற்ற நிலைமையைச் சரிக்கட்டுதல்

பன்னாட்டுத் தன்னியக்கச் செலுத்துகளுக்கும் (அயல் நாட்டுச் செலாவணியின் தேவை) அவற்றின் வரவினங்களுக்கும் (அயல் நாட்டுச் செலாவணிகளின் அளிப்பு) உள்ள சமனற்ற தன்மையைக் குறிப்பதே சமன்பாடற்ற அயல் நாட்டுக் கொடுப்பல் நிலை எனப்படும். இக் கொடுப்பல் நிலைப் பேரேட்டின் இரண்டு பக்கங் களையும் சமனப்படுத்துதல்மூலம் இச் சமன்பாடற்ற நிலைமையைச் சரிக்கட்டலாம். பற்றுக்குறையைப் போக்கும் பொருட்டுத் தன்னியக்கத் வரவுகள், தன்னியக்கச் செல்லுகளை நோக்கி விரிவடைதல் வேண்டும். உபரியைப் போக்கும் பொருட்டுச் செல்லுகள் வரவுகளை நோக்கி விரிவடைதல் வேண்டும். செல்லு களுக்கும், வரவுகளுக்கும் உள்ள சரிக்கட்டல், செல்லுகளிலும், வரவுகளிலும் மாற்றம் ஏற்படுத்துகிறது.

**சரிக்கட்டுக் காரணிகள் :** (1) மாற்று வீதம் (2) பன்னாட்டு வணிக நிலையிலுள்ள பண்டங்கள், பணிகளின் விலைகள் (3) வருவாய்களின் மட்டம் (4) பன்னாட்டுப் பேரங்களின் கட்டுப்பாடு.

பன்னாட்டுத் தன்னியக்கச் செல்லுகளும் வரவுகளும் மிகுந்த செயல் தொடர்பு கொண்டுள்ளதாய் மேற்சொன்ன ஏதாவது ஒன்றிலோ, பலவற்றிலோ ஏற்படும் மாற்றம் அயல் நாட்டுக் கொடுப்பல் நிலையை மிகவும் பாதிக்கும்.

**மாற்று வீதங்களின்மூலம் சரிக்கட்டல்கள் :** மற்றவை மாரு திருக்க ஒரு குறிப்பிட்ட அயல் நாட்டு மாற்று வீதத்தில் உள்ள அயல் நாட்டு மாற்றுகளின் அதிக அளிப்போ அல்லது அதிகத் தேவையோ, அதன் தேவை அளிப்பிற்கிடையே சம நிலையற்ற தன்மையை உண்டாக்கி அயல் நாட்டுக் கொடுப்பல் நிலையில் சமன் பாடற்ற நிலைமைக்குக் காரணமாகிறது. ஆகவே, ஒரு குறிப் பிட்ட மாற்று வீதத்தில் அயல் நாட்டுக் கொடுப்பல் நிலை சமன் பாடற்ற நிலையில் இருந்தால் அம் மாற்றுவீத மட்டத்தில் மாற்றம் ஏற்படுத்துவதன் மூலம் அயல் நாட்டுக் கொடுப்பல் நிலையில் சமன் பாட்டடையச் செய்யலாம்.

மற்றவை மாருதிருக்க ஒரு நாட்டின் மாற்று வீதம் உயர்ந்திருக்கும்போது மற்ற நாடுகளுக்கு ஏற்றுமதியாகும் பண்டங்கள், பணிகளுக்குள்ள விலைகள் குறைந்தும், மற்ற நாடுகளிலிருந்து இறக்குமதியாகும் பண்டங்கள், பணிகளின் விலைகள் உயர்ந்தும் காணப்படும். மாற்று வீதத்தினுல் மூலதன இயக்கமும் ஒருதலை மாற்றுக்களும் நேர்முகமாகப் பாதிக்கப்படாமல் இருந்த போதிலும் மொத்த செல்லுகளும் வரவுகளும் பாதிக்கப் படுகின்றன. இறக்குமதி செய்யப்படும் இறக்குமதிப் பண்டங்களின் உள்நாட்டுத் தேவைகள், விலை நெகிழ்ச்சிகள், ஏற்றுமதி செய்யப்படும் பண்டங்களின் அயல் நாட்டுத் தேவைகள்—விலை நெகிழ்ச்சிகளைப் பொறுத்தே மாற்று வீதத்தில் உள்ள மாற்றத்திற்கு அயல் நாட்டுக் கொடுப்பல் நிலையில் உள்ள சமன்பாடற்ற தன்மை எதிரொலிக்கிறது என்று சொல்லலாம். இத் தேவைகளில் உள்ள விலை நெகிழ்ச்சிகளின் உயர்வுக்கேற்ப மாற்று வீதத்திலுள்ள மாற்றம் அயல் நாட்டுக் கொடுப்பல் நிலையை உயர்வாகப் பாதிக்கலாம். நெகிழ்ச்சி குறைவாக இருந்தால் குறைவாகவே பாதிக்கும். பன்னுட்டுச் செல்லுகளைக் குறைப்பதற்கும், வரவுகளை மிகுதிப்படுத்துவதற்கும் அதாவது அயல் நாட்டுச் செலாவணியின் தேவையைக் குறைத்து அளிப்பை அதிகப்படுத்துவதற்கும் மாற்று வீதம் உயர்த்தப்படுகிறது. எதிர்விளைவை ஏற்படுத்துவதற்கு மாற்று வீதம் குறைக்கப்படுகிறது. மாற்று வீதத்திலுள்ள ஏற்றத்தை மாற்று மதிப்பிழப்பு அல்லது குறை மதிப்பு (exchange depreciation or devaluation) என்கிறேம். ஏனென்ருல், அந் நாட்டுச் செலாவணி அலகின் மதிப்பு மற்ற நாட்டுச் செலாவணி அலகின் மதிப்பைவிட மாற்று வீத ஏற்றத்தினுல் குறைவடைகிறது. மாருக மாற்று வீதத்திலுள்ள இறக்கமானது அந் நாட்டுச் செலாவணி அலகின் மாற்று மதிப்பேற்றம் அல்லது மறு மதிப்பை (exchange appreciation or revaluation) உணர்த்துகிறது. அயல் நாட்டுக் கொடுப்பல் நிலையில் உள்ள பற்ருக்குறை அல்லது உபரியை மாற்று மதிப்பிழப்பு (exchange depreciation) அல்லது மாற்று மதிப்பேற்றத்தால் (exchange appreciation) சரிக்கட்ட குறைந்த அளவு நெகிழ்ச்சியாவது நிலவ வேண்டும்.

**விலை மாற்றத்தால் சரிக்கட்டல்கள் :** மாற்று வீதத்திலுள்ள மாற்றமே உள்நாட்டு, அயல் நாட்டுப் பொருள்கள் பணிகளின் விலைகளைப் பாதிக்கிறது. செலாவணியின் குறைமதிப்பினுல் (Devaluation) அயல் நாட்டு விலை மட்டத்தைவிட உள்நாட்டு விலை மட்டம் குறைகிறது. செலாவணியின் மறுமதிப்பினுல் (Revaluation) அயல் நாட்டு விலை மட்டத்தைவிட உள்நாட்டு விலை மட்டம் உயர்கிறது. மாற்று வீதங்களை ஒரு நிலையில் இறுத்தி

வைத்துக் கொண்டு உள்நாட்டிலும், வெளிநாட்டிலும் முழுமை யான விலை மட்டங்களில் பலவித வீதங்களைக் கொண்டு, ஒரு நாட்டின் விலை மட்டத்தில் மாற்றத்தை ஏற்படுத்தலாம். அயல் நாட்டு விலைகளை மாறுமல் இருத்திக் கொண்டால் உள்நாட்டு விலைகளில் உள்ள 10 சதவிகித வீழ்ச்சி அதன் செலாவணி அலகில் 10 சதவிகித குறைமதிப்பு ஏற்படுத்தும் பாதிப்பையே ஒக்கும். மற்ற முறையில் குறை மதிப்பும், பண வாட்டமும் (deflation) ஒரே பாதிப்பையே உண்டாக்கும் என்று சொல்வதற்கில்லை. உண்மையிலேயே இரண்டும் வெவ்வேறு பாதிப்பையே ஏற்படுத்தும். ஏற்றுமதி, இறக்குமதிப் பண்டங்களின் நெகிழ்ச் சியைப்பொறுத்தே விலை மட்டத்தில் ஏற்படும் மாற்றம் அயல் நாட்டுக் கொடுப்பல் நிலையில் உள்ள சமன் கேட்டைக் குறைக்கும் என்று சொல்ல முடியும். ஏற்றுமதிப் பொருள்களின் அயல் நாட்டுத் தேவை நெகிழ்ச்சியுடையதாய் இருந்தால், விலை மட்டத்தில் ஏற்படும் சிறு வீழ்ச்சியானது ஏற்றுமதிப் பொருள் களின் தேவையின் அளவு மிகவும் அதிகமாகி அயல் நாட்டுச் செலாவணிகளின் வருவாயின் அளவையும் அதிகப்படுத்தும் (நேர்எதிராக–vice versa). உள்நாட்டு விலைகளின் இறக்கம் இறக்கு மதிகளைக் குறைத்து அயல்நாட்டுச் செலாவணிகளின் தேவை யையும் குறைக்கிறது. இவ்வீழ்ச்சி எவ்வளவுக்கெவ்வளவு அதிகமாக இருக்கிறதோ அவ்வளவுக்கவ்வளவு இறக்குமதிப் பொருள்களுக்கும், உள்நாட்டுப் பொருள்களுக்குமுள்ள குறுக்கு நெகிழ்ச்சி அதிகமாக இருக்கும்.

வருவாய் மாற்றத்தால் சரிக்கட்டல்கள் : குறிப்பிட்ட விலை மட்டத்திலும், மாற்று வீதங்களிலும் உள்நாட்டு வருவாயில் ஏற்படும் உயர்வு இறக்குமதியிலும் ஏற்றத்தை ஏற்படுத்தும். அயல் நாட்டு வருமானத்தில் ஏற்படும் அதிகரிப்பு அந் நாட்டு ஏற்று மதிகளில் அதிகரிப்பை உண்டாக்கும். அயல் நாட்டுக் கொடுப்பல் நிலையில் உள்ள பற்றுக்குறைச் சமன்கேடு உள்நாட்டு வருவாய் மட்டத்தைக் குறைப்பதன்மூலமோ, அயல் நாட்டு வருமானத்தை அதிகப்படுத்துவதன்மூலமோ சரிக்கட்டப்படும். இறக்குமதி இறுதி நிலை விருப்பத்தாலோ, இறக்குமதித் தேவையின் வருவாய் நெகிழ்ச்சியாலோ உள்நாட்டு, வெளிநாட்டு வருவாயில் உண்டாகும் மாற்றத்திற்கேற்ப உள்ள இறக்குமதி ஏற்றுமதிப் பண்டங்களின் அளவு அளந்தறியப்படுகிறது.

கட்டுப்பாடுகளால் சரிக்கட்டல்கள் : பன்னாட்டுப் பேரங்களில் நேர்முகக் கட்டுப்பாடுகள் விதிக்கப்படுவதால் அயல் நாட்டுக் கொடுப்பல் நிலையில் உள்ள சமன்கேடு சரிக்கட்டப்படுகிறது.

கட்டுப்பாடுகளின்மூலம் உள்ள சமன்கேட்டின் சரிக்கட்டல்கள் அங்காடிச் சக்திகளின் தடையற்ற போக்கை ஒழித்து உண்மையான சமன்பாட்டை நிலைநிறுத்துகின்றன. அயல் நாட்டு வணிகத்தில் அரசின் பயனுடைய கட்டுப்பாடுகள்மூலமோ, அயல் நாட்டுச் செலாவணியை ஒதுக்குவதன்மூலமோ அல்லது இரண்டு முறைகளாலுமோ உரிய பங்கொதுக்கு முறையும் (quotas) மாற்றுக் கட்டுப்பாடுகளும் அயல் நாட்டுக் கொடுப்பல் நிலையின் சமன்பாட்டைச் சரிக்கட்ட முற்படுகின்றன. நடைமுறையில் ஏற்றுமதி இறக்குமதிகளின்மேலும் அயல் நாட்டு மாற்றுக்கள்மேலும் ஒரே நேரத்தில் கட்டுப்பாடுகள் விதிக்கப்படுகின்றன.

உறுப்பு நாடுகளிடையே ஏற்படுத்திக் கொண்ட ஒப்பந்தத்திற்குகந்தவாறு உறுப்பு நாடுகளுடைய செலாவணிகளின் முகமதிப்பை மாற்றுவதன்மூலம் அயல் நாட்டுக் கொடுப்பல் நிலையில் உள்ள பற்றுக்குறை பன்னாட்டு நாணய நிதியில் (International Monetary Fund) நீக்கப்படுகிறது. இப் பன்னாட்டு நிதியின் கையிருப்புக்களை எடுத்தளிப்பதன்மூலம் தற்காலிகப் பற்றுக்குறை சரிக்கட்டப்படுகிறது.

## அயல் நாட்டுச் செலுத்து நிலையில் உள்ள பாதக நிலையைச் சரிக்கட்டல்

தற்காலிகக் காரணங்களாலும், பருவம் முதலிய மற்ற காரணங்களாலும் அயல் நாட்டுக் கொடுப்பல் நிலையில் ஏற்ற இறக்கம் ஏற்படுகிறது. இக் காரணங்கள்கூட அவ்வளவு தூரம் கவனிக்கப்படக்கூடியவையன்று. 'அடிப்படைச் சமன்கேட்டை' ஏற்படுத்தக்கூடிய காரணிகளைச் சரிக்கட்டத்தான் தகுந்த நடவடிக்கைகள் எடுக்கவேண்டும்.

பொன் திட்டத்தின்கீழும் அதிகாரிகளால் நிலையான கட்டுப்பாடுகள் விதிக்க முடியாத நிலையிலும், அயல் நாட்டுச் செல்லுகள் தாமே சரிக்கட்டிக் கொள்ளக்கூடிய சாதனம் ஒன்று செயல் முறையில் இருந்து வந்திருக்கிறது. கீழ்க்காணும் காரணங்களின் செயல் முறையால் நிலையான பாதக நிலைகூடச் சரிக்கட்டப் படுகிறது.

1. எம்முறையான பொன் திட்டத்திலும், பொன் ஏற்றுமதி பண அளப்பின் அளவையும், பாங்கின் ரொக்க நிலையையும் குறைக்கிறது. விலைகள், வருவாய்களின் வீழ்ச்சிக்கும், வட்டி

வீதத்தின் ஏற்றத்திற்கும் இது காரணமாகாது. ஆகவே, ஏற்றுமதி அதிகமாகி இறக்குமதி குறைந்து குறுங்கால நிதி உள்ளோட்டம் நிகழ்கிறது.

2. பொன் திட்டமும், எவ்வித அயல் நாட்டு மாற்றுச் சட்டமும் இல்லாத காலங்களில் ஒரு நாட்டுச் செலாவணியின் மாற்று மதிப்பு வீழ்ச்சியடைகிறது. ஒரு நாடு தான் பெறும் செல்லுகளைவிட அதிகமான செல்லுகளைக் கொடுக்க வேண்டி உள்ளதால் அயல் நாட்டுச் செலாவணிகளின் தேவை தனது அளிப்பைவிட மிகுதியாக இருக்கிறது. உள்நாட்டுச் செலாவணியின் மாற்று மதிப்பிலுள்ள வீழ்ச்சியானது இறக்குமதிப் பொருள்களின் விலையை அதிகரிக்கச் செய்து ஏற்றுமதிப் பொருள்களின் புற விலையைக் குறைக்கிறது.

3. திட்டமிட்ட மாற்றுக் கட்டுப்பாட்டின்கீழ், மாற்று அங்காடியில் செலாவணிகளை வாங்குவதன்மூலம் உள்நாட்டுச் செலாவணியின் மதிப்பு வீழ்ச்சியடையும் சந்தர்ப்பங்களில் பண அதிகாரிகள் எதிர் நடவடிக்கை எடுக்கிறார்கள். இவற்றால் பாங்கி லிருந்து பணம் எடுக்கப்படுகிறது. பொன் திட்டத்திலுள்ளதைப் போல பொன் வெளியோட்டம் நிகழும் நிலைமை உருவாகிறது.

4. ஏற்றுமதியைவிட இறக்குமதியில் உள்ள அதிகரிப்பானது உள்நாட்டுச் செலவுகளைச் சுருக்குவதால் பொருள்களுக்கும் பணிகளுக்கும் சிறப்புத்தேவை ஏற்படுகிறது. இது பொருளாதாரத்தில் மாறுபட்ட பாதிப்பை ஏற்படுத்தி விலைகளிலும் வருவாய்களிலும் உள்ள வீழ்ச்சி, இறக்குமதிகளிலும் ஏற்றுமதிகளிலும் சிறந்த சரிக்கட்டுதல்களை உண்டாக்குகிறது. அடிப்படைப் பொருளாதாரம் சிறந்த நிலையில் இருந்தால் கடன், மூலதன ரொக்க நிலையின் பற்றாக்குறை அயல் நாடுகளிலிருந்து குறுங்கால மூலதன உள்ளோட்டத்தைத் தூண்டுகிறது.

தடையற்ற ஏற்றுமதி, இறக்குமதி, குறுங்கால மூலதன இயக்கம் இருந்தால்தான் இத் தன்சமநிலை (Self-balancing) முறை செயல்படும். தடையுள்ள காலங்களில் இச் சாதனம் செயல் படாமல் அயல் நாட்டுக் கொடுப்பல் நிலையில் உள்ள பற்றாக் குறையைத் தன்னியக்கச் சரிக்கட்டல்களால் நீக்க முடியாது. இந் நிலைமைகளில் பண அதிகாரிகள் சிறப்பான தக்க நடவடிக்கைகள் எடுத்தாக வேண்டும். கீழ்க்காணும் ஒன்று அல்லது அதற்கு மேற் பட்ட நடவடிக்கைகளைக் கடைப்பிடிக்கலாம்.

1. அயல் நாட்டுக் கொடுப்பல் நிலையில் உள்ள இடை வெளியை அயல் நாட்டுக் குறுங்கால, நெடுங்காலக் கடன்கள் நிரப்புகின்றன. மற்ற நாடுகளின் அரசுகள், தனியார் துறையினர், உலக அமைப்புக்களான புனரமைப்பும், வளர்ச்சிக்குமான பன்னாட்டுப் பாங்கு (International Bank for Reconstruction and Development), பன்னாட்டு வளர்ச்சிச் சங்கம் (International Development Association), பன்னாட்டு நாணய நிதி (International Monetary Fund) முதலானவற்றால் கடன் திரட்டப்படுகிறது.

2. பொருளாதாரச் செயல் மட்டத்தைக் குறைக்கும் கைக் கோள் கடைப்பிடிக்கப்பட்டால் வருவாய்கள், விலைகள் குறைக்கப் பட்டு வட்டி வீதம் உயர்த்தப்படுகிறது.

3. செலாவணியின் மாற்று மதிப்புக் குறைப்பானது மற்ற நாடுகளில் இந் நாட்டின் ஏற்றுமதிகளை மலிவடையச் செய்து ஏற்றுமதிகளின் விலைகளை அதிகரிக்கச் செய்கிறது.

4. சில காலங்களில் இறக்குமதி, ஏற்றுமதிகளின்மேல் நேர்முகக் கட்டுப்பாடு விதிக்கப்படுகிறது. இறக்குமதி அறவே நிறுத்தப்பட்டு ஏற்றுமதி மிகுதிப்படுத்தப்படுகிறது.

# 4. பன்னாட்டுச் செல்லுகள் — செலுத்தப்படும் முறைகளும் வழிவகைகளும்

(Means and Methods of International Payments)

## நாணயப் பத்திரங்கள்

பன்னாட்டுச் செல்லுகள் பலவித நாணயப் பத்திரங்கள்மூலம் செலுத்தப்படுகின்றன. நாணயப் பத்திரம் என்பது கடன்பெற்றுக் கொண்டதற்குரிய ஒரு சான்றுப் பத்திரமாகும். ஒரு குறிப்பிட்ட காலத்திற்குப்பிறகோ, நாணயப் பத்திரத்தில் குறிப்பிடப்பட்டிருக்கும் ஒரு நபரிடமிருந்தோ, நிறுவனத்திடமிருந்தோ அப் பத்திரத்தை வைத்திருப்பவர், அப் பத்திரத்தில் குறிப்பிட்ட தொகையைப் பெற்றுக்கொள்ள இந் நாணயப் பத்திரம் உரிமையளிக்கிறது. செக்குகளாகவோ, பாங்குப் பணவிடையாகவோ, மற்ற நாணயப் பத்திரங்களின் மூலமாகவோ செல்லுகளைப் பெறவேண்டியவர் பெற்றுக் கொள்ளலாம். உண்மைச் செல்வமாக அல்லது பொதுவாக அனைவராலும் ஏற்றுக் கொள்ளக்கூடிய வாங்குத் திறனையுடைய வடிவமாக, மாற்றக் கூடியதாகவும் இருந்தால்தான் இந் நாணயப் பத்திரம் பயனுடையதாகும். நாணயப் பத்திரத்தைப் பெற்றிருப்பவர், வசூலிக்கும் பொருட்டோ, அவர் கணக்கில் வரவு வைக்கும் பொருட்டோ அவர் பாங்கில் சேர்ப்பித்தால்தான் மேற்சொன்னது நிகழக் கூடும். இப் பத்திரத்தைப் பெற்றிருப்பவர் தனது பாங்கில் செலுத்தி, தான் செலுத்தக்கூடிய செல்லுகள் இருப்பின் அக் கடன் ஈந்தோருக்குத் தனது பாங்குக் கணக்கின் பெயரில் செக்கு விடுக்கிறார் அல்லது வேறுவித நாணயப் பத்திரத்தை வாங்கி அக் கடனீந்தோருக்கு அனுப்புகிறார். தனது வாடிக்கையினருக்

காகச் செல்லுகளைப் பெறுவதற்கும் அவ் வாடிக்கையினருக்காகச் செல்லுகளைக் கொடுப்பதற்கும் உரிய இடையாளாகப் பாங்கு செயல்படுகிறது. இம் முறையே அயல் நாட்டுச் செல்லுகளிலும் கடைப்பிடிக்கப்படுகிறது. உள்நாட்டுச் செலுத்து முறைகள் போலவே அயல் நாட்டுச் செலுத்து முறைகளிலும், அயல் நாடுகளிலிருந்து செல்லுகளைப் பெறுவதற்கும், அயல் நாடுகளுக்குச் செல்லுகளைக் கடன் பத்திரங்கள்மூலம் செலுத்துவதற்கும் பாங்குகள் இவ்வாறு சிறப்பிடம் பெறுகின்றன. இப் பணிகளை நிறைவேற்றப் பன்னாட்டுப் பாங்குமுறை வளர்ச்சியடைந்திருக்கிறது.

## பாங்குகள்

பன்னாட்டு நாணய மாற்றுத்துறைகளைக் கொண்டுள்ள பாங்குகள், நிதி நிலையங்கள் மூலமாகவே பன்னாட்டுச் செல்லுகளைச் செலுத்துகின்றன. இப் பாங்குகள் பல நாடுகளிலும் கிளை நிறுவனங்களையும், தொடர்புப் பாங்குகளையும் ஏற்படுத்திக் கொண்டு ஆங்காங்கே அயல் நாட்டு மாற்று நிலுவைகளை வைத்திருக்கின்றன. அவ்வாறு கிளை நிறுவனங்களைப் பெற்றிராத பாங்கு, அயல் நாட்டு மாற்று நடவடிக்கைகளில் தனக்குப் பதிலாளாகச் செயல்புரியத் தயாராய் இருக்கும் வேறு சில பாங்குகளிடம் தேவையான நிலுவைகளை வைத்திருக்கிறது. இவ்வாறு பாங்குகளுக்குப் பதிலாட்களாகப் பணிபுரியும் பாங்குகள் தொடர்புப் பாங்குகள் (Correspondent Banks) என்றழைக்கப் படும். அத் தொடர்புப் பாங்குகளின் கிளை நிறுவனங்கள்மூலம் உலகத்தின் சிறப்பிடங்களனைத்திலும் இப் பாங்குகளின் பணிகள் கிடைக்கின்றன.

## பாங்குகளின் அயல் நாட்டு மாற்று முறைகள்

நாணயப் பத்திரத்தின்மூலம் அயல் நாட்டிருந்து செல்லுகளைப் பெற்றவர் அயல் நாட்டு மாற்றுப் பாங்கிடம் அப்பத்திரத்தை விற்பார். நாணயப் பத்திரம் அயல் நாட்டுச் செலாவணியில் இருந்தால், பத்திரத்தின் தரம், தன்மைக்கேற்றவாறு மாற்று வீதத்தில் கணிக்கப்பட்டபடி உள்நாட்டுச் செலாவணியைப் பாங்கிடமிருந்து பெற்றுக்கொள்ளலாம். இவ்வாறே மாற்று வணிகம் புரியும் பாங்கிடமிருந்து அயல் நாட்டுச் செல்லுகளைச் செலுத்த வேண்டி உள்ள கடனாளி ஒருவர் அந் நாட்டுச் செலாவணிக்குரிய கடன் பத்திரத்தை வாங்கிக்கொள்கிறார். இவ்வாறு கடனீந்தோனும், கடனாளியும் அயல் நாட்டுச் செல்லுகளைப் பெறுவ

தற்கும், கொடுப்பதற்கும் அச் செல்லுகளைக் கொள்முதல் விற்பனை செய்யும் எந்தத்தனிப்பட்டோனையும் நாடாமல், பாங்குகளின் துணையுடன் மட்டுமே செயல்படுகிறார்கள். வாங்கும் வீதம், விற்கும் வீதத்தில் உள்ள சிறு வேறுபாடே பாங்குக்கு வருவாயாகும். செல்லுகளைப் பெறும் அல்லது செலுத்தும் வாடிக்கையினருக்கு ஆற்றும் பணியினை ஒப்பிட்டுப் பார்க்கும்போது இவ்வருவாய் சிறிதேயாகும்.

உள் நாட்டிலிருக்கும், அயல் நாட்டு மாற்றுப் பாங்கிடம் பணத்தைக் கொடுத்தால் அயல் நாட்டிலிருக்கும் அதன் கிளை நிறுவனமோ, அதன் தொடர்புப் பாங்கோ அவ்வயல் நாட்டிலிருக்கும் கடனீந்தோனிடம் அப் பணத்தைக் கொடுக்கிறது. கடனாளி ஒருவர் கடன் பத்திரங்களை வாங்கினால் அப் பத்திரத்தின் விலையைப் பாங்கிடம் கொடுக்கிறார். அப் பத்திரம் கடனீந்தோனிடம் சென்றடைந்தவுடன் அவர் நாட்டிலுள்ள அப் பாங்கின் கிளை நிறுவனத்திடம் அப் பத்திரத்தை விற்று அதற்குரிய செல்லுகளைப் பெறுகிறார். அயல் நாட்டு வணிகம் ஆரம்பமானவுடன் ஒவ்வொரு மைய இடத்திலும் உள்ள பாங்கினால் அயல் நாட்டுச் செலாவணிக்கு உரிய கொள்முதல் விற்பனை செய்யப்பட்டு அப்பொழுது நிலவும் மாற்றுவீத மட்டத்தில் ஒரு நாட்டுச் செலாவணிக்கும் மற்றொரு செலாவணிக்கும் மாற்று நடைபெறுகிறது. அயல் நாடுகளில் பணம் செலுத்துவதற்காக நாணயப் பத்திரங்களை விற்பனை செய்வதன்மூலம் பாங்கில் வாடிக்கையாளரின் நிலுவை பெருகுகிறது. அந்த இடத்தில் செல்லுகள் செலுத்த வேண்டியிருப்பின் அயல் நாட்டில் இருக்கும் அப் பாங்கின் வாடிக்கையினருக்காக இந் நிலுவைகள் நிறுத்தி வைக்கப்படுகின்றன.

அயல் நாடுகளில் உள்ள கடன்களை வசூலித்துத் தனது நாட்டில் கொடுப்பதற்குப் பாங்கமைப்பு வாடிக்கையினருக்குப் பெரிதும் துணைபுரிகிறது. அயல் நாட்டிலிருந்து பணம் வசூலித்தால் அவ்விடங்களிலுள்ள பாங்கின் நிலுவைகள் (Balances) கூடுதலாகின்றன. அந்த அளவு உள்நாட்டுச் செலாவணியைப் பாங்கு வாடிக்கையாளருக்குக் கொடுக்கிறது அல்லது அவர் கணக்கில் வரவு வைக்கிறது. இவ்வாறு பாங்குகள் அப்பொழுது நிலவும் மாற்று வீதப்படி உள்நாட்டுச் செலாவணிக்கு மாற்றாக அயல் நாட்டுச் செலாவணியை வாங்குகின்றன. வாடிக்கையினர் அயல் நாட்டினருக்குப் பணம் கொடுக்கவேண்டியிருப்பின், அயல் நாட்டுச் செலாவணிக்கு மாற்றாக உரிய உள்நாட்டுப் பணத்தைப் பாங்கிடம் கொடுத்து அவ்வயல் நாட்டில் அவருக்குத் தேவையான

பணம் கிடைக்கும்படிப் பாங்கிடம் கேட்டுக் கொள்கிறார். இப்பொழுது உள்நாட்டுச் செலாவணிக்கு மாற்றாக அயல் நாட்டுச் செலாவணியைப் பாங்கு விற்கிறது. இவ்வாறு பாங்குகள் ஒரு நாட்டிலிருந்து மற்றொரு நாட்டிற்குப் பணம் செலுத்தவும் நாணய மாற்று புரியவும் பேருதவி புரிகின்றன.

## பாங்குகளின் அயல் நாட்டுக் கணக்குகள்

அயல் நாட்டு மாற்றுக்களை நடத்தும் பாங்குகள் அயல் நாடுகளில் உள்ள பாங்குகளில் அயல் நாட்டுச் செலாவணியில் கணக்குகள் வைத்திருக்கின்றன. அயல் நாட்டுச் செலாவணியில் ஒரு நாட்டிலுள்ள வாடிக்கையாளருக்காக அவ்வயல் நாட்டிலுள்ள தொடர்புப் பாங்கு (Correspondent bank) கணக்கு வைத்திருந்தால் அக் கணக்கு வைத்திருக்கும் பாங்கால் 'நமது கணக்கு' (Our account) அல்லது 'நோஸ்ட்ரோ' (Nostro) என்றழைக்கப்படுகிறது. அத் தொடர்புப் பாங்கால் அதே கணக்கு 'உமது கணக்கு' (Your account) அல்லது 'ஓஸ்ட்ரோ' (Vostro) என்று அழைக்கப் படுகிறது. இது போலவே ஒரு நாட்டுப் பாங்கிலிருக்கும் அயல் நாட்டுப் பாங்குக் கணக்கு 'ஓஸ்ட்ரோ' கணக்கு (Vostro account) என்றழைக்கப்படுகிறது.

அயல் நாட்டுச் செலாவணியிலோ, உள்நாட்டுச் செலாவணியிலோ உள்ள மூன்றாமவரின் பாங்குக் கணக்கிற்கு 'அவர்கள் கணக்கு' (Their account) அல்லது 'லோரோ' (Loro) கணக்கு என்றழைக்கப்படுகிறது. (எ.கா.): மூன்றாவது பாங்குக் கணக்கிற்காக ஒரு பாங்கு மற்றொரு பாங்கிற்குச் செல்லுகள் செலுத்தினால் அது அம் மூன்றாம் பாங்கின் 'லோரோ' கணக்கின் வரவுக்காக என்று பொருள். ஒரு பாங்கு அதன் தொடர்புப் பாங்கிற்குப் பணவிடை கொடுத்தாலும் அல்லது வேறுவிதக் கடன் பத்திரத்தை விற்றாலும் அத் தொடர்புப் பாங்கின் 'நோஸ்ட்ரோ' (Nostro) கணக்கு அல்லது விற்பனை செய்யும் பாங்கின் வாயிலாகப் பார்க்கும்போது 'ஓஸ்ட்ரோ' (Vostro) கணக்குக் கடன் பத்திரத் தொகையுடன் வரவு வைக்கப்படுகிறதாகக் கருதப்படுகிறது. ஒரு பாங்கின் 'ஓஸ்ட்ரோ' பேரேட்டுக் கணக்கின் வரவு இருப்பு (Credit balance) அதன் தொடர்புப் பாங்கில் அதன் 'நோஸ்ட்ரோ' கணக்கில் அதிகப்பற்றைக் காட்டுகிறது. கடன் பத்திரத்தைப் பாங்கு கொள்முதல் செய்யும்போது அத் தொடர்புப் பாங்குக் கணக்கில் பற்று வைக்கப்படுகிறது.

## வாடிக்கையினரின் அயல் நாட்டுச் செலாவணிக் கணக்குகள்

மாற்றுக் கட்டுப்பாட்டைப் புகுத்துவதற்கு முன்னர் பாங்குகள் அவற்றின் வாடிக்கையினரிடமிருந்து அயல் நாட்டுச் செலாவணியில் வைப்புகளைப் பெற்றன. இவ்வைப்புகள் தொடர்பற்ற அனைத்து இடர்ப்பாடுகளையும், பொறுப்புகளையும் வைப்பாளர்களே ஏற்பர் என்ற பாண்மையில் ஏற்றுக் கொள்ளப்பட்டன. அயல் நாட்டு மாற்று நிதிகளை உண்மையிலேயே வைத்திருக்கும் தொடர்புப் பாங்குகளின் செயல்களுக்கும், கடன் பொறுப்புகளுக்கும் தாம் பொறுப்பாளியல்ல என்று தமது வாடிக்கையாளரிடமிருந்து எழுத்து மூலமான உறுதிக்கூற்று ஒன்றைப் பாங்கு எழுதி வாங்கிக்கொள்ளும். தோல்வியுறும் சந்தர்ப்பங்களிலும், தொடர்புப் பாங்குகளின் தவறுகளாலும் ஏற்படும் நட்டங்களுக்கு வாடிக்கையாளரே பொறுப்பாளியரவார்.

அயல் நாட்டிலுள்ள அத் தொடர்புப் பாங்கு (பதிலாள்) அத் தொகையை முதலாளின் பொது நிலுவையின் (General balance) ஒரு பகுதியாக வைத்திருக்கும். அத் தொகை வேறு ஒருவருக்குச் சொந்தம் என்று அப்பாங்கிற்குத் தெரியாது. கணக்கு வைத்திருக்கும் பாங்குகூட நோஸ்ட்ரோ கணக்கைச் சமநிலைப் படுத்துவதன்மூலம் வாடிக்கையாளரின் கணக்கின் பெயரில் அயல் நாட்டுச் செலாவணியுடன் அத் தொகையைச் சேர்த்து வைத்திருக்கும்.

தொடர்புப் பாங்கிற்கு அளிக்கும் வட்டி வீதத்தைவிடக் குறைவான வீத வட்டியே வாடிக்கையாளரின் கணக்கிற்குப் பாங்கு அளிக்கிறது. இவ் வட்டிவீத வேறுபாடு பாங்குக் கணக்கின் நடைமுறைச் செலவுகளைச் சரிக்கட்டுகிறது. சில சமயங்களில் இதற்குமேலும் நடப்புக் கணக்கிற்கு வசூலிப்பது போல இக்கணக்கிலும் கூடுதலான பணம் வசூலிக்கிறது.

இம் மாதிரியான கணக்கை ஈடாகக்கொண்டு பாங்கு கடன் அளித்திருந்தால், அயல் நாட்டுச் செலாவணியின் குறை மதிப்பால் ஏற்படும் நட்டத்தைச் சரிக்கட்டும் பொருட்டுத் தகுந்த நிலுவைகளைப் பாங்கு வைத்திருக்கும்.

## நாணயப் பத்திரங்கள்
## (Credit Instruments)

அயல் நாட்டுச் செல்லுகளைச் செலுத்துவதில் பலவித நாணயப் பத்திரங்கள் (Credit Instruments) பயன்படுத்தப்படுகின்றன. கடனாளி தன்னாட்டிலிருந்து பணத்தைச் செலுத்தியபிறகு மற்றொரு நாட்டிலிருக்கும் கடனீந்தோன் அப் பணத்தை எவ்வேகத்தில் விரைவில் பெறுகிறான் என்ற அடிப்படையில் இப் பத்திரங்கள் வேறுபடுகின்றன. வட்டி நட்டத்தாலும், நட்ட இடர்ப்பாட்டாலும் இப் பத்திரங்களின் விலை அல்லது வீதம் மாறுபடுகிறது. பலவிதமான நாணயப் பத்திரங்களுக்குப் பற்பல மாற்று வீதங்கள் உள்ளன.

## தந்தி அல்லது கடல் தந்தி மாற்றல்கள்
## (Telegraphic or Cable Transfers)

தந்தி அல்லது கடல் தந்திமூலம் பணச் செல்லுகளை அனுப்புவதற்குரிய ஆணையே தந்திமூல மாற்றல் (Telegraphic Transfer) எனப்படும். தந்திமூல மாற்றல்களை வாங்கும் ஒரு வாடிக்கையாளர் தன்னாட்டுச் செலாவணியில் தனது பாங்கிடம் பணத்தைக் கொடுக்கிறார். அயல் நாட்டிலுள்ள பணம் பெறுவோனுக்கு அந் நாட்டுச் செலாவணியில் பணம் செலுத்தும்படி அவ்வயல் நாட்டிலுள்ள அதன் தொடர்புப் பாங்கிற்கு இப் பாங்கு தந்திமூலம் தெரிவிக்கிறது. இத் தந்திமூல மாற்றலில் பணம் அனுப்புவோரின் உண்மைக் கையொப்பத்தை அறிய முடியாது. ஆகையினால் பாங்குகள் தந்திமூலம் அனுப்பும் விவரங்களுடன் அவர்களுக்கிடையேயுள்ள தனிப்பட்ட 'தந்திக் குறியீட்டுத் தொகுதி'யையும் (code) அனுப்புகின்றன. தந்திமூல மாற்று விலையுடன் அயல் நாட்டுச் செலாவணியை விற்கும் பாங்கு தந்திச் செலவையும் சேர்த்து விடுகிறது.

ஒரு நாட்டிலிருந்து மற்றொரு நாட்டிற்குப் பணம் அனுப்புவதற்குத் தந்திமூல மாற்றே மிகவும் சிறந்ததாகும். பணம் செலுத்துபவர் தன்னாட்டில் பணம் செலுத்தும் அதே நாளிலேயே அயல் நாட்டிலுள்ள பணம் பெறுவோனும் அப் பணத்தைப் பெறுகிறான். ஆகவே, இம் மாற்றலில் வட்டி இலாபமோ, நட்டமோ இல்லை. மேலும் போக்குவரத்தில், நாணயப் பத்திரம் தொலைந்து போவதற்கும் வழியில்லை. போதுமான கைவளத்துடன் எல்லா இடங்களிலும் கிளை நிறுவனங்களைக் கொண்டே பெரும் பாங்குகள் இத் தொழிலில் ஈடுபட்டிருப்பதால்

சேரவேண்டிய இடத்தில் பணம் போய்ச் சேராது என்ற சந்தேகத்திற்கும் இடமில்லை. மிகவும் பாதுகாப்பாகவும், விரைவில் செலுத்தக் கூடியதாகவும் இருப்பதால் இத் தந்திமூல மாற்றுக்களைப் பெரும்பான்மையான பாங்குகள் ஒரு நாட்டிலிருந்து மற்றொரு நாட்டில் குறுங்கால முதலீடுகள் செய்வதற்கும், மிகுதியான தொகையை, நிதி, வணிகக் கணக்குகளில் மாற்றுவதற்கும் பயன்படுத்துகின்றன.

வட்டியிழப்போ, இடர்ப்பாடோ, முத்திரை வரியோ (stamp duty) இல்லாததால், மற்ற நாணயப் பத்திரங்களுக்குரியதைக் காட்டிலும் இத் தந்திவழி மாற்றுக்கு அதிக விலையோ. மாற்று வீதமோ கொடுக்க வேண்டியுள்ளது. இந் நலன்களால் உடனடியாக அயல் நாட்டுப் பணம் வேண்டுவோனுக்கு இத் தந்திமூல மாற்று மிகவும் பண மதிப்புடையதாகத் தோன்றுகிறது.

தந்திச் செலவைத்தவிர வேறு எவ்விதச் செலவும் இல்லாததால் ஒரு நாட்டிலிருந்து மற்றொரு நாட்டிற்குப் பணம் மாற்றுவதற்கு இத் தந்திமாற்று விலை இரண்டு நாடுகளுக்குமிடையேயுள்ள அடிப்படை மாற்று வீதமாகவே கருதப்படுகிறது. மற்ற நாணயப் பத்திரங்களுக்குரிய வட்டி வீத வேறுபாடோ பாதுகாப்பிற்குக் குந்தகமான நிலைமையோ அப் பத்திரங்களின் விலையில் ஏற்ற இறக்கத்தை ஏற்படுத்தலாம். ஆனால், தந்திமூல மாற்றல்களின் விலை இவற்றால் பாதிக்கப்படமாட்டா. ஆனால், தந்திமூல மாற்று விலையில் ஏற்படும் மாற்றம் மற்ற பத்திரங்களின் விலைகளைப் பாதிக்கும். ஆகவே, தந்திமூல மாற்று வீதமாகிய அடிப்படை வீதத்தைப் பொறுத்தே மற்ற வீதங்களும் நிர்ணயிக்கப்படுகின்றன.

## அஞ்சல் மூல மாற்றங்கள்
## (Mail Transfers)

இது தந்திமூல மாற்றங்களைப் போன்றே பாங்கு ஒன்று தனது தொடர்புப் பாங்கு ஒன்றுக்குப் பணம் செலுத்தலுக்கு அஞ்சல் மூலம் பிறப்பிக்கும் ஓர் ஆணையாகும். சேரும் இடத்தைப் பணம் சென்றடைவதற்கு நீண்டகாலம் பிடிப்பதால் பணம் செலுத்தும் கொள்முதலாளுக்கும் பணம்பெறும் விற்பனையாளனுக்கும் இடையேயுள்ள காலக்கெடு கடந்து விடுகிறது. அஞ்சல்மூல மாற்று வந்தடையும்வரையில் கடிதப் போக்குவரத்து பாங்கு, விற்பனை புரியும் பாங்குக் கணக்கைப் பற்று வைப்பதில்லை. ஆகவே,

ஓர் இடத்திலிருந்து மற்றோர் இடத்திற்கு அஞ்சல் வழிமாற்று போய்ச் சேருவதற்குச் சிறிது காலம் பிடிப்பதால் கொள்முதல் செய்வோனோ, கடனீந்தோனோ பணத்தைப் பயன்படுத்த முடியாதாகையால் வட்டி நட்டம் ஏற்படுகிறது. பாங்கு, கணக்கைப் பற்றுவைப்பதற்கு அவ்வளவு காலம் ஆகுமாதலால் பணம் பெற்ற பாங்கிற்கு வட்டியில் ஆதாயம் கிடைக்கிறது. இவ்வட்டி நட்டமும், ஆதாயமும் வாடிக்கையினருக்குக் கிடைக்கும் பத்திரத்தின் விலையில் சரிக்கட்டப்படுகிறது. தந்தி மாற்றங்களுக்குக் கொடுக்கக்கூடிய விலையைவிடக் குறைவான விலையே இவ்வஞ்சல்மூல மாற்றலுக்கு வாடிக்கையினர் கொடுக்கிறார். அஞ்சல் வழி மாற்று, செக்கைப் போல் பணம் செலுத்தலுக்கு மட்டுமே பயன்படுகிறது. ஆனால், ஒரு கையிலிருந்து மற்றொரு கைக்கு மாறக்கூடியதோ அல்லது செலாவணிப் பத்திரமோ இதுவன்று. செக்கு, பணவிடைபோன்று தவறானவரின் கையில் போய் அடைந்துவிடுமோ என்ற அச்சத்திற்கு இதில் இடமில்லை. வாடிக்கையாளர் இவ்வஞ்சல் வழி மாற்றலில் விற்கும் பாங்கு அதன் பதிலாளுக்குத் தகுந்த கட்டளையிடுவதால், கையொப்பமிட வேண்டியதில்லை.

அஞ்சல் வழி மாற்று விண்வழிமூலமோ அல்லது நிலவழி மூலமோ நடைபெறுகிறது. இரண்டு நாடுகளுக்குமுள்ள கடிதப் போக்குவரத்து விண்வெளிக் கப்பல் மூலமாகவே செல்வதால் அஞ்சல் வழி மாற்றும் அதன் மூலமாகவே நடைபெறுகிறது. இரண்டு நாடுகளுக்கிடையேயுள்ள தூரம் மிகுதியாக இருந்தால் விண்வெளிக் கப்பல் வீதத்திற்கும் கடல்வழிப் போக்குவரத்து வீதத்திற்கும் வட்டி இழப்பு வேறுபாடு உள்ளது. இப் பத்திரம் விற்கப்படும் தேதியிலிருந்து பெறுபவனுக்கு அயல் நாட்டிலிருக்கும் தொடர்புப் (பதிலாள்) பாங்கு பணம் செலுத்தும் நாள் வரையில் கணக்கிட்டு வட்டியிழப்பு நிர்ணயிக்கப்படுகிறது. இவ் வட்டியிழப்பு மாற்று வீதத்தால் சரிக்கட்டப்படுகிறது.

## பாங்குப் பண விடைகள் (Banker's Drafts) அல்லது பாங்குச் செக்குகள் (Banker's Cheques)

பாங்குக் கணக்கு இல்லாதவர்களும் பணம் செலுத்துவதற்கும் பாங்குகளைப் பயன்படுத்த வகைசெய்வது பாங்குகள் விடுக்கும் பண விடையாகும் (Banker's Draft). பாங்கு ஒன்று வேறோர் இடத்திலுள்ள மற்றொரு கிளை அல்லது தொடர்புப் பாங்கிற்குப் பணம் செலுத்துமாறு விடுக்கும் ஆணையே பாங்குப் பண விடையாகும். செல்லுகள் செலுத்த

வேண்டியிருப்பின் ஒரு நாட்டில் இருக்கும் ஒரு பாங்கு அயல் நாட்டில் இருக்கும் அதன் பதிலாள் பாங்குக்கு வரையப்படும் ஆணையே பாங்குப் பண விடை அல்லது செக்காகும். இப் பணம் கடனாளியால் கடனீந்தோருக்குச் செலுத்தப்படுவதாகும். கொள் முதல் செய்வோர் தேவையான பணத்தைப் பாங்குக்குச் செலுத்தினால், பாங்கு பணவிடை எழுதி, பெறுவோனுக்கு அனுப்புகிறது. பணம் பெறுவோன் இப் பண விடையில் கண்ட பணத்தைத் தன் பாங்கு மூலமாகவோ அல்லது நேராகப் பண விடை தந்த பாங்கின் தொடர்பு அல்லது பதிலாள் பாங்கிடமோ வசூல் செய்து கொள்வான்.

கடனாளியின் சொந்த நாட்டுச் செலாவணியில் பண விடை எழுதப்படலாம். அப்பொழுது பணம் செலுத்தும் நாளில் பண விடை வரையப் பெறுவோனின் பாங்கு பண விடை வாங்கிய வீதத்தில் கடனீந்தோனுக்குப் பணம் கொடுக்கும். ஆனால், பொதுவாகக் கொள்முதல் செய்வோர் தாம் செலுத்தவேண்டிய முழுத் தொகைக்கும் அவ்வயல் நாட்டுச் செலாவணியிலேயே பண விடை வாங்க விரும்பினால், இப் பண விடை முழு முகமதிப்புடன் அயல் நாட்டிலுள்ள கடனீந்தோனுக்குச் செலுத்தப்படும். அஞ்சல் வழி மாற்றங்களைப் போன்று பாங்குப் பண விடையிலும் வட்டியிழப்பு உள்ளது. வேறு ஒருவருக்குப் பண விடை சென்றடைந்துவிடுமோ என்ற காரணத்தால் பெறுவோனின் கையொப்பமும் இப் பண விடையில் இருக்கவேண்டும். அஞ்சல் வழி மாற்றல்களுக்குக் குறிப்பிடப்படும் வீதத்தைவிடச் சற்று சாதகமான மாற்று வீதமே பண விடை வாங்குவோனுக்குப் பாங்கால் குறிப்பிடப்படுகிறது.

## தனியார் செக்குகள்
## (Personal Cheques)

பன்னாட்டுச் செல்லுகளும், உள்நாட்டுச் செல்லுகளும், செக்குகள்மூலம் செலுத்தப்படுகின்றன. அயல் நாடுகளில் நற்பெயர் பெற்ற சிறந்த தொழிலகங்கள், அயல் நாடுகளிலுள்ள தம் கடனீந்தோருக்குச் செக்குமூலம் பணம் செலுத்துகின்றன. பணம் செலுத்தும் தொழிலகம் தன் பாங்குக்குச் செக்கு ஒன்று எழுதி அயல் நாட்டிலுள்ள கடனீந்தோருக்கு அனுப்புகிறது. அச் செக்கைக் கடனீந்தோர் தன்னாட்டிலுள்ள பாங்கிடம் விற்றுத் தன்னாட்டுச் செலாவணியில் பணம் பெறுவார். செக்கு வாங்கிய பாங்கு கடனாளி நாட்டிலுள்ள செக்கு எழுதப்பெறும் பாங்கிடமிருந்து பணத்தைப் பெற உரிமை பெறுகிறது. இக் கணக்கு

எதிர்பக்கச் செல்லுகள்மூலம் சரிக்கட்டப்படுகின்றன. இரண்டு நாடுகளிடையே நெருங்கிய பொருளாதார, அரசியல் தொடர்பிருந்தால் ஒரு நாட்டுச் செக்குகள் மற்றொரு நாட்டுப் பாங்கால் எளிதில் அங்கீகரிக்கப்படுகின்றன. (எ.கா.): இது அமெரிக்காவுக்கும், கனடாவுக்குமிடையே பொதுவாக நிகழ்கிறது. பன்னாட்டுச் செலுத்துகளில் செக்குகள் மிகவும் வசதியானவை. ஆனால், கடனாளியின் நாணயத்திலும் பெறுமானத்திலும் கடனீந்தோனுக்கு நம்பிக்கை இருந்தால்தான் செக்குகள்மூலம் பணம் செலுத்த முடியும்.

## மாற்று உண்டியல்கள்
## ( Bills of Exchange )

மாற்று உண்டியல்கள் உள்நாட்டுச் செல்லுகளிலும், பன்னாட்டுச் செல்லுகளிலும் உன்னதோர் இடத்தைப் பெற்றிருக்கின்றன. செக்குகளும், பாங்குப் பண விடைகளும் ஒருவித உண்டியல்களே. ஆனால், மாற்று உண்டியல் என்பது ஒரு குறிப்பிட்ட பத்திரத்திற்கு உரித்தானது. கடனாளி கொடுக்கவேண்டிய குறிப்பிட்ட தொகையைக் குறிப்பிட்டுக் கடனீந்தோனால் கடனாளியின்மேல் எழுதப்படும் ஒரு பத்திரமாகும். 'அப் பத்திரத்தைக் கொணர்பவருக்கோ, அதில் குறிப்பிட்ட ஒருவருக்கோ, அவரது ஆணைக்கோ குறிப்பிட்ட ஒரு தொகையைச் செலுத்துமாறு குறிப்பிட்ட ஒருவனை ஆணையிடும், எழுத்தாலாகிய, விடுப்பவரால் கையொப்பமிடப் பெற்ற நிபந்தனையற்ற ஆணைப் பத்திரமே உண்டியல் எனப்படும்'. எழுதப்படுவோனால் (Drawee) இப் பத்திரத்தில் 'ஏற்கப்பட்டது' என்று எழுத்தால் எழுதிக் கையொப்பமிட்டு ஒப்புறுதி அளிக்கப்பட்டு எழுதியவனிடம் இப் பத்திரம் திருப்பி அளிக்கப்படுகிறது. எழுதியவன் இவ்வுண்டியல் முதிர்வு நாள்வரையில் வைத்திருந்து தனது பாங்குமூலம் அவ்வுண்டியலுக்குரிய தொகையை வசூலித்துக் கொள்ளலாம். ஆனால், பொதுவாகத் தனது பாங்கிடம் அவன் அவ்வுண்டியலைத் தள்ளுபடிசெய்து விற்கிறான். அப் பாங்கு அயல் நாட்டிலுள்ள தனது கிளை அல்லது தொடர்புப் பாங்குமூலம் உண்டியல் எழுதப்பெறுவோனிடமிருந்து பணத்தை வசூல் செய்துகொள்ளும். அயல் நாட்டிற்குப் பணம் செலுத்தக் கூடிய ஒரு நபருக்கு இப் பாங்கு அவ்வுண்டியலை விற்கலாம்.

மாற்று உண்டியல், எழுதுவோன் நாட்டுச் செலாவணியிலோ, எழுதப்பெறுவோன் நாட்டுச் செலாவணியிலோ எழுதப்படலாம். எழுதுவோன் நாட்டுச் செலாவணியில் உண்டியல்

எழுதப்பட்டால் மாற்றுவீத முறையும் அதில் குறிப்பிடப் பட்டிருக்கவேண்டும். எழுதப்பெறுவோன் அதில் குறிப்பிட்ட மாற்று வீதத்திலோ, வேறு எந்தவிதமான அவனுக்குச் சாதகமான மாற்று வீதத்திலோ அதற்குரிய பணத்தைச் செலுத்தலாம். ஆனால், வசூல் செய்யும் பாங்கால் அனுமதிக்கப்பட்ட பாங்கு மூலம்தான் பணம் செலுத்த முடியும்.

அஞ்சல் வழிமாற்று (Mail transfer), அல்லது தந்தி வழிமாற்று (Telegraphic transfer), அல்லது பாங்குப் பண விடை (Banker's draft) மூலம் பணம் செலுத்தினால் அயல் நாட்டிலுள்ள கடனீந் தோர் பணம் பெறுவதற்கு முன்னரே அப் பத்திரத்தை விற்கும் பாங்கு பணம் பெற்றுக் கொள்கிறது. ஆனால் உண்டியலைத் தள்ளுபடி செய்து வாங்கும் பாங்கு கடனாளியிடமிருந்து பணம் பெறுவதற்கு முன்னரே கடனீந்தோனுக்கு அவ்வுண்டியலுக்குரிய பணத்தைக் கொடுத்துவிடுகிறது. ஆகவே, அயல் நாட்டுச் செலாவணி விற்பவரின் நிதி நிலைமையை ஆராய்வது இங்கு மிகவும் முக்கியமானதாகும்.

## நாணயக் கடிதங்கள்
## (Letters of Credit)

(அயல் நாட்டுவணிகத்தில் ஏற்றுமதி செய்பவரும் இறக்குமதி செய்பவரும் வெகு தொலைவில் இருப்பதால், சரக்கு, ஏற்றுமதி யாளர் கையைவிட்டு இறக்குமதியாளரிடம் சென்றடையப் பல வாரங்கள் ஆகின்றன. ஆனால், ஏற்றுமதியாளர் சரக்கை ஏற்றுமதி செய்த உடனே பணம்பெற விரும்புகிறார். இறக்குமதியாளரிடம் அதற்குச் செலுத்தவேண்டிய பணம் ரொக்கமாக இல்லாமற் போகலாம். இந் நிலையில் இறக்குமதியாளர் தமது பாங்கை அணுகி நாணயக் கடிதம் ஒன்று தருமாறு வேண்டுவார். இக் கடிதம், பாங்கின் அயல் நாட்டுக் கிளை அல்லது தொடர்புப் பாங்கை (Branch or Correspondant Bank) இறக்குமதியாளர் ஏற்கும் உண்டியல்மீது அக் கடிதத்தில் குறிப்பிட்ட அளவுக்கு மிகாமல் பணம் செலுத்தும்படிக் குறிக்கும். இதனால் சரக்கு இறக்குமதி யாளருக்குக் கிடைக்குமுன்னரே ஏற்றுமதியாளருக்கும் பணம் கிடைத்துவிடுகிறது.)

பாங்கால் தனது வாடிக்கையாளருக்கு அயல் நாட்டுச் செலாவணியில் குறிப்பிட்ட அளவு பணம் செலுத்தப் பிறப்பிக்கப் படும் ஒரு பத்திரமே நாணயக் கடிதமாகும் (Letter of Credit). இறக்குமதி செய்யும் ஒருவர் தனது பாங்கை அணுகி ஏற்றுமதி

செய்பவர் நாட்டிலிருக்கும் அதன் கிளை அல்லது தொடர்புப் பாங்கிடம் அந் நாட்டுச் செலாவணியில் வரவு ஒன்று ஏற்படுத்த வேண்டுவார். இறக்குமதி செய்பவர் பணம் செலுத்துவதன் பேரிலோ, தகுந்த ஈட்டின் பேரிலோ நாணயக் கடிதங்கள் பிறப்பிக்கப்படுகின்றன. இந் நாணயக் கடிதம் அதில் குறிப்பிட்டுள்ளவாறு ஏற்றுமதியாளர் பண விடை ஒன்று எழுதி அவர் நாட்டிலிருக்கும் குறிப்பிட்ட பாங்குக்கு விற்க அனுமதியளிக்கிறது. ஏற்றுமதியாளர் இறக்குமதியாளர்களுக்கு இடையேயுள்ள ஒப்பந்தத்தில் உள்ளவாறு இப் பண விடை, கப்பல் பத்திரங்கள் முதலானவற்றை ஏற்றுமதியாளர் அப் பாங்கிடம் ஒப்படைக்கிறார். இவ்வேற்பாடு ஏற்றுமதியாளர் இறக்குமதியாளர் ஆகிய இருவருக்கும் தகுந்த பிணையமாக இருக்கிறது. இதனால் ஏற்றுமதியாளர் தமக்குப் பணம் வந்தடைந்துவிடும் என்ற நம்பிக்கையுடன் இருக்கிறார். அதுபோல, பணம் பெறுவதற்குமுன் ஏற்றுமதியாளர் ஏற்றுமதி செய்த சரக்குகளின் பத்திரங்களைப் பாங்கிடம் ஒப்படைக்க வேண்டியுள்ளதால் இறக்குமதியாளரும் காப்பாற்றப் படுகிறார். நாணயக் கடிதம், விற்கப்படும்போது ஏற்படக்கூடிய மாற்றுவீதம் அப்பொழுது நிலவும் மாற்றுவீத அடிப்படையிலே நிர்ணயிக்கப்படுகிறது. பணம் செலுத்தும் அயல் நாட்டுப் பாங்கு நாணயக் கடிதம் அளிக்கும் பாங்கின் கணக்கில் 'பற்று' வைக்கிறது.

## பங்குப் பண விடை

பங்கு விற்பனையில் பங்கு வாங்கிய பங்குத் தரகரொருவர் பங்கு விற்ற மற்றொரு பங்குத் தரகரின்பேரில் எழுதப் பட்ட, பார்த்தவுடன் செலுத்தப்படும் பத்திரமே பங்குப் பண விடை என்பதாகும். பங்குப் பண விடைக்குரிய பணத்தைக் கொடுக்கும்போது பங்கு விற்பனைத் தரகர் பங்குகளையும் பண விடையையும் பங்கு வாங்கியவரிடம் சேர்ப்பித்துவிடுகிறார். பண விடையுடன் சேர்ந்திருக்கும் பங்குகள் பண விடை வாங்குவோனுக்கு உகந்த பிணையமாதலால், பண விடைக்குரிய பணம் கொடுக்கப்படாமல் இருந்தால் இப் பிணையத்தை விற்றுக் கொள்ளலாம். இப் பிணையங்கள் விலையில் ஏற்ற இறக்கம் ஏற்பட்டால், இப் பிணைய மதிப்பில் ஒரு குறிப்பிட்ட அளவுத் தொகையைப் பாங்கு கேட்கும். பங்குப் பண விடை வாங்கும் பாங்கிற்குப் பிணையங்களைத் திருப்பிச் செலுத்துவதில் கட்டுமான, அஞ்சல், இன்சூரன்சு முதலிய செலவுகள், வட்டியிழப்புப் பாங்குக்கு ஏற்படுவதால் பார்த்தவுடன் செலுத்தப்படும். பண விடைக்

குரிய மாற்று வீதத்தைவிடச் சற்றுக் குறைவான மாற்று வீதத்திலேயே பண விடை எழுதுவோர் பணம் பெறுகிறார். உடனடியாகப் பணம் செலுத்தாவிடில் பிணையங்களை விற்பவர் அப் பத்திரங்களைக் கொடுக்கமாட்டார். ஆகவே, பிணையங்கள் வாங்குவோர் பண விடையுடன்கூடிய பிணையங்கள் சேர்ப்பிக்கப் படும்போது உரிய பணத்தை அளிக்குமாறு அவ்வயல் நாட்டில் இருக்கும் தமது பாங்கிடம் தேவையான ஏற்பாடு செய்கிறார். பண விடையும், பிணையங்களும் விற்ற இடத்திலிருந்து வந்து வாங்கியவரிடம் அளிக்கப்பட்ட பிறகே பாங்கு அதற்குரிய பணத்தைப் பெறுகிறது. இதிலும் பாங்குக்கு வட்டியிழப்பு, கட்டுமானம், அஞ்சல், இன்சூரன்சு, பதிலாள் செலவுகள் முதலியன ஏற்படுகின்றன.

## அயல் நாட்டு வெட்டுச் சீட்டுகள்
## (Foreign Coupons)

பன்னாட்டுப் பத்திரங்களுக்குரிய வட்டிகள் வெட்டுச் சீட்டுகள் மூலம் கொடுக்கப்படுகின்றன. வெட்டுச் சீட்டுகள் பாங்குகளால் வசூலிக்கப்பட்டு வாடிக்கையாளரின் உள்நாட்டுச் செலாவணி அல்லது அயல் நாட்டுச் செலாவணிக் கணக்கில் வரவு வைக்கப் படுகின்றன. சில சமயங்களில் இப் பத்திரங்கள் பாங்கால் சொந்தமாக வாங்கப்பட்டு அதனுடைய சொந்தக் கணக்கிலேயே வசூலிக்கப்படுகின்றன.

## சீட்டுக் குலுக்குப் பத்திரங்கள்
## (Drawn Bonds)

பரிசுச் சீட்டுகள்போன்று சீட்டுகள் குலுக்கப்பட்டுப் பணம் அளிக்கப்படும் பத்திரங்களே சீட்டுக் குலுக்குப் பத்திரங்களாகும். எப் பத்திரத்தின் எண் சீட்டுகள் குலுக்கலில் முதன்மையிடம் பெறுகிறதோ அதுவே உடனடிச் செலுத்தலுக்குரியதாகும். பணம் கொடுக்கும் இடத்திற்கு அவை அனுப்பப்படுகின்றன. அப் பத்திரத்தை வைத்திருப்பவர் நாட்டுப் பாங்குகளால் அவை வாங்கப்பட்டு, அவற்றைத் தம் கணக்கிலேயே வசூல் செய்கின்றன.

பாங்குகள், வெட்டுச் சீட்டுகளையும், சீட்டுக் குலுக்குப் பத்திரங்களையும் வாங்கினால் கட்டுமானம், அஞ்சல், இன்சூரன்சு செலவுகளும், வட்டியிழப்பு முதலியன வசூல் செய்யும் காலங்களில் ஏற்படுவதால் குறிப்பிட்ட வீதத்திலிருந்து தள்ளுபடி அளிக்கப்

படுகின்றன. வெட்டுச் சீட்டுகளும், சீட்டுக் குலுக்குப் பத்திரங்களும் உடையோன் விருப்பத்திற்கேற்ப ஏதாவது ஓர் அயல் நாட்டுச் செலாவணியில் குறிப்பிட்ட மாற்று வீதத்தில் செலுத்தப் படவேண்டும் என்று குறிப்பிடப்பட்டிருக்கும். பாங்கு இப் பத்திரங்களை வசூலுக்கனுப்பி அங்கு நிலவும் மாற்று வீதப்படித் தகுந்த பணத்தைப் பெறுகிறது.

## செலாவணித் தாள்கள், காசுகள்

செலாவணித் தாள்களையும், காசுகளையும் (சட்ட முறைப் பணம்) அயல் நாடுகளுக்குச் சுற்றுலாச் செல்பவர்கள் எடுத்துச் செல்கிறார்கள். அதாவது ஒரு நாட்டுச் சட்டமுறைப் பணம் மற்றொரு நாட்டுச் செலாவணியாக மாற்றப்படுகிறது. ஆனால், அங்காடிக் கடைக்காரர்களும் வணிகர்களும் சில நாடுகளின் பணங்களை அப்படியே ஏற்றுக் கொள்கிறார்கள். ஆனால், இப் பணங்களை அவர்கள் நாட்டுப் பாங்கின்மூலமாக அவர்கள் நாட்டுப் பணங்களாக மாற்றிக் கொள்கின்றனர். அயல் நாடுகளுக்குச் சுற்றுலாச் சென்று திரும்பிவருபவர்கள் அயல் நாட்டுப் பணங்களைக் கொண்டுவந்து தங்கள் நாட்டுப் பாங்குகளில் விற்கின்றனர். இம் மாதிரிப் பணங்கள் பாங்குகளுக்குப் பயன் விளைவிக்கும். அவர்களுடைய கிளை அல்லது தொடர்புப் பாங்குகளுக்குக்கூட இப் பணத்தை அனுப்புகிறார்கள். மாற்றுக் கட்டுப்பாடு நிலவும் நாடுகள் தங்கள் நாடுகளிலிருந்து வெளியில் செல்லும், அயல் நாடுகளிலிருந்து தங்கள் நாடுகளுக்கு வரும் செலாவணித் தாள்கள், காசுகளுக்குக் கட்டுப்பாடுகள் விதிக்கின்றன.

## பொன்கட்டி
## (Bullion)

பன்னாட்டுக் கடன்களைத் தீர்ப்பதற்குப் பொன் கட்டி மிகவும் ஏற்றதாகும். பன்னாட்டுக் கொடுப்பல் நிலையில் பற்றுக்குறையுள்ளபோது அயல் நாட்டுச் செலாவணியின் 'அளிப்பு' 'தேவை'களில் சமன்கேடு ஏற்பட்டு அயல் நாடுகளுக்குரிய கடன் பத்திரங்களின் விலை மிகுதியாகி, அவை பொன் கட்டிமூலம் அயல் நாட்டுக் கடன்களை அடைக்கக்கூடிய ஒரு மலிவான நிலைக்குப் பெயரும். பொன் கட்டிமூலச் செலுத்துகளை அதிகத் தொகைக்குப் பாங்குகள் மட்டுமே நிகழ்த்த முடியும். பொன் திட்டத்தில் உள்ள நாடுகளுக்குப் பொன் பெயர்ச்சி கட்டுப்பாடற்ற நிலையில் திகழ்கிறது. அயல் நாடுகளுக்குப் பொன்

ஏற்றுமதி அரசினரால் அனுமதிக்கப்படுவதில்லை. ஆகவே, இப் பொன் கட்டி முறை ஏட்டளவிலேதான் பன்னாட்டுச் செல்லுகளில் முக்கிய இடம் பெறுகிறது.

## பன்னாட்டுப் பண ஆணைகள்
## (International Money Orders)

பல நாடுகளில் உள்ள அஞ்சலகங்கள்மூலம் பன்னாட்டுப் பண ஆணைகள் வெளியிடப்படுகின்றன. பண ஆணைகள் (Money Orders) பொதுவாக அந்தந்த நாட்டுச் செலாவணியிலேயே வெளியிடப் பட்டுப் பண ஆணைகளைப் பெறும் நாட்டிலுள்ள அஞ்சலகங்கள், எழுதப்பெறுவோனுக்குப் பணம் கொடுக்கும் அந்தந்த நாட்டுச் செலாவணியாக மாற்றுகின்றன. பொதுவாகக் குறைந்த அளவு பணம் மட்டுமே பண ஆணைமூலம் அனுப்பலாம் என்று ஆட்சியாளர்களால் கட்டுப்படுத்தப்படுகிறது. நுகர்வோர் ஒருவர் அயல் நாட்டிலிருந்து புத்தகம் போன்ற சிறு மதிப்புடைய பண்டங்களை இறக்குமதி செய்தால் பண ஆணைமூலம் அப் பணத்தை அனுப்பலாம்.

# 5. அயல் நாட்டு மாற்றுக்கான சிறப்புச் சொற்கள்

அயல் நாட்டு மாற்றுக்களுக்கான சிறப்புச் சொற்களையும் மேற்கோள்களையும் காண்போம்.

## மாற்றுவிகிதம் / மாற்றுவீதம்
## (The rate of Exchange)

ஒரு நாட்டுச் செலாவணியின் மாற்று மதிப்பு மற்றொரு நாட்டுச் செலாவணியின் எவ்வளவு மாற்று மதிப்பிற்குச் சமம் என்று குறிப்பிடுவதையே மாற்று வீதம என்கிறோம். (எ.கா.): ரூ. 100= $. 13·3333 அல்லது ரூ. 100=£. 5·5556. அதாவது மற்றொரு நாட்டின் ஒரு குறிப்பிட்ட அளவு செலாவணி அலகுகளுக்கு மாற்றாக ஒரு நாட்டின் எவ்வளவு செலாவணி அலகுகள் தரவேண்டும் என்பதை உணர்த்துவதே ஆகும். பண அதிகாரிகளால் அயல் நாட்டு மாற்றுக்கள் நிலைப்படுத்தப்படுவதற்கு (pegged) அல்லது கட்டுப்படுத்தப்படுவதற்கு (controlled) முன் இரண்டு நாடுகளின் செலாவணிகளுக்கிடையே உள்ள மாற்று மதிப்பு அவற்றின் தேவை, அளிப்புச் சக்திகளினால் வேறுபட்டிருந்தன. தற்கால நிலைமைகளில்கூட இப் பாதிப்பைப் புறக்கணிக்க முடியாது. பொருளாதாரப் பாதிப்புகள் இவற்றிற்கெதிராக இருக்கும்போது எந்த ஒரு பணநிதியாலும் காலவரையற்ற வீதத்தை நிலைநாட்ட முடியாது. பொன் திட்டத்தின்கீழ் உள்ள இரண்டு செலாவணிகளின் மாற்று வீதம் அவற்றின் பொன் நிறையால்தான் நிர்ணயிக்கப்படுகிறது. இது நாணயச் சாலைச் சமநிலை வீதம் எனப்படும். தற்காலத்தில் பன்னாட்டுப் பண நிதியில் உறுப்பினர்களாகக் கொண்ட நாடுகளிடையே அமெரிக்க டாலர்களில் முன்னரே நிர்ணயிக்கப்பட்ட பொன் விலைப்படியே

மாற்றுச் சமநிலை வீதம் நிர்ணயிக்கப்படுகிறது. மாற்று அங்காடியில் விற்பனைக்காக அளிக்கப்படும் செலாவணிக்கு அதிகமாகத் தேவை இருந்தால், மாற்றுச் செலாவணிகளின் விலைகளைக் காட்டிலும், அச் செலாவணிகளின் விலை உயரும். அதாவது அச் செலாவணிகளுக்கீடாக மற்ற செலாவணிகளின் உயர்ந்த அளவு அலகுகள் அளிக்கப்படும். மாறாக, மாற்று அங்காடியில் ஒரு செலாவணியின் அளிப்பு அதன் தேவையைவிட மிகுதியாக இருந்தால் மற்ற செலாவணிகளுடன் ஒப்பு நோக்கின் அதன் விலை குறையும். அதாவது மற்ற செலாவணிகளில் குறிப்பிட்ட அலகுகளுக்கீடாக இச் செலாவணியின் கூடுதலான அலகுகள் அளிக்கப்படவேண்டும் அல்லது இச் செலாவணியின் குறிப்பிட்ட அலகுகளுக்கீடாக மற்ற செலாவணிகளின் குறைவான அலகுகளே கொடுக்க வேண்டி நேரிடும்.

## சாதக பாதக மாற்றுவீதங்கள்
## (Favourable and Unfavourable rates of exchange)

ஒரு நாட்டிற்குள் பொன்னோட்டம் நிகழும் வகையில் மாற்று வீத இயக்கம் இருந்தால் அதனை அந் நாட்டின் சாதக மாற்று வீதம் (Favourable rate of exchange) என்றும், அதற்கு மாறாக ஒரு நாட்டிற்கு வெளியில் பொன்னோட்டம் நிகழும் வகையில் மாற்று வீத இயக்கம் இருந்தால் அதனை அந் நாட்டிற்குப் பாதக மாற்று வீதம் (Unfavourable rate of exchange) என்றும் அழைக்கின்றோம். பொன் இயக்கமும், பொன் திட்டமும் இல்லாத காலத்தில்கூட மாற்று வீதத்திலுள்ள மாற்றமானது அயல் நாட்டுச் செலாவணியின் மதிப்பைவிட உள்நாட்டுச் செலாவணியின் மதிப்பை உயர்த்தினால், அவ்வுள்நாட்டுச் செலாவணி அலகுகளுக்கீடாக அளிக்கப்படும் அயல் நாட்டுச் செலாவணியின் அலகுகள் அதிகமாக இருப்பதால் அதிகமான அயல் நாட்டுப் பொருள்களைப் பெற்று இம் மாற்றம் அந் நாட்டிற்கு நன்மை பயக்கும். உள்நாட்டுச் செலாவணியின் மதிப்பிறக்கம் விரும்பத்தகாததாகும்.

ஆகவே, உள்நாட்டுச் செலாவணியின் ஓர் அலகுக்கு ஈடாக அயல் நாட்டுச் செலாவணியின் அலகுகள் இத்தனை என்று மாற்று வீதம் குறிப்பிடப்படும்போது 'உயர்ந்த வீதம் நமக்குச் சாதகமானவை, தாழ்ந்த (குறைந்த) வீதம் நமக்குப் பாதகமானவை' (High rates are for us, low rates are against us) என்றும் சொல்கிறோம். (எ.கா.): ' ரூபாய்-ஸ்டெர்லிங்குகளுக்கு உள்ள மாற்று வீதம் ரூ. 1 = 13·3 பென்னிகள் என்று குறிப்பிட்டு

அவ்வீதத்திலுள்ள ஏற்றமானது ரூபாய் மதிப்பை உயர்த்துவதால் சாதக மாற்றாகும். இவ்வீதத்திலுள்ள இறக்கமானது ரூபாய் மதிப்பைக் குறைத்துப் பாதக மாற்று நிலையை உண்டாக்குகிறது.

அயல் நாட்டுச் செலாவணியின் ஓர் அலகிற்கு ஈடாக உள்நாட்டுச் செலாவணியின் அலகுகள் இவ்வளவு என்று மாற்று வீதத்தைக் குறிப்பிடும்போது 'தாழ்ந்த வீதங்கள் நமக்குச் சாதக மானவை, உயர்ந்த வீதங்கள் நமக்குப் பாதகமானவை' (Low rates are for us and high rates are against us) என்றுணர்கிறோம். ரூபாய்-டாலர் மாற்று வீதம் ரூ. 7·50 = $. 1 என்று குறிப்பிடப் படும்போது மாற்று வீதத்திலுள்ள ஏற்றம் டாலருக்குள்ள ரூபாய் மதிப்பைக் குறைத்து இந்தியாவுக்குப் பாதக மாற்றாக அமை கிறது. மாற்று வீதத்திலுள்ள இறக்கமானது ரூபாய் மதிப்பை உயர்த்துகிறது.

## வாங்குதல், விற்பனை வீதங்கள்
## (Buying and selling rates)

நாணய மாற்று வணிகர் இரண்டு வித விலைகளைக் குறிப்பிடு கிறார். அவர் எந்த வீதத்தில் அயல் நாட்டுச் செலாவணியை வாங்குவார் என்றும், எந்த விதத்தில் அயல் நாட்டுச் செலாவணியை விற்பார் என்றும் குறிப்பிடுகிறார். அதாவது உள்நாட்டுச் செலாவணியின் ஓர் அலகுக்கு ஈடாகச் சிறு அளவு எண்ணிக்கையுள்ள அயல் நாட்டுச் செலாவணியின் அலகுகள் அளிப்பது அவரின் விற்பனை (Selling rate) வீதமாகும். உள்நாட்டுச் செலாவணியின் ஓர் அலகுக்கு ஈடாக அதிக அளவு எண்ணிக்கையுள்ள அயல் நாட்டுச் செலாவணியின் அலகுகள் அளிப்பது அவரின் வாங்கும் வீதம் (Buying rate) ஆகும். இவ்வித மறைமுக அல்லது செலாவணி வீதமானது அயல் நாட்டுச் செலாவணியில் உள்நாட்டுச் செலாவணி அலகின் மதிப்பைக் குறிப்பிடும் வீதமாகும். 'அதிகமாக வாங்கு, குறைவாக விற்பனை செய்' (Buy high, sell low) என்பதே ஆகும்.

வீதங்கள் நேர்முகமாக அல்லது பென்னிகளில் குறிப்பிடப் பட்டால் அதாவது அந்நியச் செலாவணியின் ஓர் அலகுக்கு ஈடாக உள்நாட்டுச் செலாவணியின் இவ்வளவு அலகுகள் என்று குறிப்பிடப்படுவது 'குறைவாக வாங்கு, அதிகமாக விற்பனை செய்' (Buy low, sell high) என்பதாகும்.

நாணய மாற்று வணிகர் தனது வாடிக்கையின் குறிப்பிடும் வீதத்திற்கும், அங்காடி வீதத்திற்கும் வேறுபாடு காண்பிக்க

வேண்டும். நாணய மாற்று வணிகர் எவ்வீதத்தில் தனது வாடிக்கையாளருக்கு அயல் நாட்டுச் செலாவணியை விற்பனை செய்ய விரும்புகிறார் என்றும், எவ்வீதத்தில் அவற்றை வாங்க விரும்புகிறார் என்றும் இரண்டு வீதங்களைக் கொண்ட எண்களைக் குறிப்பிடுகிறார். இவ்வாறு இலண்டன் வணிகர் தனது வாடிக்கையாளருக்கு அமெரிக்க டாலர்களில் $2 \cdot 79\frac{7}{8}$ — $2 \cdot 80\frac{1}{8}$ ஆகிய இரண்டு எண்களைக் குறிப்பிடுகிறார் என்றால் ஒவ்வொரு பவுண்டுக்கும் $2 \cdot 79\frac{7}{8}$ டாலர்கள் ஆக தனது வாடிக்கையாளருக்கு அவர் விற்பனை செய்வார், தனது வாடிக்கையாளரிடமிருந்து ஒரு பவுண்டுக்கு $2 \cdot 80\frac{1}{8}$ டாலர்கள் ஆக வாங்குவார் என்றும் பொருள்படும்.

நாணய மாற்று வணிகர்கள் தங்களுக்குள் வாங்கும் அல்லது விற்பனை செய்யும் வீதங்களே அங்காடி வீதங்கள் (Market rates) எனப்படும். சில வணிகர்கள் அயல் நாட்டுச் செலாவணிகளை வாங்குவதற்குத் தயாராக இருக்கும் வீதமும், விற்பதற்குத் தயாராக இருக்கும் வீதமும் பழக்கத்தில் உள்ளன. ஆகவே, அங்காடி வீதம் \$. $2 \cdot 80\frac{1}{2}$—$2 \cdot 80\frac{3}{4}$ என்றிருந்தால் இலண்டனில் இருக்கும் வணிகர்கள் ஒரு பவுண்டுக்கு $2 \cdot 80\frac{1}{2}$ டாலர்களை விற்கத் தயாராய் இருக்கின்றனர் என்றும், மற்றும் சில வணிகர்கள் ஒவ்வொரு பவுண்டுக்கும் $2 \cdot 80\frac{3}{4}$ டாலர்களை வாங்கத் தயாராய் இருக்கின்றனர் என்றுணர்த்தும்.

அங்காடியில் வாங்குபவர்கள், விற்பவர்களின் முயற்சியையும் பேரத் திறமையையும் பொறுத்தே உண்மையான அங்காடி மாற்று வீதம் நிலவும்.

## விலை குறிப்பிடுதல்

சில நாணயப் பத்திரங்கள் (Credit instruments) மற்ற நாணயப் பத்திரங்களைவிட உயர்ந்தவை, சிறந்தவை என்று கருதப்படுவதால் அவற்றின் விலை மற்றவற்றைவிட உயர்வு உடையன என்று கொள்ளப்படுகின்றன.

1. மிகவும் குறுகிய நாட்களில் முதிர்ச்சி அடையும் உண்டியல் ஒன்று மூன்று மாதங்களுக்குப் பிறகு முதிர்ச்சியடையும் உண்டியலைவிடச் சிறந்ததாகும். உண்டியலை உடையவர் சிறிது காலத்திற்குப் பிறகே பணம் பெறுவார் என்றால், அவ்வுண்டியல் குறைந்த அளவு விலைக்கே விற்பனையாகும், ஏனென்றால், அவ்வுண்டியலை வாங்குவதால் வட்டி இழப்பு ஏற்படும்.

2. உண்டியலில் காணப்பட்டிருக்கும் நபர்கள் பெயர் பெற்ற பாங்குகளாகவும் சிறப்பான நிறுவனங்களாகவும் இருந்தால் அவ் உண்டியல்களை வாங்குபவர்கள் சாதாரண உண்டியல்களுக்கு அளிப்பதைவிட அதிக விலை அளிக்கத் தயாராக இருப்பார்கள்.

3. பாங்குப் பண விடையின் (Bank draft) விற்பனை விலையில், அது செலுத்தப்படவேண்டிய இடத்தில் அளிக்கப்படக்கூடிய பணத்தொகை, பண விடை தயாரிக்கப்படும் செலவு, உண்டியல் எழுதப்படுகிற அயல் நாட்டுத் தொடர்புப் பாங்கின் செலவு, பாங்குப் பண விடை அனுப்பப்படும் செலவு, எழுதுவோரின் இலாபம், தொடர்புப் பாங்குக்குரிய கழிவு ஆகியவை அடங்கும். ஆகவே, இவ் உண்டியல்களுக்கு மற்ற உண்டியல்களைவிட அதிக விலை ஆகும்.

உள்நாட்டுச் செலாவணியின் ஓர் அலகுக்கு ஈடாக அயல் நாட்டுச் செலாவணியின் வீதம் குறிப்பிடப்படும்போது உண்டிய லுக்கு அதிக விலை என்றும், குறைந்த வட்டி என்றும் பொருள் படும். அதாவது 'சிறந்த உண்டியலுக்குக் குறைந்த வீதம்' (The better the bill, the lower the rate) ஆகும்.

(எ.கா.): இந்திய மாற்றுப் பாங்கு ஒன்று ஒரே மதிப்புடைய, இலண்டனில் செலுத்தக்கூடிய, இரண்டு உண்டியல்களை அளிக் கிறது என்றும், ஒன்று முதல்தரப் பாங்குப் பண விடை என்றும், மற்றொன்று சாதாரண வணிக உண்டியல் என்றும் கொள்வோம். முதல்தரப் பாங்குப் பண விடைக்கு 1 ஷில்லிங் $1\frac{1}{2}$ பென்னிகள் வீதமும், இரண்டாவது சாதாரண வணிக உண்டியலுக்கு 1 ஷில்லிங் $1\frac{3}{4}$ பென்னிகள் வீதமும் பாங்கு குறிப்பிடலாம். பாங்குப் பண விடைக்கு அதிக விலையும், உண்டியலுக்கு அதைவிடக் குறைந்த விலையும் குறிப்பிடுகிறது என்று பொருள்படும். மாறாக, அயல் நாட்டுச் செலாவணியின் ஓர் அலகுக்கு ஈடாக உள்நாட்டுச் செலாவணியின் வீதம் குறிப்பிடப்படும்போது 'சிறந்த உண்டிய லுக்கு அதிக வீதம்' (The better the bill, the higher the rate) என்று சொல்ல வேண்டும்.

## காட்சி அல்லது கேட்பு வீதங்கள்
## (Sight or Demand rates)
## கால வீதங்கள் (Time rates)

ஒப்புறுதி அளித்தவனிடம் நேராகக் கொடுத்து உடனே பணம் பெறக்கூடிய கேட்புப் பண விடைகள், மாற்று உண்டியல்களான அயல் நாட்டு மாற்றுப் பத்திரங்களை வாங்கவும், விற்கவும் குறிப்

பிடப்படும் வீதம் கேட்பு வீதம் (Demand rate) என்றும், ஒரு குறிப்பிட்ட காலத்திற்குப் பிறகு முதிர்வடையக்கூடும் நாணயப் பத்திரங்களுக்குக் குறிப்பிடப்படும் வீதம் கால வீதம் (Time rate) என்றும் அழைக்கப்படும். கேட்புப் பத்திரங்களுக்கு வட்டியோ, தள்ளுபடியோ இல்லை. ஆனால், அவை காலப் பத்திரங்களுக்கு உண்டு.

60 (அறுபது) நாட்களுக்குப் பிறகு முதிர்வடையும் ஒரு ஸ்டெர்லிங் நாணயப் பத்திரத்தை வாங்கும் பாங்கானது, பிரிட்டன் பாங்குகளில் கொடுத்தவுடன் பணம் பெறக்கூடிய கேட்பு உண்டியல்களுக்குக் குறிப்பிடப்படும் வீதத்தைவிடத் (நேர்முக விலை குறிப்பிடுவதாக இருந்தால்) தாழ்வான வீதத்தையும், (மறைமுக விலை குறிப்பிடுவதாக இருந்தால்) உயர்வான வீதத்தையும் குறிப்பிடும்.

## உடனடி வீதமும், முன்னோக்கிய வீதமும்
## (Spot and Forward rates)

உடனடியாகப் பட்டுவாடா (delivery) செய்யக்கூடிய அயல் நாட்டு நாணய மாற்றுப் பத்திரங்களுக்குக் குறிப்பிடப்படும் வீதம் உடனடி வீதம் (Spot rates) எனப்படும். சிறிது காலத்திற்குப் பிறகு பட்டுவாடா செய்யப்படும் வீதம் முன்னோக்கிய வீதம் (Forward rates) எனப்படும். ஓர் இந்திய ஏற்றுமதியாளர், நாணயக் கடிதத்தின்கீழ் பிரிட்டன் பாங்கின்மீது 25,000 பவுண்டுக்கு ஓர் உண்டியல் எழுத அதிகாரம் பெற்றிருக்கலாம். இவ் உண்டியலை இந்தியாவில் விற்க இவ்விந்திய ஏற்றுமதியாளர் உடனடி வீதத்தில் (Spot rate) விலை குறிப்பிட்டு அவ் விலையைப் பெற்றுக் கொள்ளலாம். மற்றோர் ஏற்றுமதியாளர், பிரிட்டன் இறக்குமதியாளரின்மீது 60 நாட்கள் தவணை உண்டியல் ஒன்று எழுதப்பெற்று வசூலுக்கு அனுப்பினால் 25,000 பவுண்டுகளையும் பெற 60 நாட்களாகும் என்று அவருக்குத் தெரியும். இவ்விடரைப் போக்கும் பொருட்டு, 60 நாட்களுக்குப் பிறகு பட்டுவாடா செய்வதற்காக இப் பவுண்டுகளை விற்க இந்தியாவிலுள்ள ஒரு பாங்கிடம் அந்த ஏற்றுமதியாளர் ஒப்பந்தம் செய்து கொள்வார். இந் நிலையில் இவ்வொப்பந்தம் 60 நாட்களுக்குப் பிறகு ஏற்றுமதியாளருக்கு விற்பனையையும், பாங்குக்கு வாங்குவதையும் உருவாக்குகிறது. பாங்குக்கு ஒப்பந்தத்தில் ஈடுபடும்போது முன்னோக்கிய வாங்கும் வீதம் 25,000 பவுண்டுகளாகும். கால வீதத்திற்கும் (Time rates) முன்னோக்கிய வீதத்திற்கும் (Forward rates) குழப்பம் கூடாது.

பிற்காலத்தில் செலுத்தக்கூடிய அயல் நாட்டு நாணயப் பத்திரங்களை உடனே பட்டுவாடா செய்வதற்குக் குறிப்பிடப்படும் வீதம் கால வீதம் (Time rate) என்றும், பிற்காலத்தில் பட்டு வாடா செய்வதற்காகத் தற்போது ஏற்படுத்திக் கொள்ளும் ஒப்பந்தத்திற்குக் குறிப்பிடப்படும் வீதம் முன்னேக்கிய வீதம் (Forward rate) என்றும் அழைக்கப்படும் என்பதைத் தெளிவாக நினைவில் இருத்திக் கொள்ள வேண்டும்.

## உடனடிச் செலாவணி
## (Spot Currency)

அதே தினத்திலோ, இரண்டு மூன்று தினங்களுக்குள்ளோ உடனே தீர்வு காணும் செலாவணிக்கு உடனடிச் செலாவணி (Spot Currency) என்று பெயர். ஒரு வணிகர் மே 28ஆம் நாள் அன்று 100 ஆயிரம் ஃபிரான்சு ஃபிராங்குகளை உடனடியாக வாங்குகிருர் என்ருல் மே 29ஆம் நாள் அன்று அவர் ஃபிராங்கு களுக்கு ரூபாய்களைக் கொடுத்துப் பாரிசில் ஃபிராங்குகளைப் பெறுவார். பம்பாய்ப் பாங்கு ஒன்று 'உடனடி அந்நியச் செலா வணியை வாங்குகிறது அல்லது விற்கிறது என்ருல் பம்பாயில் ரூபாய்களைக் கொடுப்பதும், வெளிநாட்டிலிருந்து அந்நியச் செலா வணியைப் பெறுவதும் ஆகிய இரு நடவடிக்கைகளும் ஒன்றிலிருந்து மூன்று நாட்களுக்குள் நிகழ்தல் வேண்டும். இப் பேரங்கள் உடனடிப் (Spot) பேரங்களாகும்.

## முன்னேக்கியச் செலாவணி
## (Forward Currency)

எதிர்காலத்தில் தீர்வு செய்யக்கூடிய செலாவணிக்கு முன்னேக்கியச் செலாவணி (Forward Currency) என்று பொருள். (எ.கா.): பேரம் மே மாதம் 28ஆம் நாளில் ஒழுங்குபடுத்தப்பட்டு ரூபாய்கள் அளிப்பதும், அந்நியச் செலாவணி பெறுவதும் மூன்று மாதங்கள் கடந்து ஆகஸ்டு 28ஆம் நாளில் நிகழுமாளுல் அது முன்னேக்கியச் செலாவணியாகும். இப் பேரத்தில் ஒப்பந்தம் செய்துகொண்ட எதிர்காலத்திற்குள் பணம் கையை விட்டகல்வ தில்லை. ஆனுல், குறிப்பிட்ட எதிர்காலத்தில் குறிப்பிட்ட மாற்று வீதத்தில் விற்பனையாளரும், வாங்குபவரும் அயல் நாட்டு மாற்றுக்களை மாற்றிக் கொள்வது என்று எழுதப்பெற்ற ஒப்பந்தத் தின்கீழ் ஏற்றுக் கொள்கிருர்கள். இப் பேரத்தில் சாதாரணமாக 2 அல்லது 3 மாதங்கள் தவணை கொடுக்கப்படும். அயல் நாட்டி

லிருந்து சரக்குகளைக் குறிப்பிட்ட பிற்காலத்தில் இறக்குமதி செய்ய என்றும் இறக்குமதியாளருக்கு, அப் பிற்காலத்தில் பணம் செலுத்த வேண்டியிருப்பதால், மாற்று வீதத்தில் ஏற்படும் வேறுபாட்டால் நட்டமடையாமல் இருப்பதற்கு இம் முன்னேக்கியச் செலாவணி பயனுடையதாக இருக்கும். முன்னேக்கியச் செலாவணி ஒப்பந்தத்தால் முன்கூட்டியே செலாவணி மாற்று வீதத்தை நிர்ணயித்துப் பேரத்தைத் தீர்த்துக் கொள்ளத் தெரிந்திருப்பதால் அவருடைய நாட்டுச் செலாவணியில், அயல் நாட்டுச் செலாவணிக்கு எவ்வளவு மாற்ருகக் கொடுக்க வேண்டும் என்று அறிந்திருக்கிருர். அது போலவே அயல் நாடுகளில் சரக்குகளை விற்று, ஏற்றுமதி செய்யும் ஏற்றுமதியாளர்களுக்கும், தமக்குக் குறிப்பிட்ட பிற்காலத்தில் அயல் நாட்டு இறக்குமதியாளரிடமிருந்து எவ்வளவு அந்நியச் செலாவணிகள் கிடைக்கும் என்றும் எதிர்பார்க்க முன்னேக்கியச் செலாவணி துணைபுரிகிறது. முன்னேக்கியச் செலாவணி ஒப்பந்தத்தில் ஈடுபடுவதால், செலாவணி பெறும் குறிப்பிட்ட நாளில் செலாவணி மாற்று வீதம் தனக்கெதிராக இருந்தாலும் முன் ஒப்பந்தப்படி அவருக்கு எவ்வித இடையூறுமில்லாமல் அந்நியச் செலாவணி கிடைக்கிறது.

## மதிப்பு நாள்
## (Value date)

பணம் செலுத்தப்படும் நாள் அல்லது ஒரு குறிப்பிட்ட கணக்கில் வட்டி செலுத்தக்கூடிய முதிர்ச்சி நாளே மதிப்பு நாள் (Value date) எனப்படும். அயல் நாட்டு மாற்றுப் பேரத்தில் அயல் நாட்டுச் செலாவணி கைமாறக்கூடிய நாள் ஏற்றுக் கொள்ளப்பட்ட பிறகு (எ.கா.): மே 28-ல் நூருயிரம் டாலர்கள் வாங்கப்பட்டு மே 31 மதிப்பு நாளாகக் குறிப்பிடப்பட்டால், மே 31-ல், நியூயார்க்கில் வாங்குபவர் கணக்கில் டாலர்கள் வரவு வைக்கப்பட்டு அதனை வாங்குபவர் பம்பாயில் விற்பனையாளரிடம் ரூபாய்களைக் கொடுப்பார். தந்தி மாற்றத்தில் மதிப்பு நாள் இரண்டு இடங்களிலும் பொதுவாக ஒன்ருகவே இருக்கும். நியூயார்க்கில் டாலர்களை அளிப்பதும் பம்பாயில் ரூபாய்களைக் கொடுப்பதும் ஒரே நாளில் நிகழும். இது அங்காடியில் 'இங்கும் அங்கும் மதிப்பு' (Value here and there) அல்லது (ஈடுகட்டிய) ஈடுகட்டப்பட்ட மதிப்பு (Compensated value) எனப்படும்.

## மாற்று வீதத்தை நிலைப்படுத்துதல்
## ( Pegging an exchange rate )

செலாவணியை ஒரு நிலையான மாற்று மதிப்பில் வைத்திருக்கும் நோக்கத்துடன் தலையீடு (intervention) கைக் கொள்ளப் படும்போது செலாவணி அம் மதிப்பில் நிலைப்படுத்தப்படுதல் (Pegged) என்று பொருள். முன் கூட்டியே நிர்ணயிக்கப்பட்ட வாங்குதல், விற்பனை வீதத்தில் மாற்று வீதத்தின் இயக்கத்தை நிலை நிறுத்தி வைத்திருப்பதையே 'மாற்று வீதம் நிலைப்படுத்தல்' (Pegging an exchange rate) எனப்படும். செலாவணியைப் பன்னாட்டளவில் நிலைக்கச் செய்வதற்காக இச் செயற்கை மாற்று நிலைமை உருப்பெறுகிறது. மாற்று அங்காடிப் பேரங்களின் மூலம், அதிகமான அயல் நாட்டுச் செலாவணிகளையும், உள்நாட்டுச் செலாவணிகளையும் இருப்பில் வைத்துக்கொண்டு பண அதிகாரிகளால் இந் நிலைப்படுத்தல் (Pegging) செயல்படுகிறது. (எ.கா.): அயல் நாட்டு மாற்றுப் பேரங்கள் நடைபெற்றிருக்கும்போது இந்தியப் பண அதிகாரிகள், ரூபாய், அமெரிக்க டாலர் வீதம் 13·20—13·35 டாலர்களுக்குமேல் வேறுபடக் கூடாது என்று கருதினால், அதிகச் செலாவணிகளை இருப்பில் வைத்துக்கொண்டு அனைத்து டாலர்களுக்கும் $. 13·20= ரூ. 100 என்ற வீதத்தில் விற்கத் தயாராக இருத்தல்வேண்டும். அவ்வாறே அளிக்கக் கூடிய அவ்வளவு டாலர்களையும் $. 13·35= ரூ. 100 என்ற வீதத்தில் வாங்கத் தயாராய் இருக்கவேண்டும்.

டாலர்களை வாங்குபவர்கள் எண்ணிக்கை அதிகமாக இருந்தால் அங்காடி அதிகத் தேவையான டாலர் = ரூபாய் வீதத்தை—$. 13·20 = ரூ. 100-க்கும் கீழே இறக்கிவிடும். இத் தருணத்தில் பண அதிகாரிகள் போதுமான டாலர்களைக் காப்பிருப்பில் வைத்துக் கொண்டு $. 13·20= ரூ. 100 வீதத்தில் தேவையான டாலர்கள் தயாராய் இருக்கவேண்டும். ஆனால், அங்காடியில் டாலர்களை விற்பனை செய்பவர்கள் மிகுதியாக இருந்தால் இம் மிகுதியான அளிப்பு டாலர் = ரூபாய் வீதத்தை $. 13·35= ரூ. 100-க்கும்மேல் கொண்டு சென்றுவிடும். இதனைத் தடுக்கும் பொருட்டுக் கிடைக்கக்கூடிய அனைத்து டாலர்களைப் பண அதிகாரிகள் $. 13·35= ரூ. 100 என்ற வீதத்தில் வாங்கத் தயாராய் இருக்கவேண்டும். இந் நிலைப்படுத்தல் ஏற்றுமதி இறக்குமதி வணிகக் கட்டுப்பாட்டாலும், மாற்றுக் கட்டுப் பாட்டாலும் வலுவடைகிறது.

## மாற்று வீதத்திலுள்ள ஏற்ற, இறக்கம்
## (Fluctuation in the exchange rate)

மாற்று வீதத்திலுள்ள வேறுபாடானது 'ஏற்றம்' (rise) அல்லது 'இறக்கம்' (fall) என்று சாதாரணமாகக் கூறப்படுகிறது. ஆனல், இச் சொற்கள் ஒரு குறிப்பிட்ட செலாவணியின் மாற்று மதிப்பு வேறுபாட்டை முழுவதும் உணர்த்தவில்லை. (எ. கா): டாலர்—ஸ்டெர்லிங் வீதம் ஒரு பவுண்டுக்கு= 2·80 டாலர்களிலிருந்து $2 \cdot 80\frac{1}{2}$ டாலர்களாக உயர்ந்தால் பவுண்டின் மதிப்பு உயர்ந்து டாலரின் மதிப்பு வீழ்ச்சி அடைகிறது என்று பொருள்படும். ரூபாய் - ஸ்டெர்லிங் வீதம் ரூ. 1= 1 ஷில்லிங் 1 பென்னியிலிருந்து, 1 ஷில்லிங் 2 பென்னிகளுக்கு உயர்ந்தாலும், அல்லது ரூபாய்—டாலர் வீதல் ஒரு டாலருக்கு= ரூ. 7-50-லிருந்து, ரூ. 7-25-க்குக் குறைந்தாலும் மாற்று அங்காடியில் ரூபாய் மதிப்பு உயர்வடைகிறது (rises) என்று பொருள்படும்.

செலாவணியின் மதிப்பில் உள்ள இயக்கத்தை மதிப்பேற்றம் (appreciation) அல்லது மதிப்பிறக்கம் (மதிப்பிழப்பு—depreciation) என்று சொல்லலாம். மாற்று அங்காடியில் ஒரு செலாவணியின் மதிப்பு உயரும்போது அச் செலாவணி மதிப்பேற்றம் (appreciation) அடைந்தது அல்லது அச் செலாவணிக்குக் கிராக்கி (dearer) ஏற்பட்டது என்பதாகும். மாற்று அங்காடியில் அச் செலாவணி மதிப்புக் குறையும்போது அச் செலாவணிக்கு மதிப்பிழப்பு (depreciation) ஏற்பட்டது அல்லது மலிவு (cheaper) ஏற்பட்டது என்று பொருள்படும்.

## மதிப்புயர்வு (Premium), தள்ளுபடி (Discount)

இரண்டு செலாவணிகள் ஒரே அக மதிப்புடையனவாக இருக்கும்போது அவற்றின் மாற்று வீதத்தில் இருக்கும் மாற்றத்தை 100 என்ற சம மதிப்பின் அடிப்படையில் உயர்த்தும் போது ஒரு செலாவணி மதிப்புயர்வு உடையது (Premium), மற்றொன்று தள்ளுபடி (Discount) உடையது என்று கொள்ள வேண்டும். (எ.கா): இலண்டன்—மெல்போர்ன் வீதம் £. 100 ஸ்டெர்லிங்கிற்கு £. 102 ஆஸ்திரேலியா பவுண்டுகள் என்று குறிப்பிடப்படும்போது ஆஸ்திரேலியாவில் 2 சதவிகிதம் மதிப்புயர்வு (premium) இருக்கிறது என்பதாகும். ஆனல், அதையே £. 98 ஆஸ்திரேலியா பவுண்டு என்று வீதம் குறிப்பிட்டால் 2 சதவிகிதம் தள்ளுபடி (discount) உடையது என்று

கொள்ளவேண்டும். சில சந்தர்ப்பங்களில் (நேரங்களில்) இச் சொற்கள் செலாவணியின் மாற்று மதிப்பில் உள்ள வேறுபாட்டை விளக்கப் பயன்படுத்தப்படுகின்றன. ரூபாய் மதிப்பு பவுண்டு-ஸ்டெர்லிங்கிலிருந்து வீழ்ச்சி அடையும்போது இலண்டனில் ரூபாயின் மதிப்பு தள்ளுபடியில் இருக்கிறது என்று கொள்ள வேண்டும். பவுண்டு—ஸ்டெர்லிங் இந்தியச் செலாவணியின் அதிக அலகுகளை வாங்குகிறது என்றால் பவுண்டு—ஸ்டெர்லிங்கின் மதிப்புயர்கிறது என்று பொருள்படும்.

உடனடிச் செலாவணியுடன் (Spot currency) முன்னோக்கியச் செலாவணியின் (Forward currency) மதிப்பைக் குறிப்பிடும் போது இச் சொற்கள் பயன்படுத்தப்படுகின்றன. (எ.கா.): மூன்று மாதப் பட்டுவாடாவில் ஃபிராங்குகள்—5 செண்டுகள் தள்ளுபடி என்று குறிப்பிட்டால் உடனடி ஃபிராங்குகளைவிட (Spot Francs) முன்னோக்கிய ஃபிராங்குகள் 5 செண்டுகள் மலிவாகக் கிடைக்கின்றன என்று பொருள். அதாவது உடனடியாக வாங்கும்போது கிடப்பதைக் காட்டிலும் முன்னோக்கிய மூன்று மாதப் பட்டுவாடவில் ஒரு பவுண்டுக்கு அதிகமாக ஃபிராங்குகள் வாங்கலாம் என்று பொருள்படுகிறது. உடனடி வீதமும், முன்னோக்கிய வீதமும் ஒன்றை ஒன்று நெருங்கி வரவர அப் பேரத் தொடர்பான 'மதிப்புயர்வும்', 'தள்ளுபடியும்' அகன்று செல்கின்றன.

# 6. அயல்நாட்டு வணிகத்தில் பயன்படுத்தப்படும் பத்திரங்கள் - ஒப்பந்தங்கள்

(Documents used in Foreign Trade)

## பத்திரங்களின் வகைகள்

உள்நாட்டு வாணிகத்தில் தேவைப்படும் பத்திரங்களைவிடப் பண்டங்கள் இறக்குமதி. ஏற்றுமதி வாணிகத்தில் பலவிதப் பத்திரங்கள் பயன்படுத்தப் படுகின்றன. இதற்குக் காரணங்கள்: 1. இறக்குமதி, ஏற்றுமதி செய்யும் நாடுகளில் இருக்கும் சுங்க இலாகா ஒழுங்கு முறைகள்; 2. விற்பனையாளரின் பொறுப்புகளிலும், வாங்குபவரின் நாணயத்திலும் அதிகச் சந்தேகங்கள்; 3. பலவிதப் போக்குவரத்துச் சாதனங்கள்மூலம் சரக்குகள் செல்ல வேண்டியுள்ளதால் பலவிதப் பத்திரங்களும், காப்பீடுகளும் தேவைப்படுகின்றன.

அயல் நாட்டு வாணிகத்தில் பொதுவாகப் பயன்படுத்தப்படும் பத்திரங்கள் 1. மாற்று உண்டியல்; 2. கப்பல் இரசீது; (Bill of Lading); 3. இன்சூரன்ஸ் பாலிசி; 4. தோற்றுவாய்ச் சான்று (Certificate of origin); 5. வணிக இடாப்பு (Commercial Invoice); 6. கான்சுலர் இடாப்பு முதலியன. ஏற்றுமதிக் கப்பல்கள் இடச் சான்றிதழ், சரக்கைக் குவியாத நிலைச் (non—dumping) சான்றிதழ், உணவுப் பார்வையாளர் சான்றிதழ் (Food inspection certificate), சரக்கு இடாப்பு (Merchandise Invoice), கட்டுமானச் செலவுகள் முதலியன. அயல் நாட்டு வாணிகத்தில் எப்பத்திரங்கள் உண்டியலோடு சேர்ந்திருக்க வேண்டும் என்பது இறக்குமதியாளர், ஏற்றுமதியாளர்களுக்கிடையேயுள்ள ஒப்பந்த வகையைப் பொறுத்திருக்கிறது. இப்

பத்திரங்களை ஆராய்வதற்கு முன்னர் இறக்குமதியாளர், ஏற்றுமதி யாளர்களுக்கிடையேயுள்ள ஒப்பந்த வகைகளைக் காண்போம்.

## ஒப்பந்த வகைகள்
## (Types of contract)

### துறைவரை செலவுட்பட்ட விலை
### (F.A.S. — Free Alongside Ship)

ஏற்றுமதி செய்பவர், ஏற்றுமதித் துறைமுகத்திற்குச் சரக்குகளை எடுத்துச் சென்று, அவற்றைத் துறையில் சேர்ப்பதுவரை ஆகும் அனைத்துச் செலவுகளை உட்கொண்ட, இறக்குமதியாளர் ஏற்று மதியாளர்கள் ஒப்புக்கொண்ட விலையே துறைவரை செலவுட்பட்ட விலை எனப்படும் (F.A.S.). ஆனால், கப்பலில் சரக்கேற்றும் செலவு, கப்பல் சத்தம், கடல் இன்சூரன்சுக் கட்டணம் ஆகியவை இவ் விலையில் அடங்கா. இவ் ஒப்பந்தத்தின்கீழ் சரக்கேற்றும் கப்பலின் பெயர், கப்பல் எந்த இடத்தில் இருக்கிறது, எந்தத் தேதியில் அல்லது தேதிக்குள் சரக்குகளைச் சரக்கேற்றும் துறை முகத்திற்கோ, கப்பலருகிலோ கொண்டுவந்து சேர்க்க வேண்டும் என்று இறக்குமதியாளர் (கொள்முதல் செய்பவர்) ஏற்றுமதி யாளருக்குத் (விற்பனையாளர்) தெரிவிக்க வேண்டும். இறக்கு மதியாளர் குறிப்பிட்டதுபோல் ஏற்றுமதியாளர் சரக்கினைக் கொண்டுவந்து துறைமுகத்தில் சேர்த்தவுடன் அவ் விவரத்தை இறக்குமதியாளருக்கு அறிவிப்பார். கப்பலுக்கருகில், துறை முகத்தில், சரக்கினைக் கொண்டுவந்து சேர்ப்பதுவரையில் சரக்கு களுக்கு ஆகும் செலவுகள், நட்டங்கள் அல்லது சிதைவுகள் எல்லாம் விற்பனையாளரைச் சார்ந்ததே. அதன்பிறகு ஆகும் கப்பலில் சரக்கேற்றும் செலவுகள், கப்பல் சத்தம் அல்லது வாடகை, கடல் இன்சூரன்சுக் கட்டணம், நட்டங்கள், சிதைவுகள் எல்லாவற்றிற்கும் கொள்முதல் செய்வோர் பொறுப்பாவார்.

(1) கொள்முதல் செய்தவர் குறிப்பிட்டவாறு குறிப்பிட்ட தேதி அல்லது காலத்திற்குள் குறிப்பிட்ட துறைமுகத்தில் அல்லது கப்பலுக்கருகில் சரக்குகளைக் கொண்டுவந்து விற்பனையாளர் சேர்ப்பிக்க வேண்டும். (2) விற்பனையாளர் தூய துறைமுக இரசீது அல்லது கப்பல் இரசீது (Clean dock or ship's receipt) பெற்றுக் கொள்முதலாளருக்குக் கொடுக்க வேண்டும். (3) சரக்கு வாங்குப வரின் விருப்பம் செலவுகளின் பேரில், சரக்கு ஏற்றுமதி அல்லது சரக்கு சேருமிடத்தில் இறக்குமதி செய்வதற்குத் தேவையான

அனைத்துப் பத்திரங்களையும் பெற விற்பனையாளர் துணை புரிதல் வேண்டும். (4) துறைமுகத்திலோ, கப்பலுக்கருகிலோ சரக்கினைச் சேர்ப்பிப்பதுவரையில் ஏற்படும் அனைத்து நட்டங்கள், சிதைவுகள், செலவுகள் எல்லாம் விற்பனையாளரைச் சார்ந்ததே.

சரக்கு வாங்குபவர் : (1) சரக்கு வாங்குபவர், துறைமுகத்தின் பெயர், கப்பலின் பெயர், சரக்கு சேர்ப்பிக்கப்படும் நாள், கப்பல் புறப்படும் நாள் இவற்றை விற்பனையாளருக்கு அறிவிக்க வேண்டும். (2) சரக்கு, கப்பலுக்கு அருகில் வந்தவுடன் அனைத்து நடவடிக்கைகளையும் சரக்கு வாங்குபவர் ஏற்றுக்கொள்ள வேண்டும். (3) ஏற்றுமதி வரிகள், மற்ற கட்டணங்களையும் சரக்கு வாங்குபவர் செலுத்த வேண்டும். (4) சரக்கு, கப்பலில் ஏற்றப்படும்போதோ, ஏற்றப்பட்ட பிறகோ ஆகும் அனைத்து நட்டங்கள், சிதைவுகளுக்கும் சரக்கு வாங்குபவரே பொறுப்பாவார். (5) ஏற்றுமதி செய்வதற்கு அல்லது இறக்குமதி செய்யும் இடத்திற்குத் தேவையான, சரக்கினை உற்பத்தி செய்த நாடு தோற்றுவாய்ச் சான்று (Certificate of origin) பிறப்பிக்கும் அல்லது கப்பலில் சரக்கு ஏற்றுமதி செய்யப் படும் இடத்தில் பிறப்பிக்கப்படுகின்ற பத்திரங்கள் அல்லது இரண்டும் சேர்ந்த பத்திரங்கள் பெறுவதற்கு ஆகும் (துறை முகச் சீட்டு அல்லது கப்பல் சீட்டு நீங்கலாக) அனைத்துச் செலவு களையும் வாங்குபவரே ஏற்க வேண்டும்.

## கப்பலில் ஏற்றும் செலவுட்பட்ட விலை
## (F.O.B.—Free on Board)

இவ் விலையில் சரக்குகளைக் கப்பலில் சேர்ப்பிப்பது உட் கொண்ட அனைத்துச் செலவுகளும் அடங்கும். சரக்கு வாங்கு பவர் குறிப்பிட்ட கப்பலில் சரக்கு ஏற்றப்பட்டவுடன் சரக்கு விற்றவர் பொறுப்பு தீர்ந்துவிடும். கப்பலில் ஏற்றும் செலவுட் பட்ட விலை ஒப்பந்தத்தில், சரக்கு வாங்குபவர் குறிப்பிட்ட துறைமுகத்திலுள்ள கப்பலில் சரக்கைச் சேர்ப்பதுவரை உண்டாகும் அனைத்துச் செலவுகளையும் அடங்கிய விலையை விற்பனையாளர் குறிப்பிடுவார். ஆகவே, ஒப்பந்தத்தில் கண்டுள்ள படியும், வாங்குபவர் குறிப்பிட்டுள்ள துறைமுகத்திலுள்ள கப்பலில், குறிப்பிட்ட நாளிலோ, காலத்திற்குள்ளோ ஏற்றுக்கொண்ட தரத்திலும், அளவிலும் கட்டுதல் செய்து ஏற்றுமதிக்காகக் குறிக்கப்பட்ட சரக்குகள் சேர்க்கப்பட்டு அது வரையில் ஆகும் செலவுகள் அனைத்தையும் வாங்குபவர் ஏற்பார்,

கப்பலில் சரக்கு ஏற்றியதற்காகப் பெறப்பட்ட கப்பல் இரசீது (Bill of Lading) சரக்கு, கப்பலில் சேர்ப்பிக்கப்பட்டதற்குரிய சான்ருகும்.

சரக்கு, கப்பலில் ஏற்றியதற்காகப் பெறப்பட்ட கப்பல் இரசீது (Bill of Lading) கப்பலில் ஏற்றும் செலவுட்பட்ட விலை ஒப்பந்தத்தின் தேவைகளை நிறைவு செய்யா. குறிப்பிட்ட நாளிலோ, காலத்திற்குள்ளோ சரக்கினைக் கப்பலில் சேர்ப்பிப்பது வரையில் அடங்கும் செலவுகள், நட்டங்கள், சிதைவுகள் ஆகிய அனைத்திற்கும் விற்பனையாளரே பொறுப் பாவார். சரக்கு வாங்குபவரின் வேண்டுகோளுக்கு இணங்கி அன்னரின் செலவிலேயே சரக்கு உற்பத்தி செய்த நாடோ கபபலில் சரக்கு ஏற்றுமதி செய்த நாட்டிலிருந்தோ, இரண்டிலுமிருந்தோ சரக்கு ஏற்றுமதி செய்வதற்கும், கப்பல் போய்ச் சேருமிடத்தில் இறக்குமதி செய்வதற்கும் தேவையான பத்திரங்களைச் சரக்கு வாங்குபவர் பெறுவதற்கு விற்பனையாளர் துணைபுரிய வேண்டும்.

அதுபோன்றே சரக்கு வாங்குபவர் (1) சரக்கு ஏற்றுமதித் துறைமுகத்தின் பெயர், கப்பலின் பெயர், கப்பலில் சரக்கு ஏற்றும் தளத்தின் இடம், கப்பலில் சரக்கு சேர்ப்பிக்க வேண்டிய நேரம், கப்பல் புறப்படும் நாள் ஆகியவற்றை விற்பனையாளருக்குத் தகுந்த காலத்திற்குள் அறிவிக்க வேண்டும். (2) சரக்கை விற்பனையாளர், வாங்குபவரிடம் சேர்த்த பிறகு, குறிப் பிட்ட காலத்திற்குள் கப்பல் துறைமுகத்திற்கு வரத் தவறி ஞலோ, ஏற்றிக்கொள்ளத் தவறிஞலோ அதனல் உண்டாகும் கூடுதல் செலவுகளையும், இடர்ப்பாடுகளையும் சரக்கு வாங்குபவர் ஏற்றுக்கொள்ள வேண்டும். (3) கப்பலில் சரக்கு ஏற்றிய பிறகு கப்பலிலிருந்து சரக்கினை இறக்குமதி செய்யும்வரை ஆகும் செலவுகளான இன்சூரன்சு, கப்பல் சத்தம் முதலானவற்றை ஏற்றுக்கொள்ள வேண்டும். (4) ஏற்றுமதி வரிகள், மற்ற கட்ட ணங்கள் ஆகியவற்றைக் கொடுக்க வேண்டும்; (5) கப்பலில் சரக்கு ஏற்றிய பிறகு ஏற்படும் சரக்கு நட்டங்கள், சிதைவுகளுக்கு, வாங்குபவரே பொறுப்பாவார். (6) கப்பல் இரசீது பெறுவது தவிர்த்து ஏற்றுமதி இறக்குமதி செய்வதற்குரிய அனைத்துப் பத்திரங்களையும் பெறுவதற்கான அனைத்துச் செலவுகளும் வாங்கு பவரையே சாரும். விற்பனையாளரே கப்பல் சத்தத்தைக் கொடுத்துக் கடல் இன்சூரன்சு எடுத்து அந்தச் செலவுகளைக் 'கப்பலில் ஏற்றும் செலவுட்பட்ட விலை' ஒப்பந்தத்தில் சேர்த் திருந்தால் கப்பல் இரசீதில் குறிப்பிடப்பட்டு, வணிக இடாப்பில்

(Commercial Invoice) இடம் பெறுமலிருந்தால் சரக்கு வாங்குபவர் கப்பல் சத்தத்தை நேராகக் கப்பலுக்குரியவரிடம் கொடுத்து விடுகிறுர். சரக்கு, கப்பலில் ஏற்றப்பட்ட பிறகு ஆகும் செலவுகளும், இடர்ப்பாடுகளும் வாங்குபவரையே சாரும். கப்பல் கம்பெனி சரக்கு வாங்கியவரின் பதிலாளாகச் செயல்படும்.

கப்பலில் ஏற்றும் செலவுட்பட்ட விலை ஒப்பந்தத்தில் கப்பல் கம்பெனி சரக்கு வாங்குபவரின் பதிலாளாகச் சட்டப்படிக் கருதப்படுவதால், கப்பல் கம்பெனியிடம் சரக்கை விற்பனையாளர் சேர்ப்பித்தவுடன் சரக்கின்மீதான தனது பற்றுரிமையையும் (Right of lieu), சரக்கு சேரவேண்டிய இடத்திற்குப் போய்ச் சேருவதற்குமுன் நிறுத்தி வைக்கக்கூடிய (stoppage-in-transit) உரிமையையும் இழக்கிறுர். சரக்கு, கையைவிட்டு அகன்றபிறகு பற்றுரிமை கொண்டாட முடியாது. வாங்குபவரின் பதிலாளான கப்பல் கம்பெனியிடம் சரக்கினைச் சேர்ப்பித்தபிறகு போய்ச் சேருவதற்குள் நிறுத்திவைக்கக் கூடிய உரிமையையும் இழக்கிறுர். சரக்கு விற்பவர் கப்பல் சத்தத்தைச் செலுத்தியிருந்தால்கூட அவர் வாங்குபவரின் பதிலாளைப் போன்றுதான் செயல்படுவதால் அவர் நிலைமை ஒன்றும் கப்பல் சத்தம் செலுத்துவதால் மாறுபடுவதில்லை.

## விலை, இன்சூரன்சு, சத்தம்—ஒப்பந்தம் (C. I. F.—Cost, Insurance and Freight)

இவ்வொப்பந்தத்தில் விற்பனையாளர் குறிப்பிடும் விலையில் சரக்கின் விலை, இன்சூரன்சுக் கட்டணம், கப்பல் சத்தம் ஆகியவை அடங்கும். இந்த விலை, இன்சூரன்சு, சத்தம்—ஒப்பந்தம் பெருவாரியாக அயல் நாட்டு வணிகத்தில், சரக்கு விற்பனை செய்யும் போது பயன்படுத்தப்படுகிறது. கீழ்க்கண்ட செலவுகளுக்கு விற்பனையாளர் பொறுப்பாவார்.

(1) விற்பனையாளர் நாட்டில் சரக்கின் உண்மை விலை; (2) சரக்கு வாங்குபவரின் செலவு, வேண்டுகோளின் பேரில் சரக்கு இறக்குமதி, ஏற்றுமதி செய்வதற்குத் தேவையான கன்சுலர் இடாப்புகள், தோற்றுவாய்ச் சான்று (Certifica[illegible] of origin) முதலிய மற்ற பத்திரங்களையும் பெறுவதற்குத் துணைப் புரிதல் வேண்டும்; (3) ஏற்றுமதி செய்வதற்காக உரிய ஏற்றுமதி வரிகள், மற்ற கட்டணங்களைச் செலுத்த வேண்டும்; (4) குறிப்பிட்ட துறைமுகத்தில், குறிப்பிட்ட வழியாகப் பயணம் செய்யும் கப்பலில், ஒப்பந்தத்தில் க[illegible]டுள்ளபடிச் சரக்கினை ஒரே முறையில்

கொண்டு வந்து ஏற்றிவிட வேண்டும்; (5) சரக்கு, குறிப்பிட்ட இடத்தில் போய்ச் சேருவதற்குரிய கப்பல் சத்தத்தைச் செலுத்த வேண்டும் ; (6) ஒப்பந்தத்தில் குறிப்பிட்டுள்ள இடர்ப்பாடுகளைக் காட்டி இன்சூரன்சுக் கட்டணம் செலுத்தி, இன்சூரன்சு பாலிசி வாங்குதல் வேண்டும்; (7) இவ்வொப்பந்தத்தில் குறிப்பிட்டுள்ள வாறு சரக்கு விற்பனைக்குரிய இடாப்பினைத் (Invoice) தயாரித்தல் வேண்டும் ; (8) மாறுக எவ்வித உடன்படிக்கையும் இல்லா திருப்பின் எவ்விதத் தாமதமுமின்றிக் 'கப்பல் சத்தம் செலுத்தப் பட்டது' என்று குறிப்பிடப்பட்ட கப்பல் இரசீது (Bill of Lading), இன்சூரன்சு பாலிசி, இடாப்பு, ஒப்பந்தத்தில் குறிப்பிட்டுள்ள மற்ற பத்திரங்களையும் சரக்கு வாங்குபவரிடம் சேர்ப்பித்தல் வேண்டும் ; (9) சரக்கு ஏற்றுவதற்கான கப்பலில் சரக்கினைக் கொண்டுபோய்ச் சேர்க்கும்வரை, கப்பல் இரசீதைப் பெறும்வரை சரக்கிற்கு ஏற்படும் நட்டம், சிதைவு இரண்டிற்கும் விற்பனையாளரே பொறுப்பாவார்.

சரக்கு விற்பனையில் இந்தவிலை, இன்சூரன்சு, சத்தம் உட்பட்ட ஒப்பந்தம் நிறைவுபெற, சரக்குரிமைப் பத்திரங்களைச் சேர்ப்பித்து, அவ்வொப்பந்தத்தில் கண்டுள்ளபடி 'விலைப் பணத்தைக்' கேட்டல் வேண்டும். சரக்குரிமைப் பத்திரத்தைப் பெற்றுக்கொண்டு சரக்கு வாங்குபவர் பணம் செலுத்த வேண்டும் அல்லது பணம் செலுத்த ஏற்பாடு செய்ய வேண்டும்.

இவ்வொப்பந்தத்தில் சரக்கு வாங்குபவர் (1) பத்திரங்கள் அளிக்கப்படும்போது ஏற்றுக்கொள்ள வேண்டும். (2) சரக்கு, கப்பலுக்கு வந்து சேர்ந்தவுடன் பெற்றுக்கொண்டு அதன் பிறகு சரக்கிற்கு ஆகும் அனைத்துச் செலவுகளான கப்பல் இரசீதில் கண்டுள்ள எடுப்புச் செலவு, இறக்குமதி வரிகள், இறக்கும் செலவுகள் முதலிய அனைத்து வரிகள், கட்டணங்கள் செலுத்த வேண்டும். (3) விற்பனையாளரால் ஏற்பாடு செய்யப்பட்ட கப்பல் சத்தம். இன்சூரன்சுக் கட்டணத்தைச் செலுத்தவேண்டும். (4) விற்பனையாளரின் பொறுப்பு தீர்ந்தபிறகு உண்டாகும் அனைத்து நட்டம், சிதைவுகள் அனைத்திற்கும் சரக்கு வாங்கு பவரே பொறுப்பாளி ஆவார். (5) ஏற்றுமதி, இறக்குமதி செய்வ தற்குத் (பிற நாட்டு வழியாகக் கப்பல் செல்ல நேர்ந்தால் அதற்கும்) தேவையான தோற்றுவாய்ச் சான்று, கன்சுலர் இடாப்பு முதலிய அனைத்துப் பத்திரங்கள் பெறுவதற்கு ஆகும் செலவுகளைச் சரக்கு வாங்குபவர் ஏற்றுக்கொள்ள வேண்டும்.

சரக்கு வந்து சேர்ந்தாலும் சேராவிட்டாலும் பத்திரங்கள் சேர்ந்த உண்டியல் அளிக்கப்பட்டவுடன் சரக்கு வாங்கியவர்

பணத்தைச் செலுத்த வேண்டும். நட்டம் ஏதும் ஏற்பட்டால் இன்சூரன்சுக் கம்பெனிதான் ஈடு செய்யும்.

இவ்வொப்பந்தத்தால் விற்பனையாளர் சரக்கின்மேல் சில கட்டுப்பாடுகளைத் தம் வசம் வைத்துள்ளார். சரக்கு வாங்கியவர் பணத்தைக் கொடுக்க மறுத்தாலோ, திவாலாகி விட்டாலோ பணம் கொடுக்கமுடியாமல் போனாலோ சரக்கினைப் பெற்றுள்ள கப்பல் உரிமையாளரிடம் சொல்லிச் சரக்கினை வாங்கியவரிடம் சரக்கினைச் சேர்ப்பிக்கக் கூடாது என்று நிறுத்தி விடுவார். பணம் கொடுக்க மறுத்தால் பத்திரங்கள் சேர்ந்த உண்டியலை விற்பனையாளர் தம் வசம் இருத்திக் கொள்கிறார். வாங்கியவர் திவாலாகி விட்டால் வழியிலேயே சரக்கினை நிறுத்தும் உரிமை பெறுகிறார். இவ்வுரிமைகளினால் கப்பல் கம்பெனி சரக்கினை வாங்குபவரிடம் ஒப்படைக்காமல் இருக்க விற்பனையாளர் அக் கம்பெனிகளுக்கு ஆணை பிறப்பிக்கிறார். ஆனால், இவ்வுரிமைகள் கப்பலில் ஏற்றும் செலவுட்பட்டவிலை ஒப்பந்தத்தில் (F.O.B.) மறுக்கப்படுகின்றன.

இன்சூரன்சு, சத்தம், செலாவணி மாற்று நட்டம் உட்பட்ட விலை ஒப்பந்தம் (Cost, Insurance, Freight and Exchange—C.I.F.E) இன்சூரன்சு, சத்தம், கழிவு உட்பட்ட விலை ஒப்பந்தம் (Cost, Insurance, Freight, Commission—C.I.F.C.) இன்சூரன்சு, சத்தம், கழிவு, வட்டி உட்பட்ட விலை ஒப்பந்தம் (Cost Insurance, Freight, Commission and Interest C. I. F. C. I.) இந்த இன்சூரன்சு சத்தம் உட்பட்ட விலை ஒப்பந்தத்தில் ஒப்பந்ததாரர்களின் செலாவணி மாற்று நட்டம், கழிவு, வட்டி முதலியனவும் சேர்த்துக் கொள்ளப் படுகின்றன. ஆனால், இவை தெளிவாக ஒப்பந்தத்தில் குறிக்கப் பட்டிருக்க வேண்டும்.

## சத்தம் உள்ளடங்கிய விலை
## (Cost & Freight—C.F.)

இங்ஙனம் கூறப்படும் விலையில் சரக்கின் விலையும் சத்தமும் அடங்கும். சரக்கு வாங்குபவர் இன்சூரன்சு செய்ய விரும்பினால் தம்முடைய சொந்தச் செலவில்தான் அதற்கேற்ற ஏற்பாடு செய்து கொள்ளவேண்டும். இவ்வொப்பந்தத்தில் சரக்கு வாங்குபவரே இன்சூரன்சு செய்து கொள்ளவேண்டும். என்றும், சரக்கு விற்பவர் சரக்கினைக் கப்பலில் ஏற்றுவதற்கு உரிய அனைத்துச் செலவுகளையும், கப்பல் சத்தத்தையும் செலுத்த வேண்டும் என்றும் குறிப்பிடப்பட்டிருக்கும். ஆகவே, விற்பனையாளர் கப்பலில் சரக்கினை ஏற்றிக் கப்பல் சத்தம் செலுத்தி, சரக்கு

போய்ச் சேரவேண்டிய இடத்தில் சேருவதற்குத் தேவையான அனைத்துப் பத்திரங்களையும் கப்பல் இரசீதையும் பெறுதல் வேண்டும். சரக்கு விற்பனையாளர் (1) சரக்கு போய்ச் சேருவதற்குரிய சத்தத்தைச் செலுத்த வேண்டும். (2) ஏற்றுமதி வரிகளையும் மற்ற கட்டணங்களையும் கட்ட வேண்டும். (3) சரக்கு போய்ச் சேரவேண்டிய இடத்திலுள்ள சரக்கு வாங்குபவருக்கு அல்லது அவரின் பதிலாளுக்குக் 'கப்பல் இரசீதை' அனுப்பிவிட வேண்டும். (4) கப்பல் உரிமையாளரிடம் சரக்கினைக் கொண்டு போய்ச்சேர்ப்பதுவரையில் ஆகும் அனைத்துச் செலவுகள், நட்டங்கள், சிதைவுகள் ஆகியவற்றுக்குச் சரக்கு விற்பனையாளரே பொறுப்பாவார். (5) சரக்கு இறக்குமதி செய்வதற்குத் சரக்கு பிற நாட்டின் வழியாகப் பயணம் செய்ய நேர்ந்தால்-அதற்கும்) தேவையான தோற்றுவாய்ச் சான்று, கன்சுலர் இடாப்பு முதலிய அனைத்துப் பத்திரங்களையும் பெற சரக்கு வாங்குபவர் வேண்டுகோளின்படி ஏற்பாடு செய்ய வேண்டும்.

சரக்கு வாங்குபவர் (1) பத்திரங்கள் வந்தவுடன் ஏற்றுக் கொள்ள வேண்டும். (2) சரக்கு வந்து சேர்ந்தவுடன் அதனைப் பெற்றுக் கொண்டு அதற்குமேல் இறக்குமதி செய்வதற்குத் தேவையான (கப்பல் இரசீதில் கண்டவாறு) இறக்குமதிச் செலவுகள், இறக்குமதி வரிகள், கட்டணங்கள் அனைத்தையும் செலுத்த வேண்டும். (3) இன்சூரன்சுக் கட்டணம் செலுத்த வேண்டும். (4) சரக்கு விற்பனையாளர் பொறுப்பு தீர்ந்த பிறகு ஆகும் நட்டம், பொருட் சிதைவு ஆகியவற்றிற்குச் சரக்கு வாங்குபவரே பொறுப்பாவார். (5) சரக்கு ஏற்றுமதி, இறக்குமதி செய்வதற்குத் தேவையான தோற்றுவாய்ச் சான்று, கன்சுலர் இடாப்பு முதலிய அனைத்துப் பத்திரங்களைப் பெறுவதற்கு ஆகும் செலவுகள் அனைத்தையும் ஏற்றல் வேண்டும்.

## முழுச் செலவடங்கிய விலை
## (Franco or Rendu or Free Price)

இங்ஙனம் கூறப்படும் விலை, சரக்கு வாங்குபவரின் பண்டகச் சாலைக்குச் சரக்கு வந்து சேரும்வரை ஆகும் அனைத்துச் செலவுகளையும் உட்கொண்டது.

## தயாரிப்பிட விலை

சரக்கு விற்பவர் தாம் தயாரித்த இடத்திலோ, குறிப்பிட்ட ஓர் இடத்திலோ சரக்குகளை விற்கும் விலை 'தயாரிப்பிட

விலை' என அறியப்படுகிறது. அங்கிருந்து சரக்கை எடுப்பதிலிருந்து ஆகும் அனைத்துச் செலவுகளையும் வாங்குபவரே ஏற்க வேண்டும்.

## கப்பலிலிருந்து சரக்கினை இறக்கும்வரை ஆகும் செலவிடப்பட்ட விலை
### (Ex—ship)

சரக்குகள் இறக்குமதி செய்யப்படும் துறைமுகத்தை அடையும்வரை ஆகும் செலவுகளை விற்பனையாளர் ஏற்றுக் கொள்கிறார். இறக்குமதியாளர் கப்பலிலிருந்து சரக்கினைப் பெற்றுக்கொள்ள, உரிய கட்டணங்களைச் செலுத்த வேண்டும்.

## மாற்று உண்டியல்கள்
### (Bills of Exchange)

மாற்று உண்டியல் ஒரு செலாவணிப் பத்திரமாகும். கடனீந்தோர் கடனாளிமீது எழுதும் ஒரு வகைப் பத்திரமே உண்டியல் எனப்படும். இந்தியச் செலாவணிச் சட்டம், 1881, பிரிவு 5. உண்டியல் என்ற சொல்லுக்குப் பின் வருமாறு இலக்கணம் தருகிறது. 'அப் பத்திரத்தைக் கொணர்பவருக்கோ, அதில் குறிப்பிட்ட ஒருவருக்கோ, அவரது ஆணைக்கோ குறிப்பிட்ட ஒரு தொகையைச் செலுத்துமாறு குறிப்பிட்ட ஒருவருக்கு ஆணையிடும், எழுத்தாலாகிய, விடுப்பவரால் கையொப்பமிடப்பட்ட நிபந்தனையற்ற ஆணைப்பத்திரமே உண்டியல் எனப்படும்.'

## உண்டியலின் சிறப்புக் கூறுகள்

1. உண்டியல் எழுத்தால் எழுதப்பட்ட ஒரு பத்திரமாகும்.

2. இதில் நிபந்தனை அற்ற ஆணை (Unconditional order) ஒன்று அடங்கியிருக்கும்.

3. உண்டியலை எழுதுபவர் (விடுப்பவர்) அதில் கையொப்பமிடவேண்டும்.

4. கேட்டவுடன் அல்லது குறித்த ஒரு காலத்துக்குப் பின் பணம் செலுத்தப்பட வேண்டும் என்று குறிப்பிட்டிருக்க வேண்டும்,

5. செலுத்த வேண்டிய தொகையின் அளவு எண்ணாலும் எழுத்தாலும் குறிப்பிடப்பட்டிருக்க வேண்டும்.

6. பணம் எவருக்குச் செலுத்தப்பட வேண்டுமென்பதைக் குறிப்பிடல் வேண்டும்.

7. உண்டியல்மீது அதில் குறிப்பிட்ட தொகைக்கேற்றவாறு வரிப் பில்லை ஒட்டவேண்டும்.

8. உண்டியலில் மூன்று நபர்கள் உள்ளனர்,

i. உண்டியல் எழுதுபவர் (Drawer)
ii. உண்டியல் எழுதப் பெறுபவர் (Drawee)
iii. உண்டியலுக்குரிய பணத்தைப் பெறுபவர் (Payer)

## உண்டியலின் வகைகள்

### உள்நாட்டு உண்டியல்
(Inland Bill)

இந்தியாவிலுள்ள ஒருவர் இதே நாட்டிலுள்ள மற்றொருவர் மீது எழுதும் உண்டியல் உள்நாட்டு உண்டியல் எனப்படும். எழுதப்பட்ட இடமும், செலுத்தபட வேண்டிய இடமும் இந்தியாவில் இருக்கவேண்டும்.

உள்நாட்டு உண்டியல் (எ.கா):

---

ரூ. 2,000/-

விருத்தாசலம்,
21-11-1972.

இன்றிலிருந்து அறுபது நாட்கள் கழித்து ரூ. 2,000, (இரண்டாயிரம் ரூபாய்) அறவாழிக்கு அல்லது ஆணைக்குச் செலுத்துக. மதிப்பு பெறப்பட்டது.

பெறுகை :

தி. நடராசன்,
19, தெற்குத் தெரு,
சிதம்பரம்.

பொ. தங்கவேல்

---

### அயல் நாட்டு உண்டியல்
(**Foreign Bill**)

ஒரு நாட்டிலுள்ளவர் மற்றொரு நாட்டிலுள்ளவர் மீது எழுதும் உண்டியலே அயல் நாட்டு உண்டியலாகும். அயல் நாட்டு உண்டியல் மூன்று படிகளாக (three copies) எழுதப் படுவது வழக்கம். ஒன்று காணமற் போனாலும் மற்ற இரண்டில் ஒன்றைப் பயன்படுத்திய மாத்திரத்தில் மற்ற இரண்டும் பயனற்று வெற்றுத்தாள்களாகின்றன.

அயல் நாட்டு உண்டியல் (எ.கா):

---

○ முத்திரை முதல் படி விருத்தாசலம்,
$. 2,000/- 21-11-1972.

உண்டியலின் முதல் படியாகிய இதைக் (இதே தேதியும் உள் நோக்கமும் கொண்ட இதன் இரண்டாம், மூன்றும் படிகள் செலுத்தப்படாதிருப்பின்) கண்ட மூன்று மாதங்கள் கழித்து, அறவாழிக்கு அல்லது ஆணைக்கு இரண்டாயிரம் டாலர்கள் செலுத்தி, கூறியதுபோல் கணக்கில் வைக்கவும். மதிப்பு பெறப்பட்டது.

பெறுகை:

டி. நிக்சன், பொ. தங்கவேல்
21, கென்னடி தெரு,
வாஷிங்டன்-37.

---

$. 2,000/- இரண்டாம் படி விருத்தாசலம்,
21-11-1972.

உண்டியலின் இரண்டாம் படியாகிய இதைக் (இதே தேதியும் உள்நோக்கமும் கொண்ட இதன் முதல் படியும் மூன்றும் படியும் செலுத்தப்படாதிருப்பின்) கண்ட மூன்று திங்கள் கழித்து அறவாழிக்கு அல்லது ஆணைக்கு இரண்டாயிரம் டாலர்கள் செலுத்தி, கூறியதுபோல் கணக்கில் வைக்கவும். மதிப்பு பெறப் பட்டது.

பெறுகை:

டி. நிக்சன், பொ. தங்கவேல்
21, கென்னடி தெரு,
வாஷிங்டன்-37.

---

$. 2,000/- மூன்றும் படி விருத்தாசலம்,
21-11-1972.

உண்டியலின் மூன்றும் படியாகிய இதைக் (இதே தேதியும் உள் நோக்கமும் கொண்ட இதன் முதல் படியும் இரண்டாம்படியும் செலுத்தப்படாதிருப்பின்) கண்ட மூன்று திங்கள் கழித்து அறவாழிக்கு அல்லது ஆணைக்கு இரண்டாயிரம் டாலர்கள் செலுத்தி, கூறியதுபோல் கணக்கில் வைக்கவும். மதிப்பு பெறப் பட்டது.

பெறுகை:

டி. நிக்சன், பொ. தங்கவேல்
21, கென்னடி தெரு,
வாஷிங்டன்-37.

---

## உண்டியல் தவணை

பார்த்தவுடன் அல்லது கேட்டவுடன் (At sight or on demand) என்று எழுதப்பட்ட உண்டியலைப் பார்த்தவுடன் அல்லது அதன் மீதான தொகை கேட்கப்பட்டவுடன் பணம் செலுத்தப்பட வேண்டும். இதனை ஏற்க வேண்டியதில்லை. இதற்குச் சலுகை நாட்கள் (days of grace) இல்லை. இவ்வுண்டியல் செக்கிற்கு ஒப்பாகும்.

## தவணை உண்டியல்
## (Time Bill)

தவணை உண்டியல் என்பது குறிப்பிட்ட தவணைக்குப்பின் செலுத்த வேண்டிய உண்டியலாகும். தவணைக் காலத்தை உண்டியலில் தெளிவாகக் குறிப்பர். குறித்த தேதிக்குப்பின் (after date), பார்த்த தேதியிலிருந்து (after sight) என்று பலவகை மாதத் தவணைக் காலத்தைக் கணக்கிடுவதுண்டு. வணிக வழக்கத்தையொட்டித் தவணைக்காலம் இருக்கும் உண்டியலை, வழக்கத்தவணை உண்டியல்களைச் செலுத்த அவற்றில் குறிப்பிட்ட காலத்துடன் மூன்று சலுகை நாட்கள் தரப்படும்.

தாம் பணம்பெற வேண்டிய ஓர் உண்டியலை ஒருவர் மற்றொருவருக்கு மாற்றித்தர அதன் மேலெழுதித்தர (endorse) வேண்டும். அதாவது உண்டியலின் பின்புறத்தில் எவருக்கு அதை உரிமையாக்க விரும்புகிறாரோ அவர் பெயரை எழுதித் தம் கையொப்பமிடவேண்டும். மேலெழுதியபின் அதை மேலெழுத்துப் பெறுபவரிடம் (endorsee) சேர்க்கவேண்டும். இதனால் பின் கூறப்பெற்றவர் உண்டியலின் உரிமையாளராகிறார். உண்டியல் மறுக்கப்பட்டால் தமக்கு மேலெழுதித் தந்தவரைப் பணம் செலுத்துமாறு கேட்பார்.

## ஏற்பு
## (Acceptance)

கண்டதும் அல்லது கேட்டதும் பணம் செலுத்துமாறு ஆணை கொண்ட உண்டியல்கள் தவிர மற்றெல்லா உண்டியல்களும் ஏற்கப்படவேண்டும். எழுதப் பெற்றவர் (Drawee) எழுதுபவரின் ஆணையை ஒப்புவதே ஏற்பு ஆகும். எழுதப் பெற்றவர் உண்டியலை ஏற்பதன்மூலம் அதன்மீதுள்ள பொறுப்பை (குறித்த காலத்தில்

பணம் செலுத்தும் பொறுப்பை) ஏற்றுக் கொள்கிறார் என்று பொருள் கொள்ளவேண்டும். எவ்விதமான நிபந்தனையுமின்றி உண்டியலை ஏற்பதைப் பொது ஏற்பு (General acceptance) என்பர். உண்டியலில் குறித்துள்ள விவரங்கள் ஏதேனுமொன்றை நிபந்தனையுடன் ஏற்றால் அதனை நிபந்தனை ஏற்பு (Qualified acceptance or conditional acceptance) என்றழைப்பர். சட்டப்படி 'நிபந்தனை ஏற்பு,' ஏற்பாகாது. உண்டியல் ஒரு நிபந்தனையற்ற ஆணையாகும்.

## உண்டியல் மறுப்பு
## (Dishonour of Bill)

குறித்த நாளில் பணம் செலுத்தத் தவறிவிட்டால் உண்டியல் மறுக்கப்பட்டது என்று கூறுகிறோம். சில சமயங்களில் எழுதப் பெற்றவர் (Drawee) உண்டியலை ஏற்கவும் மறுக்கலாம். அப்போது உண்டியல் ஏற்கப்படாமையால் மறுக்கப்பட்டது என்று கூறுவர். உண்டியல் நிபந்தனையுடன் ஏற்கப்பட்டாலும்கூட அது மறுக்கப் பட்டதாகக் கொள்ளலாம்.

உண்டியல் மறுப்பை அதிகாரமுறையில் குறிப்பதற்குச் 'சான்றுறுதி அதிகாரி' (Notary Public) மூலம் உண்டியலை ஏற்ற வரிடம் காட்டிப் பணம் செலுத்துமாறு கோரவேண்டும். அப்பொழுதும் ஏற்றவர் பணம் செலுத்த மறுப்பின், அம் மறுப்பை அவ்வதிகாரி உண்டியல்மீது குறிப்பார். இதனை மறுப்புக் குறிப்பு (noting) என்பர். குறிப்பாளர், மறுத்தல் பற்றிய செய்தியை விவரமாக எழுதி ஒரு சான்றிதழ் வழங்குவதுண்டு. இதை மறுப்புச் சான்று (Protest) என்பர்.

**உண்டியல் ஒன்று அயல் நாட்டிலுள்ள ஒருவரின்மீது எழுதப் பட்டால் கீழ்க்காணும் பதங்களில் ஒன்று அதில் சேர்க்கப்படுகிறது:**

1. செலுத்தப்படும் நாளில் இலண்டனில் பார்த்தவுடன் செலுத்தப்படும் பண விடைக்கு வசூலிக்கும் பாங்கின் விற்பனை வீதம்,

2. முழு முகமதிப்புடன் இலண்டனில் அனுமதிக்கப்பட்ட பாங்கின் செக்குகளில் செலுத்தப்படும்,

3. பண விடைமீதான தொகையைக் கேட்டவுடன் செலுத்தும் பாங்கு வீதத்தில் பணம் செலுத்தப்படும்.

4. இலண்டனில் தந்தி மாற்றுகள் விற்பனை வீதத்தில் செலுத்தப்படும்.

## வெற்று, பத்திரங்கள் சேர்ந்த உண்டியல்
## (Clean, Documentary Bill of Exchange)

உண்டியல், பத்திரங்கள் சேர்ந்த உண்டியலாகவும், வெற்று உண்டியலாகவும் இருக்கலாம். அயல் நாட்டு வணிகத்தில் சரக்கு விற்பவர், வாங்குபவர்மீது உண்டியல் ஒன்று எழுதி அவ்வுண்டியலுடன் கப்பல் இரசீது (Bill of Lading), இன்சூரன்சு பாலிசி, இடாப்பு (Invoice) முதலிய கப்பல், சரக்குரிமைப் பத்திரங்களை இணைத்து அனுப்பிவைப்பர். ஒப்பந்தப்படி அவ்வுண்டியலை ஏற்ற உடனே அதற்கான பணத்தைச் செலுத்தியவுடனே இப் பத்திரங்கள் இறக்குமதியாளருக்குக் கொடுக்கப்படும். இம்மாதிரிப் பத்திரங்கள் இணைக்கப்பட்ட உண்டியலைப் பத்திரங்கள் சேர்ந்த உண்டியல் (Documentary Bill) என்றும், கப்பல் பத்திரங்கள் எவையும் இணைக்கப்படாத உண்டியலை வெற்று உண்டியல் (Clean Bill) என்றும் அழைப்பர். பாங்கின் நலனை உற்று நோக்கும்போது வெற்று அல்லது பத்திரங்கள் சேர்ந்த உண்டியல் மேலும் சில சிறப்புக் கூறுகளைக் கொண்டுள்ளன. பத்திரங்கள் சேர்ந்த உண்டியலில் இணைக்கப்பட்டுள்ள சரக்குரிமைப் பத்திரங்கள் உண்டியலில் எழுதப்பட்ட சரக்குகளைக் குறிக்கின்றன. அச் சரக்குகளே உண்டியலுக்குத் துணைப் பிணையமாக இருக்கின்றன. பத்திரங்கள் சேர்ந்த உண்டியல், நாணயத்தைப் (கடனை நோக்கமாகக் கொண்டால், உண்டியல் உடையவர்) பெற்றிருப்பவர், தடையற்ற முழுமையான சரக்குரிமை அளிக்கக்கூடிய செலாவணி வடிவில் கப்பல் இரசீது முதலான பத்திரங்களைப் பெற்றிருத்தல் வேண்டும். பத்திரங்கள் சேர்ந்த உண்டியல் உடையவருக்குக் கப்பல் இரசீதுபோன்ற பத்திரங்கள் தடையற்ற முழுமையான சரக்குரிமை அளிக்காவிடில் சரக்கிற்குப் பிணையமாக அப் பத்திரங்கள் கருதப்படும்போது அவ்வுண்டியல் வெற்று உண்டியல் என்றே கருதப்படுகிறது.

பெரும்பாலான அயல் நாட்டு வாணிப நடவடிக்கைகளில் பத்திரங்கள் சேர்ந்த உண்டியலுடன் கப்பல் இரசீது, கடல் இன்சூரன்சு பாலிசி, வணிக இடாப்பு, கன்சுலர் இடாப்பு, தோற்றுவாய்ச் சான்று முதலான சரக்குரிமைப் பத்திரங்கள் இணைக்கப்பட்டிருக்கின்றன. இப் பத்திரங்களை, உண்டியல் ஏற்றவுடனே, உண்டியலுக்குரிய பணத்தைச் செலுத்தியவுடனே சேர்ப்பித்தல் வேண்டும்.

## ஏற்புவழிப் பத்திரமுறை உண்டியல் அல்லது செலுத்துவழிப் பத்திரமுறை உண்டியல்கள்

## (Documents against Acceptance Bills-D/A-Bills; Documents against Payment Bills-D/P Bills)

எழுதப் பெறுவோன் உண்டியல் ஏற்றவுடன் சரக்குரிமைப் பத்திரங்களைச் சேர்ப்பிக்கும் முறையே ஏற்புவழிப் பத்திரமுறை உண்டியல் (D/A Bills) எனப்படும். சரக்கு வாங்குபவரின் நாணயமும், நிதி நிலைமையும் சந்தேகத்திற்கிடமின்றி இருந்தால்தான் அல்லது முன்பிருந்த வணிக நடவடிக்கையிலிருந்து சரக்கு விற்பவருக்குச் சரக்கு வாங்குபவரிடம் முழு நம்பிக்கை இருந்தால்தான் இவ்வேற்புவழிப் பத்திரமுறை உண்டியல் பயன் படுத்தப்படுகிறது. ஏனென்றால் உண்டியல் ஏற்றவுடன், ஏற்றவனிடம் சரக்குரிமைப் பத்திரங்கள் சேர்ப்பித்து விடப்படுகின்றன. சரக்கு விற்பனையாளருக்குரிய பிணையம், வாங்குபவரின்மேல் விற்பவர் வைத்திருக்கக்கூடிய நன்னம்பிக்கை அல்லது உண்டியல் மீது சட்டப்படி எடுக்கக்கூடிய நடவடிக்கையாகும்.

பார்த்தவுடன் செலுத்தப்படும் காட்சி உண்டியல் (Sight Bill) அல்லது குறிப்பிட்ட தவணைக்குப் பிறகு செலுத்தப்படும் தவணை உண்டியல் (Time Bill) களுக்குரிய பணத்தைச் செலுத்தியவருடன் எழுதப் பெறுவோருக்குச் சேர்ப்பிக்கப்படும் உண்டியலே செலுத்து வழி உண்டியலாகும். எழுதப்பெற்றவர் உண்டியலுக்குரிய பணத்தை வசூல் செய்யும் பாங்கிடமோ, அதன் பதிவாளர் இடமோ செலுத்தும் வரையில் சரக்கை விற்றவர் சரக்குரிமைப் பத்திரங்களைத் தம் முழுக் கட்டுப்பாட்டின்கீழ் வைத்துள்ளார். கால வரையறையின்றி உண்டியலுக்குரிய பணம் செலுத்தப்படாமலிருந்தால், இதற்கிடையில் சரக்குகள் போய்ச் சேர வேண்டிய இடத்தை அடைந்திருந்தால் விற்பனையாளர் தன் சொந்த நன்மையைக் கருதி, மிகுதியான இறக்குமதி வரி, பண்டகத்தில் பொருட் பாதுகாப்புக் கட்டணம், இன்சூரன்சுக் கட்டணம், மற்ற திடீர்ச் செலவுகளை எல்லாம் செலுத்திச் சரக்கினை இறக்குமதி செய்து எதிர்பார்த்த இலாபமடைவதற்குப் பதிலாக மிகுந்த நட்டங்களுக்கும் ஆளாகிறார். மேலும், அச் சரக்கினை வாங்குவதற்குரிய மாற்றானைத் தேடிப் பிடிப்பதும் அல்லது மிகுந்த நட்டமில்லாமல் அச் சரக்கினைத் தன் சொந்த நாட்டிற்கே எடுத்துச் செல்வதும் மிகவும் அரிது.

## வணிக ஏற்புகள் (Commercial Acceptances)

## வங்கி ஏற்புகள் (Banker's Acceptances)

தனியார்களாலும், தொழிலகங்கள், வணிகக் கூட்டுருக் களாலும் (Trade corporations) ஒப்புறுதியளிக்கப்பட்ட முதிர்வு பெருத வணிக உண்டியல்களே வணிக ஏற்புக்களாகும். பாங்கு களால் ஒப்புறுதியளிக்கப்பட்ட தவணை உண்டியல்களே பாங்கு ஏற்புக்கள் எனப்படும். நிலையான அல்லது குறிப்பிட்ட எதிர் காலத்தில் செலுத்தப்படக்கூடிய அனைத்து உண்டியல்களும் அளிக்கும்போது, ஏற்கக்கூடிய உண்டியல்களும் உள்ளியல் புடைய ஏற்புகளே. அவை செலுத்தப்படும்வரை அல்லது ஏற்றுக் கொள்ளப்படும்வரை, உண்டியல்களே ஏற்புக்கள் அன்று. ஏற்கப்பட்டவுடன் அவைகள் ஏற்புகளாகக் கருதப்படு கின்றன. அவை சட்டப்படி உண்டியலுக்குரிய அனைத்துச் சிறப்புக் கூறுகளையும் பெற்றிருப்பதால் உண்டியல்களாகவும் கருதப்படுகின்றன.

## பெயர் பேணும் ஏற்பு
### (Acceptance for Honour)

ஓர் உண்டியல் அவமதிக்கப்பட்டுக் குறிப்பிட்ட அல்லது மறுப்புச் சான்றளிக்கப்பட்ட பின்னர் அதை அவ்வுண்டியலோடு எந்தத் தொடர்புமில்லாத ஒருவர், அவ்வுண்டியலோடு தொடர்பு கொண்ட ஒருவரின் பெயர் பேணும் பொருட்டு ஏற்கலாம். இவ் வகை ஏற்பினை மறுப்புச் சான்றளிக்கப்பட்டபின் ஏற்பு என்பர். இவ்வாறு ஏற்றவரைப் பெயர் பேணுவதற்காக ஏற்றவர் எனலாம். வைத்திருப்பவரின் அனுமதி கொண்டே இவ் வகை ஏற்பு நிகழலாம். 'ஏற்பு' போன்றே கையொப்பமிடல் முதலியன உண்டியல்மீதே இருக்கவேண்டும்.

பெயர் பேணும் ஏற்பு போலவே பெயர் பேணும் செலுத்தமும் (Payment for Honour) உண்டு. எவர் வேண்டுமானாலும் பணம் செலுத்தலாம். உண்டியலோடு தொடர்புற்றவரின் நாணயத்திற் காகவும் பணம் செலுத்தப்படலாம்.

ஓர் உண்டியலை எழுதுபவரோ, மேலெழுதுபவரோ அதில் ஒருவர் பெயரைக் குறித்து, தேவைப்பட்டால் அவரை அணுகும்படிச் செய்யலாம். எழுதப்பெற்றவர் உண்டியலை

ஏற்கவோ, பணஞ் செலுத்தவோ தவறினல், இங்ஙனம் பெயர் குறிக்கப்பட்டவர் உண்டியலை ஏற்கவோ, பணஞ் செலுத்தவோ செய்வார்.

தவணை முதிரு முன்னர் உண்டியல் காணுமற் போய்விட்டால் அதைக் காணுமற் போக்கியவர் எழுதியவரை அணுகி மற்ருெரு பிரதி உண்டியல் எழுதித்தர வேண்டலாம். நட்ட ஈடுக்கேற்ற பிணையத்தைப் பெற்றுக்கொண்டு எழுதியவர் மற்ருெரு பிரதி எழுதிக் கொடுப்பார்.

## பண வசதி உண்டியல்
## (Accomodation Bill)

'ஒருவகை நடவடிக்கையையும் அடிப்படையாகக் கொள்ளாமல் மறுபயன் ஏதும் பெருமல் எழுதப்படும் உண்டியலைப் பணவசதி உண்டியல்' என்பர். இது பெயளரவு உண்டியல் என்றும் கருதப் படுகிறது. இவ் வகை உண்டியல்மூலம் எவர் ஒருவருக்குப் பண வசதி அளிக்கப்படுகிறதோ அவர் வசதி அளித்தவரிடமிருந்து, தான் கொடுத்த பணமெதையும் திரும்பப் பெறமுடியாது. இவ் வகை உண்டியல் 'முறைப்படிப் பெற்றவர்' கையில் சேர்ந்து விட்டால் ஒரு சாதாரண வணிக உண்டியலாகிவிடும். இதனை ஏற்றவர் பொறுப்பாளியாவார். அவருக்குப் பின்னர் எழுதிய வரும், புறக் குறிப்பாளர்களும் பொறுப்பாவர்.

## கப்பல் பத்திரங்கள்
## (Shipping Documents)

1. கப்பல் இரசீது (Bill of Lading).
2. கடல் இன்சூரன்சு பாலிசி (Marine Insurance Policy).
3. வணிக இடாப்பு (Commercial Invoice).
4. தோற்றுவாய்ச் சான்று (Certificate of origin).
5. துறைமுக ஆணைச் சீட்டு (Dock warrant).
6. கன்சுலர் இடாப்பு (Consular Invoice).
7. துறைமுக, பண்டக உரிமையாளர், கப்பலதிகாரி இரசீதுகள் (Dock, and Mate's Receipts).
8. பட்டுவாடா உத்தரவு (Delivery Order).
   பொறுப்புரிமைக் கடிதம் (Letter of Trust).
   பொறுப்புரிமை இரசீது (Receipt of Trut).

9. வாணிக உறுதிக் கடிதம் (Letter of Credit).

10. அடமானக் கடிதம் (Letter of Hypothication).

11. கட்டுமானப் பட்டியல் (Packing List), நன்னிலைச் சான்று Certificate of Health), எடைச் சான்று (Certificate of Weight).

## கப்பல் இரசீது

பன்னாட்டு வணிகத்தில் இக் கப்பல் இரசீது மிகவும் சிறப்புடையது. இது ஒரு சரக்குரிமைப் பத்திரமாகும். கப்பல் தலைவரின் கையொப்பமுள்ள இந்த இரசீது அதில் குறிப்பிட்ட சரக்குகள் ஏற்றிச் செல்லப்படும் பொருட்டுக் கப்பலில் சேர்ப்பிக்கப்பட்டன என்பதற்குச் சான்றாக அமைகிறது. இப் பத்திரத்தைக் காண்பித்தே இறக்குமதி செய்யுமிடத்தில் கப்பலில் இருந்து சரக்கினை எடுக்க வேண்டும். கப்பல் தலைவர் அல்லது கப்பலுக்குரியோர், அவரின் பதிலாள் கையொப்பமுள்ள இரசீது, சரக்கேற்றிய இடம், சரக்கு போய்ச் சேருமிடம், எந்த நிபந்தனைகளின்பேரில் ஏற்றிச் செல்லப்படும் பொருட்டுச் சரக்குகள் ஏற்றுக் கொள்ளப்பட்டன, சரக்கின் முழு விவரம், சரக்கின் குறியும் (mark) அதில் அடங்கியுள்ளனவும், குறிப்பிட்ட சத்தத்தைச் செலுத்தியவுடன் சரக்கினை அனுப்பப் பெறுபவரிடமோ, அவர் அனுமதி பெற்றவரிடமோ சேர்ப்பிக்கப் படவேண்டுமென்ற கப்பல் தலைவரின் ஒப்புறுதியுடன், குறிப்பிட்ட சரக்குகள் ஏற்றிச் செல்லப்படும் பொருட்டுக் கப்பலில் சேர்க்கப்பட்டன என்பதற்குச் சான்றாக இது அமைகிறது.

## கப்பல் இரசீதின் சிறப்பியல்புகள்

1. கப்பல் இரசீது சரக்கு ஏற்றிச் செல்லப்படும் பொருட்டுக் கப்பலில் சேர்க்கப்பட்டதற்கு அளிக்கப்படும் இரசீது ஆகும்.

2. சரக்கினைக் குறிப்பிட்ட இடத்திலிருந்து மற்றொரு குறிப்பிட்ட இடத்திற்கு ஏற்றிச் சென்று அனுப்பப் பெறுவோருக்கோ, அவரது ஆணைக்கோ சரக்கினைச் சேர்ப்பித்து விடுவதற்காகக் கப்பலில் சரக்கு ஏற்றுபவருக்கும் கப்பல் உரிமையாளருக்கும் ஏற்படும் ஒப்பந்தமாகும்.

3. இது ஒரு சரக்குரிமைப் பத்திரமாகும்.

4. இதை மேலெழுதிக் கொடுப்பதன்மூலம் ஒருவரிடமிருந்து மற்றொருவருக்கு உரிமை மாற்றித் தரலாம்.

5. உண்டியலைப் போன்று சட்டப்படி இது மாற்றுமுறை ஆவணமாகாது. ஆகவே, இதை மாற்றிக் கொடுப்பவருக்கு என்னென்ன உரிமைகள் உண்டோ அவைதான் மாற்றப் பெறுபவருக்கும் கிடைக்கும். மாற்றக் கொடுப்பவருக்கு இருந்ததை விடச் சிறந்த உரிமையை மாற்றப் பெறுபவர் பெற முடியாது.

6. கப்பல் இரசீது மூலம் கப்பலில் ஏற்றிய சரக்குகளைக் குறிப்பிட்ட அனுப்பப் பெறுவோருக்கோ, அவரது ஆணையைப் பெற்றவருக்கோ, அவரால் புறக்குறிப்பிடப்பட்டவருக்கோ கப்பல் தலைவர் சேர்ப்பிக்கலாம்.

7. செலாவணி பத்திரத்தைப்போல் கப்பல் இரசீதையும் சரக்கினை அனுப்பப் பெறுவோர் அல்லது இந்த இரசீதை உடையோர் மேலெழுதியோ, மேலெழுதாமலோ வேறொருவருக்கு உரிமை மாற்றிக் கொடுக்கலாம்.

8. கப்பல் இரசீது ஓர் அரைகுறை மாற்றுமுறை ஆவணமாகும். கப்பல் இரசீது நான்கு படிகளில் (Copies) எழுதப்படுகின்றன. ஒரு படியைக் கப்பல் அலுவலகத்தில் இருத்திக் கொண்டு மீதி மூன்று படிகள் ஏற்றுமதியாளரிடம் சேர்ப்பிக்கப்படும். ஆழமில்லாத் துறைமுகங்களில் கப்பல்கள் செல்ல முடியாதாகையால் படகுகள்மூலமே கப்பல்களை அடைய முடியும். ஆகவே கப்பல், இரசீது தயார் செய்யுமுன் கப்பலதிகாரியின் இரசீது (Mate's receipt) ஒன்றைப் பெற்றுக்கொண்டு சரக்குகளைப் படகில் ஏற்றி வருவர். கப்பலதிகாரி சரக்குகளைக் கப்பலுக்குக் கொண்டு சேர்த்த பின்னர், கப்பல் தலைவர் கையொப்பமிட்ட கப்பல் இரசீது வழங்கப்படும். கப்பலதிகாரி அவர் இரசீதைக் கொடுத்துவிட்டு கப்பல் இரசீதை வாங்கிக் கொள்ளலாம்.

இக் கப்பல் இரசீது ஒரு பட்டுவாடா உத்தரவு (Delivery order) ஆகவும் அமைகிறது. இதனைக் காட்டியே இறக்குமதி செய்யும் துறைமுகத்திலிருந்து சரக்குகளைப் பெற முடியும். இந்தக் கப்பல் இரசீதில் சரக்கை ஏற்றிச் செல்லும் நிபந்தனைகள் குறிக்கப்பட்டிருக்கும். பொதுவாக இந்த இரசீதில் கீழ்க் கூறப்பட்ட விவரங்கள் காணப்படும்.

1. கப்பலின் பெயர்.
2. சரக்கு அனுப்புவரின் பெயரும் முகவரியும்.
3. சரக்கு அனுப்பப் பெறுபவரின் பெயரும் முகவரியும்.

4. கப்பலில் சரக்கேற்றிய இடம்.

5. சரக்கு போய்ச் சேரவேண்டிய இடம்.

6. சரக்கின் எண்ணிக்கை, குறி முதலிய முழு விவரமும், எடையும்.

7. சரக்கு ஏற்றிச் செல்லும்போது கடைப்பிடிக்க வேண்டிய நிபந்தனைகள்.

8. கப்பல் சத்தம்.

9. கப்பல் இரசீதில் தேதி

10. கப்பல் தலைவனின் முத்திரையுடன் கூடிய கையொப்பம்.

சரக்கினைக் கப்பலிலிருந்து பெறுவதற்குக் கப்பல் இரசீதின் ஒரு படி (one copy) மட்டுமே சரக்கு வாங்கியவருக்கு அல்லது சரக்கு அனுப்பப் பெறுபவருக்குப் போதுமானதாகக் கருதப் பட்டாலும் சரக்கனுப்பும் விற்பனையாளர் கப்பல் இரசீதின் மற்ற படிகளையும் பாதுகாப்புடன் வைத்திருத்தல் வேண்டும். உண்டியல், பாங்கால் மாற்றப்பட்டாலோ, எழுதப் பெற்றவரால் பணம் செலுத்தப்பட்டாலோ அனைத்துப் படிகளையும் திருப்பித் தருமாறு வற்புறுத்தப்படுவார். இக் காரணத்தை முன்னிட்டே அயல் நாட்டு வணிகத்தைச் சார்ந்த அனைத்து ஒப்பந்தங்களும் கப்பல் பத்திரத்தைப் போன்றே 'முழுத் தொகுப்பில்', (Full set of Bill of lading) தயாரிக்கப்படுகின்றன. பத்திரங்கள் சேர்ந்த உண்டியல் மாற்றல் செய்யும் பாங்கோ, உண்டியலுக்குரிய பணத்தைச் செலுத்தும் சரக்கு வாங்குபவரோ கையொப்பமிட்ட கப்பல் இரசீது முதலிய அனைத்துப் பத்திரங்களையும் திருப்பித் தருமாறு வற்புறுத்தப்படுவார். அவ்வாறு தரத் தவறினால் கப்பல் இரசீது தராததற்குரிய விளக்கம் கேட்கப்படவேண்டும். ஏற்றுமதியாளரின் நிதிநிலை, வணிக நம்பிக்கை, நாணயம், இரசீது தவறியதற்குரிய உண்மைத் தன்மையை பாங்கோ, இறக்குமதியாளரோ நன்கு கண்டறிந்த பிறகு இரசீது தவறியதற்குரிய இழப்பீட்டுப் பத்திரம் (Identity bond) அளிக்குமாறு கோர வேண்டும்.

மேலெழுதிச் சேர்ப்பிப்பதுமூலம் கப்பல் இரசீதைக் குறிப் பிட்ட நபரின் பெயருக்கு உரிமை மாற்றித் தரலாம். நபர் பெயர் குறிப்பிடப்படாமல் இருந்தால் சேர்ப்பிப்பதன் மூலம் உரிமை மாற்றித் தரலாம். கப்பல் கம்பெனி, நன்முறையில் மேலெழுதப்பட்ட கப்பல் இரசீதின் படியை எவர் சேர்ப்பிக் கிறாரோ அவரிடமே, சரக்கினை ஒப்படைக்கிறது. கப்பல் இரசீதின் ஒரு படி கொடுக்கப்பட்டு சரக்கு எடுக்கப்பட்ட பிறகு பிற படிகள் செல்லுபடியாகா.

அயல் நாட்டு வணிக ஒப்பந்தத்தில் கண்டுள்ள கப்பல் இரசீதில் கப்பல் சத்தம் (Freight paid) கொடுக்கப்பட்டது என்று குறிக்கப் பட்டிருந்தால் கப்பல் இரசீதின் அனைத்துப் படிகளிலும் கப்பல் சத்தம் கொடுக்கப்பட்டது என்று குறிக்கப்படவேண்டும். சில சமயங்களில் கப்பல் சத்த இரசீதும் கப்பல் இரசீதுடன் இணைக்கப்பட்டிருக்கும். இப் பத்திரங்களின்மேல் 'சத்தம் முன் கூட்டிச் செலுத்தப்பட்டது' (Freight prepaid) என்ற முத்திரை இருந்தால் அதுவே சத்தம் செலுத்தப்பட்டதற்குரிய தக்க சான்ருகும். சத்தம் முன் கூட்டிச் செலுத்தப்படலாம் (Freight Prepayable) அல்லது சத்தம் முன் கூட்டிச் செலுத்தப் படும் என்ற முத்திரை இருந்தால் அது சத்தம் செலுத்தப்பட்ட தற்குரிய தக்க சான்ருகாது. மேலும், கப்பல் சத்தம் கொடுக்கா விடில் அச் சத்தம் கொடுக்கப்படும்வரையில் சரக்குகளின் பேரில் பற்றுரிமை (lieu) ஏற்படுத்தலாம். இப் பற்றுரிமை மற்ருருவ ருக்கும் இருப்பதைவிட முதலிடம் பெறுகிறது.

## வெற்று, நேர்மையற்ற (அழுக்கான) கப்பல் இரசீது (Clean and Foul Bill of Lading)

கப்பலில் சரக்கேற்றிச் செல்பவர்கள் மூட்டைகளிலும், பெட்டிகளிலும் அடங்கியுள்ள சரக்கினை ஆராயாமல் விட்ட போதிலும் அச் சரக்கினை உட்கிடக்கையாகக் கொண்டு மூட்டைகள் சரிவரக் கட்டப்பட்டிருக்கின்றனவா, பெட்டிகள் ஒழுங்காகப் பொருத்தப்பட்டிருக்கின்றனவா, பெட்டிகளும் மூட்டைகளும் போய்ச் சேரவேண்டிய இடத்திற்குச் சிதைவில் லாமல் போய்ச் சேர்ந்து விடுமா என்று கவனிக்க வேண்டும். சரக்கைப் பெற்றுகொண்டதற்குரிய எவ்வித நிபந்தனையுமற்ற அத்தாட்சி இரசீதே வெற்றுக் (Clean) கப்பல் இரசீது என்றழைக் கப்படும். நிபந்தனைகள் அடங்கிய கப்பல் இரசீது நேர்மையற்ற கப்பல் இரசீது (Foul Bill of Lading) என்றழைக்கப்படுகிறது. (எ.கா.): '5 பெட்டிகள் உடைந்துள்ளன', '2 மூட்டைகள் கிழிந்துள்ளன', '400-வது சிப்பம் இல்லை', 'சரக்கு சரிவரக் கட்டப்படவில்லை' என்பன போன்றவை. இந் நேர்மையற்றக் கப்பல் இரசீது, அயல் நாட்டு வணிகத்தில் குறிப்பிடப் பட்டிருந்தால் ஒழிய ஏற்றுக்கொள்ளப்பட மாட்டாது. கப்பல் இரசீதில் உள்ள இவ்விதக் குறிப்புகள் சரியற்றக் கட்டுமா னங்களினுல் ஏற்படுகிற இழப்புகளிலிருந்து சரக்கேற்றிச் செல்பவரைப் பாதுகாப்பது மட்டுமல்லாமல், பின்னுல் இக் கப்பல் இரசீதைப் பண மதிப்பிற்காகப் பெறுபவர்களையும் பாதுகாக் கிறது. இது இன்சூரன்சுக் கம்பெனிகளுக்கும் பேருதவி புரிகிறது.

## கப்பலில் சரக்கேற்றிய பின் அளிக்கப்படும் கப்பல் இரசீது, கப்பலில் ஏற்றுவதற்காகச் சரக்கு பெறப்பட்டது என்பதற்குரிய கப்பல் இரசீது

## (On Board Bill of Lading, Received for Shipment Bill of Lading)

ஏற்றிச் செல்லும் பொருட்டுக் கப்பலில் சரக்கை ஏற்றியவுடன் கப்பல் தலைவனால் அளிக்கப்படும் இரசீதே கப்பலில் சரக்கேற்றிய பின் அளிக்கப்படும் கப்பல் இரசீது எனப்படும் (On Board Bill of-Lading). கப்பலில் சரக்கேற்றும் இடம் வசதியாக கப்பல் பயணம் ஒழுங்குபடுத்தப்பட்டிருந்தால் இவ் வத்தாட்சிப் பத்திரத்தைப் பெறுவது எளிதாகும். கப்பலில் சரக்கேற்றியவுடன் கப்பல் தலைவர் இப் பத்திரத்தில் கையொப்பமிடுவார். இந்த இரசீதைப் பெறுவதன்மூலம், கப்பலில் சரக்கேற்றியாகியது என்றும், சரக்கு, சேரவேண்டிய இடத்தில் போய்ச் சேர்ந்துவிடும் என்றும் சரக்கு அனுப்புபவருக்கு உறுதி அளிக்கப்படுகிறது. இதுபோன்றே இந்த இரசீதைப் பெற்றுக் கொண்டவுடன் சரக்கு குறித்த நேரத்தில் வந்து சேர்ந்துவிடும் என்றும் இந்த இரசீதைக் கப்பல் தலைவரிடம் திருப்பிக் கொடுத்தால் சரக்கு தன்னிடம் ஒப்படைக்கப்படும் என்றும் சரக்கனுப்பப் பெறுபவர் நம்புகிறார்.

சில நேரங்களில் கப்பலில் ஏற்றப்படும் பொருட்டுச் சரக்குக் கப்பல் தளத்திற்கு வரும்போது அங்குச் சரக்கேற்றுதற்குரிய கப்பல் இராது. அப்பொழுது சரக்கு, கப்பலில் ஏற்றப்படும் பொருட்டுப் பெற்றுக்கொள்ளப்பட்டது, (Received for Shipment) என்று குறித்த கப்பல் இரசீதைக் கப்பல் சொந்தக்காரர் அளிப்பார். இந்த இரசீதில் கப்பல் சொந்தக்காரரிடம் சரக்கு ஒப்படைக்கப்பட்டது என்றும், ஆனால் சரக்கு கப்பலில் ஏற்றப்படவில்லை என்றும் குறிக்கப்பட்டிருக்கும்.

*(1)* சரக்கை ஏற்றிச் செல்லும் கப்பலின் பெயர் குறிப்பிடாமல் சரக்கு கப்பலில் ஏற்றிச் செல்லும் பொருட்டு, பெற்றுக்கொள்ளப்பட்டது என்று இந்த இரசீதில் குறிப்பிடப்பட்டிருக்கலாம்; அல்லது

*(2)* ஒரு குறிப்பிட்ட கப்பலின்மூலமோ பின்வரும் கப்பலின் மூலமோ ஏற்றிச் செல்லும் பொருட்டுச் சரக்கு பெற்றுக் கொள்ளப்பட்டது என்றும் குறிப்பிடப்பட்டிருக்கலாம்; அல்லது

(3) ஒரு குறிப்பிட்ட கப்பல்மூலம்தான் ஏற்றிச் செல்லும் பொருட்டுச் சரக்கு பெற்றுக்கொள்ளப்பட்டது என்றும் இந்த இரசீதில் குறிப்பிடப்பட்டிருக்கலாம்.

இம் மாதிரியான கப்பல் இரசீது குறிப்பிட்ட கப்பல்மூலம் சரக்குகளை ஏற்றிச் செல்லும் என்று உறுதியளிக்க முடியாது. ஏனென்றால், குறிப்பிட்ட கப்பல் பழுதடையலாம் அல்லது குறிப்பிட்ட காலத்தில் கப்பல் தளத்திற்குக் கப்பல் வந்து சேராமல் இருக்கலாம். ஆகவே, சரக்கேற்றுவதற்கே காலதாமதமாகி போய்ச் சேரவேண்டிய இடத்திற்குக் குறிப்பிட்ட நேரத்தில் சரக்கு போய்ச் சேராது. கப்பலில் ஏற்றிச் செல்வதற்காகச் சரக்கு பெற்றுக் கொள்ளப்பட்டது என்ற கப்பல் இரசீது கீழ்க் கண்ட குறைபாடுகளை உடையது. ஆகவே, இந்த இரசீது சரக்கு வாங்குபவர்களாலும், பாங்குகளாலும் எப்பொழுதும் ஏற்றுக் கொள்ளப்படுவதில்லை.

இந்த இரசீதைப் பெற்றுக் கொள்ளும் சரக்கு வாங்குபவருக்கு, தனக்கு எந்த நேரத்தில் சரக்கு வந்துசேரும் என்று உறுதியாக நம்பமுடியாது.

கப்பலில் ஏற்றிச் செல்லப்படும் சரக்கு அழுகக்கூடியதாக இருந்தால், பயணத்தில் தடை நேர்ந்தால் சரக்கு விற்கக்கூடிய தன்மையில் இராது. ஆகவே, சரக்கு வாங்குபவர்களும் பாங்குகளும் கப்பலில் சரக்கேற்றியபின் அளிக்கக்கூடிய கப்பல் இரசீதுகளைத்தான் விரும்புவார்கள்.

சில சந்தர்ப்பங்களில் இந்த இரசீது கப்பலில் சரக்கு ஏற்றியபின் அளிக்கப்படும் கப்பல் இரசீதாக உண்மையிலேயே இரண்டு மூன்று நாட்கள் கழித்துக் கப்பலில் சரக்கு ஏற்றிக்கொள்ளப்பட்டவுடன் மாற்றப்படும். அதாவது சரக்கேற்றியபின் பெயர், நாள், கப்பல் கம்பெனி அதிகாரியின் வரிப் பில்லையொட்டிய கையொப்பம் ஆகியவை இம் மாற்றுக் கப்பல் இரசீதில் அடங்கியிருக்கும்.

மறுகப்பல்—வழிக்கப்பல் இரசீது (Through Bill of Lading): சரக்குகள் நிலவழி, கடல் வழியாகப் பயணம் செய்ய நேரிட்டாலும் கடல் பயணத்தில், இடையிலுள்ள துறைமுகத்தில் வேறொரு கப்பலில் சரக்கை மாற்றி ஏற்றிச் செல்ல நேரிட்டாலும் முதலில் சரக்கை ஏற்றிக்கொள்பவர் மறுகப்பல்—வழிக்கப்பல் இரசீதை (Through Bill of Lading) அளிக்கிறார். இரயில்வேக் கம்பெனியால் அளிக்கப்படும் மறுகப்பல்—வழிக்கப்பல் இரசீது, இரயில்வே இரசீதாகவும், கப்பல் பயணத்திற்குரிய கப்பல் இரசீ

தாகவும் பயன்படுத்தப்படுகிறது. ஆனல், கப்பல் பயணத்தில் சரக்கேற்றிச் செல்லக்கூடிய கப்பல் சொந்தக்காரரை இக் கப்பல் இரசீது கட்டுப்படுத்தாது. எந்தக் கப்பலில் எந்த நேரத்தில் சரக்கு ஏற்றிச் செல்லப்படும் என்று இந்த இரசீதுமூலம் உத்தரவு அளிக்கமுடியாது. பயணத்தின்போது இன்சூரன்சு, சத்தம் அடங்கிய விலை, ஒப்பந்தத்தில் காணு (இல்லா) நபர்களிடம் சரக்கு வந்து சேர்ந்துவிடலாம். கடன் தொடர்பாக இவ்விதக் கப்பல் இரசீதுகளைப் பாங்கு மறுக்கலாம் (நிராகரிக்கலாம்). பயண இடையில் சரக்கு மறுகப்பல் வழியாக ஏற்றிச்செல்ல நேரிட்டால் இன்சூரன்சு, சத்தம் அடங்கிய விலை ஒப்பந்தத்தில் இந்த மறு கப்பல் வழிக்கப்பல் இரசீது முழுதும் செல்லுபடியாகக்கூடிய தாகும்.

## நேர்முகக் கப்பல் இரசீது (Straight Bill of Lading), ஆணையுடைய கப்பல் இரசீது (Order Bill of Lading)

சரக்கனுப்பப் பெறுபவர் பெயருக்குத் தயாரிக்கப்படும் இரசீதே நேர்முகக் கப்பல் இரசீது (Straight Bill of Lading) எனப்படும். சேரவேண்டிய துறைமுகத்தில் சரக்கு போய்ச் சேர்ந்தவுடன் ஆள் அறிமுகத்திற்காக மட்டுமல்லாமல் வேறு எந்தக் காரணத்திற் காகவும் சரக்கைப் பெற்றுக்கொள்ளுவதற்காக இந்த இரசீதைக் காண்பிக்கவேண்டியதில்லை. சரக்கைப் பெற்றுக்கொள்பவர் கப்பல் தலைவருக்குத் தெரிந்தவராக இருந்தால் இரசீதுமூலமே சரக்கை எடுத்துக்கொள்ளலாம்.

சரக்கு அனுப்புபவரின் ஆணைக்குத் தயாரிக்கக்கூடிய இரசீது ஆணையுடைய கப்பல் இரசீது (Order Bill of Lading) எனப்படும். கையொப்பமூலம் வேறு ஒருவருக்கு இந்த இரசீதை உரிமை மாற்றித் தரலாம். சரக்கு போய்ச்சேர்ந்தவுடன் சரக்கனுப்பப் பெறுபவரை குறித்துக், குறித்து வைத்திருக்கும்படிக் கப்பல் கம்பெனிக்கு, இந்த இரசீதில், நிபந்தனை விதிக்கப்பட்டிருக்கும்.

நேர்முகக் கப்பல் இரசீதைக் கப்பல் கம்பெனியிடமிருந்து பெற்றவுடன் சரக்கு அனுப்புபவர் சரக்கின்மேலுள்ள தனது கட்டுப்பாட்டை இழக்கிருர். சரக்குரிமையை இடைநிலையாளர் எவருக்கும் மாற்றிக் கொடுக்கமுடியாது. மாற்று உண்டியலுடன் இதனை இணைக்கமுடியாது, ஒரு நிறுவனம் அதனுடைய கிளை நிறுவனத்துக்குச் சரக்கு அனுப்பும்போதோ அல்லது சரக்கு வாங்குபவர், முன் பணம் செலுத்தியிருந்தாலும் அல்லது பணம் பெறவேண்டிய நிலைமை இல்லாத சந்தர்ப்பங்களில் இம் மாதிரி நேர்முகக் கப்பல் இரசீதுகள் பயன்படுத்தப்படுகின்றன.

## கப்பல் வாடகை ஒப்பந்தக் கப்பல் இரசீது
## (Charter Party Bill of Lading)

கப்பல் முழுவதையுமோ, கப்பலின் ஒரு பகுதியையோ சரக்கேற்றிச் செல்லும் பொருட்டு அதற்குரிய உரிமை கடமைகளைக் குறிப்பிட்டுக் கப்பல் சொந்தக்காரருக்கும் சரக்கேற்றிச் செல்பவருக்கும் ஏற்படக்கூடிய ஒப்பந்தமே கப்பல் வாடகை ஒப்பந்தமாகும். இவ்வொப்பந்தங்கள் பொதுவாகக் கப்பல் தரகர்களால் ஏற்படுத்தப்படுகின்றன. மொத்த கப்பல் வாடகையில் ஒரு பகுதி அத் தரகர்களுக்குக் கழிவாகத் (commission) தரப்படுகிறது. ஒரு குறிப்பிட்ட காலத்திற்குக் கப்பல் வாடகைக்கு அமர்த்திக் கொள்ளப்படுவதைக் குறிப்பிட்ட காலக் கப்பல் வாடகை ஒப்பந்தம் (Time Charter) என்றும், குறிப்பிட்ட பயணத்திற்குக் கப்பல் வாடகைக்கு அமர்த்திக் கொள்ளப்படுவதைப் பயண வாடகை ஒப்பந்தம் (Voyage Charter) என்றும் அழைப்பர்.

கப்பலை வாடகைக்கு அமர்த்திக் கொண்டவர் அக் கப்பலில் இடமிருந்தால் வேறு பல ஏற்றுமதியாளர்களுக்கும் சரக்கேற்றிச் செல்ல அனுமதியளிப்பார். அவ்வாறு சரக்கு ஏற்றும்போது அளிக்கக்கூடிய கப்பல் இரசீது 'கப்பல் வாடகை ஒப்பந்தக் கப்பல் இரசீது' எனப்படும். வாடகைக்கு எடுத்துக் கொண்டவரால் அளிக்கப்படும் கப்பல் இரசீது கப்பல் வாடகை ஒப்பந்தத்தின் அனைத்து நிபந்தனைகளுக்குள் அடங்கும். வாடகைக் கப்பலில் சரக்கேற்றுபவர்களும் கப்பல் இரசீதைப் பிற்பாடு பெற்றுக் கொள்பவர்களும் கப்பல் வாடகை ஒப்பந்தத்தை நிறைவேற்ற வேண்டும். கப்பல் வாடகை ஒப்பந்தத்துடன் அடங்கிய கப்பல் இரசீதை, அவ்வொப்பந்தத்திலுள்ள நிபந்தனைகள் தங்களுக்குச் சாதகமாக இருந்தால் ஒழிய பாங்குகள் ஏற்றுக் கொள்ளமாட்டா.

## நாள்பட்ட கப்பல் இரசீது
## (Stale Bill of Lading)

கடன் முடிந்த தேதிக்குப் பின்னர் உள்ள தேதியில் கப்பலில் சரக்கேற்றியதைக் குறிக்கும் இரசீது நாள்பட்ட இரசீது எனப்படும். அதாவது கடன் அனுமதிக்கப்பட்ட தேதிக்குப் பின்னரே கப்பலில் சரக்கு ஏற்றப்படுகிறது என்பதை இது காட்டுகிறது. சரக்கேற்றிய கப்பல் போய்ச் சேரவேண்டிய இடத்திற்குப்போய்ச் சேர்ந்த வெகு நாட்களுக்குப் பின்னரே கப்பல் இரசீது கொள்முதலாளருக்கு அளிக்கப்பட்டால், அது

நாள்பட்ட கப்பல் இரசீதாகக் கருதப்படும். இந் நிலைமைகளில் சரக்கு வாங்குபவர் சரக்கினைக் குறித்த நேரத்தில் பெறமுடியாமல் நட்டத்திற்குள்ளாகிறார், இந்தச் சந்தர்ப்பங்களில் பாங்குகள் இவ்விதக் கப்பல் இரசீதுகளை ஏற்றுக்கொள்வதில்லை.

கப்பல் கடலைக் கடக்கும் தூரம் மிகவும் குறைவாக இருந்தால் குறுகிய காலத்தில் அனைத்துப் பத்திரங்களையும் தயார் செய்து சரக்கு வாங்குபவருக்குக் கப்பல் போய்ச்சேருவதற்குமுன் அனுப்ப முடியாது. ஆகவே, இப் பத்திரங்களை நாள்பட்டவை என்று பாங்குகள் மறுப்பது சரியன்று. வகையுள்ள, நாணயமுள்ள வாடிக்கையினருக்கு உண்டியல் கழிவு செய்யும் பாங்குகள் நாள் பட்ட கப்பல் இரசீதுகளையும் ஏற்கும். இந்தச் சமயங்களில் பாங்கு நட்ட ஈட்டுப் பத்திரமொன்றை வாடிக்கையினரிடமிருந்து பெற்றுக் கொள்ளும்.

எந்தவிதத் தாமதமும் இன்றிக் குறித்த பத்திரங்களை விற்பனை யாளர், வாங்குபவருக்கு அனுப்பிவிட வேண்டுமென்பது, இன்சூரன்சு, சத்தம் அடங்கிய விலை ஒப்பந்தத்தின்படி, விற்பனை யாளர் பொறுப்பாகும். ஆகவே, போதிய காரணமில்லாமல் பாங்கு கப்பல் இரசீதுகளை நாள்பட்டவை என்று மறுக்க முடியாது.

## கைகாப்புக் (Custody), துறைமுகக் (Port) கப்பல் இரசீது

இப் பதங்கள் அமெரிக்காவிலிருந்து பருத்தி, கப்பல்மூலம் ஏற்றுமதி செய்யப்படும்போது பயன்படுத்தப்படுகின்றன. கப்பல் உரிமையாளருக்குப் பருத்திப் பொதிகளைச் சேர்ப்பித்தவுடன் ஆனால், அதனை ஏற்றிச்செல்லும் கப்பல் துறைமுகத்தை வந்தடை யாமல் இருக்கும்போது கப்பல் உரிமையாளரால் அளிக்கப்படும் கப்பல் இரசீதுக்குக் கைகாப்புக் (Custody) கப்பல் இரசீது என்று பெயர். பருத்திப் பொதிகள் கப்பல் உரிமையாளரின் பாது காப்பில் இருக்கின்றன. இக் கப்பல் இரசீதில் குறிப்பிட்டுள்ள கப்பல் இதுவரை துறைமுகத்தை வந்தடையவில்லை. சரக்கேற்றும் கப்பல் துறைமுகத்தில் இருந்து பருத்திப் பொதிகள் கப்பல் உரிமையாளரின் பாதுகாப்பில் இருந்து கப்பலில் சரக்கு ஏற்றப் படாமல் இருக்கும்போது அளிக்கப்படும் கப்பல் இரசீது துறைமுகக் கப்பல் (Port) இரசீது எனப்படும்.

## கடல் இன்சூரன்சு பாலிசி
## (Marine Insurance Policy)

கடல்வழிப் பன்னாட்டு வாணிகத்தில் இடர்களும், பொருட் சிதைவுகளும், நட்டங்களும் மிகுதியாக உள்ளதால் கடல் இன்சூரன்சு மிகவும் அவசியமாகிறது. கப்பலில் ஏற்றியுள்ள ஒரு நபரின் சரக்குக்கு நட்டமும் சிதைவும் இல்லாவிட்டாலும் மற்றொருவருக்கு ஏற்பட்டிருக்கும் நட்டத்தைப் பொதுச் சராசரி நட்டக் கொள்கைப்படி (Principle of general average loss) அனைவரும் பகிர்ந்து கொள்ளவேண்டும். ஏற்றுமதி இறக்குமதி வணிகத்தில் பயன்படுத்தப்படும் பத்திரங்களுடன் இணைக்கப்படும் இன்றியமையாத பத்திரம் இன்சூரன்சு பாலிசியாகும்.

கடல் இன்சூரன்சு பாலிசி என்பது இன்சூரன்சு செய்பவருக்கும் இன்சூரன்சு செய்யப்படுபவருக்கும் இடையே உள்ள ஓர் ஒப்பந்தமாகும். இவ்வொப்பந்தத்தின் கீழ் இன்சூரன்சு செய்பவர் இன்சூரன்சு செய்யப்படுபவரிடமிருந்து ஒரு குறிப்பிட்ட தொகையைக் கைம்மாருகப் (பிரதிபலனுகப்) பெற்றுக் கொண்டு கப்பல்மூலம் ஏற்றிச் செல்லும் சரக்குகளுக்கு ஏற்படும் பொதுவான மொத்த இடர்களால் அல்லது குறிப்பிட்ட இடர்களால் ஏற்படும் நட்டத்தை இன்சூரன்சு (Insure) செய்யப்படுபவருக்கு ஈடுகட்ட இன்சூரன்சு செய்பவர் (Insurer) ஏற்கிறார். பாலிசி செல்லுபடியாகக் கூடியதாக இருக்க வேண்டுமானுல் இன்சூரன்சு செய்யப்படுபவர் (Insure) சரக்கின் பேரில் இன்சூரன்சு செய்யத் தக்க உரிமை (Insurance Interest) பெற்றிருக்க வேண்டும். அதாவது பொருட் சிதைவினுல் அவர் நட்டமடையக் கூடியவராக இருக்கவேண்டும். இன்சூரன்சு செய்யப்படும்போது இவ்வுரிமை பெற்றிருக்க வேண்டுமென்பதில்லை. நட்டஈடு கோரும்போது இவ்வுரிமையைப் பெற்றிருந்தால் போதுமானது. பொதுவாகக் கடல் இன்சூரன்சுத் தரகர்களால் இவ் வகை இன்சூரன்சுகள் செய்யப்படுகின்றன.

மற்ற நிபந்தனைகளுடன் கடல் இன்சூரன்சு பாலிசி கீழ்க்காணும் விபரங்களைக் கொண்டிருக்க வேண்டும்.

1. இன்சூரன்சு செய்தவர் அல்லது அவரது பதிலாள் பெயர்.

2. இடாப்பில் கண்டுள்ளபடி இன்சூரன்சு செய்யப்படும் சரக்கின் முழு விவரம்.

3. எந்தெந்த இடர் / இடர்களுக்காக இன்சூரன்சு செய்யப் படுகிறது.

4. கடல் பயணம் அல்லது காலம் அல்லது இரண்டும் சேர்ந்து பாலிசியில் கண்டுள்ளபடி.

5. எச் செலாவணியில் எந்த இடத்தில் நட்டஈடு செலுத்தப் படுவது.

6. இன்சூரன்சு செய்யப்படுபவரின் பெயர்,

இன்சூரன்சு செய்பவராலோ, அவரது பதிலாளாலோ இன்சூரன்சு பாலிசி கையொப்பமிடப்படுகிறது. கப்பல் இரசீதுக்கும் அடுத்தபடியாக கடல் இன்சூரன்சு பாலிசி சிறந்ததோர் பத்திரமாகும். கப்பல் இரசீது போன்றே கையொப்பமிட்டுக் கொடுத்தவுடன் கைமாறக் கூடாது.

கடல் இன்சூரன்சு பாலிசியின் வகைகள்: மிதக்கும் பாலிசி (Floating Policy) அல்லது திறந்த பாலிசி (Open Policy): ஏற்றுமதியில் தொடர்ந்து ஈடுபட்டிருக்கும் வணிகர் ஒவ்வோர் ஏற்றுமதிக்கும் இன்சூரன்சு பாலிசி எடுக்கும் தொல்லையைத் தவிர்க்க ஒரு குறிப்பிட்ட மதிப்புத் தொகைக்கு இம் 'மிதக்கும் பாலிசியை, (Floating Policy) எடுக்கிறார். இம் மதிப்புத் தொகையின் அளவுக்கு ஏற்றுமதி செய்த பிறகு புதிய பாலிசி எடுத்தல் வேண்டும்.

இவ்வித பாலிசியில் இன்சூரன்சு செய்தவர் (1) அனைத்து ஏற்றுமதிகள், (2) கப்பலின் பெயர், (3) சரக்கின் அளவு, தன்மை, விவரம் கட்டுக்குறிகள், முதலானவற்றைக் குறிப்பிட வேண்டும். இம் மதிப்பு எதிர்பார்க்கும் இலாபத்தையும் கொண்டுள்ளது.

திறந்த பாலிசியில் (Open Policy) இன்சூரன்சு செய்தவர் அடிக்கடி முத்திரைக் கட்டணம் கட்டவேண்டியதில்லை. மூல பாலிசியில் மட்டும் வரிப் பில்லைகளை ஒட்டினால் போதும்: ஒவ்வொரு ஏற்றுமதிக்கும் அளிக்கப்படும் அத்தாட்சிப் பத்திரத்திற்கு வரிப் பில்லை ஒட்ட வேண்டியதில்லை. ஒவ்வொரு ஏற்றுமதியின்போதும் ஏற்றுக்கொண்ட வீதத்தில் இன்சூரன்சுக் கட்டணம் செலுத்தினால் போதும். 'பிளாங்கட்' பாலிசியில் மொத்தமாகவே கட்டணம் செலுத்தி விடலாம்.

## மதிப்பிட்ட பாலிசி, மதிப்பிடாப் பாலிசி
## (Valued policy, Unvalued policy)

சரக்குகளின் மதிப்பை அறுதியிட்டு அம் மதிப்பிற்கும் பாலிசி எடுத்திருந்தால் அது மதிப்பிட்ட பாலிசி (Valued Policy) எனப் பெயர் பெறும். அங்ஙனம் மதிப்பிடாமல் எடுக்கப்படும் பாலிசி மதிப்பிடாப் பாலிசி (Unvalued Policy) எனப்படும்.

குறிப்பிட்ட பயணத்திற்குச் செல்லும் சரக்குகளை இன்சூரன்சு செய்வது பயணப் பாலிசி (Voyage Policy) என்றும், குறிப்பிட்ட காலத்திற்குக் குறிப்பிட்ட சரக்குகளை இன்சூரன்சு செய்வதைக் காலப் பாலிசி (Time Policy) என்றும் அழைக்கப்படும்.

## அடிப்படை பாலிசியால் கட்டுப்படுத்தப்பட்ட இடர்கள்

கப்பல் சொந்தக்காரர் பொறுப்பேற்கா எந்த நாட்டையும் கடல் இன்சூரன்சு பாலிசி உள்ளடக்காது. பாலிசியில் கண்டுள்ள இடர்களால் உண்டாகும் நட்டங்களையும், சிதைவுகளையும் இன்சூரன்சு செய்பவர் ஈடுகட்டுவார். கப்பல் போக்குவரத்தில் இன்சூரன்சு செய்தவரால் கட்டுப்படுத்த முடியாத நட்டங்களை மட்டுமே இன்சூரன்சு பாலிசி உள்ளடக்கும்.

1. கடல் இடர்கள் (Perils of the sea): கடல் அலைகளால் கப்பலுக்கும், சரக்குகளுக்கும் ஏற்படும் சிதைவு, கடல் நீர் கப்பலுக்குள் புகுவதால் ஏற்படும் நட்டம், கடற்புயலால் சரக்குகள் கடலில் எறியப்படுதல், கப்பல் பாறைகளில் மோதுமானால் ஏற்படும் நட்டம், கப்பல் மூழ்குதல், மற்ற கப்பலுடன் இக் கப்பல் மோதுமானால் ஏற்படும் நட்டம்.

2. தீ (Fire): கப்பல் தீக்கிரையாதலால் ஏற்படும் நட்டம்.

3. தூக்கியெறிதல் (Jettison): சில நேரங்களில் கப்பலில் உள்ள சரக்கின் ஒரு பகுதி, மற்ற பகுதிச் சரக்குகளையும், கப்பலையும் காக்கும் பொருட்டுக், கடலில் தூக்கியெறியப் படுகிறது. இந்த இடரை ஈடுகட்ட இன்சூரன்சு வழி செய்கிறது.

4. (கப்பல் தலைவனின்) வஞ்சகம் (Barratory): கப்பல் தலைவனின் மோசடி, ஒழுங்கற்றச் செயல்களால் ஏற்படும் இடர்ப்பாடுகள்.

5. பிற இடர்கள்: பொருளின் இயற்றன்மையால் ஏற்படும் நட்டங்கள், இரசாயன மாற்றத்தால் பொருள்களுக்கு ஏற்படும் மதிப்பிழப்பு, தேய்மானம், சாதாரண ஒழுக்குகள், உடைப்புகள், சிறு சிறு திருட்டுக்களால் ஏற்படும் நட்டம், போர் நெருக்கடி இடர்கள், கடற் கொள்ளைக்காரர்களால் ஏற்படும் விபத்துக்கள் போன்றவை.

## கடல் இன்சூரன்சில் நட்டங்கள்
## (Losses in Marine Insurance)

சராசரி நட்டங்கள் (Average losses) பொதுச் சராசரி நட்டங்கள் (General average losses) என்றும், குறிப்பிட்ட சராசரி நட்டம் (Particular average loss) என்றும் பிரிக்கப்படுகின்றன.

1. பொதுச் சராசரி நட்டம் (General average loss): கப்பலைச் சேர்ந்த அனைத்துப் பொருள்களுக்கும் நட்டம் ஏற்படுவதைத் தவிர்க்கும் பொருட்டுச் செய்யப்பட்ட தன் விருப்பத் தியாகத்தால் உண்டாகிற சிறு நட்டத்தைக் கப்பல் உரிமையாளர், கப்பல் சத்தம் பெறுபவர், கப்பலில் சரக்கேற்றிச் செல்பவர்கள் அனைவரும் அதனதன் மதிப்பிற்குகந்தவாறு பங்கிட்டுக் கொள்வதைப் பொதுச் சராசரி நட்டம் என்றழைக்கிறோம். (எ.கா.): கடல் கொந்தளிப்பு, கடற் புயல், கப்பல் கடலில் மூழ்குதல் ஆகியவற்றிலிருந்து கப்பலைக் காப்பாற்றக் கப்பலில் உள்ள ஒரு பகுதிச் சரக்கு கப்பலில் இருந்து கடலில் தூக்கியெறியப் பட்டால் இன்சூரன்சு பாலிசியில் இவ்விடர்ப்பாடு குறிப்பிடப் பட்டிருந்தாலும் இல்லாவிட்டாலும் சரக்குரிமையாளர்களும், கப்பல் உரிமையாளரும் அவரவர் பொருள்களின் மதிப்புக்குகந்தவாறு அவ்வாறு தூக்கி எறியப்பட்ட பொருளால் ஏற்படும் நட்டத்தைப் பங்கிட்டுக் கொள்வர்.

2. குறிப்பிட்ட சராசரி நட்டம் (Particular average loss): ஒரு குறிப்பிட்ட சராசரி நட்டம் ஒரு குறிப்பிட்ட நபராலேயே ஏற்றுக் கொள்ளப்படுகிறது. ஏனென்றால், இந் நட்டம் இன்சூரன்சு பாலிசியில் உள்ளடங்கியுள்ளது. இக் குறிப்பிட்ட சராசரி நட்டம் சரக்குக்கு ஏற்படுகிற ஒரு பகுதி நட்டமே. மொத்த நட்டமல்ல. (எ.கா.): பாதக தட்பவெட்ப நிலையால் ஒரு குறிப்பிட்ட சரக்கு சிதையுண்டு போவதால் ஏற்படும் நட்டம்.

## வணிக இடாப்பு
## (Commercial Invoice)

வணிக இடாப்பில் சரக்கின் விவரம், விலை, பேரத்தின் விவரம் அடங்கியிருக்கும். சரக்கு வாங்குபவர், விற்பவரின்

பெயர், முகவரி, சரக்கேற்றும் கப்பலின் பெயர் சரக்கேற்றும் துறைமுகத்தின் பெயர், கப்பலில் ஏற்றக் கூடிய சரக்கின் விவரம், கப்பல் போய்ச் சேரக்கூடிய துறைமுகத்தின் பெயர், ஏற்றுமதி, இறக்குமதி எண்கள், ஒப்பந்தத்தின் எண், இடாப்பு எண் முதலிய மற்ற இன்றியமையாத விவரங்களும் இவ்விடாப்பில் குறிக்கப்பட்டிருக்கும். நாணயக் கடிதம் அல்லது காட்சிப் பண விடையின் (Sight-draft) மூலமாக விற்பனை நிகழ்ந்திருக்கிறது என்பதும் குறிக்கப்பட்டிருக்கும். பொதிகளின் எண்ணிக்கை, சரக்கின் குறி எண்களும் குறிப்பிடப்பட்டிருக்கும். பொதிகளில் உள்ள சரக்குகளின் விவரமும், விலையும் இனம் இனமாகக் கொடுக்கப்பட்டு மொத்த விலையில் வியாபாரத் தள்ளுபடி கழிக்கப்பட்டுச் சரக்கின் நிகர மதிப்பு குறிப்பிடப்பட்டிருக்கும். மற்ற செலவுகளான கட்டுக் கூலி, சத்தம், இன்சூரன்சு, கன்சுலர் இடாப்புத் தயாரிக்கும் செலவுகள் முதலியன மொத்த மதிப்பில் சேர்க்கப் பட்டிருக்கும்.

வணிக இடாப்பு ஒரு சரக்குரிமைப் பத்திரமோ, ஆளுக்கு ஆள் மாற்றக்கூடியதோ அன்று. சரக்கு வாங்குபவருக்கும், விற்பவருக்கும் கணக்குப் பதிவியலில் ஒப்பிட்டுப் பார்ப்பதற்குத் துணைபுரிகிறது. இடாப்பிற்கும், அனுப்பும் சரக்கிற்கும் ஒப்பீடு, இடாப்பிற்கும், சரக்காணைக்கும் ஒப்பீடு, ஆக இரட்டை ஒப்பீடு நிகழ்கிறது. ஏற்றுக்கொண்ட விலையிலேயே சரக்கு விற்கப் பட்டிருக்கிறதா என்றும், சிதைவுற்ற பொருள்களின் விலைகளைக் கணிப்பதற்கும் இவ்விடாப்பு துணைபுரிகிறது. நாணயக் கடிதங்கள் இப் பேரங்களில் பண உதவி செய்யப் பயன்படுத்தப்பட்டால் பாங்குகள் இவ்விடாப்பின் தொகையை நாணயக் கடிதத்துடன் ஒத்திட்டுப் பார்க்கும். பொதுவாக இடாப்பின் தொகை நாணயக் கடிதத்தின் தொகைக்கு உட்பட்டிருக்கவேண்டும். அதிகமான தொகை இடாப்பின் சரியற்ற நிலைமையையும், விற்பனையாளர் அதிகமாக விலை விதித்திருக்கிறார்கள் என்பதையும் புலப்படுத்தும். சந்தர்ப்பத்திற்குக்குகந்தவாறு பாங்கு கொள்முதல் செய்பவருக்கு எச்சரிக்கை விடுத்துத் தவறுகளைச் சரிக்கட்டத் துணைபுரியும்.

## கான்சுலர் வழி இடாப்பு
## (The Consular Invoice)

இவ்விடாப்பு சில நாடுகளில் விரும்பப்படுகின்றன. இறக்குமதி செய்யும் நாட்டின் தூதுவர் அல்லது அவரால் அனுப்பப்பட்ட அதிகாரி இவ்விடாப்பில் கையொப்பமிட வேண்டும். இறக்குமதி செய்யும் நாட்டின் சுங்க இலாகாவினருக்குச் சரக்கு இறக்குமதி

செய்யப்படுகிறது என்பதை அறிவிக்கும் பொருட்டே இப்பட்டியல் வேண்டப்படுகிறது. இவ்விடாப்பு, அல்லது பட்டியல் ஒரு குறிப்பிட்ட படிவத்தில் உள்ளது. சரக்கு உற்பத்தி செய்த இடத்தின் விவரம், சரக்கின் இயல்பு, மதிப்பு, ஆகியவை இதில் குறிப்பிடப்பட்டிருக்கும். சுங்க இலாகாவினரிடம் தவருன விவரம் கொடுப்பது இதனுல் தவிர்க்கப்படுகிறது. சுங்க இலாகாவினரால் சரக்கு இறக்குமதியின்போது ஏற்படும் தாமதமும் இதனுல் தவிர்க்கப்படுகிறது. சரக்குகள் இறக்குமதியானதும் கட்டைப் பிரிக்காமலேயே, கான்சுலர் இடாப்பில் கண்ட மதிப்பின்படி இறக்குமதி வரி விதிக்கப்படும்.

## தோற்றுவாய்ச் சான்று
## (Certificate of Origin)

சுங்க இலாகாவினரால் சரக்கை வெளியனுப்பு முன்னரும், சுங்கவரி கணக்கிடுவதற்கு முன்னரும் இறக்குமதி செய்த சரக்குகளுக்குரிய தோற்றுவாய்ச் சான்று அளிக்கப்படவேண்டும் என்று சில நாடுகளின் சட்டங்கள் கூறுகின்றன. ஆகவே, இறக்குமதி செய்பவர் மற்ற பத்திரங்களுடன் தோற்றுவாய்ச் சான்றையும் அனுப்பும்படி ஏற்றுமதி செய்பவரைக் கேட்டுக்கொள்கிருர். சில நாடுகளிலிருந்து பகுதியாகவோ, முற்றிலுமோ இறக்குமதி செய்யப்படக்கூடாது என்ற சரக்குகளுக்கும் இச் சான்று தேவைப்படுகிறது. ஆகவே, இறக்குமதி செய்யப்படும் சரக்குகள் எந்த நாட்டில் உற்பத்தியானவை என்று சுங்க இலாகாவினருக்குத் தெரிந்திருக்கவேண்டும். சில்சமயங்களில் இடாப்பிற்குப் பின்புறமே இத் தோற்றுவாய்ச் சான்று எழுதப்பட்டிருக்கும். இப் பத்திரம் தோற்றுவாய்ச் சான்று இடாப்பாகும்.

## கட்டுப் பட்டியல்
## (Packing List)

அயல் நாட்டு வணிகத்தில் இக் கட்டுப் பட்டியல் மற்ற பத்திரங்களுடன் இணைந்திருக்கும். இப் பட்டியலில் கப்பலில் ஏற்றுமதி செய்வதற்குரிய சரக்கின் அளவு, தன்மை, தரம், விலை முதலியன குறிக்கப்பட்டிருக்கும். இறக்குமதி செய்பவர் சரக்கினை அறிந்து கொள்வதற்கும் தம் ஆணையுடன் சரக்கினை ஒப்பிட்டுப் பார்ப்பதற்கும் இப் பட்டியல் துணைபுரிகிறது. பண உதவிசெய்ய முன்வரும் பாங்கும் இப் பட்டியலைக் கேட்கும். சுங்க இலாகாவினரால் சரக்கினை விரைவில் வெளியனுப்புவதற்கும் இப் பட்டியல் பயன்படுகிறது.

## எடை அத்தாட்சிப் பத்திரம்
## (Weight Certificate)

தானியங்கள், எண்ணெய்கள் போன்ற மொத்தமாக விற்கப் படும் சரக்குகளைப் பொது எடையாளரால் (Public Weighter) கையொப்பமிடப்பட்ட எடை அத்தாட்சிப் பத்திரம் வழங்கப்பட வேண்டும்.

## உணவு, ஆய்வு அத்தாட்சிப் பத்திரம்
## (Food Inspection Certificate)

அழுகும் பொருளான மாமிசம், கொழுப்புப் பொருள்கள் முதலானவை மொத்தமாக இறக்குமதி செய்யப்படும்போது ஏற்றுமதி செய்யப்படும் நாட்டிலுள்ள உணவுப் பொருள் ஆய்வாளர்களால் அப் பொருள்களுக்கு அத்தாட்சிப் பத்திரம் வழங்கப்படவேண்டும் என்று இறக்குமதி செய்யும் நாடு வற்புறுத்தும்.

## குவியா அத்தாட்சிப் பத்திரம்
## (Non-dumping Certificate)

இப் பத்திரத்தில் சரக்கின் உள்நாட்டு, வெளிநாட்டு விலை களைக் காண்பித்து உள்நாட்டு விலையைவிட வெளிநாட்டில் சரக்குகள் குறைவான விலையில் விற்கப்படவில்லை என்பதை உணர்த்தவேண்டும்.

## துறைமுக (Dock), பண்டக உரிமையாளர் (Wharefinger's) கப்பல் அதிகாரிகளின் (Mate's Receipts) இரசீதுகள்

சரக்கேற்றிச் செல்லும் கப்பல் துறைமுகத்திற்கு வருவதற்கு முன்னரே கப்பல் கம்பெனியிடம் சரக்குகள் ஒப்படைக்கப் படுகின்றன. கப்பலில் சரக்கேற்றும் இடத்தில் சரக்கு போய்ச் சேர்ந்தவுடன் சரக்கு போய்ச்சேர்ந்ததற்கு அத்தாட்சியாகத் துறைமுக இரசீது ஒன்று கொடுக்கப்படும். ஆழமில்லாத் துறை முகங்களில் கப்பல் கரையோரம் வரமுடியாது. படகுகள்மூலமே கப்பலை அடையவேண்டும். ஆகவே, கப்பல் இரசீது (Bill of Lading) தயார் செய்யுமுன் கப்பல் அதிகாரிகளின் இரசீது (Mate's Receipt) ஒன்றைப் பெற்றுக்கொண்டு சரக்குகளைப் படகில் ஏற்றிவிடுவர். கப்பலதிகாரி சரக்குகளைக் கப்பலுக்குக் கொண்டு வந்து சேர்த்த

பின்னர் கப்பல் தலைவன் கையொப்பமிட்ட கப்பல் இரசீது (Bill of Lading) வழங்கப்படும். கப்பலதிகாரி இரசீதைக் கொடுத்து விட்டுக் கப்பல் இரசீதை வாங்கிக்கொள்ளலாம்.

## துறைமுக ஆணைச்சீட்டு (Dock Warrant) துறைமுகப் பண்டங்களின் ஆணைச்சீட்டு (Warehouse Warrants) பட்டுவாடா உத்தரவு (Delivery Order)

சரக்குகள் இறக்குமதி செய்யப்படும் துறைமுகத்தைச் சென்றடைந்த உடனேயே இறக்குமதியாளர் சரக்கினைப் பெற்றுக் கொள்ள முன் வராததால் அச் சரக்குகள் துறைமுகக் கிடங்கு களிலேயே வைக்கப்பட்டிருக்கும். சரக்கின் விலை, விவரம் எந்தத் தேதியிலிருந்து துறைமுக வாடகையை இறக்குமதியாளர் கொடுக்கவேண்டும் என்று குறிப்பிட்டுத் துறைமுக அதிகாரிகளால் இறக்குமதியாளருக்குக் கொடுக்கப்படும் கடிதமே துறைமுக ஆணைச்சீட்டு எனப்படும். துறைமுகப் பண்டங்களில் சரக்குகள் வைக்கப்பட்டிருந்தால் பண்டக ஆணைச்சீட்டு வழங்கப்படும். இப் பத்திரங்கள் மேலெழுதி மாற்றிக் கொடுக்கப்படும்.

பண்டகத்திலடைக்கப்பட்ட சரக்கினை இன்னவருக்குச் சேர்ப் பிக்கவும் என்று அதன் உரிமையாளர் குறிப்பிட்டு விடுக்கும் ஆணையே பட்டுவாடா உத்தரவு என்று கூறுவர். துறைமுக ஆணைச் சீட்டைக் கொடுத்து எல்லாச் சரக்குகளையும் ஒருமிக்க எடுத்துக் கொள்வதைக்காட்டிலும் சிறிது சிறிதாக வேண்டுமளவில் வேண்டிய ஆட்களுக்கு மாற்றிக்கொடுக்க இப் பத்திரம் பயன்படுகிறது.

## அடமானக் கடிதம் (Letter of Hypothication)

பத்திரங்கள் சேர்ந்த உண்டியலைப் பாங்கு ஏற்கும்போதோ, தள்ளுபடி செய்யும்போதோ, மாற்றித் தரும்போதோ, வாடிக்கையினரின் விருப்பத்தின்பேரில் கடன் ஆரம்பிக்கும் போதோ, வசூலுக்கு வரும் உண்டியலின் பேரில் வாடிக்கை யாளருக்குக் கடன் அளிக்கும்போதோ, பாங்கு தமது நலனைப் பாதுகாத்துக்கொள்ள இறக்குமதியாளர் உண்டியலை ஏற்கவோ, அதன்மீது பணம் செலுத்தவோ தவறினால் சரக்கை விற்றுவிடத் தமக்கு அதிகாரம் அளிக்கும் கடிதமொன்றை எழுதித் தரும்படி ஏற்றுமதியாளரைக் கேட்பது வழக்கம். இக்

கடிதத்தை அடமானக் கடிதம் (Letter of Hypothication) என்பர். இக் கடிதம் பாங்குக்கு நட்டமேற்படாமல் பாதுகாத்துக் கொள்ள வகைசெய்கிறது. இக் கடிதத்தின்மூலம் சரக்குகளைத் தன் பெயருக்கு வாடிக்கையாளர் செலவில் இன்சூரன்சு செய்யவோ சேமித்து வைக்கவோ பாங்குக்கு அதிகாரம் கிடைக்கிறது. வாடிக்கையாளர் பணம் செலுத்தத் தவறினால் பாங்கு சரக்குகளை விற்றுத் தமக்குச் சேரவேண்டிய பணத்தை எடுத்துக்கொள்ள அதிகாரம் பெறுகிறது.

அடமானக் கடிதம் ஒரு குறிப்பிட்ட நடவடிக்கையைத் தழுவித்தான் இருக்கும். ஆனால், பாங்குக்கும் வாடிக்கையினருக்கும் அடிக்கடி தொடர்ந்து பல நடவடிக்கைகள் இருக்குமானால் அனைத்துப் பின்வரும் நடவடிக்கைகளுக்கும் சேர்த்து அடமானக் கடிதம் வழங்கப்படும். பாங்குகளால் உண்டியல்களுக்காகப் பெறப்படும் இவ்வித அடமானக் கடிதங்கள் 'அடமான உண்டியல்கள்' எனப்படும்.

அடமானக் கடிதங்களில்கூட பாங்கின் சரக்குரிமைப் பத்திரங்களால் சரக்குகளுக்குரிய உரிமைகள், உண்டியல்களில் கட்டுப்படுத்தப்பட்டிருக்கும். உண்டியலில் 'பணம் செலுத்து வழிப் பத்திரங்கள்' (Document against Payment) என்று கண்டிருந்தால் பணம் செலுத்தும்வரையில் பாங்கு சரக்கினைத் தம் வசம் வைத்திருக்கும். ஆகவே, அடமானக் கடிதம் உண்டியலின் தவணை நாள்வரையில் நீடிக்கும். உண்டியலில் 'ஏற்புவழிப் பத்திரங்கள்' (Document against Accept) என்று கண்டிருந்தால் சரக்கு வாங்கியவர் உண்டியலை ஏற்றவுடனே பத்திரங்களை வாங்கியவருக்குக் கொடுத்துவிடவேண்டும். ஏற்பாளரின் வாக்குறுதி ஒன்றையே பாங்கு நம்பியிருக்கவேண்டும்.

நாணயக் கடிதங்கள் உள்ளபோது உண்டியல்கள் பாங்கின் மீதுதான் பொதுவாக எழுதப்படுகின்றன. 'ஏற்புவழிப் பத்திரங்கள்' (P/A) என்ற உண்டியலில் உண்டியல் ஏற்கப்பட்டவுடன் பத்திரங்கள் உண்டியல் எழுதப்பெற்ற பாங்கால் ஏற்புப் பாங்குகளுக்கு மாற்றப்படுகின்றன. உண்டியல் ஏற்புப் பாங்கு சரக்கனுப்பப் பெறுபவர் பணம் செலுத்தும்வரையில் சரக்கினைத் தம்வசம் வைத்திருக்கும்.

வாடிக்கையினரிடமிருந்து அடமானக் கடிதங்கள் பாங்குகளால் கீழ்க்காணும் நிபந்தனைகளில் பெறப்படுகின்றன.

1. வாடிக்கையாளரின் உண்டியலை மாற்றும் அல்லது தள்ளுபடி செய்யும் பாங்கு, அடமானக் கடிதங்கள் வாடிக்கையாளரால் கையொப்பமிட வேண்டும் என்று விரும்புகிறது.

2. இவ்வாறு வசூலாகும் உண்டியலின்மேல் கடன்பெறும் வாடிக்கையாளர் இப் பிணைப்பத்திரத்தை அளிக்கவேண்டும்.

3. வாடிக்கையாளரின் வேண்டுகோளின்படி மூன்றுமவரின் பேரில் பத்திரக் கடன்கள் பாங்கால் ஆரம்பிக்கப்படும்போது இந்த அடமானக் கடிதங்கள் வேண்டப்படுகின்றன.

## பொறுப்புரிமை இரசீது
### (Trust Receipt)

சரக்குரிமைப் பத்திரங்கள் வைத்திருக்கும் பாங்கைச் சரக்கு இறக்குமதி செய்யும் வாடிக்கையாளர் (பணம் செலுத்துவழிப் பத்திரங்கள், D/P) உண்டியல் ஏற்றுக் கொண்டு அப் பத்திரங்களைத் தமக்களிக்குமாறு வேண்டுவார். சரக்கு விற்பனையால் வரும் பணத்தைக் கொண்டு உண்டியலுக்குரிய தொகையைக் கட்டுவதற்காக வாடிக்கையினரிடமிருந்து பொறுப்புரிமை இரசீது அல்லது பொறுப்புரிமைக் கடிதம் பெற்றுக் கொண்டு அப் பத்திரங்களை வாடிக்கையினருக்கு அளிப்பார். இச் சரக்குகளின் மேல் பாங்குக்கு முழு உரிமை இருக்கிறது என்று ஏற்றுக்கொண்டு உண்டியலின் முழுத் தொகையையும் திருப்பித் தரும்வரையில் சரக்குகளையும் சரக்கு விற்பனையால் வரும் பணத்தையும் பாங்கின் நம்பிக்கைக்குப் பாத்திரமாக வைத்திருப்பதாக உறுதி எடுத்துக் கொண்டு சரக்கைப் பெற்றுக் கொள்ளும் வாடிக்கையாளர் கையொப்பமிடுவார். அனைத்து இடையூறுகளுக்கும் காப்பீடு செய்வதாகவும், காப்பீட்டுக் கழகத்திலிருந்துவரும் ஈட்டுத் தொகையையும் பாங்குக்குச் செலுத்தி விடுவதாகவும் அப் பாங்குக்கு வாடிக்கையாளர் உறுதியளிப்பார்.

சரக்கு உடனே விற்பனையாகுமென்றாலும், சரக்குரிமை அல்லாமல் விற்பனை நிகழாது என்பதாலும் இவ்வேற்பாடு பயன் தருகிறது. ஆகவே, விற்பனையாளர் சரக்கு விற்பனை செய்து உண்டியலுக்கு உரிய பணத்தொகையைக் கொடுப்பார். பாங்கும் சரக்கினைப் பாதுகாத்து, சேமித்து வைக்க வேண்டிய செலவு, ஆகிய தொல்லைகளிலிருந்து விடுபடுகிறது.

குறை: இவ்வேற்பாட்டால் பாங்குக்கு, உண்டியல் முதிர்வு தேதிக்குள், அதன் தொகையைச் செலுத்த வாடிக்கையாளருக்கு எவ்விதத் தூண்டுகோலும் இல்லை. இவ் உண்டியலில் பாங்கின் பணம் முடங்கிக் கிடக்கிறது. சரக்குகள் உடனே விற்கப்படும் என்றோ, உயர்ந்த விலையில் விற்கப்படும் என்றோ பாங்குக்கு

எவ்வித உறுதிப்பாடும் இல்லை. வாடிக்கையாளர் சரக்கினை விற்று அப் பணத்தைப் பாங்குக்குக் கொடுக்கலாம் அல்லது கொடுக்காமலும் இருக்கலாம். ஆகவே, பாங்கு தன் பிணையத்தை இழந்து வாடிக்கையாளரின் நாணயத்தையும், பணம் கொடுக்கும் திறமையையும் மட்டுமே நம்பியிருக்க வேண்டியுள்ளது. ஏற்றுமதியாளரின் இசைவில்லாமலேயே பாங்கு இறக்குமதியாளருக்குச் சரக்கினைக் கொடுத்துவிட்டால் உண்டியலுக்குரிய பணத்தை இறக்குமதியாளரிடமிருந்து வாங்கும் பொறுப்பைப் பாங்கே ஏற்கும்.

## சுங்க இலாகாப் பத்திரங்களும், வழி முறைகளும்
## (Customs Documents and Procedures)

சரக்கு ஏற்றுமதி, இறக்குமதியின்போது சுங்க இலாகா அலுவலக வழியாகக் குறிப்பிட்ட சில பத்திரங்களை அளித்துச் சரக்குகளை அனுப்புதல் வேண்டும் அல்லது எடுத்துக் கொள்ள வேண்டும். ஒரு நாட்டின் சட்ட திட்டங்களின்படி ஏற்றுமதி இறக்குமதிகளுக்குச் சுங்கவரி கட்டல் வேண்டும்.

## ஏற்றுமதிச் சரக்குப் பட்டியல்
## (Export Manifest)

கடல் வழிமூலமோ, விண் வழிமூலமோ சரக்கு ஏற்றுமதி செய்யப்படும்போது ஏற்றுமதி செய்யப்படும் அனைத்துச் சரக்குகளையும் கப்பல் பட்டியலில் (Shipping bill) குறிப்பிட வேண்டும். நில வழிமூலம் ஏற்றுமதி செய்யப்படும்போது 'ஏற்றுமதிப் பட்டியலில்' (Bill of Export) அச் சரக்குகளைப் பற்றிக் குறிப்பிட வேண்டும்.

இப் பத்திரத்தின்கீழ் ஏற்றுமதி செய்த சரக்குகள் சரியானவை என்று உறுதியளித்துக் கையொப்பமிட வேண்டும். ஏற்றுமதிக்குரிய சரக்குகள் தடையுத்தரவுக்குட்படாத சரக்குகள் என்றும், வரி ஏதாவது செலுத்தப்பட வேண்டின் அது செலுத்தப்பட்டிருக்கிறது என்றும் மன நிறைவெய்தினல் ஏற்றுமதி செய்வதற்குச் சுங்க அதிகாரிகள் அனுமதி அளிப்பர்.

கப்பல் அல்லது விண்வெளிக் கப்பல் அல்லது நிலவழி ஊர்திகளில் சரக்குகள் ஏற்றப்பட்டவுடன் அப் போக்குவரத்துச் சாதனங்களின் தலைவர்கள் சுங்க அதிகாரிகளுக்கு ஏற்றுமதிச் சரக்குப் பட்டியல் (Export Manifest) அளிப்பர். சரக்குகளின்

விவரங்கள் குறிக்கப்பட்டுக் குறிப்பிட்ட படிவத்தில் இப் பத்திரம் தயாரிக்கப்படும். பொதுவாகக் கப்பல் துறைமுகத்தைவிட்டுப் புறப்படுவதற்கு முன்னரே இப் பத்திரம் கொடுக்கப்பட வேண்டும். ஆனால் சுங்க அதிகாரிகள், கப்பல் புறப்பட்டுச் சென்ற 7 தினங்களுக்குள் இப் பத்திரம் அளிக்கப்படலாம் என்று அனுமதிக்கின்றனர். வெளிச் செல்வதற்குரிய உத்தரவு எழுத்துமூலம் அளிக்கப்படாதவரையில் கப்பல் புறப்படுவதற்கு அனுமதிக்கப் படுவதில்லை.

## இறக்குமதிச் சரக்குப் பட்டியல்
## (Import Manifest)

ஏற்றுமதி செய்யப்படும்போது சுங்க இலாகாவினருக்குச் சில பத்திரங்கள் அளிக்கப்படுவது போலவே இறக்குமதி செய்யப் படும்போது சுங்க அதிகாரிகளுக்குச் சில பத்திரங்கள் அளிக்கப்பட வேண்டும். கப்பல் துறைமுகத்தை அடைந்த 24 மணி நேரத்திற்குள் குறிப்பிட்ட படிவத்தில் கப்பலில் உள்ள அனைத்துச் சரக்குகளின் முழுப் பட்டியலையும் சுங்க அதிகாரிகளிடம் கொடுத்து விடவேண்டும். இந்த இறக்குமதிச் சரக்குப் பட்டியலில் (Import Manifest) கட்டுகளின் எண்ணிக்கை, சரக்கின் தன்மை, இயல்பு, மதிப்பு, சரக்கு அனுப்புபவர், அனுப்பப்படுபவரின் பெயர்கள், எங்கிருந்து சரக்கு வருகிறது, எங்குச் சரக்கு போய்ச் சேர வேண்டும் ஆகிய முழு விவரமும் அடங்கி இருக்கவேண்டும். சரக்கு நில வழிமூலம் வந்தால் இப் பத்திரம் இறக்குமதி அறிக்கை (Import Report) என்றழைக்கப்படும்.

இப் பத்திரத்தைப் பெற்றுக் கொண்டுதான் சரக்கு உடன் வருவதற்கும் இறக்கப்படுவதற்கும் சுங்க அதிகாரிகள் அனுமதிக்கிறார்கள். இறக்குமதிச் சரக்குப் பட்டியலில் அல்லது இறக்குமதி அறிக்கையில் காணா எச்சரக்கும் இறக்குவதற்கு அனுமதிக்கப்பட மாட்டாது. கப்பல் வருவதற்கு 14 தினங்களுக்கு முன்னதாகவே கப்பல் பதிலாள் இறக்குமதிச் சரக்குப் பட்டியலை அளிக்கலாம். துறைமுகத்தில் சுங்க அதிகாரிகளால் குறிப்பிட்ட இடங்களிலேயே சரக்குகளை ஏற்றலாம் அல்லது இறக்கலாம். உள்நாட்டுப் பயன்பாட்டிற்கும், பண்டகங்களில் சேமித்து வைப்பதற்கும், மறு கப்பலில் ஏற்றுவதற்கும் அனுமதிக்கப்படும்வரையில் சுங்க அதிகாரிகளால் அனுமதிக்கப்பட்ட நபர்களின் பொறுப்பில் இறக்குமதி செய்யப்பட்ட சரக்குகள் இருக்கவேண்டும்.

இறக்குமதிச் சரக்குப் பட்டியல் (Import Manifest) அல்லது இறக்குமதிச் சரக்கறிக்கை அளிக்கப்பட்ட பிறகு உள்நாட்டுப் பயன்பாட்டிற்காகவும் பண்டகங்களில் சேமிப்பதற்கும் குறிப்பிட்ட படிவத்தில் சரக்கு இறக்குமதியாளர் உள்நுழைவுச் சீட்டைக் (Bill of Entry) கொடுக்கவேண்டும். சில சந்தர்ப்பங்களில் இறக்குமதிச் சரக்குப் பட்டியல் அளிக்கப்படுவதற்கு முன்னரே உள் நுழைவுச் சீட்டுக் கொடுக்கப்படலாம். விற்பனையாளரிடம் இருந்து இறக்குமதியாளருக்கு வந்த கப்பல் இரசீதில் கண்டுள்ள அனைத்துச் சரக்குகளும் இந்த உள் நுழைவுச் சீட்டில் அடங்கி இருக்கவேண்டும். இச் சரக்குகள் உள்நாட்டுப் பயன்பாட்டிற்கு தடை விதிக்கப்படாதவை என்று மனநிறைவெய்திய பிறகு உள்நாட்டுப் பயன்பாட்டிற்குச் சுங்க அதிகாரிகள் அனுமதி அளிக்கின்றனர்.

## சுங்கத் தீர்வை
## (Customs Duty)

இறக்குமதி, ஏற்றுமதி செய்யப்படும் சரக்குகள் அனைத்தும் சுங்கத் தீர்வைக்கு இலக்காகின்றன. தீர்வை செலுத்தப்படுவதற்குரிய இனங்கள் எல்லாம் 'தீர்வைக்குரிய சரக்குகள்' (Dutiable goods) என்றும், தீர்வை செலுத்தப்படா இனங்கள் எல்லாம் 'தீர்வையற்ற சரக்குகள்' (Free goods) என்றும் அழைக்கப்படுகின்றன. 1934ஆம் ஆண்டு இந்தியச் சுங்கவரிச் சட்டத்தின் (Indian Tariff Act, 1934) அடிப்படையில் சுங்கவரித் தீர்வைகள் வசூலிக்கப்படுகின்றன. சுங்கவரித் தீர்வை வீதங்கள் அடிக்கடி சுங்க அதிகாரிகளால் விளம்பரப் படுத்தப்படுகின்றன. ஏற்றுமதி, இறக்குமதி வரிகள் சரக்குகளின் மதிப்பின்மீது விதிக்கப்படும்போது 'பெருமான விகித வரி' (Advalorum Duty) என்றும், அளவு மீது வரி விதிக்கப்பட்டால் 'அளவு விகித வரி' (Specific Duty) என்றும் அழைக்கப்படுகின்றன. 1962ஆம் ஆண்டு சுங்கவிதி 14ஆம் பிரிவின்கீழ்ச் சுங்கவரியின் விகிதம் நிர்ணயிக்கப்படுகிறது. சுங்கவரியின் விகிதம் இறக்குமதியாளர் அளிக்கக்கூடிய உண்மை விலையின் அடிப்படையில் இல்லாமல் பன்னாட்டு அளவில் சரக்குகள் விற்கப்படும் அல்லது வாங்கப்படும் அளவில் சுங்கவரி விகிதம் கணிக்கப்படுகிறது. விலையினை அளந்தறிய முடியாச் சரக்குகளுக்கு அவற்றின் நெருங்கிய விலையின் அடிப்படையில் வரி விதிக்கப்படுகிறது. ஏற்றுமதி, இறக்குமதியாகும் சரக்குகளின் சுங்க மதிப்பை மைய அரசு நிர்ணயிக்கலாம். அவ்வாறு நிர்ணயிக்கப்பட்ட மதிப்பின் அடிப்படையில் வரி விதிக்கப்படுகிறது. இறக்குமதி

யாளரோ, ஏற்றுமதியாளரோ எவ்விதப் பத்திரமும் விவரமும் பிறப்பிக்க முடியாத சந்தர்ப்பங்களில் அப் பத்திரங்கள் அல்லது விவரங்கள் அளிக்கப்படும்வரையில் தற்காலிக மதிப்பைக் கணிக்கலாம். இறுதி மதிப்பீட்டின்போது கூடுதல் வரி செலுத்துவதற்குகந்த பிணையத்தை வணிகர் அளிக்கவேண்டும்.

பண்டகம் (Warehouse): இறக்குமதியான பொருள்கள் இறக்குமதித் தீர்வை செலுத்தப்பட்ட பின்னரே உள்நாட்டுப் பயன்பாட்டிற்கு அனுமதிக்கப்படுகிறது. சுங்க அதிகாரிகளால் ஏற்படுத்தப்பட்ட பண்டகங்களில் பொருள்கள் சேமித்து வைக்கப்பட்டிருக்கும்வரையில் இறக்குமதித் தீர்வை செலுத்த வேண்டியதில்லை. பண்டகங்களில் இறக்குமதி செய்யப்பட்ட பொருள்களைச் சேமித்து வைத்திருக்கும் இறக்குமதியாளர்கள் கணிக்கப்பட்ட இறக்குமதித் தீர்வையின் தொகையைப்போல் இரண்டு மடங்குத் தொகைக்குப் பத்திரம் ஒன்று எழுதித் தரவேண்டும். இப் பண்டகங்களில் வைக்கப்பட்டிருக்கும் பொருள்கள் பத்திரப் பொருள்கள் (Bonded goods) என்றழைக்கப்படும். பத்திரப் பொருள்கள் சுங்க அதிகாரியின் முழுக் கட்டுப்பாட்டின்கீழ் உள்ளன. அப் பொருள்களை அவ்வதிகாரிகளின் அனுமதியின்றி வெளியே கொணர முடியாது. அழிவுற்ற பொருள்களை மற்ற பொருள்களிலிருந்து பிரித்தெடுக்கும் பொருட்டும், பொருட் சிதைவு, அழிவிற்குத் தடுப்பு நடவடிக்கை எடுக்கும் பொருட்டும், உள்நாட்டுப் பயன்பாட்டிற்கல்லாமல் விற்பனைக்காக, மாதிரி காண்பிக்கவும் குறிப்பிட்ட கட்டணம் கட்டியபிறகு பண்டகங்கள் வழிவகை செய்கின்றன. தீர்வை செலுத்தாமலேயே குறிப்பிட்ட கட்டணங்கள் செலுத்திய பிறகு பண்டகங்களில் உள்ள பொருள்கள் குறிப்பிட்ட சரக்கைத் தயாரிப்பதற்கு அனுமதிக்கப்படுகின்றன. பண்டகங்களில் உள்ள பொருள்கள் உள்நாட்டுப் பயன்பாட்டிற்கு அனுமதிக்கப்படும்போது சுங்கத் தீர்வையும், மற்ற கட்டணங்களும் கட்டப்பட வேண்டும். பண்டகப் பொருள்களை ஏற்றுமதி செய்யும் வியாபாரி கப்பல் பட்டியல் (Shipping Bill), ஏற்றுமதிப் பட்டியல்களையும் சேர்ப்பிக்க வேண்டும். இறக்குமதித் தீர்வை அல்லாமல் ஏற்றுமதி வரி, மற்ற கட்டணங்களையும் கட்டவேண்டும். பண்டகப் பொருள்களை உள்நாட்டுப் பயன்பாட்டிற்கு அனுமதிக்கப்படும்போதும் அல்லது ஏற்றுமதி செய்யப்படும்போதும் பண்டகங்களில் சேர்க்கப்பட்ட பத்திரங்கள் இறுதியாக்கப்படுகின்றன (Cancelled).

## போக்குவரத்தில் பொருள்கள்
## (Goods in Transit)

கப்பல்மூலம் அல்லது விண்வழிக் கப்பல்மூலம் இறக்குமதி செய்யப்பட்ட பொருள்களும், துறைமுகத்திற்கோ, இந்திய விமான தளத்திற்கோ இறக்குமதிப் பட்டியலில் (Import Manifest) குறிப்பிட்ட சரக்குகள் இடம்பெற, தீர்வை செலுத்தாமலேயே அனுமதிக்கப்படுகின்றன. இறக்குமதிப் பட்டியலில் குறிப்பிட்டவாறு சுங்கத் துறைமுகத்திலோ, சுங்க விமானதளத்திலோ சரக்கேற்றும் பொருட்டுப் பொருள்கள் இறக்குமதி செய்யப்படும்போது குறிப்பிட்ட படிவத்தில் மறு கப்பலில் ஏற்றுப்பட்டியல் (Bill of Transhipment) ஒன்று சேர்ப்பிக்கப்பட்ட பின்னர் தீர்வை எதுவும் செலுத்தாமலேயே கப்பலில் ஏற்ற அனுமதிக்கப்படுகின்றன. அவ்வாறு ஏற்றப்பட்ட சரக்குகளுக்கு இறுதியாகப் போய்ச் சேருமிடத்தில்தான் தீர்வை விதிக்கப்படுகிறது.

## இறக்குமதி வரி திரும்பப் பெறுதல்

இறக்குமதி செய்யப்பட்ட சரக்குகள் மறு ஏற்றுமதி செய்யப்படும்போது அச்சரக்குகள் இறக்குமதி செய்யப்பட்ட சரக்குதான் என்று சுங்க அதிகாரிகள் நம்பினுல் இறக்குமதி வரி செலுத்திய இரண்டு ஆண்டுகளுக்குள் அச்சரக்குகள் ஏற்றுமதி செய்யப்பட்டால் 98 சதவீத இறக்குமதி வரி திரும்பத் தரப்படுகிறது.

ஏற்றுமதி செய்வதற்காகப் பொருள்கள் தயாரிக்கப்படும் பொருட்டு இறக்குமதி செய்யப்பட்ட கச்சாப் பொருள்களுக்கு விதிக்கப்பட்ட இறக்குமதி வரியும் திரும்பத் தரப்படுகிறது. குறிப்பிட்ட சில இனங்களுக்குக் குறிப்பிட்ட வீதத்தில் இவ்வரி திரும்பத் தரப்படுகிறது. மற்ற இனங்களுக்கு வருவாய்த்துறையினரால் விதிக்கப்பட்ட வீதத்திலேயே திரும்பத் தரப்படுகிறது.

இந்தியாவிலிருந்து நேபாளம், சிக்கிம் நாடுகள் அல்லாமல் மற்ற நாடுகளுக்கு மறு ஏற்றுமதி செய்யப்படும்போது இறக்குமதி உரிமை அடிப்படையிலேயே சரக்கு ஏற்றுமதி செய்யப்படுகிறது என்று ஏற்றுமதிப் பட்டியலில் ஏற்றுமதியாளர் குறிப்பிட வேண்டும். ஏற்றுமதிப் பட்டியலில் சரக்கின் முழு விவரமும் குறிப்பிடப் படவேண்டும்.

## அனுமதி பெறா இறக்குமதிகள்

இந்தியாவில் எச்சரக்கை இறக்குமதி செய்ய வேண்டியிருந்தாலும் அரசின் உரிமை (licence) பெறவேண்டும். அவ்வாறு அனுமதி பெறாமல் இறக்குமதி செய்யப்படும் சரக்குகள் அனைத்தும் அனுமதி பெறா இறக்குமதிகள் எனப்படும். விவரம், இயல்பு, மதிப்பு, ஆகியவை அனுமதிச் சீட்டில் கண்டவாறு இல்லாவிட்டாலும் அனுமதி பெறுவதற்கு முன்னரோ, அனுமதி வழங்கிய காலத்திற்குப் பின்னரோ இறக்குமதி செய்யப்பட்ட சரக்குகளும் அனுமதி பெறா இறக்குமதியாகக் கருதப்படும்.

## தடையற்ற துறைமுகம் அல்லது தடையற்ற எல்லை (Free Port or Zone)

சுங்க விதிகளின்படி மைய அரசினால் கப்பல் துறைமுகங்களைக் கப்பல் சென்றடைய வேண்டும். இத் துறைமுகங்களில் மட்டுமே ஏற்றுமதிக்காகக் கப்பலில் சரக்குகள் ஏற்றப்படுகின்றன. உள் நாட்டுப் பயன்பாட்டிற்காகவும் சரக்குகள் இறக்குமதி செய்யப்படுகின்றன. இறக்குமதித் தீர்வையும் செலுத்தப்பட வேண்டும். ஒரு துறைமுகம் தடையற்ற துறைமுகம் (Free Port) என்றோ, தடையற்ற எல்லை (Free Zone) என்றோ அறிவிக்கப்படலாம். அனைத்து நாடுகளும் துறைமுகக் கட்டணங்கள் தவிர்த்து மற்ற எந்தவிதத் தீர்வையும் செலுத்தாமல் கப்பல்களில் சரக்குகள் ஏற்றுதல், இறக்குதல் செய்யப்படும் துறைமுகத்திற்குத் தடையற்ற துறைமுகம் (Free Port) என்று பெயர். தடையற்ற எல்லையிலும் (Free Zone) வெளி நாடுகளுடன் வியாபாரம் நிகழ்த்தச் சரக்குகள் ஏற்றுமதி செய்யப்படுகின்றன; இறக்குமதி செய்யப்படுகின்றன. சுங்க விதிகள் இவ்விடங்களுக்குப் பொருந்தா. இந்தியாவில் குஜராத்திலுள்ள 'காண்டல்யா', வங்காளத்தில் உள்ள 'கால்டியா' என்ற இடங்களும் தடையற்ற எல்லையாக உள்ளன.

தடையற்ற வாணிபம் நிகழும் பொருட்டுத் தடையில்லாமல் சரக்குகள் உள்வரவும், வெளிச் செல்லவும் தடையற்ற துறைமுகமும் தடையற்ற எல்லையும் இருக்கின்றன. இவ்வாறு தங்குதடையற்ற இறக்குமதி, ஏற்றுமதிகள் பன்னாட்டு வாணிகத்தை ஊக்குவிக்கின்றன. இந்தியாவிலிருந்து ஏற்றுமதிகளை ஊக்குவிக்கும் பொருட்டுத் தடையற்ற துறைமுகம், தடையற்ற வியாபார எல்லைகளை ஏற்படுத்த 1957-ல் இந்திய ஏற்றுமதிப் பெருக்கக் குழு (Export Promotion Committee) பரிந்துரைத்தது. ஒரு நாட்டின் தடையற்ற எல்லையிலிருந்து அதே நாட்

டிலுள்ள மற்றொரு துறைமுகத்திற்குச் செல்லும் சரக்குகளுக்குச் சுங்கத் தீர்வைகள் உண்டு. ஆனால், தடையற்ற எல்லையிலிருந்து வேறொரு நாட்டிற்குச் செல்லும் சரக்குகளுக்குச் சுங்கத் தீர்வை இல்லை. அயல் நாடுகளிலிருந்து தடையற்ற எல்லைக்குள் ஏற்றுமதி செய்யப்படுவதற்காகவும், சரக்குகள் தயாரிக்கப்படும் பொருட்டும் தடையில்லாமல் மூலதனப் பொருள்கள் இறக்குமதி செய்யப் படுகின்றன. குஜராத்தில் உள்ள காண்டல்யா தடையற்ற துறைமுகத்தில் நவீன துறைமுகங்களுக்குள்ள அனைத்து வசதி களும் உள்ளன.

## தடையற்ற வணிக எல்லையால் தயாரிப்பாளருக்கு உள்ள நலன்கள்

1. மூலதனப் பொருள்கள், பகுதிப் பொருள்கள், கச்சாப் பொருள்களை இறக்குமதி செய்வதற்குத் தயாரிப்பாளர்கள் இறக்குமதித் தீர்வை செலுத்த வேண்டியதில்லை. இப் பொருள்கள் ஏற்றுமதிப் பொருள்கள் தயாரிக்கப் பயன்படுத்தப்பட்டால் தடை யற்ற எல்லைக்கப்பாற்பட்ட தயாரிப்பாளர்கள் தாங்கள் செலுத்திய இறக்குமதித் தீர்வையைத் திரும்பப் பெறலாம். ஆனால், இத் தீர்வையுடன் அவர்கள் மூலதனம் பிணைக்கப்பட்டி ருந்தால் தீர்வை செலுத்தித்தான் தீரவேண்டும். உற்பத்தியின் போது ஏற்படும் கழிவுகளுக்குள்ள தீர்வையும் இதனால் சேமிக்கப் படுகிறது.

2. தடையற்ற எல்லையில் பொருள்கள் இறக்குமதி செய்ய எவ்விதப் பங்கொதுக்கீடு முறையும் (quotas) இல்லை. இறக்குமதிச் சரக்குகளுக்கு எவ்விதத் தடையும் தீர்வையும் இல்லை.

3. மறு ஏற்றுமதி (entrepot) வணிகத்திற்குத் தடையற்ற எல்லை மிகவும் உகந்தது. மறு ஏற்றுமதிக்காக இறக்குமதி செய்யும் வியாபாரிகள் எவ்விதத் தீர்வையும் செலுத்தாமலும் தடையில்லாமலும் சுங்க விதிமுறைகளைக் கடைப் பிடிக்காமலும் வாணிபம் புரியலாம்.

4. சில ஒழுங்கு முறைகளைக் கடைப்பிடிப்பதால் உண் டாகும் நடைமுறைத் தடைகளும் தவிர்க்கப்படுகின்றன.

தடையற்ற துறைமுகம், தடையற்ற எல்லைகள் இவ்வாறு ஏற்றுமதியைப் பெருக்குகின்றன.

நமது நாட்டின் முன்னேற்றத் திட்டங்கள் அனைத்தும் அயல் நாட்டுச் செலாவணியின் கிடைப்பருமையால் மிகவும் பாதிக்கப் படுகின்றன. அயல் நாடுகளின் உதவியால் இவ்வின்னல் ஓரளவு தவிர்க்கப்படுகின்றது. ஆனால், இது ஒரு குறுங்கால நடவடிக்கையே யாகும். நம்முடைய பொருளாதார வளம் பெருகி ஏற்றுமதி அதிகரித்தால்தான் நெடுங்கால அயல் நாட்டுச் செலாவணித் தட்டுப் பாடுகள் நீங்கும். தடையற்ற துறைமுகம், தடையற்ற எல்லைகள் இரண்டும் பொருளாதார முன்னேற்றப் பாதைக்கு மிகவும் இன்றியமையாத அடிச்சுவடுகளாகும்.

## நாணய நிலைமையும் (Credit Status) நாணயக் காப்பீடும் (Credit Insurance)

அயல் நாட்டு வியாபாரியுடன் வாணிபம் தொடங்குவதற்கு அவ் வியாபாரி நாணயத்திலும் நிதிநிலைமையிலும் வகையுள்ளவரா என்று ஏற்றுமதியாளர் தனக்குத்தானே மனநிறைவெய்த வேண்டும். ஏற்றுமதி வணிகத்தில் இறக்குமதியாளருக்குக் கடனுக் காகவும் சரக்குகள் அனுப்ப வேண்டியுள்ளதால் வாங்குபவர் தவறிழைக்க மாட்டார் என்ற நம்பிக்கைக் கொள்ளவேண்டும். ஏனென்றால், தவறிழைக்கும்போது பணத்தைப் பெறுவதென்பது மிகவும் கடினம். ஆகவே, ஏற்றுமதி செய்பவர்கள் இறக்குமதி செய்பவர்களின் முழு விவரத்தையும் வியாபாரம் தொடங்கும் முன் அறிந்திருக்க வேண்டும். இவ் விவரங்களைக் கண்டறியப் பலவிதப் பதிலாட்கள் உள்ளனர். இந் நாணய இடர்ப்பாட்டைச் சரிக்கட்ட நாணயக் காப்பீட்டுக் கழகங்களும் பல நாடுகளில் உள்ளன.

## இறக்குமதியாளரின் நாணய நிலைமை (Credit Status of the Importer) பாங்குகளின் அறிக்கைகள் (Banker's Reports)

ஆணை பிறப்பிக்கப்பட்ட சரக்குகளின் முழு மதிப்பிற்கோ, ஒரு பகுதிக்கோ முன்பணம் செலுத்த வேண்டுமென்று கோரி ஏற்றுமதியாளர் தன்னைக் காத்துக் கொள்ளலாம். பொதுவாக இறக்குமதிச் சரக்குகளுக்காகப் பிறப்பிக்கப்படும் முதல் ஆணைகள் பெரும்பாலும் முன் பணத்துடனே இருக்கின்றன. தொடர்ந்துவரும் சில ஆணைகளும் அவ்வாறு நிகழலாம். ஆனால், முன்பணம் செலுத்தாமல் வரும் மிகுதியான ஆணைகளை நிறை

வேற்ற வேண்டும் அல்லது வேண்டாம் என்பதை ஏற்றுமதியாளரே தீர்மானிக்கவேண்டும். ஏற்றுமதி செய்யும் ஏற்றுமதியாளர் முன்னெச்சரிக்கையாகச் சரக்கினை ஏற்றுமதி செய்வதற்கு முன்னர் பணத்தைச் செலுத்த வேண்டுமென்றும் சரக்கு வாங்குபவரை வற்புறுத்தலாம். அவ்வாறு வற்புறுத்தும்போது விற்பனையாளர் வாடிக்கையாளரை இழக்க நேரிடும். 'பணம் செலுத்துவழிப் பத்திரங்கள்' (Documents against payments) என்ற முறையில் ஏற்றுமதி செய்து ஓரளவு தன்னை ஏற்றுமதியாளர் காத்தும் கொள்ளலாம். இம் முறையிலும் குறைபாடுள்ளது. தன்னை முழுவதும் காத்துக்கொள்ள இறக்குமதியாளரின் தொழில் நற்பெயர் (good-will), நிதி நிலைமை (financial position) ஆகிய வற்றை அறிந்துதான் வகையுள்ள வாடிக்கையாளர் என்று மனநிறைவெய்திய பிறகு அவருடன் வியாபாரம் தொடங்கலாம்.

வாடிக்கையாளரின் தொழில் நேர்மையையும், நிதி நிலைமை யையும் அறிய விற்பனையாளருக்குப் பலவித வழிவகைகள் உள்ளன. வாடிக்கையாளருடைய பாங்கின் கருத்தினை அறிவது அவ்ற்றுள் ஒரு வழியாகும். ஏற்றுமதியாளருடன் கணக்குத் தொடங்கும் சரக்கு வாங்குபவர், அவரின் வணிகக் குறிப்புக் களையும் அவருடைய பாங்கின் பெயர் முகவரிகளையும் அனுப்புவது வழக்கம். அவ்வாறு அனுப்பாவிடில் அவற்றை அனுப்பும்படி அவர் வேண்டப்படுவார். இதன் பிறகு ஏற்றுமதியாளர் அப் பாங்கை அணுகிச் சரக்கு வாங்குபவரின் தொழில் நிலைமையையும் நிதி நிலைமையையும் அறிவார்.

விவரம் அறிய முற்படும்போது எந்த அளவில் தான் வாங்கு பவருடன் வணிக நடவடிக்கையில் ஈடுபடப் போகிறார் என்பதை வாடிக்கையாளர் குறிப்பிடுவார். வாங்குபவர் கேட்கும் கடன் அளவு, காலத்தையும் குறிப்பிடுகிறார். இறக்குமதியாளர் அக் கடன்தொகைக்கும், காலத்திற்கும் உகந்தவரா என்று பாங்கின் கருத்தினை வேண்டுவார். குறிப்பிட்ட காலத்திற்குப் பின்னரும் சரக்கேற்றுதல் அதிகரிக்கும். ஆகவே, இக் காலமும் தொகையும் மிகவும் முக்கியமானதாகும். விவரம் அளிக்கும் பாங்குகள் பொதுவாக வாடிக்கையாளரின் நன்னடத்தை, நிதி நிலைமை பற்றிய உண்மைச் செய்திகளையே அளிக்கும். ஆனால், பாங்கின் பதில்கள் அவை பொறுப்பேற்றுக் கொள்ளாதவகையில் அமைந் திருக்கும். பாங்கின் வாடிக்கையாளரைப் பற்றிய செய்தி யாகையால் பொதுவாக வாடிக்கையாளருக்கெதிராக அப் பதில்கள் இரா. பாங்கின் அறிக்கை தவறாகவோ, தப்புவழியினைக் காட்டுவதாகவோ இருக்கமுடியாது. இவ் வறிக்கைகள் ஏற்றுமதி

யாளரின் நலனைப் பாதுகாத்து வணிக நடவடிக்கைகளுக்குப் போது மானதாக இருத்தல் வேண்டும். இடர்ப்பாடுகள் மிகுதியாக உள்ளபோது மற்ற செய்திகளும் முக்கியமானவை.

விற்பனையாளர் வாடிக்கையாளரைப்பற்றிய முழு விவரங் களையும் அந் நாள்வரைப் பொதுவாக அறிந்திருப்பார். பாங்கின் அறிக்கைகள் அவற்றிற்குத் துணையாக இருக்கும். இறக்குமதி செய்யும் நிறுவனத்திலுள்ள மாற்றல்கள், புதிய கூட்டாளிகள், இயக்குநர்களின் நிதி, பொது நிலைமைகளையும் அறியவேண்டும். வரையறுத்த கம்பெனிகளின் இருப்புநிலைக் குறிப்பு (Balance Sheets) களையும் அறியவேண்டும்.

## வாடிக்கையாளரின் விவரம் அறிய மற்ற வழிகள்

அயல் நாட்டு நிறுவனங்களுடன் தொழில் தொடர்பு கொள்ளும் ஏற்றுமதி நிறுவனங்கள் அந்நிறுவனங்களைப் பற்றிய செய்தியினை அறிந்து கொள்ளப் பல்வேறு வழிகள் உள்ளன. மற்ற நாடுகளில் கட்டணப் பணியாக நாணயத் தகவல்களை அளிக்கத் தனித்துறைகள் உள்ளன. அயல் நாட்டிலுள்ள நிறு வனங்களின் நிதி நிலைமை, தொழில் அளவு மற்ற தன்மைகளுக் குகந்தவாறு தரத்திற்குகந்தவாறு இப் பணியகங்கள் பதிவு செய்து கொண்டிருக்கின்றன. அயல் நாட்டு நிறுவனத்தைப் பற்றிய சிறப்புத் தகவல்களைக் கட்டணம் செலுத்துபவரின் விருப்பத்திற்கு அளிக்கிறது. இப் பணிகள் இந்திய ஏற்றுமதியாளர் களுக்குக் கிடைக்கா.

அயல் நாட்டிலுள்ள இறக்குமதியாளரின் நாணய நிலைமையைப் பற்றி அந்நாட்டிலுள்ள ஏற்றுமதியாளர்கள்மூலம் அறியலாம். இறக்குமதி நிறுவனம் அந்நாட்டிலுள்ள மற்ற ஏற்றுமதியாளர்கள் தயாரிப்பாளர்களின் பெயர்களையும் முகவரிகளையும் வணிகக் குறிப்பாகத் தருகிறது. வணிகர்கள் பொதுவாக மற்ற வணிகர் களுக்கு இவ்வகையில் துணைபுரிய இசைகின்றனர்.

அயல் நாட்டு நிறுவனங்களின் நேர்மை, தொழில் நற்பெயர், நிதி நிலைமைகளை அறிவதற்கு வியாபாரச் சங்கங்கள், செய்தித்தாள் நிறுவனங்கள், ஏற்றுமதி நிறுவனங்களின் அயல் நாட்டு அங்காடி நிலைமைகள், இறக்குமதியாளர்களின் விவரங்கள்பற்றிய அரசு அறிக்கையும் மிகவும் இன்றியமையாதவை ஆகும்.

இந்தியாவின் வணிகச் செய்தி, புள்ளிவிவர இயக்குநர் தலைவரால் (Director General of Commercial Intelligence and

Statistics) பிரசுரிக்கப்படும், இந்திய வணிகச் செய்தி ஏட்டில் (Indian Trade Journal) மற்ற விவரங்களுடன் அயல் நாட்டிலிருந்து வரும் வணிகக் குறிப்புக்களின் விவரங்களையும் வெளிப்படுத்து கிறது. மேலும், இந்திய அரசு அயல் நாடுகளில் வணிகப் பேராட் களையும் (Trade Representatives) கொண்டுள்ளது. மற்ற நாடு களில் உள்ள நம்பிக்கை வாய்ந்த இந்தியச் சரக்கிறக்குமதி யாளர்கள் பற்றிய விவரங்களை அவர்கள் அளிப்பார்கள். மேலும், அயல் நாடுகளிலுள்ள கடன்களைச் சரிக்கட்டவும் கொடுபடாக் கடன்களை வசூலிக்கவும், இந் நிறுவனங்கள் துணைபுரிகின்றன. இந் நிறுவனங்கள் அயல் நாட்டு வணிகர்களைப்பற்றிய நாணய அறிக்கை அல்லாமல் வேறு பல முக்கியமான உதவிகள் புரி வதாலும் இந்திய ஏற்றுமதியாளர்கள் இந்நிறுவனங்கள்மூலம் சிறப்பான உதவிகளைப் பெறுகின்றனர். இவ்வாறு கிடைக்கும் அனைத்துவகை விவரங்களும் ஒத்திட்டுப் பார்க்கப்படுகின்றன. இதன் பிறகு இறக்குமதியாளர் நன்னடத்தை, நிதி நிலைமை முதலியவற்றைப் பொறுத்து அவருக்கு வழங்கப்படும் கடன் அளவும், காலமும் நிர்ணயிக்கப்படுகிறது. நிர்ணயிக்கப்பட்ட வரம்பானது அவ்வப்போது கிடைக்கும் விவரத்திற்குகந்தவாறு புதுப்பிக்கப்படுகிறது.

## நாணய இடர்ப்பாட்டைத் தவிர்க்கும் காப்பீடு
## (Insurance against Credit Risk)

கடன் காப்பீடு (Credit Insurance) மூலம் இருநாடுகளிடையே வாணிபம் மிகவும் மேலோங்குகிறது. இறக்குமதியாளரின் முறிவாலும் (Insolvency — திவாலாதல்) மற்ற காரணங்க ளாலும் பணம் கொடுக்க இயலாமை ஏற்றுமதி வணிகத்திற்குள்ள மிகுந்த தடையாகும். இறக்குமதியாளரால் நாணய நிலைமை பற்றிச் சாதகமான செய்திகள் ஏற்றுமதியாளருக்குக் கிடைத்த போதிலும் அவரிடம் வாணிபம் தொடங்கிய பிறகு இறக்குமதி யாளரின் தொழிலிலும் வணிக நாடுகளுக்கிடையே உள்ள அரசியல் பொருளாதார நிலைமைகளில் ஏற்படும் மாறுதல்களும் இறக்குமதியாளர் பணம் கொடுக்க இயலாமல் செய்யலாம். ஆகவே, இந்த நட்ட இடர்ப்பாட்டைக் கணக்கிட்டால் அயல் நாட்டு வணிகத்தில் மந்த நிலைமையை உண்டாக்கும் தயாரிப்பாளர்கள், ஏற்றுமதியாளர்கள், நிதியகங்கள் போன்ற வற்றிற்கும் இந்த நட்டங்களுக்கும் எதிராக ஆதரவளிப்பதே கடன் காப்பீட்டின் (Credit Insurance) முக்கிய நோக்கமாகும். பல நாடுகளில் தற்போது பல தனியார் நிறுவனங்களாலும்,

அரசுத் துறையினராலும் கடன் காப்பீடு அளிக்கப்படுகிறது. இந்தியாவில் பொதுத்துறையில் ஏற்றுமதிக் கடன், உத்தரவாதக் கார்ப்பரேஷன் ஏற்றுமதித் தடைகளுக்கெதிராகக் காப்பீடு அளிக்கிறது.

## கடன் இடர்ப்பாட்டின் தன்மைகள்

உள்நாட்டு வணிகத்தைவிட அயல் நாட்டு வணிகத்தில் சரக்கு விற்கும்போது மிகுந்த இடர்ப்பாடுகள் உள்ளன. வழக்கமான வணிக இடர்ப்பாடான கொள்முதல் செய்பவரின் திவாலாகும் (முறிவு) தன்மை ஒன்று உண்டு. வணிக இடர்ப்பாடல்லாமல் இறக்குமதி ஏற்றுமதியாளர்களின் கட்டுப்பாடுகளுக்கடங்காத பல இடர்ப்பாடுகளும் பன்னாட்டு வணிகத்திலுள்ளன. மாற்றுக் கட்டுப்பாடுகளாலும், இறக்குமதி அல்லது ஏற்றுமதி நாடடிலோ செல்லுகள் கட்டுப்பாடுகளாலும், ஏற்றுமதியாளர் தனக்குச் சேர வேண்டிய செல்லுகளைப் பெறுதல் கடினமாக உள்ளது. போர், புரட்சி, மற்ற அரசியல் புரட்சிகளும் இன்னல்களை ஏற்படுத்தி ஏற்றுமதியாளருக்கு நட்டங்களை உண்டாக்கலாம். இயற்கை இடையூறுகளான பூகம்பம், சூறுவளிக் காற்று முதலியன மேற்கண்ட பாதிப்பை உண்டாக்கலாம். இச்செயல்கள் நடைமுறை வணிகத்தில் புகுந்து ஏற்றுமதியாளருக்கு நட்டத்தை விளைவிக்கிறது.

## ஏற்றுமதியாளருக்குள்ள இடர்களை எதிர்த்துக் காப்பீடு

1. இறக்குமதியாளரின் திவால் (முறிவு) (Insolvency).

2. தவணைத் தேதியிலோ, குறிப்பிட்ட தேதிக்குள்ளோ பொருளை ஏற்றுக்கொண்ட பிறகு இறக்குமதியாளர் பணம் கொடுக்கத் தவறுதல் அல்லது மறுத்தல்.

3. இறக்குமதியாளரின் நாடு, ஏற்றுமதி செய்யும் நாட்டிற்குப் பணம் அனுப்புவதில் தடை அல்லது தாமதமேற்படுத்துதல்.

4. இறக்குமதி செய்யும் நாட்டில் புதிய இறக்குமதி உரிமைக் கட்டுப்பாடு அல்லது சரியான இறக்குமதி உரிமைகளையும் இறுதியாக்கல், ஏற்றுமதி செய்யும் நாட்டில் புதிய ஏற்றுமதி உரிமைக் கட்டுப்பாடு அல்லது ஏற்றுமதி உரிமையை இறுதியாக்கல் அல்லது புதுப்பித்துத் தராமல் இருத்தல்.

5. கடற் பயணத்தில் திடீரென்று ஏற்படும் இடர்ப் பாட்டால் உண்டாகும் திடீர்ச் செலவுகளை இறக்குமதியாளரிடமிருந்து வசூலிக்க முடியாது இருத்தல்.

6. இறக்குமதியாளர், ஏற்றுமதியாளர் நாடுகளுக்கிடையே மூளும் போர்.

7. இறக்குமதி நாட்டிற்குள் எழும் போர், புரட்சி, உள் நாட்டுக் கிளர்ச்சி.

8. இறக்குமதியாளர் நாட்டிலுள்ள சரக்கினைச் சேர்ப்பிப்பதற்குப் போரினால் ஏற்படும் தடைகளும், கட்டுப்பாடுகளும்.

9. உற்பத்தி செய்த நாட்டிலிருந்து சரக்கினை எடுக்கப் போரினால் ஏற்படும் தடைகளும், கட்டுப்பாடுகளும்.

10. இறக்குமதி ஏற்றுமதியாளர் கட்டுப்பாட்டிற்கு அப்பாற்பட்டு ஏற்றுமதியாளர் நாட்டிற்கு வெளியே நிகழும் நட்டங்கள்.

## ஏற்றுமதிக் கடன் காப்பீடு
## (Export Credit Insurance)

பன்னாட்டு வணிகத்தில் ஏற்றுமதிக் கடன்களில் ஏற்படும் நட்டங்களிலிருந்து ஏற்றுமதிக் கடன் காப்பீடு (Export Credit Insurance) பாதுகாப்பு அளிக்கிறது. இவ்விதக் காப்பீடு முதன் முதலாக ஜெர்மனியிலும், அமெரிக்காவிலும் ஏற்பட்டது. பிறகு இங்கிலாந்து, ஜப்பான், இந்தியா போன்ற நாடுகளிலும் இக்காப்பீடு தொடங்கப்பட்டிருக்கிறது. நிதி உதவி அளிப்பதன் மூலம் ஏற்றுமதியை இது பெருக்குகிறது.

நிறைகள்: 1. அயல் நாட்டுச் செலுத்து நிலைகளில் உள்ள பற்றுக் குறைகளை ஏற்றுமதியைப் பெருக்குவதன்மூலம் நீக்குகிறது.

2. விற்பனையாளருக்குப் பணம் கிடைக்குமென்ற உறுதி அளிப்பதன்மூலம் ஏற்றுமதியாளரைப் புதிய ஒப்பந்தங்களிலும் புதிய அங்காடிகளிலும் இறங்கத் தூண்டுகிறது.

3. சந்தை ஆராய்ச்சிச் செலவின் ஒரு பகுதியை ஏற்றுக் கொண்டு ஏற்றுமதியாளர், தயாரிப்பாளர் இருவரையும் இம் மாதிரியான இலாப அங்காடிக்குரிய தொடக்க வேலைகளில் ஈடுபடச் செய்கிறது.

4. இறக்குமதி செய்பவர் திவாலாகும்போது ஏற்றுமதி யாளருக்கு ஏற்படும் நட்டத்தைச் சரிக்கட்டுகிறது.

5. காப்பீட்டாளரின் உறுதிப்பாடு உண்டியலின் சிறப்பை மிகுதிப்படுத்துவதால் சிறந்த வீதத்தில் அதனைத் தள்ளுபடி செய்து கொள்ளலாம்.

6. கடன் காப்பீடு, பாங்குகளுக்கும் கீழ்க்கண்ட வகையில் துணைபுரிகின்றன.

i. அயல் நாடுகளிலுள்ள இறக்குமதியாளர்கள் எழுதும் உண்டியலை மாற்றுதல்,

ii. ஏற்றுமதி அனுப்பீடுகளின் பெயரில் கடன் வழங்குதல்,

iii. நீண்ட காலங்களுக்கு வணிகர்களுக்கு ஏற்புக் கடன்கள் (Acceptance credit) அளித்தல்.

# 7. அந்நியச் செலாவணிகள் மாற்று விகிதம் நிர்ணயித்தல்

(Foreign Exchange)

## அயல் நாட்டு மாற்று வீதம்
## (Foreign Exchange Rate)

அயல் நாட்டு அங்காடியில் வாணிபம் ஒரு குறிப்பிட்ட மாற்று வீதத்தில் செயல்படுகிறது. ஒரு மாற்று வணிகர் அயல் நாட்டுச் செலாவணிப் பணத்தின் பண விடையை (draft) ஒரு வாடிக்கை யாளருக்கு விற்கும்போதோ, அவரிடமிருந்து அதனை வாங்கும்போதோ மாற்று வீதத்தைக் குறிப்பிடுகிறார் (quotes). அவ்வடிப்படையில் உள்நாட்டுச் செலாவணிப் பணத்தின் விலை நிர்ணயிக்கப்படுகிறது. (எ.கா.): இந்தியாவிலுள்ள நாணய மாற்றுப் பாங்கு ஒன்று இங்கிலாந்தில் செலுத்தப்படும் பொருட்டு இந்திய இறக்குமதியாளருக்கு 1,000 பவுண்டுகளுக்குரிய பண விடையை (draft) விற்கிறார் என்று கொள்வோம். ஸ்டெர்லிங்கிக்கும் ரூபாய்க்கும் உள்ள வீதம் $13\frac{1}{3}$ பென்னிகள் = ஒரு ரூபாய் என்று குறிப்பிட்டால் வாடிக்கையாளர் 1,000 பவுண்டுகளுக்கு ரூ. 18,000 கொடுக்க வேண்டிவரும். இரண்டு செலாவணிப் பணங்களுக்கும் உள்ள மாற்று வீதமானது ஒரு நாட்டுப் பண அலகிற்கு ஈடாக மற்றொரு நாட்டுப் பண அலகில் கொடுக்கக்கூடிய விலையாகும்.

## மாற்று வீதம் குறிப்பிடல்
## (Quotation of Exchange Rate)

கீழ்க்கண்ட ஏதாவது ஒரு முறையில் இரண்டு செலாவணி களுக்கு இடையே உள்ள மாற்று வீதத்தைக் குறிப்பிட வேண்டும். உள்நாட்டுச் செலாவணிப் பண அலகிற்கீடாக அயல் நாட்டுக்குச்

செலாவணிப் பண அலகின் விலையைக் குறிப்பிட வேண்டும் அல்லது ஓர் அயல் நாட்டுச் செலாவணிப் பண அலகுக்கு ஈடாக எவ்வளவு உள்நாட்டுச் செலாவணிப் பண அலகு என்று குறிப்பிட வேண்டும். இந்தியாவில் ரூபாய்—டாலர் விகிதம் ரூ. 7·50-க்கு ஒரு டாலர் என்றும், ரூபாய்-ஸ்டெர்லிங் விகிதம் ரூ. 1-க்கு 13·33 பென்னிகள் என்றும் மாற்று விகிதம் குறிப்பிடப்பட்டிருக்கிறது. பிரிட்டனில் இது பென்னி விகிதம் அதாவது இவ்வளவு பென்னிகளுக்கு இவ்வளவு அயல் நாட்டுச் செலாவணிப் பணம் என்றும் குறிப்பிடப்படும். அவை நேர்முக அல்லது நிலையான விகிதம் என்றும் மறைமுக அல்லது நிலையில்லா விகிதம் என்றும் குறிப்பிடப் பட்டிருக்கின்றன.

அமெரிக்காவில் மாற்று வீதங்களனைத்தும் அயல் நாட்டுச் செலாவணிப் பண அலகுகளின் விலையை டாலர்களிலும், சென்டுகளிலுமே குறிப்பிடப்படுகின்றன, ஆனல், பிரிட்டனில் மாற்று வீதங்கள் அனைத்தும் ஒரு பவுண்டு ஸ்டெர்லிங்குக்கு எவ்வளவு அளவு அயல் நாட்டுச் செலாவணிப் பணம் என்று நிர்ணயிக்கப் பட்டிருக்கின்றன. ரூபாய்-ஸ்டெர்லிங் விகிதம் உயரும்போது ரூபாய் அருமைத்தன்மை (dearer) அடைகிறது. ரூபாய்-டாலர் விகிதம் உயரும்போது ரூபாய் மலிவுத்தன்மை (cheaper) அடைகிறது.

அயல் நாட்டு மாற்று வணிகர்கள் எந்த விகிதத்தில் விற்பார்கள், எந்த விகிதத்தில் வாங்குவார்கள் என்ற இரண்டு விகிதங்களைக் குறிப்பிடுவார்கள். இவ்விரண்டு விகிதங்களுக்கிடையே உள்ள வேறுபாடே அவர்களுக்குரிய இலாபமாகும்.

(எ.கா.): 1931-ல் பொன் திட்டம் இருந்த காலத்தில் அமெரிக்காவுக்கும் பிரிட்டனுக்கும் இருந்த மாற்று வீதத்தைக் காண்போம். இலண்டன்-நியூயார்க் விகிதம் \$ 4·84 $\frac{29}{32}$–4·84 $\frac{31}{32}$ டாலர்கள், இலண்டன்-பாரிஸ் விகிதம் 124·10-124·15 ஃபிராங்குகள் என்று கொள்வோம். இரண்டு எண்களுக்கும் முதன்மையாக விளங்குவது மற்றவற்றைவிடக் குறைவாக உள்ளது, அதாவது விற்பனை விலையாகும் (Selling price). இரண்டாவதாக உள்ள எண்கள் மற்றவற்றைவிட அதிகமாக உள்ளன, அதாவது கொள்முதல் விலையாகும் (Buying price). விற்பனையின்போது வணிகர்கள் எவ்வளவு குறைவான டாலர்கள் அல்லது ஃபிராங்குகளைக் கொடுக்க முடியுமோ அவ்வளவைக் கொடுத்து வாங்கும் போது எவ்வளவு அதிகமான டாலர்கள் அல்லது ஃபிராங்குகளை வாங்க முடியுமோ அவ்வளவையும் வாங்குகிறார்கள். அதாவது

அவர்கள் வாங்கும்போது கொடுப்பதைவிட, விற்கும்போது குறைவான அயல் நாட்டுச் செலாவணிகளைக் கொடுக்கிறார்கள். இவ்விரண்டு எண்களுக்கும் இடையேயுள்ள வேறுபாடு $\frac{1}{16}$ சென்டுகளோ, 0·05 ஃபிராங்குகளோ ஆகும். இவ்வேறுபாடே அயல் நாட்டுச் செலாவணி மாற்றுப் பாங்குகளுக்குக் கிடைக்கும் இலாபமாகும்.

## நீண்டகால, குறுங்கால விகிதங்கள் (Long and Short Time Rates)

பன்னாட்டுச் செல்லுகள் பற்பலவிதக் கடன் பத்திரங்கள் மூலம் செலுத்தப்படுகின்றன. கால முதிர்ச்சியில் ஒவ்வொன்றும் மாறுபடுகிறது. ஆகவே வெவ்வேறு கடன் பத்திரங்களுக்கும் பாங்குகள் வெவ்வேறு மாற்று விகிதத்தைக் குறிப்பிடுகின்றன. ஒரு நாட்டிலிருந்து மற்றொரு நாட்டுக்கு உடனடியாகப் பணம் அனுப்புவதற்குத் தந்தி மாற்றத்தைப் (Telegraphic transfer) பயன்படுத்தலாம். தந்தி மாற்றவிலைதான் மற்றவகை உண்டியல்கள் மாற்று விலைகளைவிட மிகுதியானது. உண்டியலின் கால நீட்டிப்பிற்குகந்தவாறு அதன் மாற்றுவிகித விலை குறைகிறது.

முதல் உலகப் போருக்குமுன் இலண்டனில் பவுண்டுக்கும் டாலருக்கும் இருந்த மாற்று விகிதம் பின்வருமாறு இருந்தது :

| | டாலர்கள் | பவுண்டு |
|---|---|---|
| தந்தி மாற்றம்(T.T.)கடல் தந்தி மாற்ற விகிதம் (Cable rate) | $ 4·866 to | £ 1 |
| காட்சி விகிதம் (Sight rate) | $ 4·869 to | £ 1 |
| ஒரு மாத கால விகிதம் (One month rate) | $ 4·877 to | £ 1 |
| மூன்று மாத கால விகிதம் (Three monthls rate) | $ 4·894 to | £ 1 |

இலண்டனில் உள்ள பாங்கு நியூயார்க்கிலுள்ள ஒரு நபருக்குத் தந்தி மாற்றத்தின்மூலம் விற்கும்போது ஒரு பவுண்டுக்கு 4·866 டாலர்கள் மாற்றாகக் கொடுக்கிறது. காட்சி உண்டியல் (Sight Bill) என்பது விற்பவரிடம் (Acceptor) கொடுத்தஉடனே பணம் பெறக்கூடியது. ஆனால், இக் காட்சி உண்டியல் சாதாரண அஞ்சல்மூலம் அனுப்பப்படுவதால் அது ஏற்பவருக்குப் போய்ச் சேர சிறிது காலம் பிடிக்கும். இக்குறுகிய ஏழு அல்லது எட்டு நாட்களில் உண்டியல் மாற்றுப் பாங்கு சிறிது வட்டி பெறுவதால் தந்தி மாற்றத்திற்குக் கொடுப்பதைவிடக் காட்சி

உண்டியலுக்கு மலிவான விலையில் அயல் நாட்டுச் செலாவணிப் பணங்களைக் கொடுக்கிறது. ஆகவே, காட்சி உண்டியலுக்கு ஒரு பவுண்டுக்கு 4·869 டாலர்கள் என்ற விகிதத்தில் பாங்கு பணம் கொடுக்கிறது. ஒரு மாத முதிர்ச்சி உண்டியலுக்குப் பாங்குக்குக் கிடைக்கும் வட்டியின் அளவு வாடிக்கையினருக்கு ஏற்படும் நட்டத்தைவிட உயர்ந்ததாக இருப்பதால் இவ்வுண்டியலுக்கு மிகுதியான டாலர்கள் அதாவது ஒரு பவுண்டுக்கு 4·877 டாலர்களைப் பாங்கு அளிக்கிறது. மூன்று மாத உண்டியலுக்கு இதைவிட அதிகமாக 4·894 டாலர்களைப் பாங்கு கொடுக்கிறது.

நியூயார்க்கில் விலைக்குறிப்பு (Quotations) இதிலிருந்து சற்று மாறுபடுகிறது. கடல் தந்தி விகிதம்மட்டும் இலண்டனில் நிலவும் விகிதமாகவே இருக்கும். ஆனால் மற்ற விகிதங்கள் மட்டுமே மாறுபடுகின்றன. ஏனென்றால் இலண்டனில் செலுத்தப் படும் உண்டியல்கள் நியூயார்க்குப் பாங்குகளால் விற்கப்பட்டால் சற்றுக் குறைவான விகிதத்திலேயே விற்கப்படும்.

| நியூயார்க்கின் விலைக்குறைப்பு | டாலர்கள் | | பவுண்டு |
|---|---|---|---|
| கடல் தந்தி விகிதம் (Cable rate) | $ 4·866 | to | £ 1 |
| காட்சி உண்டியல் விகிதம் (Sight rate) | $ 4·861 | to | £ 1 |
| ஒரு மாத கால உண்டியல் விகிதம் (One month rate) | $ 4·850 | to | £ 1 |
| மூன்று மாத கால உண்டியல் விகிதம் (Three months rate) | $ 4·825 | to | £ 1 |

உண்டியல் முதிர்ச்சி அடையும் காலம் அதிகரிக்க அதிகரிக்க (அமெரிக்காவில்) நியூயார்க்கில் ஒவ்வொரு பவுண்டுக்கும் ஈடாகக் கொடுக்கக்கூடிய டாலர்களின் அளவு குறைந்து கொண்டே போகும்.

## டெல்குவல் விகிதம்
## (Telquel Rate)

ஏற்றுமதியாளர்கள் இறக்குமதியாளருக்குச் சிறிது காலம் கடன் தவணை கொடுப்பது சில நாடுகளில் வழக்கமாக இருக்கிறது. வழக்கமான தவணையில் (Usance) உண்டியல்கள் எழுதப்பட்டுச் செல்லுகள் ஏற்றுமதியாளர்களால் ஏற்றுக்கொள்ளப்படுகின்றன. இவ்வழக்கமான தவணை உண்டியல்களை (Usance Bills) உண்டியல் மாற்றுப் பாங்குகள் வாங்கும்போது தவணைக்கால வட்டி,

உண்டியல் அனுப்பப்படும் செலவுகள், இலாப இடையூறுகள் முதலானவற்றைக் கணக்கில் கொண்டு மாற்று வீதம் குறிப்பிடப் படுகிறது. பாங்குகளால் நீண்டகால உண்டியல்களுக்குக் குறிப் பிடப்படும் விகிதம் நீண்டகால விகிதம் (Long time rates) எனப்படுகிறது.

ஒரு நீண்டகால உண்டியல் அதில் குறிப்பிடப்பட்ட தேதி யிலிருந்து சிறிது காலம் கடந்தபிறகு பாங்குக்கு விற்பனைக்காக வந்தால் அவ்வாறு கடந்த வட்டி இழப்பில்லாக் காலத்தையும் கணக்கில் கொண்டு மாற்று விகிதம் கணக்கிடப்படுகிறது. இவ் விகிதத்திற்கு 'டெல்குவல் விகிதம்' என்று பொருள். அதாவது, (எ. கா.): 90 நாட்கள் தவணைக்குரிய உண்டியலொன்றை 15 நாட்கள் கடந்தபிறகு பாங்குக்கு விற்க முற்பட்டால் அதனை வாங்கும் அப் பாங்குக்கு வட்டி இழப்பு 15 நாட்களுக்குக் குறையும். மாற்று வீதம் கணிக்கும்போது இவ்வட்டி இழப்பில்லா நாட்களையும் கணக்கில் கொள்ளவேண்டும். நீண்டகால விகிதத்தில் உண்டியலின் கடந்த காலத்திற்கு வட்டி ஒதுக்கி 'டெல்குவல் விகித'த்தைக் கணக்கிடலாம். தந்திமாற்ற (Telagraphic transfer) விகித அடிப்படையிலும் உண்டியலின் நடப்பு நாட்களுக்கு உரிய வட்டி இழப்பை ஒதுக்கி 'டெல்குவல் விகித'த்தைக் கணக்கிடலாம்.

## மாற்று விகிதங்களை நிர்ணயித்தல்
## (Determination of Exchange Rate)

அயல் நாட்டு மாற்று அங்காடியில் ஒரு நாட்டுச் செலா வணியின் எத்தனை அலகுகள் மற்றொரு நாட்டுச் செலாவணி அலகுகளுக்கு மாற்றுகத் தரப்படுகின்றன என்பதைக் கணக்கிடும் விகிதமே மாற்று விகிதமாகும். அதாவது அயல் நாட்டுச் செலாவணி அலகு ஒன்றுக்கு விலையாக அல்லது மாற்றுக எத்தனை உள்நாட்டுச் செலாவணிகள் தரவேண்டியிருக்கும் அல்லது உள் நாட்டுச் செலாவணி அலகு ஒன்றுக்கு விலையாக அல்லது மாற்றுக எத்தனை அயல் நாட்டுச் செலாவணி அலகுகள் பெறவேண்டி யிருக்கும் என்று விகிதப்படுத்துவதே மாற்று விகிதமாகும் (Exchange Rate). தடையில்லா அங்காடியில் பொருள்களின் விலைகள் நிர்ணயிக்கப்படுவதைப்போன்றே அயல் நாட்டு நாணய மாற்று அங்காடியில் அயல் நாட்டுச் செலாவணித் தேவையாலும் அதன் அளிப்பாலும் (Demand for and Supply of) மாற்று விகிதம் (Exchange Rate) நிர்ணயிக்கப்படுகிறது. உள்நாட்டுச் செலா

வணியின் எத்தனை அலகுகள் அயல் நாட்டுச் செலாவணி அலகுக்கு மாற்றாக அல்லது விலையாகத் தரப்படுகின்றன என்பதே மாற்று விகிதமாகும்.

அங்காடி விலையானது பொருள்களின் தேவை அளிப்புச் சக்திகள்மூலம் நிர்ணயிக்கப்படுகிறது. ஒரு நாட்டு மக்கள் அயல் நாட்டுப் பொருள்கள், பணிகள், பிணையப் பத்திரங்கள் முதலானவற்றை வாங்குவதால் அவ்வயல்நாட்டுக்குப் பணம் செலுத்த வேண்டியிருப்பதாலும் அல்லது அவர்கள் அயல் நாடுகளில் உள்ள பண அங்காடியில் குறுங்கால முதலீடு செய்ய விரும்புவதாலும் அவ்வயல்நாட்டுச் செலாவணிகள் தேவைப்படுகின்றன. ஆகவே, அவ்வாறு ஏற்படுகிற பண மாற்றுக்களின் அளவு ஏற்ற இறக்கத்தின் விளைவாக அந்நியச் செலாவணியின் தேவையிலும் ஏற்ற இறக்கம் ஏற்படுகிறது. இந்தியாவிலுள்ள தனியார்கள் நிறுவனங்கள் அமெரிக்காவிலிருந்து இறக்குமதி செய்த பொருள்களாலும் வாங்கிய பணிகள், ஆவணப் பத்திரங்களாலும் அல்லது அமெரிக்கப் பாங்குகளில் குறுங்கால வைப்புகளில் (Short term deposit) பணம் செலுத்துவதாலும் அமெரிக்க டாலர்கள் இந்தியாவில் தேவைப் படுகின்றன. இறக்குமதிகளும் கொள்முதலும் மாறும்போது தேவையும் மாறுகிறது.

## அயல் நாட்டு மாற்றுக்களின் தேவை
## (The Demand for Foreign Exchange)

பல்வேறு மாற்று வீதங்களில் (Different rates of Exchange) அயல் நாட்டுச் செலாவணிகள் தேவைப்படுகிறதென்பதைக் காட்டும் பட்டியல்தான் அயல் நாட்டு மாற்றுத் தேவைப் பட்டியலாகும். தேவைப்படுகின்ற அயல் நாட்டு மாற்று வீதங்களின் தொடர்புகள் ஒன்றை ஒன்று உள்நோக்கிச் செல்கின்றன. அதாவது மாற்று விகிதம் குறையக் குறைய அயல் நாட்டுச் செலாவணியின் தேவை கூடுகிறது. மாற்று விகிதம் ஏற ஏற அயல் நாட்டுச் செலாவணியின் தேவை குறைகிறது. தேவை மாறாது இருப்பின் அயல் நாட்டு மாற்று அங்காடியில் வாங்கப்படும் செலாவணியின் அளவானது அதன் மாற்று விகிதத்திற்கு எதிர் மாறாக அமையும்.

மாற்று விகிதம் அதிகமாக இருக்கும்போது (ஏறும் அல்லது கூடும்) இறக்குமதிப் பொருள்களின் விலையும் மிகுதியாவதால் அவற்றின் தேவை குறைகிறது. இறக்குமதி செய்யப்படும்

பொருள்களின் அளவு குறையும்போது அவற்றிற்காகச் (தேவைப் படும்) செலுத்தப்படும் அயல் நாட்டுச் செலாவணியின் தேவையும் குறைகிறது.

இதுபோன்று மாற்று விகிதம் குறையும்போது இறக்குமதிப் பொருள்களின் விலைகளும் குறைவதால் அவற்றின் தேவை அதிகரித்து இறக்குமதியின் அளவும் அதிகரித்து அவற்றிற்குக் கொடுக்கப்படும் அந்நியச் செலவாணியின் தேவையும் கூடுகிறது.

ஆகவே, பொதுவாக மொத்த இறக்குமதிகளின் தேவையும் அவற்றிற்கு விலையாகக் கொடுக்கப்படும் அயல் நாட்டுச் செலா வணியின் தேவையின் அளவும் அயல் நாட்டு மாற்று விகிதத்திற்கு (Foreign Exchange Rate) எதிர்மாறுகச் செயல்படுகின்றன.

## அயல் நாட்டு மாற்றுக்களின் தேவைப் பட்டியல்

| பொருள்களின் விலை டாலர் | × | டாலருக்குரிய ரூபாய் விலை | இறக்குமதிப் பொருள் களின் அளவு | தேவைப்படும் டாலர்களின் அளவு |
|---|---|---|---|---|
| 1 | × | 5 | 10,000 | 10,000 |
| 1 | × | 6 | 8,000 | 8,000 |
| 1 | × | 7 | 7,000 | 7,000 |
| 1 | × | 8 | 6,000 | 6,000 |
| 1 | × | 9 | 5,000 | 5,000 |
| 1 | × | 10 | 3,000 | 3,000 |

இத்தேவைப் பட்டியலில் ஒரு பொருளின் விலை அமெரிக்காவில் ஒரு டாலராக இருப்பதாகக் கொள்கிறோம். ஒரு டாலரின் விலை ரூ. 5 ஆக இருந்தால் இந்திய இறக்குமதியாளருக்கு அது குறைந்த மாற்று விகிதமாகவும் அமெரிக்க ஏற்றுமதியாளருக்கு உயர்ந்த மாற்று விகிதமாகவும் இருக்கிறது. இந்த மாற்று விகிதம் ஒரு டாலருக்கு ரூ. 7 ஆக மாறும்பொழுது அது இந்திய இறக்குமதி யாளருக்கு ஏறு விகிதமாகவும் அமெரிக்க ஏற்றுமதியாளருக்கு இறங்கு விகிதமாகவும் இருக்கிறது.




படம் 1

அயல் நாட்டுச் செலாவணித் தேவையின் அளவு டாலர்களில் செங்குத்துக் கோட்டில் (O–Y அச்சு) அந்நியச் செலாவணியின் மாற்று விகிதம் ரூபாயில் குறிக்கப்பட்டிருக்கிறது. படுக்கை நிலைக் கோட்டில் (O–X அச்சு) அந்நியச் செலாவணியாகிய டாலரின் தேவை குறிக்கப்பட்டிருக்கிறது. மாற்று விகிதம் ஒரு டாலருக்கு ஈடாக ரூபாய் 10 ஆக இருக்கும்போது 3,000 செலாவணி டாலர்கள் தேவைப்படுவதை ரூபாய் 10-க்கு நேராக 3,000 டாலர்களுக்குமேல் குறிக்கப்பட்டுள்ளது. இதேபோன்று ஒவ்வொரு மாற்று விகிதத்திலும் தேவைப்படும் அந்நியச் செலாவணியின் எண்ணிக்கையைக் குறித்து இவற்றை ஒரு வரை கோட்டால் இணைக்கிறோம். இக்கோடு தேவை வரைகோடு எனப்படும். இக்கோடு இடம் இருந்து வலப்பக்கம் சரிந்து வீழ்வதைக் காண்கிறோம். மாற்று விகிதம் குறையக் குறைய அந்நியச் செலாவணியின் தேவை அதிகரிப்பதை இவ்வீழ்ச்சி காட்டுகிறது.

பண்டங்கள் பணிகளின் இறக்குமதியால் மட்டுமல்லாமல் அயல் நாட்டுக் கடன்கள், முதலீடுகளாலும் மூலதனங்களின் பெயர்ச்சியாலும் அயல் நாட்டுச் செலாவணிகளுக்குத் தேவைப் படுகிறது.

## அயல் நாட்டு மாற்றுக்களின் அளிப்பு
## (Supply of Foreign Exchange)
### அளிப்புப் பட்டியல்

| பொருளின் விலை (டாலரில்) | டாலருக்கு ரூபாய் விலை | ஏற்றுமதிப் பொருட்களின் அளவு | டாலரின் அளிப்பு அளவு |
|---|---|---|---|
| 1 | 10 | 10,000 | 10,000 |
| 1 | 9 | 8,000 | 8,000 |
| 1 | 8 | 7,000 | 7,000 |
| 1 | 7 | 6,000 | 6,000 |
| 1 | 6 | 5,000 | 5,000 |
| 1 | 5 | 3,000 | 3,000 |

ஒரு நாட்டு மக்கள் தங்கள் பண்டங்களை ஏற்றுமதி செய்யும் போதும், பணிகள் ஆவணப் பத்திரங்களை விற்பனை செய்யும் போதும் வெளிநாடுகளுக்கு அளித்துக் கடன்களைத் திரும்பப்பெறும் போதும் அயல் நாட்டுச் செலாவணி அளிப்பு நிகழ்கிறது.

அயல் நாட்டு மாற்று அங்காடியில் பற்பல மாற்று வீதங்களில் பற்பல வித அளவில் அந்நியச் செலாவணியான டாலர்கள் கிடைக்கக்கூடியதை அளிப்புப் பட்டியல் காட்டுகிறது. பண்டங்களையும், பணிகளையும் ஏற்றுமதி செய்வதால் கிடைக்கக் கூடிய அந்நியச் செலாவணிப் பணத்தின் அளவு அவ்வந்நிய நாட்டிலுள்ள மக்கள் அப் பண்டங்களையும் பணிகளையும் இறக்குமதி செய்ய விருப்பத்தைப் பொறுத்திருக்கிறது. மூலதன உள்ளோட்டத்தின் அளவும் அதன் ஒருதலை மாற்றமும் அம் முதலீடு செய்பவர்களின் தீர்ப்பைப் பொறுத்திருக்கிறது. ஆகவே, மற்றவை மாறாதிருக்க மற்ற நாடுகளின் இறக்குமதியான ஒரு நாட்டின் ஏற்றுமதிகள் மாற்று விகிதங்களின் செயல்களைப் பொறுத்திருக்கும். ஏனென்றால் இவைதாம் ஏற்றுமதியால் ஏற்படக்கூடிய அந்நியச் செலாவணியின் விலைகளை நிர்ணயிக்கின்றன.

இந்தியாவிலுள்ள அமெரிக்க டாலரின் மாற்று விகித ஏற்றத்தால் இந்தியச் செலாவணியில் அமெரிக்கப் பண்டங்கள் பணிகளின் விலை அதிகரித்து அமெரிக்க இறக்குமதியின் அளவு குறையும்.

ஏறிய ரூபாய்-டாலர் விகிதம் அல்லது இறங்கிய டாலர்-ரூபாய் விகிதத்தால் அமெரிக்காவிலுள்ள இந்தியப் பொருள்கள் பணிகளின் விலையில் குறைவேற்பட்டு அதனால் இந்தியப் பொருள்கள், பணிகளின் தேவை அதிகரித்து (ஏற்றுமதி) அமெரிக்காவில் ரூபாய் மாற்றுக்களின் தேவை அதிகரிக்கும். ஆகவே, உயர்ந்த மாற்று விகிதம் (higher rate of exchange) இறக்குமதிகளின் அளவைக் குறைத்து ஏற்றுமதிகளின் அளவை மிகுதியாக்குகிறது. அதாவது உயர்ந்த மாற்று விகிதமானது அந்நியச் செலாவணியின் தேவையைக் குறைத்து மாறாக அவ்வந்நியச் செலாவணியின் அளிப்பை மிகுதியாக்குகிறது. குறைந்த மாற்று விகிதமானது (lower rate of exchange) இறக்குமதி, அந்நியச் செலாவணித் தேவைகளின் அளவுகளை அதிகரிக்கச் செய்து ஏற்றுமதிகள் அந்நியச் செலாவணி அளிப்பின் அளவுகளைக் குறையச் செய்கிறது.

ஒரு மாற்று விகிதத்தில் அளிக்கப்படும் அந்நியச் செலாவணிகளின் அளவும் அதே விகிதத்தில் ரூபாய்களுக்காகச் செலவிடப்படும் டாலர்களின் அளிப்பும் சமமாகும்.

(எ. கா.): சென்னையில் 10 ரூபாய்களுக்கு ஒரு டாலர் அல்லது நியூயார்க்கில் 10 சென்டுகளுக்கு ஒரு ரூபாய் மாற்று விகிதம் என்றும் டாலர்களுக்கு மாறாக ரூ. 10,000 தேவைப்படுகின்றன என்றும் கொள்வோம். ஒவ்வொரு ரூபாய்க்கும் 10 சென்டுகள் என்று மாற்றாகக் கொண்டால் ரூ. 10,000-க்கு மாற்று 1,000 டாலர்கள் ஆகும். சென்னையில் அளிக்கப்படும் அந்நியச் செலாவணியாகிய டாலரின் அளவு ரூ. 10-க்கு ஒரு டாலர் என்ற மாற்று வீதத்தில் 1,000 டாலர்கள் ஆகும். ஆகவே, ஒரு நாட்டின் அந்நியச் செலாவணியின் அளிப்பானது, அயல் நாடுகளில் அதன் செலாவணியின் தேவையுடன் நேரடித் தொடர்பு கொண்டுள்ளது.

ரூ. 8-க்கு ஒரு டாலர் என்ற விகிதத்தில் சென்னையில் எவ்வளவு டாலர்கள் அளிக்கப்படும் என்று காண்போம். நியூயார்க்கில் ஒரு ரூபாயின் மாற்று விகிதம் $12\frac{1}{2}$ சென்டுகளாகும். ஆகவே, அமெரிக்கர்களுக்கு இந்தியப் பொருள்களின் தேவை அவர்களுக்கு நெகிழ்ச்சியுடையதாக இருப்பின் இப் பொருள்

களின் தேவை குறையும். இதனால் அமெரிக்காவில் தேவைப்படும் ரூபாய்களின் தேவையும் முன்னைவிடக் குறையும். அமெரிக்காவில் வாங்கப்படும் ஒவ்வொரு ரூபாயின் விலையும் $12\frac{1}{2}$ சென்டுகளாக உயர்ந்திருப்பதால் அளிக்கப்படும் டாலர்களின் மொத்த அளவு எந்த அளவுக்குக் குறையும் என்பது ரூபாய்களுக்கு இருக்கும் தேவை நெகிழ்ச்சியைப் பொறுத்தது. தேவை நெகிழ்ச்சி ஒன்றுக்கு மேற்பட்டதாக (greater than unity) இருந்தால் ரூபாயின் தேவை இறக்கத்தின் விகித மாற்று, டாலர்-ரூபாய் மாற்று விகிதத்திலுள்ள உயர்வின் சதவிகிதத்தைவிடக் கூடுதலாக இருக்கும். ஆகவே, டாலர் அளிப்பின் அளவும் குறையும்.




படம் 2

மேலே தோன்றும் வரைப்படத்தில் அளிப்புக்கோடு இடப்பக்கமிருந்து வலப்பக்கம் உயர்ந்து செல்கிறது. செங்குத்துக் கோடு (O-Y) ஒரு டாலருக்குக் கொடுக்கக்கூடிய ரூபாயின் மாற்று விகிதத்தைக் குறிக்கிறது. படுக்கைக் கோடு (O-X) அளிக்கப்படும்

டாலர்களின் அளவைக் குறிக்கிறது. அளிப்புக் கோடு பலவிகித நிலையில் டாலரின் அளிப்பு அளவைக் காட்டுகிறது.

அளிப்புப் பட்டியலில் குறிப்பிட்டுள்ளதுபோல் ஒரு டாலருக்கு ரூ. 5 மாற்று விகிதம் இருக்கும்போது (அதாவது ரூபாய்க்கு 20 சென்டுகள்) டாலரின் அளிப்பு 3,000 ஆக இருக்கிறது. ஆனால் மாற்று விகிதம் டாலருக்கு ரூ. 10 என்று உயரும்போது டாலர்கள் அளிப்பின் அளவு 10,000 ஆக உயர்கிறது. அதாவது இந்தியாவின் இறக்குமதி குறைந்து இந்தியாவின் ஏற்றுமதி மிகுதியாவதை உணர்கிறோம். ஏனென்றால் ஒரு டாலருக்கு ரூ. 5 சமமாக இருக்கும்போது இந்திய மக்களுக்கு அமெரிக்கப் பொருள்களை வாங்குவது எளிதாகும். உள்நாட்டுப் பொருள்களின் விலை மிகுதியாகவும் இருந்திருக்கும். ஆகவே, குறைந்த மாற்று விகிதத்தில் அமெரிக்கப் பொருள்கள் இறக்குமதி செய்யப் படுகின்றன.

ஆனால், இவ்விகிதம் ஒரு டாலருக்கு ரூ. 10 என்று உயரும் போது அமெரிக்கப் பொருள்களின் விலை இந்திய ரூபாயில் உயர்ந்திருக்கிறது. ஆனால், இந்தியாவில் பொருள்கள் அமெரிக்க டாலரில் மலிவாகத் தென்படுகின்றன. இந்திய மக்கள் மாற்று விகித ஏற்றத்தால் அமெரிக்கப் பொருள்களை வாங்கி இந்தியாவில் இறக்குமதி செய்வதைக் குறைத்துக் கொள்வது மட்டுமல்லாமல் இந்தியப் பொருள்களின் விலை மலிவாக இருப்பதால் அமெரிக்க மக்கள் இந்தியப் பொருள்களை வாங்கி இந்தியாவின் ஏற்றுமதி உயர்வுக்கு வழிகோலுகிறார்கள். ஆகவே, இந்தியாவுக்கு அதிக மாற்று விகிதத்தில் டாலர்களை அளிக்க அமெரிக்கர்கள் முன் வருகிறார்கள். இப் போக்கைக் காட்டுவதே அளிப்புப் பட்டியலாகும்.

மாற்று விகிதம் உயரும்போது (ரூ. 10-க்கு ஒரு டாலர்) ஒரு நாட்டின் இறக்குமதி குறைந்து ஏற்றுமதி அதிகரித்து அயல் நாட்டுச் செலாவணியின் அளிப்புக் கூடுகிறது. மாற்று விகிதம் குறையும்போது (ரூ. 5-க்கு ஒரு டாலர்) ஒரு நாட்டின் ஏற்றுமதி குறைந்து இறக்குமதி அதிகமாகி அயல் நாட்டுச் செலாவணியின் அளிப்புக் குறைகிறது.

அயல் நாட்டு மாற்றுக்களின் தேவை, அளிப்புக் கோடுகளைக் கண்டறிந்த பிறகு அவ்வயல்நாட்டு மாற்றுக்களின் தேவை, அளிப்புச் சக்திகள் எவ்வாறு அயல் நாட்டு மாற்று விகிதத்தை நிர்ணயிக்கின்றன என்பதைக் காண்போம். பொருள்களின் விலை டாலரில் மாறாதிருக்கிறது எனக் கொள்வோம்.

### தேவை, அளிப்புப் பட்டியல்

| மாற்று விகிதம் டாலர் — ரூபாய் | இறக்குமதிப் பொருள்களின் மதிப்பளவு—டாலர் | தேவைப்படும் டாலரின் அளவு | ஏற்றுமதிப் பொருள்களின் மதிப்பளவு—டாலர் | அளிக்கப்படும் டாலர்களின் அளவு |
|---|---|---|---|---|
| 1—5 | 10,000 | 10,000 | 3,000 | 3,000 |
| 1—6 | 8,000 | 8,000 | 5,000 | 5,000 |
| 1—7 | 7,000 | 7,000 | 6,000 | 6,000 |
| 1—7-50 | 6,500 | 6,500 | 6,500 | 6,500 |
| 1—8 | 6,000 | 6,000 | 7,000 | 7,000 |
| 1—9 | 5,000 | 5,000 | 8,000 | 8,000 |
| 1—10 | 3,000 | 3,000 | 10,000 | 10,000 |

தேவையும் அளிப்பும் ஒரு குறிப்பிட்ட விலை அல்லது மாற்று விகிதத்தில்தான் பேசப்படும். பல்வேறு மாற்று விகிதத்தில் தேவைப்படும் டாலர்களின் அளவு பலவிதமாக இருக்கும். இது போன்று டாலரின் அளிப்பும் மாற்று விகிதத்திற்கேற்றவாறு வேறுபடும். மேற்கண்ட பட்டியலில் மாற்று வீதம் 1 டாலர் = ரூ. 5 ஆக இருக்கும்போது டாலரின் தேவை அயல் நாட்டு மாற்று அங்காடியில் 10,000-மாகவும் டாலரின் அளிப்பு 3,000-மாகவும் இருக்கிறது. நாம் முன்பு ஆராய்ந்த அயல் நாட்டு மாற்று அங்காடித் தேவை—அளிப்பு விதிகளின்படி மாற்று விகிதம் குறைவாக இருக்கும்போது அந்நியச் செலாவணியின் தேவை அதிகமாகவும் அதன் அளிப்புக் குறைவாகவும் இருக்கும் என்று கண்டோம். அதுபோன்றே மாற்று விகிதம் உயர்ந்திருக்கும் போது அந்நியச் செலாவணியின் தேவை குறைந்தும் அதன் அளிப்பு மிகுந்தும் இருக்கும் என்று அறிந்தோம்.

மாற்று விகிதம் 1 டாலர் = ரூ. 10 ஆக இருக்கும்போது டாலரின் தேவை அயல் நாட்டு மாற்று அங்காடியில் 3,000 ஆகவும் டாலரின் அளிப்பு 10,000 ஆகவும் விளங்குகிறது. ஆகவே 10,000 டாலர்கள் அளிக்கப்படும்போது 3,000 டாலர்களே தேவைப்படுகிறதென்றால் பாக்கியுள்ள 7,000 டாலர்கள் செலாவணி ஆகாமலேயே போகலாம். இவற்றைச் செலாவணி ஆக்கத்தூண்டும் வகையில் மாற்று விகிதத்தின் அளவை டாலர் 1= ரூ. 9 என்று குறைத்தால் டாலரின் தேவை 5,000 ஆகவும் டாலரின் அளிப்பு 8,000 ஆகவும் இருக்கின்றன. இவ்விகிதத்திலும் டாலரின் தேவையைவிட அளிப்பு 3,000 அதிகமாகவே இருக்கிறது. மாற்று

அங்காடியில் அளிக்கப்படும் டாலர்கள் அனைத்தும் செலாவணி ஆவதில்லை. எனவே, மாற்று விகிதத்தின் அளவு டாலர் 1 = ரூ. 7·50 என்று மீண்டும் குறைக்கப்பட்டால் டாலர்களின் தேவை அளவு 6,500 ஆகக் குறைந்தும் விடுகிறது. இப் போக்குக்குரிய காரணங்கள் யாவை?

முன்பு ரூ. 7·50 மதிப்புள்ள சரக்குகளை ஒரு டாலருக்கு வாங்கியவர்கள் இப்பொழுது 1 டாலருக்கு ரூ. 10 மதிப்புள்ள சரக்குகளை வாங்கவும் அமெரிக்காவில் இந்தியச் சரக்குகளின் தேவை அதிகரிக்கிறது. அதாவது டாலர் கணக்கில் இந்தியச் சரக்கின் விலை குறைகிறது.

இந்தியாவில் மாற்று விகிதம் டாலர் 1 = ரூ. 7-50-லிருந்து டாலர் 1 = ரூ. 10 ஆக உயர்ந்திருக்கும்போது (அதாவது ஒரு ரூபாய்க்கு ஒரு சென்டு வீதம் இருந்தால்) அமெரிக்க மக்கள் இந்தியாவின் சரக்குகளை மிகுதியாக வாங்க முற்படுகின்றனர். அதாவது ரூ. 10 மதிப்புடைய சரக்குகளை ஒரு டாலருக்கு வாங்கு கின்றனர். குறைந்த அளவு டாலர்களைக் கொண்டு மிகுந்த அளவு சரக்குகளை வாங்க அமெரிக்கர்கள் துடிக்கின்றனர். இந்தியச் சரக்குகள் அமெரிக்கர்களுக்கு அதிகமாகத் தேவைப் படுகின்றன. ஆகவே இந்தியச் சரக்குகளை அவர்கள் அமெரிக் காவில் அதிகமாக இறக்குமதி செய்கின்றனர். அதாவது இந்தியச் சரக்குகள் அதிகமாக ஏற்றுமதி ஆகின்றன. ஏற்றுமதி அதிகரிக் கும்போது அந்நியச் செலாவணியான டாலர்களும் மாற்று அங்காடியில் அதிகமாக அளிக்கப்படுகின்றன.

ஆனால் டாலர் 1 = ரூ. 7-50-க்குப் பதிலாக டாலர் 1 = ரூ. 10 என்ற விகிதத்தில் இருக்கும்போது இந்தியர்கள் அமெரிக்கச் சரக்குகளை அதிக விலை கொடுத்து வாங்க வேண்டி யுள்ளது. அதாவது முன்பு ஒரு டாலர் மதிப்புள்ள அமெரிக்கச் சரக்கை மாற்று அங்காடியில் ரூ. 7-50 கொடுத்து வாங்கியதை இப்பொழுது ரூ. 10 கொடுத்து வாங்கவேண்டிய நிலையில் உள்ளது. (அல்லது முன்பு ரூ. 7-50-க்குரிய இந்தியச் சரக்கை விற்று ஒரு டாலர் பெற்றான். ஆனால், இப்பொழுது ரூ. 10-க்குச் சரக்குகள் விற்றால்தான் இந்தியனுக்கு ஒரு டாலர் கிடைக்கிறது. அதாவது முன்னைவிட அதிக அளவு சரக்குகள் விற்கப்பட்டால் தான் இந்தியனுக்கு 1 டாலர் கிடைக்கும்) அதாவது முன்பு டாலர் ஒன்றுக்கு ரூ. 7-50 கொடுத்து மாற்று அங்காடியில் வாங்கியது போக இப்பொழுது ரூ. 10 கொடுக்க வேண்டி யுள்ளது. ஆகவே, இவ்விகித ஏற்றத்தால் இந்தியாவில் அமெரிக்கச் சரக்குகளின் இறக்குமதி குறைந்து அமெரிக்க டாலர்

களின் தேவையும் குறைகிறது. ஆனால், அமெரிக்க மக்கள் குறைந்த அளவு டாலர் விலையில் நிறைந்த அளவு இந்தியச் சரக்குகளை வாங்க முடியுமாதலால் இந்தியச் சரக்குகளின் ஏற்றுமதி அதிகமாகி டாலர்களின் அளிப்பளவு அதிகரிக்கிறது. அதாவது முன்பு இந்தியச் சரக்குகளை வாங்காமல் இருந்தவர்கள் கூட இப்பொழுது வாங்க முற்படுகின்றனர்.

டாலர் 1 = ரூ. 5 என்ற விகிதத்திற்குக் குறையும்போது இறக்குமதி மிகுதியாகி டாலருக்குள்ள தேவையும் இந்தியாவில் அதிகரிக்கிறது. அதாவது முன்பு ரூ 7-50 மாற்றாகக் கொடுத்து ஒரு டாலர் மதிப்புள்ள அமெரிக்கச் சரக்குகளைப் பெற்ற ஓர் இந்தியன் (அதே அளவு சரக்குகளை) இப்பொழுது ரூ. 5 கொடுத்துப் பெறுகிறான். இந்தியனுக்கு அமெரிக்கச் சரக்கு மலிவாய் உள்ளதால் மிகுதியான அளவு அமெரிக்கச் சரக்குகளை வாங்கி இந்தியாவில் இறக்குமதியை அதிகரிக்கிறான். அதனால் அவனுக்கு அமெரிக்க டாலர்கள் தேவைப்படுகின்றன.




படம் 8

ஏனென்றால் அவன் அமெரிக்கச் சரக்குகளுக்கு விலையாக அமெரிக்க டாலர்களில்தான் பணம் கொடுக்கவேண்டும்.

டாலர் 1 = ரூ. 5 என்ற விகிதத்தில் இருக்கும்போது ஓர் அமெரிக்கன் ஒரு டாலர் கொடுத்து ரூ. 7-50 மதிப்புடைய சரக்குகளை வாங்கியவன் தற்பொழுது ரூ. 5 மதிப்புடைய சரக்குகளைத்தான் வாங்க முடிகிறது. ஆகவே, முன்புபோல் அதிக அளவு இந்தியச் சரக்குகளை அமெரிக்கர்கள் வாங்குவது குறைவதால் அவற்றிற்காகக் கொடுக்கக்கூடிய டாலர்களின் அளிப்பும் குறைகிறது. இந்தியச் சரக்குகளின் ஏற்றுமதியும் குறைகிறது.

மாற்று விகிதம் டாலர் 1 = ரூ 10 ஆக உயர்ந்து இருக்கும்போது அமெரிக்க மக்கள் மிகுதியாக இந்தியச் சரக்குகளை வாங்க விழைந்தனர். அதே விகிதம் டாலர் 1 = ரூ. 5 ஆகக் குறையும்போது டாலரின் விலை ஏற்றத்தால் அவர்கள் இந்தியச் சரக்குகளை வாங்குவதைக் குறைத்துக் கொள்கின்றனர். ஆனால் இவ்விரண்டு விகிதங்களுக்கும் நடு நிலையில் டாலர் 1 = ரூ. 7-50 என்று மாற்று விகிதம் நிர்ணயிக்கப்படும்போது முன் கண்ட பட்டியலின்படி அமெரிக்கர்கள் பலர் 6,500 டாலர்கள் மதிப்புள்ள இந்தியச் சரக்குகளை வாங்க முற்படுகின்றனர். அது போன்று இந்தியர்கள் பலரும் 6,500 டாலர்கள் மதிப்புள்ள இந்தியச் சரக்குகளை விற்கவும் அதே மதிப்புள்ள அமெரிக்கச் சரக்குகளை வாங்கவும் தயாராக இருக்கின்றனர். மாற்று விகிதம் டாலர் 1 = ரூ. 7·50 என்றிருக்கும்போது அந்நியச் செலாவணியான டாலர்களின் தேவையும் அளிப்பும் சமநிலையில் இருக்கின்றன. இவ்வாறு அயல் நாட்டுச் செலாவணித் தேவையும் அளிப்பும் சமநிலையில் இருக்கும்போது ஏற்படக்கூடிய மாற்று விகிதத்தைத்தான் மாற்றுச் சமநிலை விகிதம் (Equalibrium Rate of Exchange) என்றழைக்கிறோம்.

அயல் நாட்டு மாற்று விகிதம் செங்குத்துக்கோடு O.Y. அச்சு மூலமும், பல மாற்று விகிதங்களில் தேவைப்படும் அல்லது அளிக்கப்படும் டாலர்களின் அளவு படுக்கைக்கோடு O.X. அச்சு மூலமும் குறிக்கப்பட்டுள்ளன.

மாற்றுச் சமநிலை விகிதம் (Equalibrium Rate of Exchange) மொத்த அயல் நாட்டு மாற்றுச் செலாவணித் தேவையளவும் (O.Q1) மொத்த அயல் நாட்டு மாற்றுச் செலாவணி அளிப்பளவும் (O.Q1) சமநிலையாகும்போது நிர்ணயிக்கப்படுகிறது. மற்ற எந்த மாற்று விகிதத்திலும் அயல் நாட்டு மாற்று அங்காடி

சமநிலையில் இராது. (எ. கா.): மாற்று விகிதம் O.R 2-ல் (ஒரு டாலர் = ரூ. 10) இருக்கும்போது மாற்று அங்காடியில் அளிக்கப்படும் மொத்த அந்நியச் செலாவணியின் அளவு, தேவைப்படும் மொத்த அந்நியச் செலாவணியின் அளவைவிட மிகுதியாக இருக்கும். அதாவது அங்காடியில் மிகை அளிப்பின் விளைவுகளை ஏற்படுத்துகிறது. எதிர் மாறாக மாற்று விகிதம் O.R.3 (ஒரு டாலர் = ரூ. 5)-ல் இருக்கும்போது தேவைப்படும் மொத்த அந்நியச் செலாவணியின் அளவு அளிக்கப்படும் மொத்த அந்நியச் செலாவணியின் அளவை விட மிகுதியாக இருக்கும். அதாவது அங்காடியின் மிகைத் தேவையின் விளைவுகளை உண்டாக்குகிறது. ஆகவே, அந்நியச் செலாவணியின் அளிப்பு, தேவை அளவுகள் சமநிலையில் இருக்கும்போது O.R.1-ல் மாற்றுச் சமநிலை விகிதம் நிர்ணயிக்கப்படுகிறது. தடையற்ற மாற்று அங்காடியில் இவ்விகிதம் தான்நிலவும்.

தடையற்ற அங்காடியின் எதிர்ச் செயலானது மிகுதித் தேவையின்போது மாற்று விகிதத்தை உயர்த்துவதன்மூலமும் மிகுதி அளிப்பின்போது மாற்று விகிதத்தைக் குறைப்பதன் மூலமும் எதிரொலிக்கும். ஆகவே, மாற்று விகிதத்தில் ஏற்படும் ஏற்ற இறக்கம் அயல் நாட்டு மாற்று அங்காடியின் சமநிலையற்ற தன்மையைக் குறிக்கிறது. அயல் நாட்டு மாற்றுச் சமநிலை விகிதம் மாற்றுக் கட்டுப்பாடுகள் (Exchange control) மூலமோ அல்லது மாற்று நிலைப்படுத்தல் (Exchange pegging) மூலமோ அரசினரால் கட்டுப்படுத்தப்படும்.

## பலவிதப் பணத் திட்டங்களின்கீழ் அயல் நாட்டு மாற்று விகிதத்தை நிர்ணயித்தல்

சம நிலை மாற்று விகிதம் பற்பல பணத் திட்டங்களின்கீழ் வெவ்வேறு விதமாக நிர்ணயிக்கப்படுகிறது. இரண்டு நாடுகளின் செலாவணிகள் பொன் அல்லது வெள்ளித் திட்டத்தில் இருந்தால் அவ்விரண்டு செலாவணிகளின் நாணயச்சாலைச் சமநிலை விகித (Mint parity ratio) அடிப்படையில் மாற்று விகிதம் நிர்ணயிக்கப் படுகிறது. பொன் திட்டத்தின்கீழ் மாற்று விகிதம் நிர்ண யிப்பதை விளக்கும் கோட்பாடு நாணயச்சாலைச் சமநிலைக் கோட்பாடு (Mint Parity Theory) எனப்படும்.

இரு நாடுகளின் செலாவணிகள் பொன் அல்லது வெள்ளித் திட்டத்தின்கீழ் அல்லாமல் பொன் அல்லது வெள்ளியாக மாற்ற வியலாத தாள் நாணயமாக (Inconvertible Paper Currencies)

இருப்பின் அவ்விரு தாள் நாணயங்களின் வாங்கும் திறன் சம நிலை அடிப்படையில் மாற்று விகிதம் நிர்ணயிக்கப்படுகிறது. இதனை விளக்கும் கோட்பாட்டிற்கு 'வாங்கும் திறன் சம நிலைக் கோட்பாடு' (Purchasing Power Parity Theory) என்று பெயர். இரண்டு நாடுகளின் செலாவணிப் பணத்தில் ஒன்று பொன் திட்டத்திலும் மற்றொன்று வெள்ளித் திட்டத்திலும் இருந்தால் நாணயச்சாலைச் சமநிலை (Mint Parity) அடிப்படையிம் மாற்று விகிதம் கணக்கிடப்படுகிறது. ஆனால், இரண்டு உலோகங்களின் அங்காடி விகிதம் மாறும்போது மாற்று விகிதத்தை நிர்ணயிக்கக் கூடிய நாணயச்சாலைச் சமநிலை (Mint Parity) விகிதமும் மாறும். ஆகவே, இரண்டு நாடுகளில் மாறுபட்ட செலாவணிகள் பொன் அல்லது வெள்ளி புழக்கத்திலிருக்கும்போது அவ்விரண்டு உலோகங்களின் அங்காடி விகிதத்திற்கேற்ப மாற்றமடையும் நாணயச்சாலை விகிதத்தில் மாற்று விகிதம் நிர்ணயிக்கப்படுகிறது. பொன் திட்ட நாட்டிலிருந்து பொன் இறக்குமதி செய்யப்பட்டு விடுமாதலால் சமநிலைக்குமேல் மாற்று விகிதம் நீடித்திராது. அதுபோன்று வெள்ளித்திட்ட நாடுகளிலிருந்து பொன் இறக்குமதி செய்யப்பட்டு விடுமாதலால் சமநிலைக்குக்கீழும் மாற்று விகிதம் நீடித்திராது.

## நாணயச்சாலைச் சமநிலைக் கோட்பாடு
## (Mint Parity Theory)

பொன் திட்டத்தின்கீழ் உள்ள இரண்டு நாடுகளின் செலாவணிப் பணங்களின் அயல் நாட்டு மாற்று விகிதத்தை எவ்வாறு நிர்ணயிப்பது என்பதை விளக்குவதே நாணயச்சாலைச் சமநிலைக் கோட்பாடாகும். இரண்டு நாடுகள் பொன் திட்டத்தின் கீழ் உள்ளன என்றால் அந்த நாடுகளின் செலாவணி அலகுகள் ஒரு குறிப்பிட்ட கலப்பற்ற தரமும், எடையும் உடைய பொன்னால் அச்சடிக்கப்படுகின்றன அல்லது ஒரு நிலையான விகிதத்தில் ஒரு குறிப்பிட்ட தரமுடைய பொன்னாக எளிதில் மாற்றக்கூடிய செலாவணி அலகுகள் கொண்டது என்பது பொருளாகும்.

ஓர் அரசு ஒரு குறிப்பிட்ட விலையில் எண்ணற்ற அளவில் பொன்னை வாங்கினாலும் விற்றாலும் அல்லது அந் நாட்டிற்கு உள்ளும் புறமும் பொன்னின் தடையிலா இயக்கத்திற்கு அனுமதி அளித்திருந்தாலும் அந்நாடு முழுவதும் பொன் திட்டத்தின்கீழ் உள்ளது என்று சொல்லப்படும். அதாவது உள்நாட்டுச் செலாவணிப் பணம் வைத்திருக்கும் ஒருவன் அதற்கு மாற்றாக எவ்வளவு பொன் பெறலாம் என்றும், அயல் நாடுகளுக்கு ஏற்று

மதி செய்யப்பட்டால் இப் பொன் எவ்வளவு அந்நியச் செலாவணிகளை வாங்கும் என்றும் முன்கூட்டியே அறிகிருன். இச் சூழ்நிலையில் பொன் திட்டத்தின்கீழ் உள்ள இரண்டு நாடுகளுடைய செலாவணிகளின் மாற்று விகிதம் குறிப்பிட்ட நாணயச்சாலைச் சமநிலை (Mint Parity) வீதத்திற்குச் சற்று மேலோ கீழோ மாறுபடும் (ஏறி இறங்கும்). இரண்டு நாடுகளுடைய செலாவணி அலகுகளின் உலோக உள்கிடக்கையின் கலப்பற்ற தரம், எடையின் அடிப்படையில் மாற்று விகிதம் நிர்ணயிக்கப் படுவதை நாணயச்சாலைச் சமநிலை என்கிறோம். ஒரே உலோகத் திட்டத்தின்கீழ் உள்ள இரண்டு நாடுகளுக்கிடையேதான் நாணயச்சாலைச் சமநிலை அயல் நாட்டு மாற்று விகிதக் கோட்பாடு பொருந்தும். ஆகவே, வேறுபட்ட பொன், வெள்ளி உடைய திட்டத்தின்கீழ் அடங்கிய நாடுகளிடையே நாணயச்சாலைச் சமநிலைக் கோட்பாடு பொருந்தாது.

முதல் உலகப் போருக்கு முன்னர் 1920-ல் இங்கிலாந்தும் அமெரிக்காவும் பொன் திட்டத்தின்கீழ் இயங்கின. இங்கிலாந்தின் சாவரன் 113·0016 குன்றிமணி அளவு எடையிலும், அமெரிக்க டாலர் 23·2200 குன்றிமணிகள் எடையும் உடைய கலப்பற்ற தரமுள்ள பொன்ஞல் அச்சடிக்கப்பட்டிருந்தன. நாணயச்சாலைச் சமநிலை இரண்டு நாடுகளுடைய செலாவணி அலகுகளில் அடங்கி யுள்ள பொன்னின் உள்கிடக்கையைப் பொறுத்திருப்பதால் அமெரிக்க டாலருக்கும் இங்கிலாந்தின் சாவரனுக்கும் உள்ள மாற்று விகிதம் நாணயச்சாலைச் சமநிலை அடிப்படையில், $113 \cdot 0016 \div 23 \cdot 200 = 4 \cdot 8665$ ஆகும். அதாவது 4·8665 அமெரிக்க டாலர்கள் இங்கிலாந்தின் ஒரு சாவரனுக்குச் சமமாகும்.

நீண்ட காலத்தில் நாணயச்சாலைச் சமநிலையின் அடிப்படையில் அயல் நாட்டு மாற்று விகிதம் நிர்ணயிக்கப்படுகிறது என்பது விதியாகும். ஆனுல் அங்காடி மாற்று விகிதம் குறுகிய காலங் களில் குறிப்பிட்ட குறுகிய அளவில் மாறுபடும். இம் மாறுபாடு பொன்னை அயல் நாடுகளுக்கு ஏற்றுமதி செய்வதால் ஏற்படும் கப்பல் செலவு, இன்சூரன்சு, கட்டுக்கூலி, ஏற்றுமதிக் காலத்தி லடங்கிய வட்டி ஆகியவற்ருல் ஏற்படுகிறது. இரண்டு நாடுகள் பொன் திட்டத்தின்கீழ் இருந்தால் அமெரிக்க டாலரை இங்கிலாந்து பவுண்டு ஸ்டெர்லிங்காக மாற்ற விரும்பும் அமெரிக்க இறக்குமதியாளன் அயல் நாட்டு மாற்று அங்காடியில் டாலர்களுக்கு மாற்ருகப் பவுண்டு-ஸ்டெர்லிங்குகளை வாங்குவான் அல்லது அவன் அமெரிக்காவிலிருந்து இங்கிலாந்துக்குப் பொன்னை

ஏற்றுமதி செய்வான். பொன்னை ஏற்றுமதி செய்வதால் எவ்விதச் செலவும் இல்லையாகில் அமெரிக்க மாற்று விகிதம் $ 4·8665 = £ 1 ஆகும். பொன்னை ஏற்றுமதி செய்வதென்பது அவ்வளவு எளிதல்ல. பொன்னை ஏற்றுமதி செய்வதற்குமுன் அதனைப் பாதுகாப்பான முறையில் கட்ட (packing) வேண்டும். ஆகவே, பொன்னை ஏற்றுமதி செய்வதில் கட்டுக்கூலி, கப்பல் கட்டணம் (Freight), காப்புறுதிக் கட்டணம் (Insurance), நாடு கடந்து செல்வதற்குப் பிடிக்கும் காலத்துக்குரிய வட்டி இழப்பு (Loss of interest while the gold is in transit), தேய்மான இழப்பு, மறுமுனையில் பெறும் மைய பாங்கு அப் பொன்னை நாணயமாக அச்சடிப்பதற்கு வசூலிக்கும் கட்டணம் முதலிய செலவு நட்டங்கள் ஏற்படுகின்றன. ஆகவே பொன்னை ஒரு நாட்டிலிருந்து மற்றொரு நாட்டிற்குக் கப்பல்மூலம் ஏற்றுமதி செய்து அனுப்புவதற்குப் பலவித செலவு நட்டங்கள் ஏற்படுகின்றன. அங்காடி மாற்று விகிதம் நாணயச்சாலைச் சமநிலை மாற்று விகிதம் + அமெரிக்காவிலிருந்து இங்கிலாந்துக்குப் பொன்னை ஏற்றுமதி செய்வதால் ஏற்படும் செலவு நட்டங்களைவிட அதிகமாக இருந்தால்தான் ஏற்றுமதி செய்ய விரும்பும் ஓர் அமெரிக்கன் இங்கிலாந்துக்குப் பொன்னை ஏற்றுமதி செய்யலாம். அமெரிக்காவிலிருந்து பொன்னை இங்கிலாந்துக்கு ஏற்றுமதி செய்வதற்கோ, இங்கிலாந்திலிருந்து அமெரிக்காவுக்கு இறக்குமதி செய்வதற்கோ ஆகும் செலவு 2 செண்டுகள் என்றால் மாற்று விகிதம் $ 4·8665 = £ 1-க்குக் குறைவாகவோ சமமாகவோ இருக்குமாகில் அயல் நாட்டுச் செல்லுகளுக்குப் (Payments) பொன்னை அமெரிக்கா ஏற்றுமதி செய்ய வேண்டியதில்லை.

இதுபோன்றே அங்காடி மாற்று விகிதம் ஒரு பவுண்டு = 4·8465 டாலர்கள் என்ற விகிதத்திற்குக் குறைவாக இருந்தால்தான் இங்கிலாந்திலுள்ளவன் பொன்னை அமெரிக்காவிலிருந்து இறக்குமதி செய்வான். பொன் திட்டத்தின்கீழ் உள்ள நாடுகளிடையே பொன் ஏற்றுமதி இறக்குமதிகளில் ஆகும் செலவு நட்டங்களால் நிர்ணயிக்கப்படுகிற உயர்ந்த அல்லது தாழ்ந்த வரம்புகளுக்கிடையே மாற்று விகிதம் ஏறி இறங்குகிறது அல்லது மாறுபடுகிறது. இவ் வரம்புகளைத்தான் உயர்ந்த அல்லது தாழ்ந்த பொன் நிலை (upper or lower gold points) என்கிறோம். நாணயச்சாலை மாற்று விகிதத்திலிருந்து பொன் ஏற்றுமதிச் செலவுகளைக் கழித்து, 'தாழ்ந்த அல்லது பொன் இறக்குமதிநிலை, (lower or gold import points) கணக்கிடப்படுகிறது.

கப்பல்மூலம் அமெரிக்காவுக்கும் இங்கிலாந்துக்கும் இடையே அனுப்பப்படும் ஒரு பவுண்டு ஸ்டெர்லிங் பொன்னுக்கு ஆகும்

செலவு 2 சென்டுகள் (0·02 டாலர்) என்று கணக்கிட்டால் டாலருக்கும் பவுண்டு ஸ்டெர்லிங்குக்கும் உள்ள அங்காடி மாற்று விகிதம் ஒரு பவுண்டு =4·8665 டாலர்களுக்கும் ஒரு பவுண்டு = 4·8465 டாலர்களுக்கும் இடையில் இருக்கும். இவ்வெல்லைகளுக்குள் அங்காடி மாற்று விகிதம் இருந்தால் பொன் ஏற்றுமதி நிகழ வேண்டியதில்லை. மாற்று விகிதம் பொன் ஏற்றுமதி நிலையைவிட (Gold export point) அதாவது 4 8865= ஒரு பவுண்டு என்ற விகிதத்தைவிட உயர்ந்துபோனால் அமெரிக்க இறக்குமதியாளன் இங்கிலாந்திலிருந்து பவுண்டு ஸ்டெர்லிங் மாற்று உண்டியல்களை வாங்குவதைவிட இங்கிலாந்துக்குப் பொன்னை ஏற்றுமதி செய்வதால் இறக்குமதியாளனுக்கு 2 சென்டுகளுக்குமேல் செலவாவது இல்லை. இச் செலவையும் நாணயச்சாலைச் சமநிலை மாற்று விகிதத்தோடு கூட்டினாலும் ஒரு பவுண்டு =4·8665 டாலர்களாக இருப்பது 4·8865 டாலர்களாகத்தான் ஆகிறது. இவ்விகிதத்திற்கு மேல் பொன் ஏற்றுமதி ஆரம்பமாவதைப் 'பொன் ஏற்றுமதி நிலை' (Gold export point) என்கிறோம்.

அங்காடி மாற்று விகிதம் நாணயச்சாலை மாற்று விகிதத்திலிருந்து 2 சென்டுகளுக்குமேல் (4·8465 டாலர்கள் = 1 பவுண்டுக்குக்கீழ்) குறையாது. அவ்வாறு குறைந்தால் பொன் இறக்குமதி செய்யப்படும். இவ்விகிதத்தைப் 'பொன் இறக்குமதி நிலை' (Gold import point) என்கிறோம். இவ்விரண்டு பொன்நிலைகளுக்கு (Gold points) மேல் அங்காடி மாற்று விகிதம் இராது. ஏனென்றால், எந்த அமெரிக்க இறக்குமதியாளனும் நியூயார்க்கில் பவுண்டு ஸ்டெர்லிங் பண விடைகளை வாங்கும்போது ஒரு பவுண்டுக்கு 4·8865 டாலர்களுக்குமேல் மாற்றுகக் கொடுக்கமாட்டான். அதுபோல் இங்கிலாந்து ஏற்றுமதியாளன் இலண்டனில் டாலர் பண விடைகளை விற்கும்போது ஒரு பவுண்டுக்கு 4·8465 டாலர்களுக்குக் குறைவாக ஏற்றுக்கொள்ளமாட்டான்.

பொன் திட்டத்தின்கீழ் அயல் நாட்டு மாற்று விகிதங்களை நிர்ணயிக்கும்போது பொன் நிலைகளைப்பற்றிய ஆய்வுகள் மிகவும் பயன்படுகின்றன. ஏனென்றால் மாற்று விகிதம் அயல் நாட்டு மாற்று அங்காடியில் எவ்வளவில் ஏற்ற இறக்கம் ஏற்படுகிறது (மாறுபடுகிறது) என்பதை இவ்வாய்வு புலப்படுத்துகிறது. நாணயச்சாலை விகிதத்தின் அடிப்படையில் அமைந்துள்ள இயல்பான மாற்று விகிதத்தினின்றும் அங்காடி மாற்று விகிதம் எவ்வளவில் மாறுபடுகிறது என்பதையும் காட்டுகிறது. பொன் ஏற்றுமதிநிலை, பொன் இறக்குமதிநிலை நிர்ணயிப்பதையும் அயல் நாட்டு மாற்றுத் தேவை அளிப்பு அடிப்படையில் அங்காடி மாற்று

விகிதம் பொன் நிலைகளுக்கிடையே எவ்வாறு நிர்ணயிக்கப் படுகிறது என்பதைக் கீழ்க்காணும் வரைப் படத்தின்மூலம் விளக்குவோம்.




படம் 4

இவ்வரைப் படத்தில் பொன் ஏற்றுமதி இறக்குமதிநிலைகளால் நிர்ணயிக்கப்பட்டுள்ள 4 சென்டுகளுக்குள் அயல் நாட்டு மாற்றுக் களின் தேவை அளிப்பு வரை கோடுகளின் மாற்றங்களுக்கேற்ப அங்காடி மாற்று விகிதமும் ஏற்ற இறக்கம் அடைகிறது. பொன் ஏற்றுமதி இறக்குமதிச் செலவுகளுக்குட்பட்டு குறுகிய எல்லைக்குள் அங்காடி மாற்று விகிதம் மாற்றமடைகிறது. தேவைக்கோடுகள் $D^1—D^1$, $D^2—D^2$, அளிப்புக் கோடுகள் $S^1—S^1$, $S^2—S^2$ பொன் ஏற்றுமதி, பொன் இறக்குமதி நிலைகளுக்குமேல் புள்ளியிடப் பட்டிருக்கின்றன. இவை பொன் ஏற்றுமதி நிலைக்குமேல் இயல்பான அளிப்புக்கோடுகளும், பொன் இறக்குமதி நிலைக்குமேல் இயல்பான தேவைக் கோடுகளும் செயலற்றுப்போகின்றன என்பனவற்றைக் காட்டுகின்றன. ஏனென்றால், இவ்விரண்டு நிலைகளிலும் அயல் நாட்டுச் செலாவணி மாற்றுக்களின் தேவை, அளிப்பு முழு நெகிழ்ச்சியுடையனவாக இருக்கின்றன. அங்காடி மாற்று விகிதம் பொன் ஏற்றுமதிநிலையின் எல்லையை எட்டினாலும்

டாலர்கள் 4·8865 = 1 பவுண்டு என்ற மாற்று விகிதத்தில் வெளி நாட்டுச் செலாவணியின் தேவை, அளிப்பைவிட மிகுதியாக இருந்தபோதிலும் இந்நிலைக்குமேல் மாற்று விகிதம் ஏறாது. ஏனென்றால், அயல் நாட்டு அங்காடியில் அயல் நாட்டு மாற்றுக் களின் அளிப்பில் ஏற்படும் பற்றாக்குறை பொன் ஏற்றுமதிகள் மூலம் (சமாளிக்கப்படும்) சரிக்கட்டப்படும்.

இதுபோன்று மாற்று விகிதம் பொன் இறக்குமதிநிலை அதாவது டாலர்கள் 4·8465= பவுண்டு 1 என்ற விகிதத்திற்குக்கீழ் இறங்காது. ஏனென்றால் இவ்விகிதத்திற்குக்கீழ் பொன் இறக்குமதி செயல்படமாட்டாது. ஆகவே அங்காடி மாற்று விகிதம் பொன் ஏற்றுமதி, இறக்குமதிநிலைகளுக்குள் அதாவது 2 + 2 = 4 சென்டு களுக்குள்தான் மாறுபட்டுக் கொண்டிருக்கும்.

அங்காடி மாற்று விகிதம் O. R.-ல் இருந்து ஆரம்பித்து $S^1$-$S^1$ அளிப்பு வரைகோட்டாலும் $D^1$-$D^1$ தேவை வரைகோட் டாலும் ஒன்றோடொன்று வெட்டப்பட்டு, தீர்மானிக்கப்பட்டுப் பொன் நிலைக்குள் அடங்க இருக்கிறது. இது அயல் நாட்டு மாற்றுக்களின் தேவை அளிப்புச் சமநிலையைக் காட்டுகிறது. தேவை, அளிப்புச் செயல்களின் போக்கு $S^2$-$S^2$, $D^2$-$D^2$ வரை கோடுகளுக்கு நெகிழும்போது மாற்று விகிதம் பொன் ஏற்றுமதி நிலையால் நிர்ணயிக்கப்பட்ட டாலர்கள் 4·8865 = பவுண்டு 1 என்ற விகிதத்திற்குமேல் அளிப்புத் தேவைக் கோடுகள் A என்ற இடத்தில் (டாலர்கள் 4·8865= பவுண்டு 1-க்குமேல்) வெட்டிக் கொண்டாலும் உயராது. பொன் திட்டத்தின்கீழ் இரண்டு நாடு களின் செலாவணி அயல் நாடுகளுக்கிடையே நாணயச்சாலைச் சமநிலை விகிதத்தால் நிர்ணயிக்கப்பட்ட இயல்பான மாற்று விகிதத்திலிருந்து அங்காடி மாற்று விகிதம் மாறுபட்டாலும் நாளடைவில் இயல்பான மாற்று வீதத்துடன் அங்காடி மாற்று விகிதம் ஒத்துப்போகிறது. அதாவது குறுங்காலத்தில் அங்காடி மாற்று விகிதம் இயல்பான மாற்று விகிதத்திலிருந்து வேறு பட்டாலும் நீண்டகாலத்தில் சரிசமநிலை அடைந்துவிடுகிறது. இயல்பான விகிதத்திலிருந்து அங்காடி மாற்று விகிதம் மாற்ற மடைந்தவுடனே சரிசமநிலை செய்யும் சக்திகள், இவ்விகிதங்கள் இரண்டும் சமநிலை அடையும்வரை இயக்கமடைகின்றன. அங்காடி மாற்று விகிதம் சமநிலை மாற்று விகிதத்திற்கும் கீழோ, மேலோ சென்று மாற்றமடையலாம். ஒரு நாட்டுச் செலுத்து நிலைகள் சமநிலைக்குப் புறம்பாக இருக்கும்போது நிகழலாம். அதாவது மொத்த ஏற்றுமதியைவிட மொத்த இறக்குமதி அதிகரிக்கும்போது இச் செலுத்துநிலை பாதகமாகும்போதோ,

அல்லது மொத்த ஏற்றுமதி மொத்த இறக்குமதியைவிட அதிகரிக்கும்போது இச் செலுத்துநிலை சாதகமாகும்போதோ அங்காடி மாற்று விகிதம் சமநிலை மாற்று விகிதத்திலிருந்து மாறுபடுகிறது.

இச் சூழ்நிலையில் பொன்னின் தன்னியக்க உள்ளோட்ட (inflow) வெளியோட்டச் (outflow) சக்திகளினால் மாற்று விகிதம் சமநிலைக்குத் திருப்பப்படுகிறது. இவ்வுண்மை அடம்ஸ்மித், டெவிட்ரெக்கார்டோ, ஜான்ஸ்டுவர்ட்மில் போன்ற மூதறிஞர்களால் வலியுறுத்தப்பட்டிருக்கிறது. இரண்டு நாடுகள் பொன் திட்டத்தின்கீழ் இருக்கும்போது அங்காடி மாற்று விகிதம் நாணயச் சாலை மாற்றுச் சமநிலை வீதத்துடன் நிலைபேறடைகிறது. பன்னாட்டுச் செலுத்துநிலைக் காரணிகளும் நாணயச்சாலைச் சமநிலையுடன் ஒத்துப்போக முற்படுகின்றன. ஒரு நாட்டுச் செலுத்து நிலைகளில் பற்றுக்குறை நேரிடும்போது அதன் நேர் எதிர் காரண காரியங்கள் சங்கிலித் தொடர்போல் பின்னப்பட்டு அந்நாட்டுச் செலுத்து நிலையில் சமநிலையைக் கொண்டு வருகின்றன. ஒரு நாட்டின் பாதகமான வணிக நிலையின் பிரதிபலிப்பு அதன் ஏற்றுமதியில் இருப்பதைவிட மிகுதியாக இருக்கும். இறக்குமதி அந்நாட்டிலிருந்து பொன் வெளியோட்டத்திற்குத் (outflow) துணை புரிகிறது. அதுபோல் சாதக வணிகநிலை அந்நாட்டிற்குள் பொன் உள்ளோட்டம் (inflow) நிகழ வகைசெய்கிறது.

பாதக வணிக நிலையிலுள்ள நாட்டிலிருந்து வெளியோட்டமாகும் பொன்னால் அந் நாட்டின் பண அளவு சுருங்கும். இதனால் பிற்போக்கு நிலைமையுண்டாகி அந்நாட்டு விலையும், வருவாயும் குறைகின்றன அல்லது பணவாட்டம் (deflation) உண்டாகிறது. பொன்னிழப்பு நாடுகளில் பொதுவாக ஏற்படும் விலைக் குறைவு வெளிநாட்டு மக்களுக்கு அப்பொன்னிழப்பு நாட்டு ஏற்றுமதிப் பொருள்கள் மலிவாகத் தோன்றும். பொன்னிழப்பு நாட்டு மக்கள் இதற்குமுன் வெளிநாடுகளிலிருந்து மலிவாக இறக்குமதி செய்த சரக்குகளைப் புதிய சூழ்நிலையில் (அச்சரக்குகளின் விலை உள்நாட்டுச் சரக்குகளைவிட அதிகமாகத் தோன்றுவதால்) இறக்குமதி செய்யமாட்டார்கள். ஆகவே ஏற்றுமதி அதிகரித்து இறக்குமதி குறைகிறது அல்லது தடைப்படுகிறது. இதனால் எதிர் விளைவு ஏற்பட்டுச் சாதக வணிகநிலை (Favourable balance of trade) உண்டாகிப் பொன் உள்ளோட்டம் நிகழ்கிறது. இதனால் பண அளவு விரிவடைகிறது. இதன் தொடர்பாக வருவாய் பெருகி விலைகளும் உயர்கின்றன. பொன் உள்ளோட்டத்தால் அனைத்துப் பொருள்களின் தேவை வளைகோடு வலப்

பக்கம் இருந்து இடப்பக்கம் உயர்கிறது. பொன் இழப்பு நாடுகளின் பொன் வெளியோட்டத்தால் வருவாய் குறைந்து விலை மலிந்து ஏற்றுமதி சுருங்கி இறக்குமதி விரிவடைகிறது.

இவ்வாறு பொன் உள்ளோட்டமுள்ள (inflow) நாடு பணவீக்க (inflation) நடவடிக்கைகளாலும், பொன்னிழப்பு அல்லது பொன் வெளியோட்ட (outflow) நாடுகள் பணவாட்ட (deflation) நடவடிக்கைகளாலும் அயல் நாட்டுச் செலுத்து நிலைகளில் சமநிலை எய்துகின்றன. உள்நாட்டு நிலையற்ற அகவிலை நிலைகள் இரண்டு நாடுகளின் நிலையான மாற்று விகிதத்திற்கு அடிகோலுகின்றன.

அங்காடி மாற்று விகிதம் மாறுபடும்போது பொன் திட்ட நாடுகளுக்கு இடையேயுள்ள தன்னியக்கப் பொன் ஓட்டமும், பொன் திட்ட இயல்புகளும் அங்காடி மாற்று விகிதத்தை இயல்பான அல்லது நாணயச்சாலைச் சமநிலை மாற்று விகிதத்திற்குக் கொண்டு வருகின்றன.

பொன் திட்டத்தின்கீழ் உள்நாட்டு விலையிலும் வருவாயிலும் நிலையற்ற தன்மை உண்டாக்குவதன்மூலம் நிலையான மாற்று விகிதத்தை எய்த முடிகிறது. அதாவது பொன்திட்ட நாடுகளின் உள்நாட்டுப் பொருளாதாரத்தில் பணவீக்கம் (inflation) அல்லது பணவாட்டத்தை (deflation) ஏற்படுத்துவதன்மூலம் மாற்று விகிதத்தில் நிலையான தன்மையை அடைய முற்படலாம். அயல் நாட்டுச் செலுத்து நிலைகளில் உள்ள பொன் ஓட்டமானது சிறு அளவில் உள்ள சமநிலைக்கேட்டைச் சரிசெய்யும் (disequilibrium). அயல் நாட்டுச் செலுத்து நிலையில் மிகுதியான சமநிலைக் கேடு ஏற்பட்டால் பொன் ஓட்டமோ, மாற்று விகித வட்டி வேறுபாடோ இரண்டு நாடுகளிடையே சமநிலையைக் கொண்டுவர முடியாது. பொன் ஓட்டங்களினால் ஏற்படுகிற பொன் இழப்பு பொன் பெறும் நாடுகளிடையே நிகழும் ஏற்றுமதி (அந்நியச் செலாவணி அளிப்பு) இறக்குமதி (அந்நியச் செலாவணித் தேவை) மூலம் அயல் நாட்டு மாற்று விகிதத்தின்மீது அயல் நாட்டுச் செலுத்து நிலைகளில் (Balance of Payments) சமநிலைக்கேடு ஏற்படுவது உண்மையே ஆனாலும் அதனைச் சரி செய்யப் படுவது தெளிவான முறையில் விளக்கப்படவில்லை.

1. அயல் நாட்டுச் செல்லுகளில் பண்டங்கள் மட்டும் முக்கியமானதல்ல. மூலதன இயக்கமும், பணிகளும் பன்னாட்டுச் செல்லுகளில் முக்கிய அங்கம் வகிக்கின்றன.

2. முதன் முதலாகப் பொன்னேட்டம் நிகழ்வதில்லை. குறுங்கால நிதிகளும் (Short term funds), ஈடுகளும் (Securities) தான் பொன்னுக்கு முன்னதாக இடம் பெயர்கின்றன. அயல் நாட்டுச் செல்லுகளில் சமநிலை, மூலதன நிதி ஓட்டத்தின்மூலம் ஏற்படுத்தப்படும்போது பண்டங்களின் விலைகள் பாதிக்கப்பட மாட்டாது. பொன் உள்ளோட்டம் நிகழ்ந்தால்கூட அது மைய பாங்கிற்கே போய்ச் சேருகிறது. அங்கு அது செலாவணிகள், கடன்களில் அதற்கேற்ற அதிகரிப்பை ஏற்படுத்த வேண்டும் என்ற தேவையில்லை.

1930-ல் அமெரிக்காவில் பொன் உள்ளோட்டம் மிகுந்த அளவில் நிகழ்ந்தபோது பொன்னை முடக்கி வைப்பதன்மூலம் புழக்கத்தில் உள்ள செலாவணிப் பணத்தின் அளவைப் பாதிப் பதைத் தடுத்து நிறுத்தியது அமெரிக்கா. இப்பொன் இயக்கக் கொள்கையானது பொன்திட்ட நாடுகளின் நிலையற்ற விலை அமைப்புக்களின்மேல் மிகுதியான நம்பிக்கையை ஊட்டுகிறது. அதாவது பொன் இழப்பு நாட்டில் விலை குறைகிறது என்றும், பொன் பெறும் நாட்டில் விலை ஏறுகிறது (ஏற்றம்) என்றும் பொருள் படுகிறது. அயல் நாட்டுச் செல்லுகளில் சமநிலை ஏற்படுத்தப் பொன் இழப்பு நாட்டுக் கூலிகளைத் தேவையான அளவு குறைக்க வேண்டியுள்ளது. ஆகவே அரசியல் கட்டுப் பாடற்ற வணிகக் கோட்பாடு மாறும் சூழ்நிலைக்கேற்ப நிலவவேண்டும்.

1925-ல் இங்கிலாந்து திரும்பவும் பொன் திட்டத்தின்கீழ் வந்தபோது அந்நாட்டில் பொருளாதாரம் மாற்றமடையும் என்றும், கூலிகள் குறையும் என்றும் இம்முறை கையாளப் பட்டது. ஆனால் வணிகச் சங்கங்கள் கூலிக் குறைப்பை எதிர்த்தன. வேலை நிறுத்தம் இங்கிலாந்தின் பொருளாதாரத்தை மிகவும் பாதித்தது. குறைந்தபட்சக் கூலி நிர்ணயமும் விலைக் கட்டுப்பாடும் நிரம்பிய இக்காலத்தில் பழைய பொன் பெயர்ச்சி அல்லது பொன் இயக்கக் கொள்கை செயல்படாது.

மேலும் இப் பொன் இயக்கக் கொள்கையானது அயல் நாட்டுச் செல்லுகளைச் சமநிலைப்படுத்தும் சுமை இரண்டு நாடுகளின் மேலும் சரிசமமாகச் சுமத்தப்படுகிறது, எடுகோளின் அடிப்படையில் அமைந்துள்ளது. இரண்டு நாடுகளும் பொருளா தாரச் சமநிலையில் இருந்தால் இந்நிலை நிலவும். சிறு பின்தங்கிய நாட்டிற்கும் பெரும் முன்னேற்ற நாட்டிற்குமிடையே வாணிபம் நிகழ்ந்தால் பாகிஸ்தான் — அமெரிக்கா — பாகிஸ்தானிலிருந்து பொன் ஏற்றுமதியாகும்போது விலை மிகவும் குறையும். ஆனால்,

பொன் உள்ளோட்டம் நிகழும்போது அமெரிக்காவில் சிறுஅளவில் தான் விலைகூடும். ஏனென்றால் அமெரிக்காவின் மொத்த பொன் இருப்பில் ஒரு சிறு பகுதிதான் கூடுகிறது.

## வாங்குந்திறன் சமநிலைக் கோட்பாடு
## (Purchasing Power Parity Theory)

**வாங்குந்திறன் சமநிலைக் கோட்பாட்டின் இலக்கணம்:** செலாவணிகள் பொன்னுக்கு நிகராக இல்லாதபோதும், பொன்னுக்குத் தடையற்ற பண்ணுட்டுப் பெயர்ச்சி இல்லாத போதும் மாற்று விகிதம் நாணயச்சாலைச் சமநிலையுடன் எவ்விதத் தொடர்பும் அற்று இருக்கிறது. பொன் புள்ளிகளுக்குமேல் (Gold points) மாற்று விகிதத்தில் ஏற்ற இறக்கம் ஏற்படுகின்றன. ஆனால், விலைகளுக்கும் (prices) மாற்று வீதங்களுக்கும் இடையே யுள்ள தொடர்பு மிகவும் சாதாரணமானதொன்று. பணத்தின் மதிப்பு விலைகளால் தலைகீழாக அளக்கப்படுகிறது. விலைகள் அதிகமாக இருக்கும்போது, பணத்தின் மதிப்பு (value) அல்லது வாங்கும் திறன் (purchasing power) குறைவாக இருக்கும். அப்படியே விலைகள் குறைவாக இருக்கும்போது, பணத்தின் மதிப்பு அல்லது வாங்கும் திறன் அதிகமாக இருக்கும். விலைகளால் அளவிடப்பட்ட மதிப்பை, செலாவணியின் அகமதிப்பு (internal value) என்றழைக்கலாம். அச் செலாவணி மற்ற செலாவணிகளுக்கு மாற்றப்படக்கூடிய வீதத்தினால் அளவிடப் படும் மதிப்பைப் புறமதிப்பு (external value) எனக் கொள்வோம். அதாவது ஒரு செலாவணியின் புறமதிப்பின் போக்குகள் (move ments) அதனுடைய அகமதிப்பின் போக்குகளைப் பின்பற்றியே செல்லும். மேலும், செலாவணியின் புறமதிப்புப் போக்குகள் (movements in the external value of currency) மற்ற செலாவணி களின் அகமதிப்பை ஒட்டியுள்ள (relative to the internal value of other currencies) அதன் அகமதிப்புப் போக்குகளைப் பின்பற்றியே செல்லும் அல்லது இவ்விரு செலாவணிகளுக்கிடையேயுள்ள மாற்று வீதமும், முறையே அவற்றின் வாங்குந் திறன்களுக் கிடையேயுள்ள வீதமும் ஒன்றாகவே இருக்கும். இக் கோட்பாடு முழுமைக்கும் வாங்குந்திறன் சமநிலைக் கோட்பாடு (Purchasing Power Parity Theory) எனப் பெயரிடப்படுகிறது.

இரண்டு மாற்றுத் தன்மையற்ற செலாவணிகளுக்கிடையே யுள்ள மாற்று விகிதச் சமநிலை அவற்றின் வாங்குந்திறன்களுக் கிடையேயுள்ள விகிதத்தால் நிர்ணயிக்கப்படுகிறது. இரண்டு செலாவணிகளுக்கிடையேயுள்ள வாங்குந்திறன் சமநிலை அடையும் போது மாற்று விகிதம் நிலைபேறுடையதாகிறது.

உள்நாட்டு வாங்குந்திறன் மாற்று விகிதத்தை எவ்வாறு பாதிக்கிறது என்பதை ஆராய்வோம். ஈடையற்ற வாணிகத்தில் ஒரு செலாவணியானது அயல் நாட்டு அங்காடியில் வேண்டிய அளவில் பண்டங்களையும் பணிகளையும் வாங்குகிறது. அப்போது இச் செலாவணிக்கும் மற்ற செலாவணிக்குமுள்ள மாற்று விகிதமானது அதன் அக, புற வாங்குந்திறனைச் சமநிலையடையச் செய்கிறது (makes its internal and external purchasing power equal). அக, புற வாங்குந்திறனின் சமநிலை அடையச் செய்வதிலிருந்து இந்நடப்பு மாற்று விகிதம் தவறினால் வாணிக ஓட்டம் (trade flows) பாதிக்கப்படுகிறது. சமநிலையை நிலைநாட்ட மாற்று அங்காடியிலுள்ள செலாவணிகளின் தேவை, அளிப்பு நிலைகள் மாறுபடுகின்றன.

செலாவணியின் நடப்பு மாற்று மதிப்பு வாங்குந்திறன் சமநிலையைவிட உயர்ந்திருக்கும்போது உள்நாட்டுச் செலாவணியின் வாங்குந்திறன் உள்நாட்டில் இருப்பதைவிட அயல் நாட்டு அங்காடியில் அதிகரிக்கும். இந்நாட்டு மக்கள் வழக்கத்தைவிட மிகுதியாக அயல் நாட்டுச் சரக்குகளை வாங்குவார்கள். மாற்று அங்காடியில் அயல் நாட்டுச் செலாவணிக்கான தேவையும் அதிகரிக்கும். அயல் நாட்டுச் செலாவணியுடன் ஒப்பிடும்போது உள்நாட்டுச் செலாவணியின் மாற்று மதிப்புக் குறையும். நடப்பு மாற்று விகிதத்தில், செலாவணியின் உள்நாட்டு வாங்குந்திறன், அயல் நாட்டு அங்காடியிலுள்ள வாங்குந் திறனைவிட, நடப்பு மாற்று விகிதம் வாங்குந்திறன் சமநிலையைவிடக் குறைவாக இருக்கும்போது, அதிகரிக்கும். அப்பொழுதும் உள்நாட்டிலிருந்து அயல் நாட்டுக்குச் சரக்கு ஓட்டம் மிகுதியாகும். ஆகவே, செலாவணியின் தேவையும் அதன் மாற்று மதிப்பும் உயரும். (எ. கா.): இந்தியாவில் ரூ. 7-50-க்கு வாங்கக்கூடிய சரக்குகளை அமெரிக்காவில் 1 டாலருக்கு வாங்கலாம் என்று கொள்வோம். இவ்விரண்டு செலாவணிகளின் மாற்று விகிதம் 1 டாலருக்கு= ரூ. 7-50 ஆக இருந்தால் ரூபாய், டாலர்களின் வாங்குந்திறன்கள் சமமாகவே இருக்கும். இரண்டு செலாவணிகளுக்கிடையே உள்ள வாங்கும்திறன் சமநிலை இதுவேயாகும். ஒரு சில காரணங்களால் ஒரு டாலரின் மாற்று மதிப்பு ரூ. 7-60 ஆக உயர்ந்ததால், செலாவணிகளின் உள்நாட்டு வாங்குந்திறன் மாறுதிருக்கும் போது, இந்தியாவின் சரக்குகளை அமெரிக்கர்கள் இலாபகரமாக வாங்கலாம். ஏனென்றால், 1 டாலருக்கு மாற்றாக ரூ. 7-60 பெறுவதால் அமெரிக்காவில் 1 டாலர் கொடுத்து வாங்கப்படும் சரக்குகளைவிட மிகுதியாக இந்தியாவில் ரூ. 7-60 கொடுத்துச் சரக்குகளை வாங்கலாம். ஆனால், அமெரிக்காவில் சரக்குகளை

வாங்குவதைவிட இந்தியாவிலேயே சரக்குகளை வாங்குவதுமேல் என்று இந்தியர்களும் எண்ணலாம். ஆகவே அமெரிக்காவிலிருந்து இந்தியாவுக்குச் சரக்கு ஓட்டம் குறையும். இந்தியாவிலிருந்து அமெரிக்காவுக்குச் சரக்கு ஓட்டம் (flow of goods) மிகுதியாகும். டாலர்களுக்கான தேவையும் குறையும். 1 டாலர் = ரூ. 7-50-க்குச் சமமாகும்வரையில் மாற்று விகிதம் மாற்றமடையும். எதிர் நிலைமை உருவாகும்போது அதாவது மாற்று விகிதம் 1 டாலர் = ரூ. 7-40 ஆகக் குறையும்பொழுது இந்தியர்கள் அமெரிக்காவில் மிகுதியான சரக்குகளை இலாபகரமாக வாங்கலாம். அமெரிக்கர்கள் இந்தியாவில் குறைவான சரக்குகளையே வாங்க முற்படுவர். இதனால் மாற்று அங்காடியில் டாலர்களின் தேவை அதிகரித்து 1 டாலர் = ரூ. 7-50-க்குத் திரும்பும்வரையில், மாற்றமடையும். இம்மாற்று விகிதத்தைச் சுற்றி, நடப்பு விகிதம் ஏறி, இறங்கி 1 டாலர் = ரூ. 7-50 என்ற விகிதத்தையே நாடிச் செல்கிறது.

## வாங்குந்திறன் சமநிலையிலுள்ள போக்குகள்

விலை மட்டம் (price level) ஏறியுள்ள அதே விகிதத்திற்கும் (proportion) சமமாக மாற்று விகிதம் குறையும் எனப் பேராசிரியர் குஸ்டாவ் காசல் (Prof. Gustav Cassal) கூறியுள்ளார். இக்கூற்றின்படி வெளியுலகத்தில் விலைகள் ஏறாமல் அப்படியே இருக்க, பிரிட்டனில்மட்டும் விலைகள் இருமடங்காக அதிகமானால், பவுண்டின் புதிய சமன்பாட்டு மதிப்பு (epuilibrium value) ஏற்கனவே இருந்ததில் பாதியாகத்தானிருக்கும். விலை மட்டத்தின் போக்குகளே (movements in price level) மாற்று விகிதப் போக்குகளுக்குக் (movements in exchange rate) காரணமாக விளங்குகின்றன என்றும், அதே நேரத்தில் மாற்று விகிதத்தின் போக்குகள் விலை மட்டத்தில் எவ்வித நிரந்தரமான நிலையையும் உண்டுபண்ணத் திறனற்று இருக்கின்றன என்றும் காசல் விளக்குகிறார்.

பொன் திட்டத்தின்கீழ் நீண்ட காலத்திற்குச் செலாவணிகளின் பொன் சமநிலைகள் நிலைபேறுடையதாக இருக்கின்றன. ஆகவே, இரண்டு செலாவணிகளுக்கிடையேயுள்ள நாணயச்சாலைச் சமநிலையும் நிரந்தர விகிதத்திலுள்ளது. வாங்கும்திறன் சமநிலையும் சரிசமமாகப் பெயர்கிறது. செலாவணிகளின் உள்நாட்டு வாங்குந்திறன் சில சமயங்களில் மிக வேகமாகவும், மூர்க்கமாகவும் ஏற்ற இறக்கத்திற்கு இலக்காகிறது. இதுவே

செலாவணியின் புறமதிப்பு (external value) ஏற்ற இறக்கத்திற்கும் காரணமாகிறது.

இரண்டு நாடுகளுக்கிடையே, இயல்பான தடையற்ற வாணிகம் நிகழும்போது அச் செலாவணிகளின் உள்நாட்டு வாங்குந்திறன் (நிரந்தரமாக) நிலையானதாக இருக்கும்போது வாங்குந்திறன் சமநிலைக்கு ஒப்பாக அவ்விரண்டு செலாவணிகளின் மாற்று விகிதம் நிர்ணயிக்கப்படும். வாங்குந்திறனில் மாற்றம் ஏற்படாத வரையில் மாற்று விகிதத்தில் பெறும் மாறுதல் ஏற்படாது. ஆனல் செலாவணியிலோ, இரண்டு செலாவணிகளின் வாங்குந்திறனிலோ மாற்றம் ஏற்பட்டால் அம் மாற்றம் மாற்று விகிதத்தில் பிரதிபலித்துப் புதிய சமநிலை உருவாகும்.

ஒரு குறிப்பிட்ட காலத்தில் டாலர் = ரூபாய் விகிதம் 1 டாலர் = ரூ. 7-50 என்று கொள்வோம். ஒரு குறிப்பிட்ட பொருளின் (இரண்டு நாடுகளிலும்) விலைக் குறியீட்டெண் (price index number) 100 என்று கொள்வோம். அமெரிக்காவில் விலைக் குறியீட்டெண் 125 ஆக அதிகரித்தால் அல்லது டாலரின் அக மதிப்பு (internal value) முந்திய மதிப்பைவிட $\frac{100}{125}$ குறைந்தால் டாலரின் மாற்று மதிப்பும் சமவிகிதத்தில் குறைந்து 1 டாலர் = ரூ. 7-50 $\times \frac{100}{125}$ = ரூ. 6 ஆகும். இதற்கிடையில் இந்தியாவில் விலைக் குறியீட்டெண் 150 ஆக உயர்ந்தால் ரூபாயின் மாற்று மதிப்பு குறையும். அதே வீதத்தில் டாலரின் மாற்று மதிப்பு உயரும். புதிய மாற்று விகிதம் 1 டாலர் = ரூ. 7-50 $\times \frac{100}{125} \times \frac{150}{100}$ = ரூ. 9 ஆகும்.

மாற்றவியலாச் செலாவணித்தாள் நாணயங்கள் (inconvertible paper currency) கொண்ட நாடுகளிடையேதான் அயல் நாட்டு மாற்று விகித வாங்குந்திறன் சமநிலைக் கோட்பாடு (Purchasing power parity theory foreign exchange rate) பொருந்தும். பொன் அல்லது வெள்ளித் திட்டத்தின்கீழ் உள்ள நாடுகளுக்கிடையே நாணயச்சாலைச் சமநிலை (Mint par) முறையே, இரண்டு நாடுகளுக்கிடையே மாற்று விகிதச் சமநிலையை நிர்ணயிக்கப் போதுமானது ஆகும். நாணயச்சாலைச் சமநிலைக்கும் (Mint par) வாங்குந்திறன் சமநிலைக்கும் (Purchasing power parity) உள்ள வேறுபாடானது நாணயச்சாலைச் சமநிலை நிலைப்படுத்தும்போது வாங்குந்திறன் சமநிலை நிலைபெயர்கிறது. அதாவது அந்நாடுகளின் விலையின் ஏற்ற இறக்கத்திற்கேற்ப நிலைபெயர்கிறது. இச் சமநிலையைச் சுற்றிக் குறிப்பிட்ட நாட்டுச் செலாவணியின்

தேவை, அளிப்பு மாற்றத்தினுல் அயல் நாட்டு மாற்று அங்காடி விகிதத்தில் ஏற்ற இறக்கம் உண்டாகிறது. ஒரு நாட்டிலிருந்து மற்ெருரு நாட்டுக்குச் சரக்குகளை அனுப்பும் செலவு, சுங்க வரி, காப்பீடு, பாங்குக் கட்டணம், வட்டி, காப்பீடு செய்யாததால் ஏற்படும் நட்டங்கள் அந்நிய அங்காடியில் விளம்பரச் செலவு முதலியவற்ருல் ஏற்படும் வரம்புகளுக்கிடையே மாற்று விகிதத்தில் ஏற்படும் ஏற்ற இறக்கம் கட்டுப்படுத்தப்படுகிறது. பொன் திட்டத்தைக்கொண்ட நாடுகளிடையே உள்ள பொன் புள்ளிகளைப் (Gold points) போல் இக்கட்டுப்பாடுகள் நிரந்தரமானவை அன்று.




படம் 5

மேற்கண்ட வரைப்படம் சரக்குகளின் ஏற்றுமதி இறக்குமதி நிலைகளால் (Export and Import Points) சமநிலைப் பெயர்ச்சியின் ஏற்ற இறக்கத்தின் உயர்ந்த, தாழ்ந்த நிலைகளை விளக்குகிறது. தேவை, அளிப்புக் கோடுகளின் சந்திப்பால் (A, B) அங்காடி மாற்று விகிதம் நிர்ணயிக்கப்படுகிறது. தேவைக்கோடு 1, அளிப்புக்கோடு 1ஆல் மாற்று விகிதம் O. R¹-ல் நிர்ணயிக்கப்படுகிறது. தேவை

அளிப்புக்கோடுகள் தேவை 2 அளிப்பு 2 நிலைக்கு மாற்றமடையும் போது மாற்று விகிதம் O. R[1]-ல் இருந்து O. R[2]-க்கு உயருகிறது.

## திறனாய்வு
## (Criticism)

1. வாங்குந்திறன் சமநிலைக் கோட்பாட்டில் குறிப்பிட்டு உள்ளதுபோல் செலாவணியின் வாங்குந்திறன் அலகுகளுக்கும் அந்நிய மாற்று விகிதத்திற்கும் எவ்வித நேரடித் தொடர்பும் இல்லை. செலாவணியின் வாங்குந்திறனைவிட வேறு பல காரணங் களாலும் மாற்று விகிதங்கள் பாதிக்கப்படுகின்றன. (எ. கா.): சுங்கவரி (tariff); மற்ற நாடுகள் இறக்குமதி வரி (import duty) விதிக்காமல் இருக்கும்பொழுது ஒரு நாடு மட்டும் இறக்குமதி வரி விதித்தால் நாட்டின் உள்நாட்டுச் சரக்கு விலைமட்டத்தில் மாற்ற மில்லாதபோதிலும் இறக்குமதி விதிக்கும் நாட்டுச் செலாவணியின் மாற்று விகிதம் உயரும்

2. உள்நாட்டுச் சரக்கு விலைகளோடு பன்னாட்டுச் சரக்கு களின் விலைகளை ஒப்பிடாமல் இரண்டு நாடுகளின் விலைமட்டத்தை மட்டுமே வாங்குந்திறன் சமநிலைக் கோட்பாடு ஒப்பிட்டுப் பார்க்கிறது. சரக்குகளின் போக்குவரத்துச் செலவு, இறக்குமதி வரிகளைக் கணக்கில்கொண்டு பன்னாட்டுச் சரக்குகளின் விலை, வெவ்வேறு நாடுகளில் ஒரே தன்மையுடையதாய் இருக்கிறது. மாற்று விகிதம் இரண்டு நாடுகளின் ஒப்பிட்ட விலை மட்டத்தைப் பொறுத்திருக்கிறது என்று கொள்வோமானால் உள்நாட்டு அங்காடியில் விற்பனையாகிப் பன்னாட்டு வாணிகத்தில் அடங்காத சரக்குகளின் விலைகளும் இவ் விலை மட்டத்தில் அடங்கியுள்ளன என்று கொள்ளவேண்டும்.

பன்னாட்டு வாணிகத்தில் ஈடுபடுத்தப்படும் சரக்குகளின் விலை மட்டத்தை (price level) மட்டும் கணக்கிட்டு அவற்றுடன் தொடர்பான போக்குவரத்துச் செலவு, சுங்க வரிகளின் மாற் றத்தைக் கணக்கில் சேர்க்காமல் விடுத்தால்தான் இவ் வாங்குந் திறன் சமநிலைக் கோட்பாடு பொருந்தும் என்று கெஸ்கரும் மற்றவர்களும் இடித்துக் கூறுகிறார்கள். பொது விலை மட்டத் திற்குப் பயன்படுத்தினால் இக்கோட்பாடு சரியாகாது.

மாற்றங்கள் ஒப்புமைசார்ந்த விலைமட்டங்களைக் குறித்தாலும் அனைத்துப் பண்டங்களும், பணிகளும் எச்செலவும் இல்லாமல் ஒரு நாட்டிலிருந்து மற்றொரு நாட்டிற்கும் எடுத்துச்செல்லப்

படலாம் என்ற எப்பொழுதும் இல்லாத எடுகோடுக்குகந்ததாக இருந்தால்தான் ஒரு நாட்டின் பண அலகு உள்நாட்டிலும், வெளி நாடுகளிலும் வாங்குந்திறனைப் பெற்றிருக்கிறது என்பது உண்மை யாகும். பண அலகில் ஒரேவித வாங்குந்திறன் இருக்கும் என்று எண்ணுவதைக்காட்டிலும் பன்னாட்டு விலைகள் ஒத்திருக்கின்றன என்பது சிறந்ததாகிறது. ஏனென்றால், சராசரி விலை மட்டங்கள் மட்டுமல்லாமல் ஒவ்வொரு பண்டம் அல்லது பணியின் விலையும், மாற்றுக்களின் அடிப்படையில் கணிக்கப்பட்டால் ஒன்றாகவே இருக்கும்.

பன்னாட்டு வாணிகப் பொருள்களின் அளவில்மட்டும் வாங்குந் திறனைக் கருதுவோமானால் இக்கோட்பாடு ஒரு வெற்று உண்மை யாகும். இத் தடையை நீக்கினால் இவ்வாங்குந்திறன் சமநிலைக் கோட்பாடு ஓரளவு உண்மை உடையதாகும். மாற்று விகிதத்தைக் கணிப்பதற்கு எவ்வித நம்பிக்கையும் வைக்கமுடியாது. சுருங்கக் கூறின் அயல் நாட்டு மாற்று விகிதத்தின் உண்மை மதிப்பை அளப்பதற்கு இக்கோட்பாடு எவ்வழியினையும் காட்டவில்லை.

விலைகளின் மாற்றங்கள், பற்பலவிதக் குறியீட்டெண்களால் (index numbers) அளக்கப்படலாம். மொத்த விலைகள் குறியீட் டெண்களை எடுத்துக்கொண்டு வாங்குந்திறன் சமநிலையைக் கணக் கிட்டோமானால் தயாரித்த பொருள்கள், மற்றும் அனைத்துப் பணிகள், புலனுகா ஏற்றுமதிகள் முதலானவற்றைக் கணக்கில் சேர்க்காமல் விடப்பட்டதாகக் கருதப்படுகிறது. வாழ்க்கைச் செலவுக் குறியீட்டெண்கள் (Cost of living index numbers) பயன் படுத்தப்பட்டால், செலாவணி அலகின் வாங்குந்திறனைக் கணிக்கும்போது பன்னாட்டு வாணிகத்திலடங்காத பல பொருள் களும் சேர்த்துக் கொள்ளப்படும். ஆனால் இதிலும் உழைப்புத் திறன் (labour efficiency) நாட்டுக்கு நாடு மாறுபடுகிறது. குறுகிய காலத்தில் (short period) உள்நாட்டு அனைத்துப் பொருள்களின் விலைகளும் ஒரே திசையில் பெயர்வதில்லை. ஆகவே, நெடுங் காலத்தில்தான் (long period) இக்கோட்பாடு பொருந்தும். ஆனால் வாழ்க்கையில் அனைத்துப் பிரச்சினைகளுக்கும் நீண்ட காலத்தைவிடக் குறுகிய காலமே முக்கியமானதாகும். ஏனென்றால் நீண்டகாலத்தில் நாமனைவரும் இறந்துபடுவோம். இறப்பிற்கு பிறகு எவ்விதப் பிரச்சினையும் இல்லை.

மேலும், ஒரு நாட்டில் விற்பனையாகும் பெரும்பாலான பண்டங்களும், பணிகளும் வேறு நாட்டில் அவற்றை ஒத்த பண்டங்களோடும், பணிகளோடும் போட்டி இடுவதில்லை.

(எ.கா.): வீடுகளுக்கும், முடி திருத்துவதற்கும் இந்தியாவிலுள்ள தேவைக்கும் அமெரிக்காவில் உள்ள அதே தேவைக்கும் இடையே போட்டி இராது. மேலும் கப்பல் சத்தம், வாணிகத் தடைகளாலும் தரப்படுத்தப்பட்ட கோதுமையைப்போல் பன்னாட்டுப் பண்டங்களின் விலை, உள்நாட்டுச் செலாவணியில் கணக்கிடப்படும் போது, பல நாடுகளிலும் இராது. பன்னாட்டு வாணிகத்திலுள்ள பண்டங்கள் ஒவ்வொரு அங்காடியிலும் ஒரே விலையில் விற்கப் படாமல் இறக்குமதி செய்யும் நாட்டில் அதிக விலையிலும், ஏற்றுமதி செய்யும் நாட்டில் குறைந்த விலையிலும் விற்பனை ஆகின்றன என்பதை இவ்விலை ஒப்பீடு புலப்படுத்துகிறது.

3. இவ்வாங்குந்திறன் சமநிலைக் கோட்பாட்டின்படி அயல் நாட்டு மாற்று விகிதத்தில் மாற்றம் ஏற்படும்போது விலை மட்டத்தில் உள்ள மாற்றங்களும் எதிரொலிக்கவேண்டும் ஆனால், மாற்று விகிதத்தில் மாற்றம் இல்லாதபோதும் ஒரு நாட்டின் விலை மட்டத்தில் மாற்றத்தைக் காண்கிறோம். ஏனென்றால், பன்னாட்டு வாணிகத்தில் ஈடுபடுத்தப்படும் பண்டங்கள்மட்டுமே அயல் நாட்டுச் செலாவணியின் தேவை, அளிப்பையும், மாற்று விகிதத்தையும் பாதிக்கின்றன. உள்நாட்டு வாணிகத்தில் ஈடுபடுத்தப்படும் பொருள்கள்மட்டும் செலாவணியின் மாற்று மதிப்பில் நேரடித் தொடர்பு கொள்வதில்லை. ஆகவே, அவற்றின் விலைகள் நேராகவோ, உடனடியாகவோ மாற்று விகிதத்தைப் பாதிக்காமல் மாற்றமடைகின்றன. பன்னாட்டு வணிகத்தில் ஈடுபடுத்தப்படும் பண்டங்களை மட்டும் உள்ளடக்குவதால் இவ் வாங்குந்திறன் சமநிலைக் கோட்பாடு ஒரு வெற்று உண்மையாகிறது.

4. இக் கோட்பாட்டின்படி விலை மட்டங்களில் ஏற்படும் மாற்றங்களானது அயல் நாட்டு மாற்று விகிதங்களிலும் மாற்றங்களைத் தூண்டுகின்றன. ஆனால், அயல் நாட்டு மாற்று விகிதங்களில் உள்ள மாற்றங்கள் விலைமட்டங்களில் மாற்றங்களை ஏற்படுத்துவன அன்று. இக் கோட்பாட்டின்படி இவ்வியக்கம் ஒருதலையானது. ஆனால் மாற்று வீதங்களில் ஏற்படும் மாற்றங்கள் விலைமட்டங்களைப் பாதிக்காது என்பது எப்பொழுதும் உண்மையானதன்று. (எ.கா.): ஊக வணிக முறையிலுள்ள பேரளவு மூலதன ஏற்றுமதி பவுண்டு ஸ்டெர்லிங்கின் மாற்று மதிப்பைக் குறைத்துப் பல மாதங்கள் நீடித்தால் பிரிட்டனின் இறக்குமதிப் பண்டங்களின் விலை மிகுதியாகும். அப்பொழுது அமெரிக்கக் கோதுமை, முதலிய மற்ற பண்டங்களை இறக்குமதி செய்ய மிகுதியான பவுண்டுகள் தேவைப் படும். பிரிட்டனிலும் பற்பல தொழிற்சாலைகள் அமெரிக்கா விலிருந்து இறக்குமதி செய்த கச்சாப் பொருள்களையே பஞ்

படுத்துகின்றன என்பது உண்மையாகும். இறக்குமதி செய்த கச்சாப் பொருள்களின் விலை ஏற்றத்தால் தயாரிப்புப் பொருள்களின் விலைகளும் அதிகரிக்கும். அதுபோல் பிரிட்டனின் ஏற்றுமதிகள் அமெரிக்க டாலர்களோடு ஒப்பிடப்படும்போது மலிவாகும். ஆகவே அவற்றின் தேவை அதிகரிக்கும். குறிப்பாக, குறுகிய காலத்தில் அளிப்பு நெகிழ்ச்சியற்றதாக இருக்கும்போது பிரிட்டனின் ஏற்றுமதியாளர்கள் விலைகளின் அளவைக் கூட்டுவார்கள். பவுண்டு ஸ்டெர்லிங்கில் டாலர் மதிப்பிறக்கத்தின் அளவைவிடக் குறைவாகவே அவர்கள் விலையை ஏற்றினால், ஏற்றுமதியாளர்கள், ஏற்றுமதியைக் குறைக்காமல் இலாபத்தைமட்டுமே பெருக்குகிறார்கள். பிரிட்டனின் ஏற்றுமதிகளில் விலை மட்டம் உயர்ந்தபோதிலும் அயல் நாடுகளில் அவற்றின் விலைகள் மலிவாகவே உள்ளன. இவ்வாறு பவுண்டில் டாலர் மதிப்புக் குறைவதனால் பிரிட்டனின் விலை மட்டம் ஏறுகிறது. எப்பொழுதும் இது நிலைத்திருப்பதன்று. பவுண்டு ஸ்டெர்லிங்கின் மதிப்பு இறக்கத்தால் அயல் நாட்டு அங்காடிகளில் பிரிட்டனின் ஏற்றுமதித் தொழிற்சாலைகளின் போட்டித்திறன் உயருகிறது. அதனால் மற்ற நாடுகளும், பிரிட்டனின் ஏற்றுமதித் தொழிற்சாலைகளின் போட்டி வளர்ச்சியால் அயல் நாட்டு அங்காடியில் தங்களுடைய பிடிப்புக்களை நிலைப்படுத்திக் கொள்வதற்கு, அவற்றின் விலைகளைக் குறைக்கின்றன. ஆகவே பவுண்டின் மதிப்பிறக்கமானது மாற்று விகிதத்தில் இறக்கம்—பிரிட்டனின் விலையை உயர்த்துவதுமட்டுமல்லாமல் அயல் நாடுகளில் விலைக் குறைப்பை ஏற்படுத்துகிறது. இத்தொடர்ச் செயல்கள் இக்கோட்பாட்டின்மூலம் எதிர்பார்ப்பதற்குப் புறம்பாகவே உள்ளன. 'விலைகள் மாற்று விகிதங்களை ஆளுவதைவிட மாற்று விகிதங்களே விலைகளை ஆளுகின்றன' என்ற உண்மை பல நாட்டு மாற்று நடவடிக்கைகளிலிருந்து அறியப்படுகிறது. ஆனால், 'மாற்று விகிதத்தின் இயக்கத்தை முந்திக் கொள்கின்றன' என்பது ஹாமின் கூற்றாகும்.

5. மாற்று விகிதத்தில் ஏற்படும் ஏற்ற இறக்கமானது பல நாடுகளின் விலை மட்டங்களில் பல்வேறு விளைவுகளை ஏற்படுத்துவதற்குக் காரணமாகிறது. ஒருநாடு அதன் நுகர்வுப் பண்டங்களில் பெரும்பாலானவற்றை இறக்குமதி செய்துகொண்டு, அதன் வளங்களில் பெரும்பாலான பகுதியை ஏற்றுமதிப் பொருள்கள் உற்பத்தி செய்வதற்குப் பயன்படுத்திக் கொண்டிருக்குமானால் அதன் விளைவு மிகுதியாக இருக்கும். மாற்று விகிதத்திலிருக்கும் ஏற்ற இறக்கமானது ஏற்றுமதி, இறக்குமதிப் பொருள்களின் விலைகளைப் பாதிக்கும். மொத்தப் பொருள்களில் ஏற்றுமதி, இறக்குமதிப் பொருள்கள் பெரும்பான்மையாக இருந்தால் பொது

விலை மட்டத்தில் உள்ள ஏற்ற இறக்கமும் மிகுதியாயிருக்கும். இவ்வாறு அயல் நாட்டு மாற்று விகிதத்தில் உள்ள ஏற்ற இறக்க மானது நாட்டு வருவாயில் பெரும் பங்கு கொள்ளாப் பன்னாட்டு வாணிகத்தைக் கொண்ட ரஷ்யாவைவிட நாட்டு வருவாயில் பெரும் பங்கு உடைய பன்னாட்டு வாணிகத்தைக்கொண்ட ஆலந்துப் பொருள்களின் விலை மட்டத்தை மிகுதியாகப் பாதிக்கும். இவ்வாறு பன்னாட்டு மாற்று விகிதத்திலுள்ள ஏற்ற இறக்கமானது பல நாடுகளின் விலை மட்டங்களில் பல்வேறு விளைவுகளை உண்டாக்கியபோதிலும், அவை எப்போதும் சில விளைவுகளை ஏற்படுத்துகின்றன. இக் கொள்கையை விளக்குபவருக்காக இவற்றை ஏற்பதற்குப் பதிலாக மறுப்பது என்பது அவர்களுடைய கண்டுபிடிப்பின் முக்கியத்துவத்தையே சிறுமைப்படுத்துவதாகும். ஆகவே, விலை மட்டத்திலுள்ள இயக்கமானது மாற்று விகிதத் திலும் இயக்கத்தை ஏற்படுத்துகிறது என்றும், மாற்று விகிதத்தி லுள்ள ஏற்ற இறக்கமானது விலை மட்டத்தின் மாற்றத்திற்குக் காரணமாகாது என்பதும் தவறாகும்.

6. பன்னாட்டு வாணிகத்தைத் தவிர்த்து வேறு பல காரணங் களாலும் அயல் நாட்டுச் செலாவணியின் தேவை அளிப்புச் சக்திகள் ஏற்படுகின்றன என்பதை இக் கோட்பாடு புறக்கணிக் கிறது. அதாவது புலனாகா, ஏற்றுமதி, இறக்குமதிப் பொருள் களாலும், மற்றும் ஒருதலை மாற்றங்களான செல்லுகள் (payments) நன்கொடைகள், கடனளித்தல், ஒரு நாடு மற்றொரு நாட்டிற்குச் செலுத்தும் வட்டி முதலானவற்றாலும் அந்நியச் செலாவணித் தேவை, அளிப்புச் சக்திகள் ஏற்படுகின்றன என்பதை இக் கோட்பாடு புறக்கணிக்கிறது. நெடுங்கால முதலீடுகள், வட்டி, இலாப ஈவு செலுத்துவதால் மாற்றம் ஏற்படும் மூலதனம், குறுங்கால மூலதன இயக்கம் முதலானவற்றால் ஒவ்வொரு நாட்டின் அயல் நாட்டுச் செலுத்து நிலைகளில் (Balance of payments) பற்றுகளையும், வரவுகளையும் ஏற்படுத்துவது அயல் நாட்டு மாற்று அங்காடியைப் பாதிக்கிறது. வாணிக நிலைகளால் (Balance of trade) மட்டுமல்லாமல் செலுத்து நிலைகளின் (Balance of payments) ஒன்றுபட்ட சக்திகளாலும் மாற்று விகிதம் ஏற்படுகிறது. இவ்வாறு வாங்குந் திறன் சமநிலைக் கோட்பாடு (Purchasing Power Parity Theory) முழுமையற்றது, ஒரு தலையானது. அது மாற்றுரிமையற்ற தாள் நாணயங்களிடையே மாற்று விகிதத்தை நிர்ணயப்பதில் முழுமையான விளக்கத்தை அளிக்கவில்லை என்பது பொருந்தும்.

7. இரண்டு நாடுகளிடையேயுள்ள பொருள்களின் விலை மாருமல் இருந்தாலும், அந்நாடுகளின் பொருளாதாரத் தொடர்புகள் மாற்றமடைந்து மாற்று விகிதச் சமநிலையை மாற்றமடையச் செய்யும் என்பதையும் இக் கோட்பாடு விளக்கவில்லை. (எ.கா.): மூன்றுவது நாடு ஒன்று பன்னுட்டு வணிகத்தில் (இரண்டு நாடுகளிடையே) போட்டியாகச் சரக்கு வாங்குவதாகவோ, விற்பதாகவோ இயங்கினுல் முதலிலிருந்த இரு நாடுகளிடையே உள்ள வாணிகச் சரக்கு ஓட்ட (flow of goods) மானது பாதிக்கப்பட்டு அவற்றின் செலாவணி அலகுகளின் அயல் நாட்டு மாற்று விகிதத்தையும் பாதிக்கும்.

8. இக் கோட்பாடு விலைகளின் இயக்கங்களை மட்டும் பெருவாரியாக எடுத்துக்கொண்டு அயல் நாட்டு மாற்றுக்களின் தேவைகளைப் பாதிக்க விட்டுவிடுகிறது என்று ராஞ்சி நர்க்கி குறை கூறுகிருர். அதாவது விலைகளோ, விலைத் தொடர்போ மாருமல் இருந்தாலும் வாணிகச் சகடத்திலுள்ள (business cycle) நிகர வருமான, செலவீனப் பெயர்ச்சிகளால் மிகுந்த மாற்றம் ஏற்பட்டு அயல் நாட்டு வணிக மதிப்பையும் பாதிக்கச் செய்கிறது என்பதை விடுத்து விலையின் செயலே தேவை என்று இக் கோட்பாடு விளக்குகிறது என்று ராஞ்சி நர்க்கி கூறுகிருர்.

மேற்சொன்ன காரணங்களால் அயல் நாட்டு மாற்று விகிதத்தை நிர்ணயிப்பதில் இக் கோட்பாடு பயனற்றது என்று அறவே விட்டுவிடுவதற்கில்லை. இவ்வளவு குறைபாடுகள் இருந்த போதிலும் பணக் கைக்கோளுக்கு (Monetary Policy) இக் கோட்பாடு மிகவும் இன்றியமையாதது. நடைமுறையில் செய்ய முடியாத செயல்கள் சில உள்ளன என்று இக் கோட்பாடு பல நாடுகளையும் எச்சரிக்கின்றது. 1925-ல் இங்கிலாந்து, அந்நாட்டில் நிலவிய விலைகளின் மட்டங்களுக்குமேல் பவுண்டு ஸ்டெர்லிங்கின் பொன் மதிப்பை அதிகரித்தது. இக் கோட்பாட்டின்படி மற்ற நாடுகளின் விலை மட்டங்களைவிட இங்கிலாந்தின் விலை மட்டம் குறைவாக இருந்தால்தான் பவுண்டு ஸ்டெர்லிங்கின் உயர்ந்த மாற்று மதிப்பை நிலை நாட்ட முடியும். அவ்வாறு இல்லையென்ருல் பவுண்டு ஸ்டெர்லிங்கின் மாற்று மதிப்புச் சரிந்துவிடும். ஆனுல், பாங்கு விகிதத்தை உயர்த்தியும், அயல் நாட்டு மூலதனத்தைக் கவர்ந்தும் பவுண்டின் மதிப்பை நிலைநாட்ட அரசு முயன்றது. பாங்கு விகித ஏற்றமானது விலைகள், கூலிகள், வேலை வாய்ப்புகளில் இறக்கத்தை ஏற்படுத்தியது. அதனுல் வாணிகச் சங்கங்களின் மிரட்டல்களாலும். வேலை நிறுத்தத்தாலும், கூலிகுறைப்பு ஏற்படாமல், விலைகளும் உயர்ந்த மட்டத்தில் இருந்தன. விலை

மட்டத்திற்கும் மாற்று விகிதத்திற்கும் இடையேயுள்ள ஏற்றத் தாழ்வு தொடர்ந்து இருந்தது. அடக்கச் செலவுகளும், விலைகளும், குறைக்கப்படாமல் இருந்தால் பவுண்டு ஸ்டெர்லிங்கின் புறமதிப்பு (external value) குறுகிய காலத்தில் சரிவதைத் தடுக்க முடியாது. 1931-ல் உலகில் மிகுந்த குழப்பம் ஏற்பட்டவுடன் இங்கிலாந்து தனது பொன் திட்டத்தைக் கைவிட்டபோது இச் செயல் நிகழ்ந்தது. மாற்று விகித ஏற்ற இறக்கமுள்ள இக் காலத்தில், அங்காடி மாற்று விகிதம், சமநிலை மாற்று விகிதத்திலிருந்து பிறழ்கிறது என்பதை இக் கோட்பாடு சிறிது அளந்தளிக்கிறது. மாற்று விகித ஒருநிலைப்படுத்தலைக் கணிப்பதற்கு எடுத்துக் கொண்டால் மாற்று விகிதத்தை நிர்ணயிப்பதற்கு இவ்வாங்குந் திறன் சமநிலைக் கோட்பாடு (Purchasing Power Parity Theory) மிகவும் பொருத்தமானதாகும். மாற்று விகித நிலையற்ற போக்குக்கு விலை உயர்வுகள் தலையாய காரணமென்றால் இக்கோட்பாடு மிகவும் உண்மையானதாகும்.

செலாவணி அலகுகளுக்கிடையேயுள்ள மாற்று மதிப்பை இக் கோட்பாட்டால் சரியாக அளக்க முடியவில்லை என்றாலும் பணத்தின் வாங்குந் திறனில் ஏற்படுகின்ற ஒப்பிட்ட மாற்றத்தை இக் கோட்பாடு விளக்குகிறது. ஆனால், மாற்று விகிதச் சமநிலை எவ்வளவில் இருக்க வேண்டுமென்பதைச் சொல்ல வேண்டியதில்லை என்று கீன்ஸ் கூறுகிறார்.

## அயல் நாட்டுச் செலுத்து நிலைக் கோட்பாடு-விளக்கம்
## (Balance of Payment Theory)

வாங்கும் திறன் சமநிலைக் கோட்பாட்டால் (Purchasing Power Parity Theory) பணக் கணியம் (quantity) விளக்கப்பட்டதுபோல் உள்நாட்டு விலை மட்டங்களின் தொடர்புகளல்லாமல் (not related to internal price levels) வேறு பல காரணங்களால் அயல் நாட்டு மாற்று விகிதம் நிர்ணயிக்கப்படுகிறது என்று இவ்வயல் நாட்டுச் செலுத்து நிலைக் கோட்பாடு (Balance of Payment Theory) விளக்குகிறது. இக் கோட்பாட்டின்படி அயல் நாட்டுச் செலுத்து நிலையின் பாதக நிலையானது மாற்று விகிதத்தின் குறை மதிப்பிற்கோ, வீழ்ச்சிக்கோ அடிகோலுகிறது, அயல் நாட்டுச் செலுத்து நிலையின் சாதக நிலையானது அயல் நாட்டு மாற்றுக்களை வலிமையாக்குவதோடு மாற்று விகிதத்தின் நிறை மதிப்பிற்குக் காரணமாகிறது. ஒரு குறிப்பிட்ட மாற்று விகிதத்தில் பாதக அயல் நாட்டுச் செலுத்து நிலை நிலவும்

போது அயல் நாட்டு மாற்றுக்களின் தேவை அவற்றின் அளிப்பை விட மிகுதியாகிறது என்று இக் கோட்பாடு உணர்த்துகிறது. இதனால் உள்நாட்டுச் செலாவணியுடன் ஒப்புநோக்குங்கால் அதன் விலை கூடுகிறது, அதாவது உள்நாட்டுச் செலாவணியின் புற மதிப்புக் (external value) குறைகிறது. சாதக அயல் நாட்டுச் செலுத்து நிலையானது அயல் நாட்டு மாற்று அங்காடியில் உள் நாட்டுச் செலாவணியின் தேவை அதிகரித்துக் கிடைக்கக்கூடிய அளிப்புடன் சந்திக்கக் கூடும். அதனால் அயல் நாட்டுச் செலாவணி யுடன் ஒப்புநோக்குங்கால் உள்நாட்டுச் செலாவணியின் விலை கூடுகிறது. அதாவது உள்நாட்டுச் செலாவணிக்குச் சாதகமாக மாற்று விகிதம் இயக்கமடைகிறது. முன்னிருந்ததைவிட இப்போது உள்நாட்டுச் செலாவணியின் ஓர் அலகானது (unit) அயல் நாட்டுச் செலாவணியின் அதிக அலகுகளுக்குச் சமமாக ஆரம்பமாகிறது. தேவை, அளிப்புச் சக்திகளால் மற்ற விலைகள் நிர்ணயிக்கப்படுவதுபோல் அயல் நாட்டு மாற்று விகிதமும் அயல் நாட்டுச் செலுத்து நிலைகளால் நிர்ணயிக்கப்படுகிறது என்று இக் கோட்பாடு அறுதியிட்டுக் கூறுகிறது. அயல் நாட்டு மாற்றுக்களின் தேவை, அளிப்புக்களின் செயல்களால்தான் மாற்று விகிதம் நிர்ணயிக்கப்படுகிறது என்ற இக் கூற்றுக்கு எவ்விதச் சந்தேகமும் இல்லாமல்போனாலும், அயல் நாட்டு மாற்றுக்களின் தேவை, அளிப்பை நிர்ணயிப்பது எது என்ற வினா எழுகிறது. மாற்று விகிதத்தின் ஏற்ற இறக்கச் சார்பற்ற வேறு பல காரணிகளால் அயல் நாட்டுச் செலுத்து நிலை நிர்ணயிக்கப்படுகிறது என்று இக் கோட்பாடு பதிலளிக்கிறது. புனரமைப்புச் செல்லுகள் (Payments) அயல் நாட்டுக் கடன் களுக்குச் செலுத்தப்படும் வட்டிப் பணங்கள் முதலான தன்னுரிமைச் செல்லுகள் (Autonomy Payments) அயல் நாட்டு மாற்று விகிதத்தைப் பாதிக்கின்றன. இத் தன்னுரிமைச் செல்லு களல்லாமல், இறக்குமதித் தேவை-குறிப்பாகக் கச்சாப் பொருள் களின்-பூரண நெகிழ்ச்சியற்றதாக (perfectly inelastic) இருந்து அயல் நாட்டு மாற்று விகிதத்தின் ஏற்ற இறக்கத்தினின்றும் தனித்து நிற்கிறது.

அயல் நாட்டு மாற்று விகிதம் எவ்வாறு அயல் நாட்டுச் செலுத்து நிலைக் கோட்பாட்டால் நிர்ணயிக்கப்படுகிறது என்ற விளக்கத்தின் :

## நிறைகள்

1. பொருள்களின் விலைகள் நிர்ணயிக்கப்படுவதுபோல் தேவை, அளிப்புச் சக்திகளால் மாற்று விகிதம் நிர்ணயிக்கப் படுகிறது என்று இக் கோட்பாடு விளக்குகிறது.

2. மாற்று விகித நிர்ணயிப்பானது பொதுச் சமநிலைப் பகுப்பாராய்ச்சிக்கு இக் கோட்பாடு வழி கோலுகிறது.

3. அயல் நாட்டுச் செலுத்து நிலையில் அடங்கிய விலைகளால் பாதிக்கப்படுவது ஏற்றுமதிப் பொருள்களல்லாமல், அயல் நாட்டு மாற்றுக்களின் தேவை, அளிப்பைப் பாதித்து மாற்று விகிதத்தைப் பாதிக்கக்கூடிய வேறு பல சிறந்த சக்திகளும் உள்ளன என்று இக் கோட்பாடு உணர்த்துகிறது. குறை மதிப்பு (devaluation) அல்லது மறுமதிப்பு (revaluation) செய்வதன்மூலம் அயல் நாட்டு மாற்று விகிதத்தில் தகுந்த ஒழுங்கு நடவடிக்கை எடுத்து அயல் நாட்டுச் செலுத்து நிலைகளில் உள்ள சமன் அற்ற நிலையைச் (disequilibrium) சரிசெய்யலாம் என்று இக்கோட்பாடு விளக்குகிறது.

நாணயச்சாலைச் சமநிலைக் கோட்பாட்டின்படி (Mint par theory) நாட்டின் விலை நிலைபேறற்ற தன்மைக்குக் காரணமாகும். பணவீக்கம் (inflation) அல்லது பணவாட்டம் (deflation) மூலம் அயல் நாட்டுச் செலுத்து நிலையிலுள்ள சம நிலையற்ற தன்மை சரிக்கட்டப்படும்.

## குறைகள்

1. இக் கோட்பாடு, அயல் நாட்டுச் செலுத்து நிலை ஒரு குறிப்பிட்ட அளவில்தான் இருக்க வேண்டும் என்ற எடுகோளைக் கொண்டுள்ளது. இது கீன்சின் உருவகப்படி திடப் பொருள் கோட்பாட்டை (Theory of solid) உணர்த்துகிறது. ஆனால் அங்குத் திடமற்ற நீரியற் பொருள்களே மிகவும் ஏற்றவை. அயல் நாடுகளில் விலை மட்டம் எவ்வாறு அந்நியச் செலாவணியுடன் ஒப்பு நோக்கப்படுகிறதோ அதைப் பொறுத்தே இரண்டு செலாவணிகளின் மாற்று விகிதமும் நிர்ணயிக்கப்படுகிறது. உள்நாட்டு விலைமட்டத்தைச் சார்ந்த அயல் நாட்டின் விலை மட்டத்தின் உயர்வு மாற்று விகிதத்தின் உயர்வுக்குச் சமமாகும் (அயல் நாட்டு மாற்று விகிதத்தில் எவ்வித மாற்றமும் நிகழாமலிருந்தால்). மாற்று விகிதத்தில் உள்ள வீழ்ச்சியானது அயல் நாட்டு விலை வீழ்ச்சியை உணர்த்தும்.

2. பல இறக்குமதிக் கச்சாப் பொருள்களின் தேவை பூரண நெகிழ்ச்சியற்றது என்று இக் கோட்பாடு கொள்கிறது. ஆகவே விலையினுல் மட்டுமல்லாமல் மற்ற காரணங்களாலும் மாற்று விகிதம் மாற்றமடைகிறது. ஒரு பொருளுக்குப் பூரண நெகிழ்ச்சியற்ற தன்மையுள்ளது என்று வாழ்க்கையில் காண முடியாது.

மிகவும் இன்றியமையாத பொருள்கள்கூடக் குறுக்கு நெகிழ்ச்சி யுடைய தேவையைக் (cross elasticity of demand) கொண் டுள்ளன. கச்சாப் பொருள்களின் தேவைகளை விடுத்தாலும் இறக்குமதி செய்யப்படும் உணவுப் பொருள்களின் தேவை குறுக்கு நெகிழ்ச்சியைக் (cross elasticity) கொண்டுள்ளது. ஏனென்றால் இந்த உளத் தேவை மலிவான ரொட்டி, காய்கறிப் பொருட்கள் அல்லது விலை மிகுதியான மாமிசம், பழங்களாலும் நிறைவு செய்யப்படும். அதாவது வாழ்க்கைக்கு இன்றியமையாத பொருள்களுக்குக்கூட சில மாற்றுப் பொருள்கள் இருப்பது இயல்பே. இவ்வாறு அவற்றின் தேவை, மாற்று விகித வேறுபாட்டால் பாதிக்கப்படுகிற விலை வேறுபாட்டால் பாதிக்கப் படுகிறது. இக் கோட்பாட்டின்படி அயல் நாட்டுச் செலுத்து நிலை மாற்று விகிதத்தினின்றும் முழுவதும் தனித்திருப்பதில்லை. இது ஓரளவு மாற்று விகிதத்தைச் சார்ந்திருக்கிறது. அயல் நாட்டுச் செலுத்து நிலை மாற்று விகிதத்தின் ஒரு செயலாதலால் மாற்று விகிதம் எவ்வாறு நிர்ணயிக்கப்படுகிறது என்று இதனால் விளக்க முடிகிறது.

## மாற்று விகித ஏற்ற இறக்கத்திற்குரிய காரணங்கள்
## (Causes for Fluctuations in Exchange Rate)

ஒரு செலாவணியின் மாற்று மதிப்பு அல்லது மாற்று விகிதம், அதன் தேவை, அளிப்புச் சக்திகளுக்கிடையேயுள்ள வேறு பாட்டால் ஏற்ற இறக்கமடைகிறது. தேவை அளிப்புகளைப் பாதிக்கக்கூடிய காரணிகள் பல்வேறானவை. மாற்று விகித ஏற்ற இறக்கத்திற்கு உடனடியாகப் பாதிக்கக் கூடிய குறுங்காலத்தில் இயங்கக்கூடிய சில காரணிகளும் உள்ளன. நாடுகளிடையே வணிக, நிதித் தொடர்பு மிகுதியானவை. உடனடித் தீர்வுக்குப் பல விதக் கணக்குகளின்பேரில் செலுத்துவதற்குரிய செல்லுகளும் (Payments) பல உள. இச் செல்லுகள் செலாவணிகளின் குறுங் காலத் தேவை அளிப்புகளைக் கொண்டுள்ளன. இருந்த போதிலும் நெடுங்காலத்தில் மாற்று விகிதங்களைப் பாதிக்கக் கூடிய செலாவணி, கடன், அரசியல், தொழில் நிலைகளில் ஏற்படும் மாற்றங்களும் உள்ளன. அவை மிகவும் சிக்கலானவைகளாக இருந்த போதிலும் அயல் நாட்டு மாற்றுக்களில் சிறந்த பாதிப்பை நிகழ்த்துகின்றன. மாற்று விகிதங்களைப் பாதிக்கக்கூடிய தலையாய காரணிகளைக் கீழ்க்கண்டவாறு தொகுத்தளிக்கலாம்:

குறுங்காலக் காரணிகள் : (அ) வணிக நிலை
(ஆ) நிதி நிலை
நெடுங்காலக் காரணிகள்: (அ) செலாவணி, கடன் நிலைகள்
(ஆ) அரசியல், தொழில் நிலைகள்

## வணிகக் காரணிகள்
## (Commercial Factors)

செலாவணியின் தேவை அளிப்பைப் பாதிக்கக்கூடிய சிறந்த காரணி சரக்கு ஏற்றுமதி, இறக்குமதி வணிகமாகும். ஒரு நாடு சரக்குகளை ஏற்றுமதி செய்தால் அந்நாட்டுக்குச் செலுத்த வேண்டி அந்நாட்டுச் செலாவணித் தேவை உருவாகிறது. அயல் நாடுகளுக்குச் செலுத்தும்பொருட்டு ஒரு நாட்டிலுள்ள இறக்குமதியாளர்கள் அயல் நாட்டுச் செலாவணிகளை வாங்குவதால் மாற்று அங்காடியில் செலாவணியின் அளிப்பு ஏற்படுகிறது. இறக்குமதி, ஏற்றுமதி நிலைகளைப் பாதிக்கக் கூடிய எந்த நிலைமையும் ஒரு நாட்டுச் செலாவணியின் மாற்று மதிப்பில் ஏற்ற இறக்கத்தை ஏற்படுத்துவதற்குக் காரணமாகிறது.

இவற்றுடன் கடனை ஏற்படுத்தி அதனைச் செலுத்துவதற்குரிய பலவிதப் புலனுகா இனங்களும் (invisible items) உள்ளன. அயல் நாட்டுச் செலாவணிகளை வாங்கியோ, விற்றோ அவற்றிற்குத் தீர்வுகாண வேண்டும். போக்குவரத்து, பாங்கு, காப்பீடு முதலான பலவிதப் பணிகளுக்காக, ஒரு நாட்டுக் குடிமக்கள் அயல் நாட்டினருக்குச் செலுத்த வேண்டிய செல்லுகளோ, பெற வேண்டிய வருவாய்களோ உள்ளன. கட்டணங்கள் (Premiums), தரகுகள் (Brokerages), கழிவுகள் (Commissions) முதலான செல்லுகளை (Payments) ஒரு நாடு மற்றொரு நாட்டுக்குச் செலுத்த வேண்டியுள்ளது.

பின் தங்கிய நாடுகளுக்கு முன்னேற்ற நாடுகள் ஏற்றுமதி செய்யும் கருவிகள் (Equipments), தொழில் முயற்சிகள் (Enterprises), தொழில் நுணுக்கத் திறமைகள் (Technical skills) முதலியன இக் காலங்களில் சிறந்ததோர் இடத்தைப் பெற்றுள்ளன. அவற்றிற்காக ஏற்றுமதி செய்யும் நாடுகள் இலாபம் (Profits), இலாப ஈவு (Dividend), சம்பளம் (Salaries) போன்ற வடிவில் செல்லுகளைப் பெறுகின்றன. பன்னாட்டுப் பொருளாதாரக் கூட்டுறவுத் திட்டங்களின் (International Economic Co-operation Programmes) மூலமாக முன்னேற்ற நாடுகளிலிருந்து ஏற்றுமதியாகும் பொருளுதவிகளால் (Grants) பன்னாட்டுச் செல்லுகள் நிகழா. அந்நிய நாட்டிற்குச் சுற்றுலாச் செல்வதால் அந்நியச் செலாவணிக்குத் தேவை ஏற்படுகிறது; மாணவர்கள் அயல் நாடுகளுக்குச் சென்றாலும் இதேநிலைதான் உருவாகிறது. ஒரு நாட்டின் சீரமைப்பிற்காக (Reparations) அளிக்கப்படும் செல்லுகளும் அயல் நாட்டின் படைகள், காவலர்கள், பணித்துறையாளர்களின்

காப்புச் செலவுகள், வெளிநாடுகளிலுள்ளவர்களுக்குச் செலுத்த வேண்டிய ஒய்வுக்கால ஊதியம் முதலியனவற்ருல் செல்லுகள் (Payments) ஏற்படுகின்றன. சில பொருள்களின் வணிகம் பருவ காலத்தைப் பொறுத்திருக்கிறது. (எ.கா): ஓர் ஆண்டில் ஒரு குறிப்பிட்ட காலத்தில்தான் விவசாயப் பொருள்கள் அறுவடையாகி அக் காலங்களில் மட்டும்தான் அவற்றின் ஏற்றுமதி, இறக்குமதி மிகுதியாக உள்ளன. ஏற்றுமதி, இறக்குமதி மிகுதியாக உள்ள பொருள்களினுல் மாற்று விகிதங்கள் பாதிக்கப்படுகின்றன.

கீழ்க்கண்ட காரணிகளால் வணிகக் கணக்கின் பேரில் செலாவணித் தேவை ஏற்படுகிறது.

1. ஒரு நாட்டு மக்கள் மற்ற நாடுகளுக்குச் சரக்குகளை ஏற்றுமதி செய்வதால் அவர்கள் செல்லுகளைப் (Payments) பெறுகின்றனர்.

2. கப்பல், பாங்கு, இன்சூரன்சுக் கம்பெனிகள் மற்ற நாடுகளுக்குச் செய்யும் பணிகளுக்காக ஊதியம் பெறவேண்டியுள்ளன.

3. அயல் நாடுகளில் தொழில் தொடங்கும் தொழில் முயல்வோரும், தொழில் நுணுக்க அலுவலர்களும், நிர்வாகிகளும், அறிவுரை பகர்வோரும் அந்நாடுகளிலிருந்து இலாபங்களையும், சம்பளங்களையும் பெறுகின்றனர்.

4. அயல் நாடுகளிலிருந்து வரும் மாணவர்கள், சுற்றுலாவினர் உள்நாட்டுப் பணத்தைச் செலவழிக்கின்றனர்.

## செலாவணி அளிப்பிற்குரிய காரணிகள்

1. அயல் நாடுகளிலிருந்து இறக்குமதியாகும் பண்டங்கள்.

2, அயல் நாட்டுக் கப்பல், பாங்கு, இன்சூரன்சு முதலிய கம்பெனிகளால் கிடைக்கும் பணிகளுக்குச் செலுத்த வேண்டிய செல்லுகள்(Payments).

3. அயல் நாட்டினருக்குச் சம்பளமாகவும், இலாபமாகவும். இலாப ஈவு ஆகவும் செலுத்த வேண்டிய செல்லுகள்.

4. ஒரு நாட்டு மக்கள் மற்ற நாடுகளுக்குச் சுற்றுலா செல்வதாலும், அயல் நாட்டுத் தொழில் நுணுக்கப் பல்கலைக் கழகங்களிலும், அலுவலகங்களிலும் படிப்பதற்காகச் செல்வதாலும் பணம் செலவழிக்கின்றனர்,

## தேவை அளிப்பு இவை இரண்டையும் நிர்ணயிக்கக்கூடியக் காரணிகள்

1. ஏற்றுமதி, இறக்குமதியாகும் புலனாகும் பொருள்கள்.

2. ஏற்றுமதி, இறக்குமதியாகும் புலனாகாப் பொருள்கள்.

3. ஈடுகளைக் (Securities) கொள்முதல், விற்பனை செய்வதால் ஏற்படும் சேதங்கள்.

4. அயல் நாட்டு மாற்றுக்களில் ஊக வணிகம் (Speculation).

5. கடன்கள், நேரடி முதலீடுகள், வட்டி, இலாப ஈவு அளித்தல், கடன் முதலீடுகளைத் திருப்பி அளித்தல்.

6. வட்டி விகிதத்தில் ஏற்படும் வேறுபாட்டில் இலாபம் அடையும் பொருட்டுக் குறுங்கால நிதிகளைப் பலவிதப் பண அங்காடிகளுக்கு மாற்றல்.

7. பல நாடுகளின் மாற்று விகித வேறுபாட்டில் இலாபமடைவதற்குப் பலவித இலாபப் (Arbitrage) பேரங்களை மேற்கொள்ளல்.

8. பொருளாதார அரசியல் நிலைமைகள்.

## குறுங்கால நிதிநிலைக் காரணிகள்
## (Financial Short Term Factors)

அயல்நாட்டு மாற்றுக்களில் மூலதன, ஊக வணிக நடவடிக்கைகள் கட்டுப்பாடற்ற நிலையில் இருந்தபோது பன்னாட்டு நிதிநிலை இயக்கங்கள் மாற்று விகிதங்களில் சிறந்ததோர் பாதிப்பை அளித்து வந்தன. அப்பாதிப்பு இக்காலத்தில் அவ்வளவாக இல்லை. மற்ற நடவடிக்கைகளோடு நாடுகளிடையே இயங்கும் குறுங்கால நிதியும், நிதிநிலை இயக்கத்துடன் சேர்ந்துள்ளது. ஓரிடத்தைவிட மற்றோர் இடத்தில் வட்டி விகிதம் மிகுதியாக இருந்தால் வட்டி விகிதம் குறைவாக உள்ள இடத்திலுள்ள பாங்கு களும் மற்ற நிறுவனங்களும் தங்களுடைய நிதிகளை அவ்விடங்களில் உள்ள மாற்று உண்டியல்களில் முதலீடு செய்யும். செலாவணியின் மாற்று மதிப்பு வீழ்ச்சியடையும் என்று எதிர்பார்த்தால் வெளி நாடுகளில் குறுங்கால முதலீடு செய்வதற்காக ஒரு நாட்டு நிதிகள் ஏற்றுமதி செய்யப்படும். இது உண்மையாகவே ஊக பேரமாகும்.

அதிகாரிகளால் மூலதன ஏற்றுமதி, இறக்குமதி ஒப்புக் கொள்ளப்பட்டால் மாற்று விகிதங்களைப் பாதிப்பதில் பங்கு மாற்று நடவடிக்கைகள் சிறந்ததோர் இடத்தைப் பெற்றுள்ளன. அயல் நாட்டு ஈடுகளைப் (Securities) பங்கு மாற்று அங்காடியில் வாங்குவதற்காக ஒரு நாட்டுக் குடிமக்கள் அவ்வயல்நாட்டுச் செலாவணிகளை வாங்குகின்றனர். இவ்வாறு வாங்குவது உண்மை யான முதலீட்டு நோக்கமாகவோ, ஊக வணிகமாகவோ இருக்கலாம். ஒரு நாட்டின் தொழில் முதலீடு வளர்ச்சி யுற்றிருக்கும் காலங்களிலும், ஈடுகளின் (Securities) விலைகள் உயரும் என்று எதிர்நோக்கும்போதும் இவை நேரலாம். மோச மான பொருளாதாரத் தொழில் முதலீடு நிலையிலுள்ள காலங் களில் ஒரு நாட்டுச் செலாவணித் தேவை வீழ்ச்சியடையும்.

பாங்குகளால் ஓரிடத்திலிருந்து மற்றோரிடத்திற்கு நிதிகள் பெயர்வது மற்றொரு நிதிநிலைக் காரணியாகும். பலவித மைய இடங்களில் தங்களுடைய இருப்புக்களைப் பாங்குகள் வைத்துள்ளன. ஒரு மைய இடத்து இருப்பின் அளவும், காலமும் அந்நாட்டின் பொருளாதாரத் தொழில் நிலைமையைப் பொறுத் துள்ளது. நிலைமை ஒளிமயமாக இருந்தால் அந்நாட்டுக்குச் செல்லுகள் அதிகமாகிப் பாங்குகள் அதிகமான இருப்புக்களை வைத்திருக்க முற்படுகின்றன. ஒரு நாட்டுச் செலாவணியின் தேவை, அச் செலாவணியின் மதிப்பு சாதகமாக மாறும்போது உயர்கிறது. மோசமான நிலைமை உருவானால், செலாவணியின் மாற்று மதிப்புப் பாதகமாக மாறும்போது பாங்குகள் தங்களின் இருப்புக்களை மற்ற மைய இடங்களுக்கு மாற்றுகின்றன.

கடன்களை வேகமாகவோ, தாமதமாகவோ தீர்ப்பதன் மூலம் அயல் நாட்டுக் கடனீந்தோரும், கடனாளிகளும் சில சமயங் களில் மாற்று வீதங்களைப் பாதிக்கின்றனர். ஒரு நாட்டின் நிலைமை ஒளிமயமாக இருக்கும்போது அந்நாட்டுச் செலாவணியின் மதிப்பு மேலும் உயர்வடைவதற்குள் அந்நாட்டுக்குச் செலுத்த வேண்டிய அயல் நாட்டினர் விரைவில் செலுத்த முற்படுகின்றனர். ஆகவே அந்நாட்டிலிருந்து செலுத்தப்படும் பணச் செல்லுகள் தாமதமடைகின்றன. அந்நாட்டுச் செலாவணியின் தேவை மேலும் அதிகரித்து அதன் மாற்று மதிப்பு சாதகமான நிலையை அடைகிறது. ஆனால், அந்நாட்டு நிலைமை தெளிவற்ற நிலையில் இருக்கும்போது செலாவணி மதிப்பிழப்பு ஏற்பட்டு அந்நாட்டு மக்கள் தங்கள் நிதிகளை வேறு நாடுகளுக்கு மாற்ற முற்படுவர். வெளிநாட்டினரும் தங்கள் நிதிகளைத் திரும்பப்பெற ஆயத்த மாவர். அந்நாட்டிலிருந்து செலுத்தப்படும் பணங்கள் விரைவு

படுத்தப்பட்டு அந்நாட்டுச் செலாவணி மேலும் மோசமான நிலையையடைகிறது.

பல விலை இலாப நடவடிக்கைகள் (Arbitrage operations) மூலம் நிதிநிலை நடவடிக்கைகள் உருவாகின்றன. வெவ்வேறு இடங்களில் பொருள்களை வாங்கியும்; விற்றும் இலாபமடைவதைப் பல விலை இலாபம் (Arbitrage) என்றழைக்கின்றனர். பன்னாட்டு நிலையில் பாங்குகள், பணங்கள், அயல் நாட்டு மாற்றுக்களின் மாற்று வீதங்களைக் கணிப்பதில் உள்ள பல விலை இலாபம் (Arbitrage) சிறந்த இடம்பெறுகிறது. பன்னாட்டு வணிகர் ஒருவர் பங்கு மாற்று அங்காடியில் வெவ்வேறு மைய இடங்களில் ஈடுகள் அல்லது பிணையங்களின் (Securities) விலைகள் மாறுபடுவதறிந்து, ஒரே நேரத்தில் விலை குறைவாயுள்ள இடங்களில் அவற்றை வாங்கி விலை மிகுதியாக உள்ள இடங்களில் அவற்றை விற்க முற்படுவர். இந்நடவடிக்கை பிந்திய இடத்திலிருந்து முந்திய இடத்துக்குப் பணம் செலுத்துவதற்கு வழிகோலிப் பிந்தியதற்கு எதிராகவும், முந்தியதற்குச் சாதகமாகவும் மாற்று விகிதம் மாறுவதற்குக் காரணமாகிறது.

## செலாவணி, கடன் நிலைமைகள்
## (Currency and Credit Conditions)

ஒரு நாட்டின் பொருளாதார நிலைமையானது அச்செலா வணியின் உள்நாட்டு வாங்குந்திறன் உயரவோ, தாழவோ செய்து அதன் மாற்று மதிப்பைப் பாதிக்கிறது. அப்பாதிப்புகள் மாற்று அங்காடியிலுள்ள ஊக வணிகர்களால் நிவர்த்திக்கப் படுகின்றன. சிலசமயங்களில் இந்நடவடிக்கைகள் பொருளாதாரக் காரணிகளின் பாதிப்பைக்கூட அறவே போக்குகின்றன அல்லது குறைக்கின்றன.

ஒரு நாட்டுச் செலாவணிப் புழக்கப் பெருக்கமானது உள் நாட்டு விலைமட்டத்தை உயர்த்துகிறது அல்லது அந்நாட்டுச் செலாவணி வாங்குந்திறனைக் குறைக்கிறது. இது அந்நாட்டு ஏற்றுமதி வணிகத்தில் பாதக நிலையை உருவாக்கி மாற்று அங்காடியில் அதன் செலாவணித் தேவைக் குறைவு அடைந்து அச் செலாவணியின் மாற்று மதிப்புக் குறைவதற்கும் காரணமாகிறது. ஊக வணிகர்கள் சுறுசுறுப்படைந்து விலைகுறைந்தவுடன் வாங்கும் நோக்கத்துடன், இப்பொழுது செலாவணிகளை வாங்கமுற்படுவர். இது மாற்று மதிப்பில் மேலும் வீழ்ச்சியை உருவாக்குகிறது.

செலாவணியின் மாற்று மதிப்புக் குறைப்பால் எதிரீடு செய்வது வரையில் ஏற்றுமதிப் பொருள்களின்மேலுள்ள உள்நாட்டு விலை உயர்வின் பாதிப்பு நிகழ்ந்துகொண்டேயிருக்கும்.

வணிகத் திருப்பமோ, உற்பத்தி முறையிலுள்ள முன்னேற்றமோ ஒரு நாட்டுப் பொருள்களுக்கு அயல் நாட்டில் தேவை அதிகரிக்கலாம். அதனால் ஏற்படுகிற செலாவணித்தேவை அதிகரிப்பு அதன் மாற்று மதிப்பை உயர்த்தலாம். ஊக வணிகத்திலும் அச் செலாவணியின் தேவை மேலும் வலுவடையலாம். செலாவணியின் பன்னாட்டு விலை உயர்வு அந்நாட்டுப் பொருள்களின் ஏற்றுமதித் தேவை மேலும் உயராமல் தடுக்கிறது.

## அரசியல், தொழில் நிலைமைகள்
## (Political and Industrial Conditions)

மாற்று அங்காடியில் அரசியல் நிலைமைகள் சில பாதிப்புக்களை ஏற்படுத்துகின்றன. நிலையான அரசும், சரியான சட்ட ஒழுங்கு நிலைமையும் ஒரு நாட்டிற்குள் அயல் நாட்டு மூலதன ஓட்டத்திற்கு (flow of foreign capital) ஊக்கமளிக்கிறது. ஒரு நாட்டின் செலாவணித் தேவை அதன் மாற்று மதிப்பிற்கு வலுவூட்டுகிறது. அரசியல் அமைதியின்மை, மூலதன வெளியோட்ட (outflow of capital) த்திற்கும் செலாவணியின் புறமதிப்பைப் பலவீனமடையச் செய்வதற்கும் காரணமாகிறது.

தொழிற்சாலைகளிடையேயுள்ள தற்கால நிலைமைகளும், எதிர்கால நோக்கங்களும், அரசினர் வரவு, செலவுத்திட்டமும், பொதுப் பொருளாதார நிலைமைகளும் மாற்று அங்காடியில் பாதிப்பை ஏற்படுத்துகின்றன. தொழில் அமைதியும், நிலையான கூலி, விலைகளும் உயர்ந்த அளவு உற்பத்தித் திறன்களும் சரிநிகர் வரவு, செலவுத் திட்டமும் நீண்டகாலத்தில் செலாவணியின் மாற்று மதிப்பை வலுவடையச் செய்வதற்கு ஏதுவாகின்றன. ஆனால், தொழிலமைதியின்மையும், உயர்ந்த உற்பத்திச் செலவுகளும், திறமையற்ற உற்பத்திகளும், அரசின் பற்றுக்குறை வரவு, செலவுத் திட்டமும் செலாவணியின் மாற்று மதிப்பிற்குப் பாதக நிலையை ஏற்படுத்துகின்றன. பொருளாதார, அரசியல் காரணிகளால் மாற்று விகிதத்தில் ஏற்படும் பாதிப்பு ஊக வணிகத்தால் மேலும் தீவிரப்படுத்தப்படுகிறது. ஊக வணிகம் வேண்டிய அளவு நிலையற்ற தன்மையை உண்டாக்கி மாற்று அங்காடியில் இடையூறு விளைவிக்கிறது. இதனைத் தடுப்பதற்காக அதிகாரிகளால் அயல் நாட்டு நாணய மாற்றுக் கட்டுப்பாடு புகுத்தப்படவேண்டும்.

## மாற்று விகிதத்தில் ஏற்படும் ஏற்ற இறக்கத்தைக் கட்டுப்படுத்தும் காரணிகள்
## (Factors Limiting Fluctuation in Exchange Rates)

உள்நாட்டு விலைகளில் உள்ளதுபோல் மாற்று விகிதத்தில் உள்ள ஏற்ற இறக்கமானது ஒரு நாட்டின் பொருளாதாரத்தை மிகவும் பாதிக்கிறது. பிரிட்டனில் உள்ளதுபோல் ஒரு நாட்டு மொத்த வணிகத்தில் அயல் நாட்டு வணிகம் மிகுதியான அங்கம் வகித்தால் இவ்வேற்ற இறக்கம் அந்நாட்டை மிகவும் பாதிக்கும். மாற்று விகிதங்களில் உள்ள மிகுந்த ஏற்ற இறக்கமானது ஏற்றுமதி அங்காடிகளை மிகவும் பாதிக்கச் செய்து கச்சாப் பொருள்களையும், வாழ்க்கைக்கு இன்றியமையாத பொருள்களையும், இறக்குமதியை நம்பியிருக்கும் நாட்டு மக்களின் வாழ்க்கைத் தரத்தையும் உற்பத்தி அளவையும் பாதிக்கிறது. ஆகவே மாற்று விகித நிலையேற்றுத்தன்மை பண, பொருளாதாரக் கைக்கோள்களுக்கு இன்றியமையாததாகும். மாற்று விகிதத்திலுள்ள ஏற்ற இறக்கத்தைக் கட்டுப்படுத்தக்கூடிய பொருளாதாரச் சக்திகளும் உள்ளன.

### பொருளாதாரச் சக்திகள்

ஒரு நாட்டின் ஏற்றுமதி அறவே தடைப்படும் அதன் செலாவணித் தேவை குறைந்து மாற்று மதிப்பும் வீழ்ச்சியடைகிறது. மற்ற செலாவணிகளைவிட இச் செலாவணியின் மலிவுத்தன்மை கால வரையின்றி நீடிக்காது. இம் மாற்றம் அயல் நாட்டு அங்காடியில் பொருள்களை வாங்கத் தூண்டி ஒரு நாட்டின் ஏற்றுமதிகள் குறைந்த விலையில் நிகழ எதுவாகிறது. மேலும் ஒரு நாட்டுக் குடிமக்கள் இறக்குமதிப் பொருள்களுக்கு அதிக விலை கொடுத்து வாங்க வேண்டியுள்ளது. இதனால் இவர்கள் முன்பு வாங்கிய அளவைவிடக் குறைந்த அளவிலேயே பொருள்களை வாங்கச் செய்கிறது. இவ்வாறு மாற்று அங்காடியில் இந்நாட்டுச் செலாவணியின் தேவை மற்ற நாட்டுச் செலாவணிகளின் தேவைகளைக் காட்டிலும் உயர்கிறது. ஆகவே, உள்நாட்டுச் செலாவணியின் மாற்று மதிப்பு, மேலும் ஏற்றுமதிகளிலுள்ள குறைப்பானது அப்பொருள்களை உற்பத்தி செய்தவர்களின் வருவாயைக் குறைக்கச் செய்கிறது. அவர்களின் வாங்குந்திறன் குறைவதால் உள்நாட்டில் உற்பத்தி செய்யப்படும் மற்ற பொருளுக்குரிய அவர்கள் தேவையானது குறைய ஆரம்பிக்கிறது. ஆகவே பொதுவாக விலைகளிலும், வருவாய்களிலும் வீழ்ச்சி ஏற்படுகிறது.

ஒரு நாட்டின் இறக்குமதித் தேவைகள் குறையும்போது ஏற்றுமதிகளுக்குரிய அயல் நாட்டுத் தேவையானது உயர்வடைகிறது. ஒரு நாட்டின் அயல் நாட்டுச் செலுத்து நிலை (Balance of payment) முன்னேற்றமடைந்து மாற்று அங்காடியில் செலாவணியின் மதிப்பை வலுவடையச் செய்கிறது.

## பொன் திட்டத்தின் (Gold Standard) சட்ட திட்டங்கள்

பொன் இயக்கத்தால், பொன் திட்டத்தின்கீழ் மாறுபட்ட அயல் நாட்டுச் செலுத்து நிலைகளின் தன்னியக்கச் சரிக்கட்டுதல்களாலும், அதனுல் மாற்று விகிதத்தில் ஏற்படும் ஏற்ற இறக்கமானது மிக விரைவில் நிகழ்கிறது. ஒரு நாட்டுச் செலாவணி மதிப்பு பொன் ஏற்றுமதி நிலைக்குக் (gold export point) குறையும்போது பொன் வெளியோட்டம் (outflow) நடைபெறுகிறது. ஆனுல் இது செலாவணி, கடன் இவற்றின் அடித்தளத்தைக் குறையச்செய்து அவற்றின் அளவைச் சுருங்கச் செய்கிறது. விலைகளில் வீழ்ச்சியும் வட்டி விகிதங்களில் ஏற்றமும் ஏற்படுகிறது. முந்தியது ஒரு நாட்டை, பொருள்களை வாங்குவதற்குச் சிறந்த அங்காடியாகவும், பொருள்களை விற்பதற்குக் கெட்ட அங்காடியாகவும் செய்கிறது. ஏற்றுமதி மிகுதியாகி இறக்குமதி குறைகிறது. பிந்தியது குறுங்கால நிதிகள் நாட்டிற்குள் வர வழிகோலுகிறது. இவ்வாறு ஒரு நாட்டுச் செலாவணித் தேவை வலுவடைகிறது.

## செலாவணி மாற்றுத்திட்டம் (Currency Exchange Standard)

ஸ்டெர்லிங் வட்டாரம் (Sterling area) டச்சுப் பணப் பரப்பளவு (Dutch monetary area), ஃபிரான்சுப் பணப் பரப்பளவு (French monetary area) போன்ற பற்பல பணப் பரப்புக்கள் அல்லது வட்டாரங்களைக் கொண்ட கூட்டு நாடுகளிடையே செலாவணி மாற்றுத் திட்டம் கடைப்பிடிக்கப்பட்டு குறைந்தது, அக்கூட்டு நாடுகளிடையேயாவது மாற்றுச் சமநிலை நிலவ வழி செய்கிறது. அக்கூட்டில் உள்ள அனைத்து நாடுகளின் செலாவணிகள் ஒரு குறிப்பிட்ட மாற்று விகிதத்தில் ஒரு குறிப்பிட்ட செலாவணியுடன் பின்னப்பட்டு, குறுகிய எல்லைக்குள் மாற்று விகித ஏற்ற இறக்கம் நிகழ அனுமதிக்கப்படுகிறது. இதுதான் அயல் நாட்டு மாற்றுக்களின் திட்டமிட்டக் கட்டுப்பாடு எனப்படுகிறது.

## பல விலை இலாபம்
## (Arbitrage)

ஒரே நேரத்தில் சிறு அளவு இலாபத்திற்கு ஓர் அங்காடியில் செலாவணியை வாங்கி மற்றோர் அங்காடியில் விற்பதற்குப் 'பல விலை இலாபம்' என்று பெயர். பல விலை இலாப நடவடிக்கைகள் (Arbitrage operations) கட்டுப்பாடற்ற மாற்று அங்காடியில் சிறந்த அங்கம் வகிக்கின்றன. ஒரே நேரத்தில் பல இடங்களிலும் உள்ள மாற்று விகிதங்களின் வேறுபாடுகளிலிருந்து இலாபமடைவதையே இந்நடவடிக்கைகள் நோக்கமாகக் கொண்டுள்ளன. இரண்டு செலாவணிகளுக்குள்ள மாற்று விகிதம் அவற்றைச் சார்ந்த இரண்டு இடங்களிலும் வெவ்வேறு விகிதங்களில் கூறப்படலாம். இத் தற்காலிக வேறுபாடுகளைக் கொண்டு இலாபமடையத் திறமை கொண்ட 'பல விலை இலாபக்காரர்கள்' (Arbitragers) இந்நிலையைத் தங்களுக்குச் சாதகமாகப் பயன்படுத்திக் கொண்டு இரண்டு இடங்களிலும் ஒரே நேரத்தில் செலாவணி வியாபாரத்திலீடுபட்டு, இலாபமடைவர். இரண்டே இடங்களில் நிகழும் பல விலை இலாப பேரத்தை இரு நிலை (two-point), நேர்முக அல்லது எளிய பல விலை இலாபம் (Direct or Simple Arbitrage) என்றழைக்கலாம். ஆனால் இப் பல விலை இலாப பேரம் மூன்றோ, அதற்கு மேற்பட்ட இடங்களிலோ நிகழுமானால் இதனை மும்முனை (three point), மறைமுக (Indirect) அல்லது கூட்டுப் (Compound) பல விலை இலாபம் என்று அழைக்கலாம்.

நேர்முகப் பல விலை இலாபம் (Direct Arbitrage): ஓர் எடுத்துக் காட்டின்மூலம் இதனை விளக்கலாம். இலண்டனில் நியூயார்க்குக்குள்ள கடல் தந்தி (Cable) விகிதம் ஒரு பவுண்டுக்கு 4·86 டாலர்கள் சமம் என்று கொள்வோம். ஆனால், சில காரணங்களால் நியூயார்க்கில் இலண்டனுக்குள்ள கடல் தந்தி விகிதம் ஒரு பவுண்டுக்கு 4·85½ டாலர்களாக இருக்கிறது என்றும் கொள்வோம். 'பல விலை இலாபக்காரர்கள்' (Arbitragers) அல்லது பல விலை இலாபத்தை நிகழ்த்துபவர்கள் இலண்டன் நியூயார்க்குக்குள்ள தந்தி மாற்றங்களையும், நியூயார்க் இலண்டனுக்குள்ள தந்தி மாற்றங்களையும் (Telegraphic Transfers) வாங்குகிறார்கள். நியூயார்க்கில் ஒரு பவுண்டுக்கு 4·85½ டாலர்களை வாங்கும் ஒரு பல விலை இலாபக்காரர் அதே நேரத்தில் இலண்டனில் அந்த பவுண்டைக் கொண்டு 4·86 டாலர்களை வாங்கி ஒரு சில மணித்துளிகளுக்குள் ஒரு பவுண்டுக்கு ½ அமெரிக்க செண்டு இலாபம் சம்பாதிக்கிறார். ஒரே நேரத்தில் இப் பேரங்கள் பலராலும்

நடத்தப்பட்டால் இரண்டு இடங்களிலும் உள்ள மாற்று விகிதம் சமநிலைக்கு வந்துவிடும். நியூயார்க்கில் பவுண்டுக்குரிய மிகுதியான தேவையானது அங்காடியில் அதன் மதிப்பை உயர்த்தும். அது போல் இலண்டனில் பவுண்டிற்குரிய அதிக அளிப்பானது அதன் மதிப்பைக் குறைக்கும். ஆகவே, இவ்விரண்டு விகிதங்களும் ஒரு பவுண்டு $=4 \cdot 85\frac{3}{4}$ டாலர்கள் என்ற சமநிலைக்கு வந்து விடும்.

மறைமுகப் பல விலை இலாபம் (Indirect Arbitrage): மாற்று அங்காடியில் இரண்டு செலாவணிகளின் மாற்று விகிதங்கள் தனிப்பட்டு இராமல் மற்ற விகிதங்களுடன் தொடர்புற்று இருக்கின்றன. ஸ்டெர்லிங் — டாலர் விகிதம், ஸ்டெர்லிங்— ஃபிராங்குகள் விகிதத்துடனும், ஃபிராங்கு—டாலர் விகிதத்துடனும் தொடர்புற்றுள்ளது. இத் தொடர்புகளில் ஏதாவது இடர்ப்பாடு ஏற்பட்டால் பல விலை இலாபக்காரர்களின் நடவடிக்கைகளுக்குச் சாதகமாக அமைகிறது. (எ. கா.): ஸ்டெர்லிங், ஃபிராங்க், டாலர் செலாவணிகளின் விகிதங்களை எடுத்துக் கொள்வோம்.

இலண்டன் — பாரிஸ் விகிதம்: $121\frac{1}{2}$ ஃபிராங்குகள் $=1$ பவுண்டு

பாரிஸ் — நியூயார்க் விகிதம்: 25 ஃபிராங்குகள் $=1$ டாலர்

இலண்டன் — நியூயார்க் விகிதம்: $4 \cdot 85\frac{1}{2}$ டாலர்கள் $=1$ பவுண்டு

பிராங்கு — ஸ்டெர்லிங் விகிதம்: $121\frac{1}{2}$ ஃபிராங்குகள் $=1$ பவுண்டாகவும்,

டாலர் — ஃபிராங்குகளின் விகிதம்: 25 ஃபிராங்குகள் $=1$ டாலரைக் காட்டும் கணக்குப்படி

டாலர் — ஸ்டெர்லிங் விகிதம்: 4.86 டாலர்கள் $=1$ பவுண்டு ஆகும்.

இவ்விகிதங்கள் அங்காடியில் நடைமுறையில் இருந்தால் பல விலை இலாபக்காரர்கள் ஒரே நேரத்தில் நியூயார்க்கில் $4 \cdot 85\frac{1}{2}$ டாலர்கள் கொடுத்து ஒரு பவுண்டை வாங்கி இலண்டனில் ஒரு பவுண்டுக்கு $121\frac{1}{2}$ ஃபிராங்குகளையும் வாங்கி, பாரிசில் $121\frac{1}{2}$ ஃபிராங்குகளைக் கொடுத்து $4 \cdot 86$ டாலர்களைப் பெற்று இம் மூன்று

பேரங்களின்மூலம் மொத்தமாக $\frac{1}{2}$ அமெரிக்க செண்டு இலாப மடைவார்கள். இப் புதிய நடவடிக்கை புதிய விகிதத்தை உண்டாக்குகிறது.

இலண்டன் — பாரிஸ் விகிதம்: 121 ஃபிராங்குகள் = 1 பவுண்டு

பாரிஸ் — நியூயார்க் விகிதம்: 24·93 ஃபிராங்குகள் = 1 டாலர்

இலண்டன் — நியூயார்க் விகிதம்: 4·85$\frac{3}{4}$ டாலர்கள் = 1 பவுண்டு

மும்முனைப் பல விலை இலாப பேரமானது ஆறுவித மாற்று விகிதங் களையும், நான்கு முனைப் பல விலை இலாப பேரமானது பன்னிரண்டு வித மாற்று விகிதங்களையும் தோற்றுவிக்கிறது. தடையுள்ள மாற்று அங்காடியில் பல விலை இலாப பேரம் நிகழாது.

மாற்றுக் கட்டுப்பாடானது ஒரு நாட்டு மக்கள் அவர்களிடம் இருக்கும் அயல் நாட்டு மாற்றுக்களை நாணய மாற்று அதிகாரி களிடம் ஒப்படைக்கச் செய்து அயல் நாட்டுச் செலாவணிகளை வாங்குவதற்கும் பல விலை இலாபம் ஈட்டும் பல விலை இலாபக் காரர்களுக்கு (Arbitragers) வேலையில்லாமல் செய்து விடுகிறது. மேற்கண்ட எடுத்துக்காட்டில் காணப்பட்டதுபோல் ஃபிரான்சில் மாற்றுக் கட்டுப்பாடு இருந்தால் பல விலை இலாபக்காரர்கள் (Arbitragers) மலிவான ஃபிராங்க் — ஸ்டெர்லிங் விகிதத்தில் ஃபிராங்குகளை வாங்க முடியாது. அதற்கு ஒப்பீடான உயர்ந்த ஃபிராங்க்—டாலர் விகிதத்திலும் ஃபிராங்குகளை விற்பதற்கும் இக் கட்டுப்பாடு தடைசெய்யும். இவ்வாறு ஃபிராங்குக்கும் பவுண்டு ஸ்டெர்லிங்குக்குமுள்ள மாற்று விகிதமானது டாலர்-ஸ்டெர்லிங், டாலர்—ஃபிராங்குகள் விகிதங்களுக்கும் முரண்பாடாக இருக்கும். இவ்வித முரண்பாடான குறுக்கு விகிதங்கள் (Cross rates) மாற்றுக் கட்டுப்பாடுகளின் வழக்கமான உடனிகழ்ச்சிகளாகும்.

## குறுக்கு விகிதமும் (Cross Rate) பல விலை இலாப விகிதமும் (Arbitrated Rate)

சில நேரங்களில் குறுக்கு விகிதங்களாகக் (Cross rates) கருதப்படும் பல விலை இலாப விகிதங்களே (Arbitrated rates) மூன்றாவது செலாவணியுடன் ஒப்பிட்டு இரண்டு செலாவணிகளின் ஒப்பிட்ட குறிக்கப்பட்ட விலையுடன் (quotation) கணிக்கப்பட்ட

மாற்று விகிதங்களாகும். (எ.கா.): ஃபிராங்க்—டாலர், ஸ்டெர்லிங்—டாலர் விகிதங்களிலிருந்து கிடைக்கப்பட்ட ஃபிராங்க்—ஸ்டெர்லிங் விகிதமான சங்கிலி அல்லது பின்னிய விதியே (chain rule) இரண்டு செலாவணிகளுக்கிடையேயுள்ள பல விலை இலாப விகிதமாகும். 5 டாலர்கள் = 1 பவுண்டு; 20 ஃபிராங்குகள் = 1 டாலர்.

ஃபிராங்குகள் ? = 1 பவுண்டு.

ஃபிராங்குகள் 100 = 1 பவுண்டு என்பதே பல விலை இலாப விகிதமாகும்.

## நிலையான விகிதமும் (Stable Exchange Rate) நிலையற்ற ஏற்ற இறக்கமுடைய மாற்று விகிதமும் (Flexible or Fluctuating Exchange Rate)

நிலையற்ற மாற்று விகிதத்திற்கெதிரான நிலையான மாற்று விகிதங்களின் (நலன்கள்) நிறைகள் :

1. இறக்குமதியாளர்களும், ஏற்றுமதியாளர்களும் தங்கள் சொந்த நாட்டுச் செலாவணிக் காப்பீடாக எவ்வளவு கொடுக்க வேண்டும் அல்லது பெறவேண்டும் என்பதை அறிந்து கொள்ள முடிவதால் பன்னாட்டு வணிக வளர்ச்சிக்கு இந்நிலையான மாற்று விகிதம் ஏற்றதாகும். நிலையற்ற மாற்று விகிதங்கள், பன்னாட்டு வணிகத்திற்கு இடையூறுகளை விளைவிக்கின்றன.

2. பரவலான, கடல் கடந்த முதலீடு, பொருளாதார வளர்ச்சித் திட்டக் காலங்களிலும், மூலதன ஓட்டம் (flow of capital), செலாவணி மதிப்பேற்றம் (appreciation), மதிப்பிழப்பு (depreciation) ஏற்படுமோ என்ற ஊகத்தினால் தடைப்படுவதால் பொருளாதாரத் திட்ட வளர்ச்சிகளும் தடைப்பட்டு இடர்களுக்குள்ளாகின்றன.

3. ஸ்டெர்லிங் பரப்புக்குள்ளான நாடுகளிடையே வட்டார வளர்ச்சிக்கு நிலையான மாற்று விகிதம் ஏற்றது. இருப்புச் செலாவணிக்குரிய நிலையற்ற மாற்று விகிதமானது ஸ்டெர்லிங் பரப்புக்குள்ள உறுப்பு நாடுகளுக்குச் சச்சரவுக்குரிய சிறு பொருளாக (leave of contention) ஆகிவிடும்.

4. டென்மார்க், இங்கிலாந்து போன்ற அயல் நாட்டு வணிகத்தையே நம்பியுள்ள நாடுகளுக்கு நிலையான மாற்று விகிதக்

கைக்கோளே சிறந்ததாகும். ஏனென்ருல், ஒரு நாடு தன்னுடைய அயல் நாட்டு மாற்று விகிதத்தை நிலைபேறுடைய்தாகச் செய்யா விடில் மாற்று விகிதத்தில் உள்ள ஏற்ற இறக்கமானது அதன் அயல் நாட்டு வணிகத்தையே மிகவும் பாதிக்கும்; பொருளாதார வளர்ச்சி, செழிப்பையும் பாதிக்கும். தன் நாட்டுச் செழிப்பிற்குப் பன்னுட்டு வணிகத்தையே நம்பியிருக்கும் சிறு நாடுகளுக்கும் ஏற்ற இறக்கமுள்ள மாற்று விகிதங்கள் ஏற்றதன்று. இவை பொருளாதார வளர்ச்சிக்கு அயல் நாட்டு மூலதனத்தையே நம்பியிருந்தால் முக்கியமான அயல் நாடுகள் நிலையான பணமுறையில் அவற்றின் பண அலகுகளை நிலைப் படுத்தி (pegging) இருக்குமாதலால் எச் செலவிலும் நிலையான மாற்று விகிதத்தை நிலைநாட்ட முற்பட வேண்டும்.

5. பன்னுட்டுப் பண மூலதன அங்காடிகளின் ஒழுங்கான வளர்ச்சிக்கும், நிலையான மாற்று விகித முறை தேவையான தாகும். அயல் நாட்டு மாற்று விகிதம் மிகவும் ஏற்ற இறக்க முள்ளதாக இருந்தால், மாற்றுக்களில் மிகுதியான நட்டம் ஏற்படும் என்று பயப்படுவதால் அயல் நாட்டு முதலீட்டாளர்கள் வெளிநாட்டு மக்களுக்குக் கடன் கொடுக்கமுன் வரமாட்டார்கள். (எ. கா.): பொன் திட்டத்தின்கீழ் இருந்த நிலையான மாற்று விகிதங்களினுல் உலக வணிகத்திற்கும், பன்னுட்டுப் பண அங்காடி களுக்கும் ஏற்ற முறையில் 'பன்னுட்டுக் கடன் ஈதல் ஓட்டம்' (flow of international lending) தங்குதடையற்று நிகழ்ந்து கொண்டிருந்தது. ஆனுல், பொன் திட்ட வீழ்ச்சியினுலும், போட்டியான மாற்றுக்களின் மதிப்பிறக்கங்களாலும் இந்த ஓட்டம் தடைப்பட்டு விட்டது.

நிலையற்ற மாற்று விகிதங்களுக்குள்ள நலன்கள் (Flexible exchange rates) : நிலையற்ற மாற்று விகிதங்களுக்குள்ள நலன்களை, நிலையான மாற்று விகிதங்களுக்கு எதிர்வாதம் செய்வதன்மூலம் விளக்கலாம்.

1. நிலையான மாற்று விகிதமானது ஒரே தன்மையான பன்னுட்டு வணிக ஓட்டத்தைத் தூண்டுகிறது என்று சொல்லப் படுகிறது. இவ்வாதம் போருக்குப் பிற்பட்ட ஆண்டுகளின் வரலாற்றினுல் வலுப்படவில்லை. நாளுக்கு நாள் மாற்று விகிதம் மாற்றமடைந்தபோதும் அயல் நாட்டு மாற்று அங்காடியில் உள்ள மாற்றுக்களின் மதிப்பின் போக்குப் பழக்கப்படி மதிப்பீடு செய்யப் படக்கூடும். ஒரு நாட்டின் அயல் நாட்டுச் செலுத்து நிலை (Balance of payment) சமநிலையில் இருக்கும்போது சராசரி வணிக

நடவடிக்கை முற்றுப்பெற, தகுந்த காலம் எடுத்துக் கொள்வதால் மாற்று விகிதம் குறிப்பிடக்கூடிய அளவு மாற்றமடையாது. அயல் நாட்டுச் செலுத்து நிலை சமநிலையற்ற நேரங்களில் அங்காடியின் போக்கு மதிப்பிடப்படலாம்.

2. தடையற்ற ஏற்ற இறக்க மாற்று விகித முறையை ஒட்டி வாதம் புரிபவர்கள், இம்முறையான மாற்று விகிதங்கள் இயற்கையான மட்டத்திற்குச் செல்ல அனுமதிக்கப்படுகின்றன என்றும், அயல் நாட்டுச் செலுத்து நிலையின் 'சமநிலையற்ற தன்மை' பிரச்சினையே இல்லையென்றும் தெளிவாகச் சொல்லுகிறார்கள்.

3. புற இருப்புக்களைச் (External Balances) சரிக்கட்டுவதிலும் அயல் நாட்டுச் செலுத்து நிலை நெருக்கடியின் தொடர் நிகழ்ச்சிகளைத் தடுப்பதிலும் நிலையான மாற்று விகிதத்தைவிட நிலையற்ற மாற்று விகிதங்கள் அதிகமாகத் துணைபுரிகின்றன. பன்னாட்டுக் கடன் ஈதலில் அவற்றின் செய்கைகள் மிகவும் பயனுள்ளதாக இருக்கின்றன.

4. செலாவணித்தாள் முறையை உடைய நாடுகளுக்கு நிலையான மாற்று விகிதம் தேவையில்லை. சில பொருளாதார அரசியல் சமூகச் சக்திகளே அனேக நாடுகளை ஸ்டெர்லிங் வட்டாரத்திற்குள் கொண்டுவந்து சேர்த்தன. இந்நாடுகளுக்குள் கலந்தாலோசித்த பிறகு பவுண்டு ஸ்டெர்லிங் நிலையற்ற மாற்று விகிதத்தை உடையதாக இருந்தால் மேற்சொன்ன சக்திகளை வலிமை குன்றச் செய்யாது.

5. ஏற்ற இறக்க விகித முறையில் அயல் நாட்டுச் செலுத்து நிலைச் சரிக்கட்டுதல்களில் உள்நாட்டு வருவாய் விலைகளைவிட மாற்று விகிதங்களே சிறப்பிடம் பெறுகின்றன. ஒரு நாட்டின் அயல் நாட்டுச் சமநிலையை நிலை நாட்டும் பிரச்சினைகளில் உள்நாட்டுப் பொருளாதாரக் கொள்கைகளைச் சிறப்பாகக் கடைப்பிடிக்காமல் அங்காடித் தேவை அளிப்புச் சக்திகளுக்கேற்ப அயல் நாட்டு மாற்று விகிதத்தை எதிரொலிக்கச் செய்வது உகந்ததாகும். தடையற்ற நிலையற்ற மாற்று விகிதமானது ஒரு நாட்டின் தடையற்ற பணக் கைக்கோளுக்கு அனுமதியளிக்கிறது.

6. மேலும், நிலையான மாற்று விகிதமானது செலாவணி ஊக வணிகத்தை ஊக்குவிக்கிறது. மாற்றுத் தடை இருந்த போதிலும் செலாவணி குறை மதிப்பு செய்யப்படும் என்ற சந்தேகம் எழுந்தால் செலாவணியின் விகிதத்தை நிறை பெறுமல்

செய்து ஒரே விகிதம் நிலைநாட்ட முடியாமல் போகும். இவ்வூக வணிகமே பவுண்டு ஸ்டெர்லிங்-ரூபாய் விகித குறை மதிப்பிற்கு செப்டம்பர் 1949-லும், ஜூன் 1966-லும் பெரும் பங்கு பெற்றது.

7. இரண்டு செலாவணிகளுக்கிடையேயுள்ள நடைமுறை, உண்மை உற்பத்திச் செலவு-விலை தொடர்புக்கேற்ப பிரதிபலிக்காததே நிலையான மாற்று விகிதத்தின் மற்றொரு குறைபாடாகும். நாடுகள் மாறுபட்ட வெவ்வேறு பொருளாதாரக் கொள்கைகளைக் கடைப்பிடிக்கும்போது உற்பத்திச் செலவு-விலைத் தொடர்பு அடிக்கடி மாற்றமடைகிறது. நிலையான மாற்று விகிதங்களுக்கெதிரான விகிதங்களும், சென்ற பத்தாண்டு கால அனுபவங்களும் நிலையான மாற்று விகித முறையை மாற்றி நிலையற்ற ஏற்ற இறக்க விகித முறையையே கடைப்பிடிப்பதால் உண்டாகும் பயன்களையே சுட்டிக் காட்டுகின்றன.

குறுகிய இடைவெளிக் காலத்தைத் தவிர்த்து மற்ற நீண்ட காலங்களில் எந்த நாடும் மாற்று விகிதத்தின் இயல்பான ஓட்டத்திற்கு இசைந்து, பன்னாட்டுப் புறப் பொருளாதார நிலைமைகளின் அன்றாட முன்னேற்றத்திற்கேற்ப மாற்று விகிதத்தை மாற்றிக் கொண்டே போக முடியாது. இக் கைக்கோளால் உண்டாகும் நிலையற்ற தன்மையானது ஒரு நாட்டின் அயல் நாட்டு வணிகத்தில் மட்டுமல்லாது அந்நாட்டுப் பொருளாதார அமைப்பிலேயே மிகுந்த எதிர் விளைவை ஏற்படுத்தும். தடையற்ற ஏற்ற இறக்க மாற்று விகிதமானது ஏற்றுமதி இறக்குமதிப் பொருள்களின் விலையை மாற்றமடையச் செய்து இதற்கு முன் பன்னாட்டு வணிகத்திலடங்காப் பொருள்களை இவ் வணிகத்திலீடுபடச் செய்வது மட்டுமல்லாமல் இதற்கு முன் பன்னாட்டு வணிகத்திலீடுபட்ட பொருள்களையும் விலக்கச் செய்கிறது. இப் போக்கு ஒரே மாதிரி பன்னாட்டு வணிக ஓட்டத்தைக் குலைப்பது மட்டுமல்லாமல் பொருளாதாரத்திலுள்ள இடைத்-தொழிற்சாலைப் பாகுபாட்டுக் காரணிகளையும் பாதிக்கிறது. ஏற்ற இறக்க மாற்று விகிதம், உள்நாட்டு உற்பத்திக் காரணிகளின் ஏற்றுமதி, உள் நாட்டு அங்காடித் தொழிற்சாலைகளிடையே நிலையான பெயர்ச்சியை ஏற்படுத்துகிறது. இப் பெயர்ச்சி மிகவும் அமைதியின்மையையும், வீண் செலவையும் உண்டாக்கும்.

மேலும் தடையற்ற மாற்று விகிதமுறை விரும்பத்தகாத மூலதன ஓட்டங்களைத் தூண்டுகிறது. அயல் நாட்டு மாற்றுக்களில் உள்ள ஊக வணிகமானது கடந்த காலக் கவர்ச்சியாகும். மாற்று விகிதத்தில் வீழ்ச்சி ஏற்படும் என்ற எதிர்பார்ப்பினுல்

ஏற்படும் மிகுந்த மூலதன வெளியோட்டமானது அதற்கேற்ற பின் விளைவை ஏற்படுத்துமாதலால் மிகவும் பயங்கரமானதாகும். எதிர்பார்த்துக் கொள்முதல் செய்யப்படும் அயல் நாட்டு மாற்றுப் பொருள்கள் அல்லது எதிர்பார்த்து நாட்டுச் செலாவணியின் மாற்று மதிப்பை வீழ்ச்சியடையச் செய்யும் எந்த விகிதமும், மாற்று விகிதத்திலுள்ள உண்மை வீழ்ச்சியையும், மாற்று விகிதம் மேலும் வீழ்ச்சியுறும் என்ற எதிர்பார்ப்பையும் வலுவடையச் செய்கின்றன. தடையற்ற ஏற்ற இறக்க மாற்று விகிதமுறையில் அடங்கிய இத் திரண்ட தற்பெருக்குப் போக்கின் இடையூறுகளை 1922-26-ல் ஏற்பட்ட ஃபிரான்சு அனுபவமானது எடுத்துக் காட்டுகிறது. இச் சந்தர்ப்பங்களில் மாற்று விகிதம் மிகவும் நிலையற்ற தன்மைக்கு வந்துவிடும்.

தடையற்ற மாற்று விகிதத்தின் கீழுள்ள ஊக வணிக, மூலதனப் பெயர்ச்சிகள் பழக்கத்திற்கொவ்வாத உயர்ந்த ரொக்க நிலை விருப்பமுடைய (liquidity preference) மிகுந்த இடர்ப் பிரச்சினைகளை ஏற்படுத்துகின்றன. ஒரு செலாவணியின் மாற்று விகிதம் இயற்கை மட்டத்திலிருக்கும்போது இப் பிரச்சினைகள் எழா.

ஒவ்வொன்றிலுமுள்ள தகுந்த விகிதம் அந்தந்த நாடுகளின் பொருளாதார, நிதி, பணக் கைக்கோள்களையும் மற்ற நாடுகளுடன் உள்ள அவற்றின் முக்கிய பொருளாதாரத் தொடர்பையே பொறுத்துள்ளது. மாற்று விகிதத்திற்கேற்ப அயல் நாட்டுச் செலுத்து நிலைகளைக் கூர்ந்து கவனித்த பிறகுதான் கொடுக்கப்பட்ட மாற்று விகிதமானது ‘சரியான’ மட்டத்தில் உள்ளது அல்லது இல்லை என்று தீர்மானிக்கப்படும்.

தொடர்ச்சியான பணவீக்கச் (inflation) சந்தர்ப்பங்களில் ஏற்ற இறக்க மாற்று விகிதம் குறை மதிப்பு (devaluation) பண வீக்கமுடைய (inflation) நச்சு வட்டத்திற்கு (vicious circle) இலக்காகிறது. உள்நாட்டு விலைகள் நிலைபேறற்ற நிலையில் உள்ள வரையில் ஏற்ற இறக்க மாற்று விகிதங்கள் செலாவணியின் மிகை மதிப்பைத் (over valuation) தடுப்பதற்கு மிகவும் இன்றியமையாதன. இருந்த போதிலும் உள் நாட்டு விலையிலுள்ள நிலையற்ற தன்மை மாற்று விகிதத்தில் குறைவு ஏற்படச் செய்து மேலும் மிகுந்த பணவீக்கத்திற்கு வழிவகை செய்கிறது. பொருளாதார நிலைபேற்றை நோக்கமாகக் கொண்ட கொள்கையைக் கடைப்பிடிக்கத் தவறினாலும் ஏற்ற இறக்க முடைய அதன் மாற்று விகிதத்தின் இயக்கமானது நிலையான

மதிப்பைச்சுற்றி ஊசலாடிக் கொண்டிராமல் அதனின்றும் தாழ்ந்த போக்கைச் சுற்றியே ஊசலாடும்.

கட்டுப்பாடற்ற ஏற்ற இறக்க மாற்று விகிதங்கள் நீண்டகால அயல் நாட்டு மூலதனத்தை மிகவும் பாதிக்கின்றன. கடன்பெறும் நாட்டின் செலாவணிக்கேற்ப அயல் நாட்டுக் கடன் அளவு சுருங்கும்போது கடனீந்தோரின் செலாவணிக்குக் கடனுளியின் செலாவணி ஏற்ற இறக்க மாற்று விகிதத்தால் குறைமதிப்பை அடையும்போது கடன் ஈந்தோன் மிகுந்த இடையூறுகளுக்கு ஆளாகிறான். கடன் ஈயப்படும் செலாவணியின் கடன் அளவு சுருங்கினுல்கூட தடையற்ற மாற்று விகிதம், கடன்பட்ட நாட்டு மாற்று விகிதக் குறைமதிப்பு, கடன் அளிச்கும் பணிச்சுமையையும், கடன் திருப்பி அளிக்கப்படும் சுமையையும் அதிகரித்து, இடர்ப் பாட்டை மிகுதியாக்குகிறது.

ஒழுங்கான பொருளாதார முன்னேற்றத்திற்கு ஓரளவாவது நிலையான மாற்று விகிதம் இன்றிமையாததாகும். அதாவது முழுவதும் நிலையான மாற்று விகிதமோ அல்லது முழுவதும் நிலையற்ற மாற்று விகிதமோ அல்லாமல் ஒரு நாடு குறிப்பிட்ட, விளக்கப்பட்ட, எல்லைக்குட்பட்டுத் தன் மாற்று விகிதத்தை மாற்றிக்கொண்டு நிலையான பன்னுட்டுப் பொருளாதார வளர்ச் சிக்கு வகை செய்யலாம். இம் முறை பன்னுட்டு நாணய நிதி (International Monetary Fund) மூலம் மேற்கொள்ளப்பட்டு மாறுபட்ட மாற்று விகித நிலைபேறுடைமை கடைப்பிடிக்கப் படுகிறது.

## பன்னுட்டு நாணய நிதியும் ஏற்ற இறக்கமுள்ள மாற்று விகிதமும்
## (International Monetary Fund and Fluctuating Exchange Rate)

நாட்டு நிதி நிர்வாகத்தில் பொன் திட்டத்தின் அடிமைத் தன்மைக்கு உறுப்பு நாடுகளை ஆளாக்காமல் நிலையான மாற்றுக்களை ஏற்படுத்தப் பன்னுட்டு நாணய நிதி (International Monetary Fund) உண்டாக்கியபோதிலும் ஏற்ற இறக்கமுள்ள மாற்று விகிதங்களும் தொடர்ந்திருந்தன. இந்நிதி (I. M. F) ஏற்ற இறக்கமுள்ள மாற்று விகிதங்களை நிலையற்ற விகிதங்கள் (floating rates) நெருங்கு கிறதென்று ஆய்வாளர்கள் குறை கூறுகின்றனர். தற்கால அகில உலக நிலையான மாற்று விகிதங்களுக்கு இந்நிதி ஏற்புடைத்தன்று என்றறிவிக்கின்றனர்.

இந்நிதி, ஒப்பந்தத்தில் உள்ள துணை விதிகளின்படி (articles) சமநிலை மதிப்புக்களைத் தொடர்ந்தும், உறுதியாகவும் ஆதரித்த போதிலும் எதிர்பாராத சந்தர்ப்பங்களில் ஏற்ற இறக்கமுள்ள மாற்று விகித முறையைக் கடைப்பிடிக்கவும் தூண்டுகிறது. ஜூலை 1948-ல் மெக்சிகோ அதனுடைய சமநிலை மதிப்பில் பேரங்களை ஒத்திவைத்து மாற்று விகிதத்திற்கேற்ப அங்காடியைச் சரிக்கட்டிக் கொள்ளும்படி விட்டபோது இப் பன்னாட்டுப் பணநிதி சமாளிக்க வேண்டிய நிலைமை உருவாயிற்று. 'பீசோ' நாணயத்திற்குப் புதிய சமநிலை மதிப்பை ஏற்படுத்தும் பொருட்டு இந்நிதியும் மெக்சிகன் அரசும் தொடர்ந்து கலந்தாலோசித்தன. ஓர் ஆண்டிற்குப் பிறகு புதிய சமநிலை மதிப்பு நிர்ணயிக்கப்பட்டது. ஆகவே, ஓர் ஆண்டு முழுவதும் மெக்சிகன் பீசோக்கள் மாறுபட்ட நிலையற்ற மாற்று விகிதத்தையே கொண்டிருந்தன.

1949-ல் 'பெரு'வின் 'சோல்' நாணயம் அதன் ஆரம்ப சமநிலை மதிப்பில் ஒத்திவைக்கப்பட்டபோது ஏற்ற இறக்கமுள்ள மாற்று விகிதப் பிரச்சினையில் இந்நிதியின் (I. M. F.) போக்கே மாறியிருந்தது. மார்ச் 1, 1970 வரை 'பெரு'வில் அதன் செலாவணிக்குப் புதிய சமநிலை மதிப்பு கண்டுபிடிக்கப்படாமல் இரண்டு ஏற்ற இறக்கமுள்ள விகிதங்களைக் கொண்ட இரட்டை மாற்று அங்காடிகள் நிலவின. இரண்டு பத்தாண்டுகளுக்கு (two decades) இடையிலும் 'நிலையற்ற மாற்று விகித' முறையே பெருவில் கடைப்பிடிக்கப்பட்டு 'பெரு' அதன் வளத்தைப் பயன்படுத்திக் கொள்ளலாம். துணைவிதி VIII-ல் அடங்கிய உதவிகளைப் பெற்றுக்கொள்ளவும் இப் பன்னாட்டு நிதி 'பெரு' அரசுக்கு அனுமதியளித்தது. தடையற்ற மாற்றுரிமையுள்ள செலாவணிகளைக் கொண்ட நாடு 'பெரு' என்று கருதப்படுகிறது. மிகுந்த உகந்த மட்டத்தில் ஒருதலை மாற்று விகித முறையைப் 'பெரு' அரசு நிலைநாட்ட முற்பட்டதால் 'பெரு' அரசை இந்நிதி பொறுத்தருளியது.

செப்டம்பர் 1950-ல் இருந்து மே 1962 முடிய 12 ஆண்டுகளுக்கு மாற்று அங்காடியில் கனடா டாலருக்கு நிலையற்ற மாற்று விகிதம் கடைப்பிடிக்கப்பட்டது. சில தனிப்பட்ட விலக்கான காரணங்களுக்கு நிலையற்ற விகிதத்தை இந்நிதி ஏற்றுச் சகித்துக் கொண்டது மற்றோர் எடுத்துக்காட்டாகும் மூலதன உள்ளோட்டத்தைக் குறிப்பாக அமெரிக்காவிலிருந்து தவிர்க்கும் பொருட்டே இவ்வேற்ற இறக்க விகிதம் கனடாவில் கடைப்பிடிக்கப்பட்டது. மூலதன உள்ளோட்டம் (inflow of capital) 1950-ல் பண அளிப்பை அதிகப்படுத்தி வட்டி விகிதங்களில்

மந்த நிலையை உருவாக்கிப் பொருளாதாரத்தில் பண வீக்கத்தை ஏற்படுத்தியது. பாதக வணிக நிலையையும், மூலதன வெளியோட்டத்தைத் (outflow of capital) தடுக்கும் மற்ற விகிதங்களுக்கும் எதிரானதே இந்நிலையற்ற மாற்று விகிதம் ஆகும். ஊக வணிகம் (speculation) மிகுந்த மூலதன உள்ளோட்டமானது நிலையான மாற்று விகிதம் இருக்கும்போது கனடா அரசு மூலதன உள்ளோட்டத்தின் அளவைக் கற்பனை செய்துகூடப் பார்க்க முடியவில்லை. பொருளாதாரத்தில் பண வீக்கத்தை ஏற்படுத்தும் மூலதனப் பெயர்ச்சியைத் தடுக்கும்பொருட்டுக் கனடா அரசு அங்காடியில் டாலரைச் சுயேச்சையாகவிட்டு, மாற்று விகிதம், அங்காடிச் சக்திகளுக்கேற்ப நிர்ணயிக்கப்படும்படிச் செய்தது. இப்போக்கை இப் பன்னாட்டு நிதி ஏற்றுக் கனடா டாலரின் மாற்று விகிதம் மாற்று அங்காடியில் நிலையற்ற நிலையில் இருக்க அனுமதித்தது. 'பெரு', கனடா மட்டுமல்லாமல், லெபனான், சிரியா, தாய்லாந்து முதலிய மற்ற உறுப்பு நாடுகளும் ஏற்ற இறக்கமுள்ள மாற்று விகிதங்களைக் கடைப்பிடித்தன. ஏற்ற இறக்க விகிதங்களைக் கொண்ட செலாவணியில் பேரங்களை நிகழ்த்த, இந்நிதியின் சொத்துக்கள் மதிப்பை நிலைநாட்ட இச் செலாவணிகளை வாங்கவோ, வெளிச் செலாவணிகளை இங்குச் செலுத்தவோ ஏற்ற இறக்க விகிதங்கள் உள்ளபோது, மாற்று விகிதங்களைக் கணிக்கத் தனிப்பட்ட விதிகளை இந்நிதி உருவாக்கிற்று. குறிப்பிட்ட நாட்களில் மாறுபட்ட செலாவணியுடைய நாட்டின் முக்கிய நிதிநிலை மைய இடங்களில், நேரடி ஒப்படைப்பிற்காகக் கடல் தந்தி மாற்றம்மூலம் அமெரிக்க டாலரால் குறிக்கப்பட்ட உயர்ந்த, தாழ்ந்த விகிதங்களுக்கும் இடைநிலையில் மாற்று விகிதமும் கணிக்கப்பட்டது. அதன் சமநிலை மதிப்பில் பேரங்கள் நிகழ்த்தாத நாடுகளுக்குத்தான் இம்முடிவுப்படி கணிப்பு நிகழ்ந்தது. ஆகஸ்டு 15, 1968-ல் இக்கணிப்பு விகிதங்கள் அர்ஜன்டைனு, பால்வியா, பிரேசில், சைல், கொலம்பியா, இந்தோனேசியா, கொரியா, பர்கேவியா, பெரு, வெனீசுலா முதலிய நாடுகளில் கடைப்பிடிக்கப்பட்டன.

மாற்றுச் சீர்திருத்தம் நிலைபேறுடைமைக்காக ஏற்ற இறக்க விகிதங்களையும் உடைய திட்டங்களை இந்நிதி ஆதரித்தது. மாற்றுச் சீர்திருத்த அடிப்படையிலேயே பெருவிலும் ஏற்ற இறக்க விதி புகுத்தப்பட்டது. தொடர்ந்த பண வீக்கத்தைக் (inflation) கட்டுப்படுத்தப்படும் பொருட்டு அடிப்படை அங்காடிப் போக்கிற்கிணங்க தகுந்த மாற்று விகிதம் நிலைநாட்டப்படுவதற்கு இம் மாறுபட்ட மாற்று விகிதக் கைக்கோள் இன்றியமையாதது என்று கருதப்படுகிறது. இம்முறையில் அயல் நாட்டு மாற்றுக்

களின் இருப்பு, குறிப்பிட்ட காலங்களில் குறிப்பிட்ட மட்டத்தில் (இம் மட்டத்திற்கு ஊறு நேரும்போது மாற்று விகித நடவடிக்கை எடுக்கப்பட்டு) வைத்துக் கொள்ளப்படுகிறது. பெரும்பாலான நாடுகள் அவற்றின் செலாவணிகளின் மாற்று மதிப்பில் இறக்கத்தை ஏற்படுத்துவதற்கு விருப்பமில்லாமலிருந்த போதிலும், மாறுபட்ட நிலையற்ற விகிதத்தைக் கொண்ட நாடுகளிடம் நிலையான, நிரந்தர விகிதத்தைக் கடைப்பிடிப்பதற்கு அவசரப்படாமல் இருக்கும்படி இந்நிதி செய்ய வேண்டும்.

இந்நிதியின் இறுதி நோக்கமானது, மாற்றுச் சீர்திருத்தத்திலும்கூட நிலையான, ஒரே மாற்று விகித நிலையை உருவாக்கி நிலைநாட்டுவதுதான். மாறுபட்ட மாற்று விகிதம் தற்காலிகமானதே. நிலையான மாற்று விகிதத்தை இந்நிதி நிலைநாட்ட முற்பட்டாலும் சில தவிர்க்க முடியாத சந்தர்ப்பங்களில் மாறுபட்ட மாற்று விகிதம் நிலவும் என்பதையும் ஏற்றுக் கொள்கிறது.

## உடனடி மாற்று விகிதமும் முன்னோக்கு மாற்று விகிதமும் (Spot and Forward Exchange Rates)

ஒரு குறிப்பிட்ட அயல் நாட்டுச் செலாவணிக்கு, உள்நாட்டுச் செலாவணியில் உடனடியாகக் கொடுக்கக்கூடிய விலை அல்லது விகிதம் உடனடி மாற்று விகிதம் (Spot Rate of Exchange) எனப்படும். ஒரு குறிப்பிட்ட பிற்காலத்தில் நிறைவேற்றக்கூடிய பேரத்திற்கு முன்கூட்டி ஒப்புக்கொள்ளப்படக் கூடிய விலையே முன்னோக்கு மாற்று விகிதம் (Forward Exchange Rate) எனப்படும். நடைமுறையில் பலவித உடனடி மாற்று விகிதங்கள் (Spot rates of exchange) உள்ளன. கடல் தந்திக்காக (for cables) உள்ள உடனடி மாற்று விகிதம் செக்குகளுக்கும், வணிக உண்டியல்களுக்கும் உள்ள மாற்று விகிதத்தினின்றும் பொதுவாக உயர்ந்து வேறுபட்டிருக்கும்.

இப் புதுமைக் காலங்களில் பன்னாட்டு மூலதன இயக்கங்களுக்கு முன்னோக்கிய மாற்று விகிதம் (Forward Exchange Rate) மிகவும் சிறப்பு வாய்ந்ததாக இருக்கிறது. அயல் நாட்டு மாற்றுப் பாங்குகள் இறக்குமதி, ஏற்றுமதி செய்ய எத்தனிப்பவர்களுக்கு முன்னோக்கிய அயல் நாட்டு மாற்றுக்களை வாங்குவதிலும், விற்பதிலும் சிறப்பான அங்கம் வகிக்கின்றன. இறக்குமதி, ஏற்றுமதியாளர்களுக்கும் உள்ள உடனடி மாற்று விகிதத்தில் (Spot Rate of Exchange) ஏற்படும் ஏற்ற இறக்கத்தின் இடர்களைக் குறைக்கும்

பொருட்டே முன்னேக்கிய மாற்று விகிதமுறை (System of forward exchange rate) உருவாக்கப்பட்டது. (எ.கா.): இந்தியாவிலுள்ள வானெலி வியாபாரி இந்தியாவிலிருந்து வானெலிகளை இறக்குமதி செய்ய விரும்புகிறர் என வைத்துக்கொள்வோம். அந்நேரத்தில் பவுண்டு ஸ்டெர்லிங்—ரூபாய்களுக்குள்ள மாற்று விகிதம் ஒரு பவுண்டு ஸ்டெர்லிங் = ரூ. 18. இந்த விகிதத்தை வைத்துக் கொண்டு இந்திய வானெலி வியாபாரி சுங்கவரி கட்டி வானெலி களுக்குள்ள ஸ்டெர்லிங் விலையையும் கொடுத்து வானெலிகளை இறக்குமதி செய்து, இந்தியாவில் இலாபமடையலாம் என்று கணிக்கிறர். ஆனல், உண்மையிலேயே அநேக மாதங்களுக்குப் பிறகு இந்தியாவில் வானெலிகள் இறக்குமதி செய்யப்படும்போது மாற்று விகிதம் ஒரு பவுண்டு ஸ்டெர்லிங் = ரூ. 20 ஆக உயர்ந்து ஒரு பவுண்டுக்கு ரூ. 2 கூடுதலாகக் கொடுக்க வேண்டியிருப்பின் எதிர்பார்த்த இலாபத்திற்குப் பதிலாக நட்டமடைய வேண்டி யிருக்கும். அதாவது மாற்று விகிதம் ஒரு பவுண்டு = ரூ. 18 ஆக இருக்கும்போது வானெலிகளை இறக்குமதி செய்யக்கூடுமானல் தான் இந்திய இறக்குமதியாளனுக்கு இலாபகரமானதாகும்.

முன்னேக்கிய மாற்று விகித அங்காடி அவ்வியாபாரிக்கு இந்த உத்தரவாதத்தை அளிக்கிறது. அவருடைய பாங்கு சிறு கட்டணம் வசூலித்துக்கொண்டு மூன்று மாதங்களுக்கு முன்னேக்கிய விலையில் ஒரு பவுண்டு ஸ்டெர்லிங்கை ரூ. 18-க்கு விற்கிறது. மாற்று அங்காடியில் பவுண்டு ஸ்டெர்லிங்—ரூபாய் மாற்று விகிதம் அக் குறிப்பிட்ட மூன்று மாதங்களுக்குள் எந்த அளவு மாறினலும் ஒரு பவுண்டு=ரூ. 18 என்ற விகிதத்திற்கே கொடுக்க மாற்றுப் பாங்கு ஏற்றுக்கொள்ளுகிறது. இதுபோன்றே எதிர்காலத்தில் அந்நியச் செலாவணி கிடைக்கும் என்று எதிர்பார்க்கும் ஏற்றுமதியாளர் களும், அயல் நாட்டு முதலீட்டாளர்களும் (பாங்குகளுக்கு முன்னேக்கிய மாற்றுக்களை விற்று) அவர்களுடைய சொந்த நாட்டுச் செலாவணியில் எவ்வளவு தொகை கிடைக்கும் என்று உறுதியாக அறிய பாங்குகளுக்கு முன்னேக்கியே மாற்றுக்களை விற்க முற்படுகின்றனர். நடைமுறை மாற்று விகிதத்தில் ஏற்ற இறக்கம் ஏற்பட்டு அயல் நாட்டுப் பொருளை வாங்குவதற்கோ, விற்பதற்கோ இடையூறு ஏற்படுகிறது. ஆகவே, முன்னேக்கிய மாற்று விகிதத்தினல் (Forward Exchange Rate) ஏற்றுமதி யாளர்கள் இறக்குமதியாளர்கள் தாங்கள் ஏற்றுமதி அல்லது இறக்குமதி செய்யப்போகும் பொருள்களின் விலையை முன் கூட்டியே அறிந்து கொள்ளமுடிகிறது.

## மாற்றுக் கட்டுப்பாட்டின்கீழ் உள்ள விகிதங்கள் (Rates under Exchange Control)

ஒரு குறிப்பிட்ட செலாவணியின் மாற்று மதிப்பிலுள்ள அழுத்தத்தை நீக்கும் பொருட்டு அந்நியச் செலாவணியின் பேரங்களை ஒழுங்குபடுத்தும் நடவடிக்கைகளைக் குறிப்பதே மாற்றுக் கட்டுப்பாடு (Exchange Control) என்று பொருள்படும்.

அயல் நாட்டுச் செலுத்து நிலையில் உள்ள தற்காலிக இடையூறுகள் குறையும்வரை அயல் நாட்டுச் செலாவணியின் தேவையைக் குறைக்கும்வரை இன்றியமையாத இறக்குமதிப் பொருள்களுக்குத் தடை விதித்தல் சாதாரண ஒழுங்கு நடவடிக்கையாகும். அளவற்ற நீண்ட காலங்களுக்குச் செலாவணியின் செயற்கை மதிப்பு, மையப் பாங்கு அதிகாரிகளால் மாற்றுக் கட்டுப்பாட்டுச் சட்டங்களை நிறைவேற்றுவதன்மூலம், நிர்ணயிக்கப்படுகிறது. அநேக சந்தர்ப்பங்களில் செலாவணிகளை வாங்குவதற்கும், விற்பதற்கும் ஒரே சட்டமுறை விகிதம் (அதாவது ஒரே வாங்கும் விகிதம், ஒரே விற்பனை விகிதம்) நிர்ணயிக்கப்படுகிறது. ஆனால் அங்காடி மாற்று விகிதங்களையும் நிர்ணயிக்க நடவடிக்கை எடுக்கப்படுகிறது.

இந்நிலைமைகளில் தடையற்ற நிலையில் நிலவும் தேவை, அளிப்புச் சக்திகளால் மாற்று விகிதம் நிர்ணயிக்கப்படாமல் மாற்றுக் கட்டுப்பாடு அதிகாரிகளால் (மாற்று விகிதம்) நிர்ணயிக்கப்படுகிறது. இவ்விதம் நிலவுவதற்கு மாற்றுச் செலாவணிகளை வைத்திருக்கும் நாட்டு மக்கள் அனைவரும் மாற்றுக் கட்டுப்பாடு அதிகாரிகளால் நிர்ணயிக்கப்பட்ட விகிதப்படி அக் கட்டுப்பாட்டு அதிகாரிகளிடம் ஒப்படைத்து விடவேண்டும். இம் மாற்றுச் செலாவணிகள் தேவையுள்ள அனைவருக்கும் மீண்டும் கட்டுப்பாட்டு அதிகாரிகளால் நிர்ணயிக்கப்பட்ட விகிதத்தில் பரவலான முறையில் தேவைக்குகந்தவாறு பங்கிட்டளிக்கப் படுகிறது. இந் நிலைமைகளில் சற்றுக் குறைவான உச்சநிலை நிகழ்ச்சிகளில்கூட எவ்வித அடிப்படை விகிதத்தை நிர்ணயிப்பது என்பதுகூடக் கடினமாக இருக்கிறது.

# 8. இந்தியாவில் அயல் நாட்டுச் செலாவணிச் சிக்கல்கள்

அயல் நாட்டுச் செலாவணிப் பற்றுக்குறையால் இந்தியா மிகவும் பாதிக்கப்படுகிறது. போருக்குப் பிற்பட்ட காலம் முழுவதும் இந்தியாவின் செலுத்து இருப்பு நிலை மிகவும் பாதக மாகவே இருந்து வருகிறது. திட்டங்களைப் புகுத்தியதால் சிக்கல்கள் மேலும் மிகுதியாயின. இரண்டாம் உலகப் போரின் போது இந்நாடு சேகரித்த பொற்காசுகளின் இருப்புக்கள் இதன் முதல் ஐந்தாண்டுத் திட்டத்திற்கான அயல் நாட்டுச் செலாவணித் தேவைகளை நிறைவு செய்தன. இந்த இருப்புக்கள் யாவும் இரண்டாம் ஐந்தாண்டுத் திட்டத்தின் இரண்டாம் ஆண்டிலேயே தீர்ந்துவிட்டன. அதன் பிறகு மிகக் குறைந்த அயல் நாட்டுச் செலாவணி இருப்புக்களையே இந்நாடு நம்பியிருக்க வேண்டி யுள்ளது. பல துறைகளிலிருந்தும் பல வடிவங்களில் அயல் நாட்டு உதவிகள் இந் நாட்டுக்கு மிகவும் பயனளித்தன. ஆனால், அவை இந்நாட்டின் பொருளாதார வளர்ச்சிக்கு மிகவும் பற்றுக் குறையாகவே இருந்து வந்திருக்கின்றன. ஸ்டெர்லிங் வட்டா ரத்தின் (Sterling area) உறுப்பு நாடாகிய இந்தியா அவ் வட்டா ரத்திற்குள் ஸ்டெர்லிங்குகளிலேயே இதன் செல்லுகளைச் செலுத்த வேண்டியிருக்கிறது.

## இந்தியாவின் தற்காலச் செலாவணி முறை

பன்னாட்டு நாணய நிதியிலும் (International Monetary Fund) ஸ்டெர்லிங் மண்டலத்திலும் இந்தியா உறுப்பு நாடாகத் திகழ் கிறது. பன்னாட்டு நாணய நிதியிலும் இந்தியா உறுப்பு நாடாக இருப்பதால் இந்திய ரூபாய் பொன்னின் ஒரு குறிப்பிட்ட முகமதிப் புடையதாக இருக்கிறது. இந்தியச் செலாவணி முறையை

'பொன் சமநிலைத் திட்டம்' (Gold Parity Standard) என்றழைக்கலாம். ஸ்டெர்லிங் மண்டலம் அதன் உறுப்பு நாடுகளின் செலாவணிகளை ஸ்டெர்லிங்குகளுடன் தொடர்பு கொள்ளச் செய்கிறது. இத் தொடர்பு இந்தியச் செலாவணி முறையில் மிகவும் பங்கு கொள்ளச் செய்கிறது. இம் முறையை ஸ்டெர்லிங் செலாவணித் திட்டம் (Sterling Currency Standard) என்றழைக்கலாம்.

## இந்தியச் செலாவணி முறையின் சிறப்பியல்புகள்

1. ரூபாய் நாணயம் : ரூபாய் நாணயம் இந்தியாவின் பண அலகாகும். இவ்வமைப்பின் பதின் கூறு நாணயம் 100 பைசாக்களாகப் பிரிக்கப்பட்டு இருக்கிறது இப் பதின் கூறு நாணயங்கள் 1 ,2, 3, 5, 10,20, 25,50, 100 பைசாக்களாகக் கொண்டுள்ளன. ரூபாய் நாணயம் நிக்கலால் செய்யப்பட்டு அடையாள நாணயமாக (Token Coin) விளங்குகிறது. அதன் முகமதிப்பு அதிலுள்ள உலோக மதிப்பைவிட மிகுதியானது. புழக்கத்தில் இருக்கும் மற்ற உலோக நாணயங்களும் அடையாள அல்லது குறியீட்டு நாணயங்களே. ஒரு ரூபாய், அரை ரூபாய் நாணயங்கள் வரையறுக்கப்படாத சட்ட முறைப் பணங்களே ஆகும். அதாவது அவை எந்த அளவுக் கடனையும் தீர்க்கப் பயன்படுத்தப்படுகின்றன. மற்ற வடிவ நாணயங்கள் அனைத்தும் 10 ரூபாய்களுக்குள் அடங்கிய சட்ட முறைப் பணங்களாகும். ஜூலை, 1970-க்குள் புழக்கத்திலிருந்த ரூபாய் மற்றும் அதன் துணை நாணயங்களின் மொத்த மதிப்பு ரு. 360 கோடிகளாகும்.

2. தாள் நாணயம் : ரூபாய், தாள் நாணயமாகவும் புழக்கத்திலிருந்து வருகிறது. அவை ரூ. 2, 5, 10, 20, 100, 1,000, 5,000, 10,000 என்ற இனங்களாக உள்ள, இந்திய ரிசர்வ் பாங்கின் செலாவணித் தாள் நாணயங்களாகும். ஜூலை, 1940-ல் இருந்து புகுத்தப்பட்டுள்ள, இந்திய அரசால் அச்சடிக்கப்பட்ட ஒரு ரூபாய்த் தாள் நாணயமும் தொடர்ந்து புழக்கத்திலிருந்து வருகிறது. ஒரு ரூபாய்த் தாள் நாணயம், ஒரு ரூபாய் உலோக நாணயத்தைப் போலவே கருதப்படுகிறது.

ஒரு ரூபாய்த் தாள் நாணயமல்லாமல் மற்ற தாள் நாணயங்களின் அளிப்பு, இந்திய ரிசர்வ் பாங்கின் சர்வாதீனத்தின்கீழ் இருந்து வருகிறது. தாள் பணத்தை வெளியிடுவதற்கு இந்திய ரிசர்வ் பாங்கு தனிப்பட்ட ஒரு 'தாள் பணவெளியீட்டுத் துறையை' ஏற்படுத்தி இருக்கிறது. புழக்கத்திலிருக்கும் மொத்த தாள்

நாணயங்களுக்கீடாக அவ் வெளியீட்டுத் துறையின் சொத்துக்கள் பொன் நாணயங்கள், பொற்குவியல்கள், அயல் நாட்டு ஈடுகள், ரூபாய் நாணயங்கள், இந்திய அரசின் ரூபாய் ஈடுகள் முதலிய வடிவங்களில் இருக்கின்றன. குறைந்த அளவு ஈடுகள் பொன், அயல் நாட்டு ஈடுகளாக ரூ. 200 கோடிக்குச் சட்ட முறைப்படி இருக்கின்றன. இதில் பொன் நாணயமும், பொற்குவியலும் ரூ. 115 கோடிக்குக் குறையாமல் இருத்தல் வேண்டும். பொன், அயல் நாட்டுச் செலாவணிகளுக்கும் சட்ட முறைப்படிக் குறைந்த பட்ச ஒதுக்கீடு இருப்பதால் இத் தாள் பணப் புழக்கத் திட்டம் 'குறைந்தபட்ச ஒதுக்கீட்டுத் திட்டம்' (Minimum Reserve System) என்றழைக்கப்படுகிறது.

ஜுலை, 1970 முடிய புழக்கத்திலிருந்த இந்தியத் தாள் நாணயத்தின் மொத்த அளவு ரூ. 3,862 கோடிகளாகும்.

**3. இந்திய ரூபாயின் புறமதிப்பு :** அயல் நாட்டுச் செலாவணி களுக்காக இந்திய ரூபாய் பொன்னாகவும், ஸ்டெர்லிங்குகளாகவும் மதிப்பிடப்படுகிறது. இந்தியா, பன்னாட்டுப் பண நிதியின் (International Monetary Fund) உறுப்பு நாடாகையால் இந்திய ரூபாயின் முகமதிப்பு பொன் அல்லது டாலர்களில் மதிப்பிடப் படுகிறது. தற்பொழுது ஒரு ரூபாய் 0·118516 கிராம் பொன் அல்லது 13·3 அமெரிக்க செண்டுக்குச் சமமாக மதிப்பிடப்படு கிறது. ஆகவே இந்தியா சட்ட முறைப்படி 'பொன் சமநிலைத் திட்டத்தில்' உள்ளதாகக் கருதப்படுகிறது. அதாவது பன்னாட்டுப் பொன் திட்டத்தின் கீழ் உள்ளதாக அழைக்கப்படுகிறது. இந்தியா ஸ்டெர்லிங் மண்டலத்தின் (Sterling area) உறுப்பு நாடாகையால் ஸ்டெர்லிங்குகளுடன் ரூபாய் தொடர்பு படுத்தப்பட்டுள்ளது. இந்திய ரூபாயின் ஸ்டெர்லிங் மதிப்பு 13·3 பென்னிகளாகும். இந்திய அந்நியச் செலாவணிகளின் பெரும் பகுதி ஸ்டெர்லிங் கிலேயே இருப்பதால் இந்திய ரூபாய், ஸ்டெர்லிங்குகளுக்கு ஒப்பாகவே விளங்குகிறது. இந்தியச் செலாவணித் திட்டம் உண்மையிலேயே ஸ்டெர்லிங் மாற்றுத் திட்டமாகும்.

**4. மாற்றுக் கட்டுப்பாடு :** அயல் நாட்டுச் செலாவணி வளங் களைப் பேணுவதற்கும் மிகுதியான மூலதனம் வெளிநாடுகளுக்குச் செல்லாமல் தடுப்பதற்கும் இந்தியா ஒரு சிக்கலான மாற்றுக் கட்டுப்பாட்டைக் கடைப்பிடித்து வருகிறது. இத் திட்டத்தின் படி அயல் நாட்டுச் செலாவணி நடவடிக்கைகள் யாவும் இந்திய ரிசர்வ் பாங்கினால் அனுமதிக்கப்பட்ட வணிகர்கள்மூலமாகவே நடைபெற வேண்டும். அவ்வப்போது நிலவக் கூடிய அளிப்பிற்

குகந்தவாறு அயல் நாட்டுச் செலாவணித் தேவையை வரையறுப்ப தற்காக அயல் நாட்டுச் செல்லுகளுக்குரிய நடவடிக்கைகள் கட்டுப்படுத்தப்படுகின்றன. இறக்குமதிகள் கட்டுப்படுத்தப்பட்டு இன்றியமையாமையற்ற சரக்குகளின் இறக்குமதிகள் அறவே தவிர்க்கப்படுகின்றன. அயல் நாட்டுச் செல்லுகளுக்குக் காரணமான அயல் நாட்டுச் சுற்றுலா, அயல் நாடுகளிக்கப்படும் நன்கொடைகள், இந்திய மாணவர்கள் கல்விக்காக அயல் நாடுகளுக்குச் செல்லுதல் முதலான நடவடிக்கைகள் யாவும் எச்சரிக்கையாக ஒழுங்குபடுத்தப்படுகின்றன. அயல் நாட்டுச் செலாவணி வருவாய்கள் அனைத்தையும் சரியாகக் கணக்கிட்டு அனுமதிக்கப்பட்ட வணிகர்களிடம் ஒப்படைப்பதற்காக ஏற்றுமதிகள் யாவும் கட்டுப்படுத்தப்படுகின்றன. முறையற்ற இறக்குமதிகள், மற்ற முறைகளாலும் அனுமதியில்லாமல் அயல் நாடுகளுக்கு மூலதனம் செல்வதைத் தடுக்கும் பொருட்டு வணிகப் பத்திரங்கள் யாவும் துருவிப் பார்க்கப்படுகின்றன. இந்தியக் குடிமக்களால் அயல் நாட்டு ஈடுகளின் கொள்முதல், விற்பனை கடுமையாகக் கட்டுப்படுத்தப்பட்டு அந்த ஈடுகளின் ஏற்றுமதி அறவே தடுக்கப்படுகிறது.

பன்னாட்டுப் பண நிதியின் உறுப்பு நாடாகையால் இந்தியா அதன் மாற்றுக் கட்டுப்பாட்டைப் படிப்படியாகக் குறைத்துப் பன் முகச் செல்லுகளுக்கு மாற்றி விட்டது. ஆனால் அயல் நாட்டுச் செலாவணியின் வேகமாக வளரும் தேவையும், அயல் நாட்டுச் செலாவணியின் குறைவான வருவாயும், கிடைக்கக்கூடிய அயல் நாட்டுச் செலாவணியை எச்சரிக்கையுடன் பயன்படுத்தும்படிச் செய்து மாற்றுக் கட்டுப்பாடு மேலும் சிறிது காலம் தொடர்ந் திருக்க வேண்டிய நிலையில் உள்ளது.

## இந்தியாவும், ஸ்டெர்லிங் மண்டலமும்
## (Sterling Area)

இந்தியப் பணத் திட்டத்தில் ஸ்டெர்லிங்குடன் ரூபாய்க்குள்ள பிணைப்பு மிகவும் உன்னதமான ஒரு சிறப்பியல்பாகும். ஸ்டெர்லிங்-ரூபாய்க்குள்ள சமநிலை மதிப்பு இரண்டு முறைகள் மாற்றப்பட்ட போதிலும் ஸ்டெர்லிங்கில் ரூபாய் ஒரு குறிப்பிட்ட நிலையான மதிப்புடையதாக இருக்கிறது. இந்தியாவின் பணத் திட்டக் கொள்கையானது எவ்விதமான விகிதத்திலும் ரூபாய்-ஸ்டெர்லிங் மதிப்பை வைத்திருப்பதாகும். ரூபாயை எளிதில் ஸ்டெர்லிங்குகளாக மாற்றலாம். ஸ்டெர்லிங் ஈடுகள் (Securities) இந்தியாவின் பண ஒதுக்கில் ஒரு பகுதியாகும். மற்ற

நாடுகளுக்குச் செல்லுகளைச் செலுத்துவதற்கு ஸ்டெர்லிங்குகளை இந்தியா பயன்படுத்துகிறது. ஏனென்றால் ரூபாயைவிட ஸ்டெர்லிங்குகளைத்தான் மற்ற நாடுகள் ஏற்றுக்கொள்கின்றன. ஆகவே ஸ்டெர்லிங் மண்டலத்தில் (Sterling area) இந்தியாவும் ஓர் உறுப்பு நாடாக விளங்குகிறது.

## இரண்டாம் உலகப் போருக்குமுன்

ஸ்டெர்லிங்குடன் உள்ள இந்தியாவின் தொடர்பு மிகவும் தொன்மையானது. முதல் உலகப் போருக்குமுன் இங்கிலாந்து பொன் திட்டத்தின்கீழ் இருந்தபோது 1925-லிருந்து 1931 வரை இங்கிலாந்து பவுண்டில் ரூபாய் ஒரு குறிப்பிட்ட மதிப்பு உடையதாக இருந்தது. 1931, செப்டம்பரில் இங்கிலாந்து பொன் திட்டத்தைக் கைவிட்டபோது இந்தியாவும் ரூபாய்க்குள்ள பொன் மதிப்பைவிடுத்து, ரூபாய் மதிப்பை ஸ்டெர்லிங்குடன் இணைத்தது. இவ்விகிதத்தில் இந்திய அரசு அளவற்ற ஸ்டெர்லிங்குகளை வாங்கி, விற்று ஸ்டெர்லிங் மண்டலத்தில் ஓர் உறுப்பு நாடாகியது.

1935-ல் இந்திய ரிசர்வ் பாங்கு ஏற்பட்டவுடன் இந்திய அரசிடமிருந்து பண நிர்வாகத்தை அப் பாங்கு எடுத்துக் கொண்டது. ஸ்டெர்லிங்கை ஒரு ரூபாய் = 1 ஷில்லிங், 6 பென்னிகள் என்ற விகிதத்தில் வாங்கி விற்பதே அப் பாங்கின் செயல்களில் ஒன்றாகும். ஸ்டெர்லிங்குகளே அதன் செலாவணி ஒதுக்கீட்டில் மிகுதியான பகுதியாகும். இவ்வாறு அது ஸ்டெர்லிங் மாற்றுத் திட்டத்தைக் கடைப்பிடித்து ஸ்டெர்லிங் மண்டலத்துடன் இந்தியாவுக்குள்ள தொடர்பு, பிணைப்பு வலுவடைந்தது.

## போர்க் காலம்

போர்க் காலத்தில் இந்தியாவுக்கும் மற்ற ஸ்டெர்லிங் மண்டலத்திலுள்ள உறுப்பு நாடுகளுக்கும் மிகுதியான பிணைப்பு ஏற்பட்டது. இங்கிலாந்து அதன் பெருவாரியான உற்பத்தி வளங்களை எல்லாம் போர்ச் செலவுகளுக்கே பயன்படுத்த வேண்டி இருந்தது. மற்ற நாடுகளிலிருந்து உணவுப் பொருள்கள், போர்த் தளவாடங்கள் முதலானவற்றை இறக்குமதி செய்யவேண்டியிருந்ததால் இந்தியாவுக்கும், ஸ்டெர்லிங் மண்டலத்திலுள்ள மற்ற உறுப்பு நாடுகளுக்கும் அனுப்பப்படும் ஏற்றுமதிகள் குறைக்கப்பட்டன. ஆகவே, இந்தியாவுக்கும் ஸ்டெர்லிங் மண்டலத்திலுள்ள மற்ற உறுப்பு நாடுகளுக்குமுள்ள ஸ்டெர்லிங்

வருவாய் மிகவும் அதிகரித்தது. மேலும் இந்தியாவும், ஸ்டெர்லிங் மண்டலத்திலுள்ள மற்ற உறுப்பு நாடுகளும் போர் மண்டலத்தின் கீழ் இருந்தன. ஆகவே, இந்தியாவிலுள்ள இங்கிலாந்துப் போர் வீரர்களுக்கு இந்தியா மிகுதியான செலவுகள் செய்ய வேண்டியிருந்தது. இங்கிலாந்துக்கும், இந்தியாவுக்கும் அப்போதுள்ள ஒப்பந்தத்தின்கீழ் அச் செலவீடுகள் அனைத்தும் ரூபாய்களிலேயே கொடுக்கப்படுவதாக இருந்தது. ஆனல் பின்னர் ஸ்டெர்லிங்குகளிலேயே இங்கிலாந்தால் திரும்பக் கொடுக்கப்பட்டது. இவ்வித ஸ்டெர்லிங்குகளின் ஒரு பகுதி நீண்ட கால ஸ்டெர்லிங் கடனைத் திரும்பயடைக்கப் பயன்பட்டபோதிலும் ஸ்டெர்லிங் வந்து குவிந்து கொண்டேஇருந்தது. 1949-ல் இந்தியாவிலுள்ள ஸ்டெர்லிங் இருப்பு 1,250 மில்லியன் பவுண்டுகள் அல்லது ரூ. 1,650 கோடி மதிப்புடையதாக இருந்தது.

போர்ச் செலவுகள் விலை உயர்வை ஏற்படுத்தியது. அனைத்துப் பொருள்களுக்குமுள்ள அரசுத் தேவை மிகுதியாகி அதே அளவு உற்பத்தி பெருகாததால் விலை மிகுதியாயிற்று. அரசுச் செலவுகளுக்கும் நாட்டின் பொருளாதார, சமூக, வாழ்க்கைச் செலவிற்கும் மிகுதியான பணம் தேவைப்பட்டது. ஸ்டெர்லிங் இருப்புக்களை வைத்துக்கொண்டு இந்திய ரிசர்வ் பாங்கு மிகுதியான காகிதப் பணத்தை வெளியிட்டது. ஆகவே, 1946-ல் ரூ. 1,250 கோடிகளுக்குத்தான் பணம் புழக்கத்திலிருந்தது. ஆனல், 1939-ல் இதன் அளவு ரூ. 179 கோடிகளாக இருந்தன.

ஸ்டெர்லிங் மண்டலத்தில் ஓர் உறுப்பு நாடாக விளங்குவது போல் இந்தியா 'மைய டாலர் திரட்டின்' (Central Dollar Pool) ஓர் உறுப்பு நாடாகத் திகழ்ந்தது. மற்ற உறுப்பு நாடுகளைப் போல் இந்தியா அதன் டாலர், மற்றும் கிடைப்பதற்கருமையாய் உள்ள செலாவணி வருவாய்களை எல்லாம் ஸ்டெர்லிங்குகளுக்கு மாற்ருக இம் மைய டாலர் திரட்டுக்குக் கொடுக்க ஒப்புக் கொண்டது. இதற்குப் பதிலாக இந்தியா அதற்குத் தேவையான கிடைப்பதற்கருமையாக உள்ள செலாவணிகளை இத் திரட்டிடம் இருந்து பெற்றுக்கொண்டது. ஆனல், மற்ற உறுப்பினர்களைப் போல் இந்தியாவும் ஸ்டெர்லிங் அல்லாத மற்ற செலாவணிகள் செலுத்த நேரிடும் புலனுகும், புலனுகா இறக்குமதிகளை முழுமையாகக் கட்டுப்படுத்தியது. மற்ற செலாவணிகளின் அதன் தேவை அதற்குகந்தவாறு கட்டுப்படுத்த இம்முறை பயன்பட்டது. ஸ்டெர்லிங் மண்டலத்திலிருந்து தடையற்ற இறக்குமதிகள் இருந்து வந்தால் ஸ்டெர்லிங் மண்டலத்திலுள்ள மற்ற நாடுகளுக்குரிய மூலதன மாற்றத்தைக்கூட இந்தியாவின் மாற்றுக் கட்டுப்பாடு சுருக்கிக் கொண்டது.

## போருக்குப் பிற்காலம்

பன்னாட்டுப் பண நிதி (International Monetary Fund) தொடங்கப்பட்டதிலிருந்தே இந்தியா அதன் உறுப்பு நாடாக இருந்து வந்திருக்கிறது. ஆகவே, சட்டப்படி அதன் செலாவணித் திட்டம் 'பொன் சமநிலைத் திட்டம்' (Gold Parity Standard) அல்லது 'பன்னாட்டுப் பொன் மாற்றுத் திட்டம்' (International Gold Exchange Standard) என்றழைக்கப்படுகிறது. அயல் நாடுகளில் பணம் செலுத்துவதற்கும், அயல் நாட்டுச் செல்லுகளின் பற்றுக்குறையைப் போக்குவதற்கும் பன்னாட்டுப் பண நிதியின் வளங்கள் பயன்படுத்தப்படுகின்றன.

பன்னாட்டுப் பண நிதியில் உறுப்பினராக இருப்பது ரூபாய்க்குள்ள ஸ்டெர்லிங் தொடர்பைப் பாதிக்கவில்லை. ஸ்டெர்லிங் மண்டலத்திலும் இந்தியா உறுப்பு நாடாகத் தொடர்ந்திருந்து கொண்டு வருகிறது. இந்தியாவின் பண மாற்றுத் திட்டத்தில் ரூபாய்—ஸ்டெர்லிங் விகிதமும் தொடர்ந்து சிறந்ததோர் இடத்தைப் பெற்றுக்கொண்டு வருகிறது. ரூபாய்—ஸ்டெர்லிங் விகித அடிப்படையிலேயே ரூபாயின் பொன் சமநிலை ஆரம்பத்தில் நிர்ணயிக்கப்பட்டு வந்தது. அதாவது ஒரு ரூபாயின் முகமதிப்பு 1 ஷில்லிங் 6 பென்னிகளுக்கு வாங்கக்கூடிய பொன்னின் மதிப்புக்கீடாக இருந்தது. 1949-ல் ஸ்டெர்லிங் மதிப்புக் குறைக்கப்பட்ட உடனே ரூபாயின் மதிப்பும் அதே விகிதத்தில் குறைக்கப்பட்டு ரூபாய்—ஸ்டெர்லிங் மாற்று விகிதம் ஜூன் 1961, நவம்பர் 1967 ஆகிய இரண்டு சமயங்களில் மாற்றியமைக்கப்பட்டது. இவ்விரண்டு செலாவணிகளுக்குமுள்ள மாற்று விகிதம் தற்பொழுது இந்தியப் பண அதிகாரிகளால் கட்டுப்படுத்தப்படுகிறது. இந்திய ரிசர்வ் பாங்கிடம் தற்பொழுது அயல் நாட்டு ஈடுகள்மட்டுமே ஸ்டெர்லிங் ஈடுகளாக உள்ளன. ஸ்டெர்லிங் மண்டலத்தின் உறுப்பு நாடாகையால் இந்தியா அதன் மாற்றுக் கட்டுப்பாட்டை, பிரிட்டனின் மாற்றுக் கட்டுப்பாட்டைப்போல் புதுப்பித்து அமைத்தது.

போருக்குப்பிறகு பல்வேறு காரணங்களுக்காக இந்தியா ஸ்டெர்லிங் மண்டலத்தில் தொடர்ந்து உறுப்பு நாடாக இருந்து வருகிறது. அதன் நலன்கள் :—

1. அயல் நாடுகளில் பணம் செலுத்துவதற்கு ஸ்டெர்லிங் பயன்படுகிறது. ஸ்டெர்லிங் மண்டலத்திற்குள் ஸ்டெர்லிங் தடையற்றுப் பயன்படுத்தப்படுகிறது. ஸ்டெர்லிங் மண்டலத்திற்கு

வெளியில் உள்ள நாடுகளுக்குக்கூட பணம் செலுத்துவதற்கு ஸ்டெர்லிங் ஓரளவு பயன்படுகிறது.

2. பிரிட்டனிலும், ஸ்டெர்லிங் மண்டலத்திலுள்ள மற்ற உறுப்பு நாடுகளிலும் இந்தியாவின் வணிகம் மிகுந்திருந்தது. ஆனால், தற்பொழுது ஓரளவு குறைந்துள்ளது. ஸ்டெர்லிங் இவ் வணிகச் செல்லுகளுக்கு மிகுதியாகப் பயன்படுத்தப்படுகிறது.

3. ஸ்டெர்லிங்குடன் உள்ள பிணைப்பு ரூபாய்க்கு நன்மதிப்பையும், வலுவையும் ஊட்டுகிறது. ஸ்டெர்லிங் மண்டலத்திற்கும் வெளியில் உள்ள நாடுகளின் எச்செலாவணிக்கும் ரூபாயை மாற்றமுடியாது. தொடர்ந்து இந்தியாவில் பாதக வணிக நிலை இருந்து வருவதால் ரூபாய் வலுவற்ற வெளி நாட்டினரால் ஏற்றுக்கொள்ளப்படாத செலாவணியாகும். ரூபாய் ஸ்டெர்லிங்காக மாற்றப்படுவதால் ஒரு நன்மதிப்பைப் பெறுகிறது.

4. ஸ்டெர்லிங் மண்டலம் முழுவதும் ஒன்றாகப் பிணைக்கப் பட்டுப் பண முறைகளில் கூட்டாகச் செயல்படுகிறது. உறுப்பு நாடுகளுக்கிடையே உள்ள தடையற்ற பண மாற்றம் மிகவும் பேருதவி அளிக்கிறது.

## அயல் நாட்டு மாற்றுக்களில் உள்ள சிக்கல்கள்

போருக்குப் பிற்காலத் தொடக்கத்திலிருந்து இந்திய அயல் நாட்டுச் செலாவணியில் சிக்கல்கள் இருந்து வந்திருக்கின்றன. போரின் முடிவு இறக்குமதிகளை அதிகரித்து ஏற்றுமதிகளைக் குறைத்ததால் பாதகமான அயல் நாட்டுச் செலுத்துநிலை ஏற்பட்டது. இரண்டாம் ஐந்தாண்டுத் திட்டம் புகுத்தப்பட்ட பின்னர் இந்நிலை மேலும் மோசமடைந்தது. மூன்றும் ஐந்தாண்டுத் திட்டம் இந்நிலையை மிகவும் கவலைக்கிடமாக்கிற்று. முன்னேற்றப் பொருளாதாரத்தில் முதலீட்டுச் செயல்களுக்கு அயல் நாட்டுச் செலாவணியின் நேரடித் தேவை அதிகரித்தது. நிலவிவரும் இறக்குமதிக்குக் கூடுதலாக மேலும் இவ்வாண்டுகளில் இறக்கு மதிகள் அதிகரித்தன. அதற்குகந்தாற்போல் ஏற்றுமதி அதிகரிக் காததால் பற்றுக்குறை அயல் நாட்டுச் செலுத்துநிலை உருவாயிற்று. ஐந்தாண்டுத் திட்டத்தை ஆரம்பித்த சில ஆண்டுகள்வரை போர்க் காலத்தில் குவிக்கப்பட்ட ஸ்டெர்லிங் இருப்புக்கள் பயன்படுத்தப்பட்டு வந்தன. இவை தீர்ந்தவுடன் அயல் நாட்டு உதவியையே நாடவேண்டியிருந்தது.

## திட்டக் காலங்களில் அயல் நாட்டுச் செலாவணித் தேவை

முன்னேறும் நாடுகளின் ஆரம்ப நிலைகளில் அயல் நாட்டுச் செலாவணிச் சிக்கல்கள் மிகவும் கடினமானவையே. இறக்குமதிகளுக்குத் தேவையான அதன் அயல் நாட்டுச் செலாவணியை அது பெருக்கிக் கொள்ளமுடியாது. அயல் நாட்டுக் கடன்கள், மானியங்களை மிகுதியாக்கிக்கொண்டுதான் அதன் முன்னேற்றத் திட்டங்களுக்கு அவற்றை அது பயன்படுத்திக் கொள்ளவேண்டும். ஐந்தாண்டுத் திட்டக் காலத்தில் இந்தியாவின் அயல் நாட்டுச் செலுத்துநிலை மோசமான நிலையை அடையவில்லை. அதாவது ஓரளவு அயல் நாட்டுச் செலாவணிதான் பயன்பட்டது. ஆனால், இரண்டாம் ஐந்தாண்டுத் திட்ட இரண்டாண்டிற்குள் அதன் அயல் நாட்டுச் செலாவணி இருப்பு ரூ. 418 கோடிக்குக் குறைந்து விட்டது. இதே நேரத்தில் அதன் ஸ்டெர்லிங் இருப்பு முழுவதும் தீர்ந்து குறைந்த அளவு இருப்புக்களைமட்டுமே அது பெற்றிருக்க நேரிட்டது. ஆகவே, இந்தியா அயல் நாட்டு உதவிகளையும் பன்னாட்டுப் பண நிதியின் வருவாய்களையும் அதன் அயல் நாட்டுச் செலாவணித் தேவையை நிரப்புவதற்கு நம்பியிருக்க வேண்டி இருந்தது.

## முதல், இரண்டாம் திட்டக் காலம்

இந்தியாவின் முதல் ஐந்தாண்டுத் திட்டம் ஓர் எடுத்துக் காட்டாகத்தான் இருந்தது. அதன் நேர்முக அயல் நாட்டு மாற்றுக்கள் ரூ. 400 கோடிகளாகும். இத் திட்டத்தின் முதலாண்டில் அதாவது 1951—52-ல் அயல் நாட்டுச் செல்லுகளின் பற்றுக்குறை ரூ. 234 கோடிகளாகும். ஆனால், நாளடைவில் விவசாய, தொழிற்சாலை உற்பத்தியால் இந் நிலைமை சரிக்கட்டப் பட்டது. இத் திட்டத்தின் மொத்த அயல் நாட்டுச் செல்லுகளின் பற்றுக்குறை ரூ. 318 கோடிகள்தான். இவற்றில் ரூ. 186 கோடிகள் அயல் நாட்டு நிதியுதவியாலும், ரூ. 122 கோடிகள் அயல் நாட்டுச் செலாவணி இருப்புக்களின் பண விடைகளாலும் சரிக்கட்டப்பட்டன.

இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டக் காலம் மிகவும் நெருக்கடியானது. இத் திட்டக் காலத்தின் மொத்த அயல் நாட்டுச் செல்லுகளின் பற்றுக்குறை ரூ. 1,100 கோடிகளாக மதிப்பிடப்பட்டது. இவற்றில் ரூ. 200 கோடிகள் ஸ்டெர்லிங் இருப்புக்களால் சரிக்கட்டப்படும் என்று எதிர்பார்க்கப்பட்டது. ஆனால், ஆரம்பத்

திலிருந்து நிலைமை வேறு முறையில் சென்று எதிர்பார்த்ததைவிட இறக்குமதிகள் மிகுதியாயின. இரண்டாண்டுக்குள் அயல் நாட்டு மாற்றுக்களின் வளங்கள் ரூ. 481 கோடிகளாகக் குறைந்தன. ஆகவே, திட்டத்தின் அளவு 1958-ல் குறைக்கப்பட்டு முதலீடுகள் மிக முக்கியமான திட்டங்களுடன் நிறுத்திக் கொள்ளப்பட்டன. ஆகவே, அயல் நாட்டுச் செல்லுகளின் நிலை முன்னேற்ற மடைந்தது. இரண்டாம் ஐந்தாண்டுத் திட்டத்தின் மொத்த அயல் நாட்டுச் செலாவணியின் பற்றுக்குறை ரூ. 2,059 கோடி களாகும். இதில் ரூ. 598 கோடிகள் அயல் நாட்டு மாற்றுக்களின் இருப்புக்களாலும், ரூ. 55 கோடிகள் பன்னாட்டுப் பண நிதியாலும், ரூ. 1,406 கோடிகள் அயல் நாட்டு உதவிகளாலும் சரிக் கட்டப்பட்டது.

இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்தின் தேவைகள் இந்தியாவின் அயல் நாட்டு மாற்றுக்களின் இருப்பை மிகவும் குறைவடையச் செய்தது. இந்திய ரிசர்வ் பாங்கின் தாள் பண வெளியீட்டுத் துறையின் அயல் நாட்டு ஈடுகளின் இருப்பு 1955—56-ல் ரூ. 456·42 கோடிகளாக இருந்தன. ஆனால், அது 1961, மார்ச் 31-ல் ரூ. 123·01 கோடிகளாகக் குறைந்து விட்டது. 1956, இந்திய ரிசர்வ் பாங்கு சட்டத் திருத்தத்தால் இப் பாங்கின் அயல் நாட்டு ஈடுகளின் குறைந்த அளவு ரூ. 400 கோடிகளாகவும், பொற்காசு, பொற் குவியல்களும் ரூ. 115 கோடி களாகவும் இருத்தல் வேண்டும். ஆனால், அயல் நாட்டு மாற்றுக் களின் வளங்கள் மிகவும் குறைந்து விட்டதால் மற்றொரு சட்டத்தின் விளைவாக இந்திய ரிசர்வ் பாங்கு வெளியீட்டுத் துறையின் குறைந்த அளவு பொற்காசு, பொற்குவியல், அயல் நாட்டு ஈடுகளின் மொத்த இருப்புக்கள் ரூ. 200 கோடிகளாகக் குறைக்கப்பட்டு, இவற்றில் பொற்காசு, பொற்குவியலின் மொத்த இருப்பு ரூ. 115 கோடிகளாகவும் இருக்கவேண்டும். ஆகவே அயல் நாட்டு மாற்றுக்களின் இருப்பு மிகவும் முக்கியமாகக் கருதப்படவில்லை.

## மூன்றும் ஐந்தாண்டுத் திட்டமும், அதற்குப் பின்னரும்

மூன்றும் ஐந்தாண்டுத் திட்டக் காலத்தின் மொத்த இறக்குமதி ரூ. 5,750 கோடிகள் என்று மதிப்பிடப்பட்டது. இவற்றில் இயந்திர, தளவாடங்களின் இறக்குமதி ரூ. 1,900 கோடிகளாகக் கணக்கிடப்பட்டது. மூலதனப் பொருள்களை உற்பத்தி செய்யும் செலவுகள் ரூ. 200 கோடிகளாகவும்,

இறக்குமதிச் செலவுகள் ரூ. 3,650 கோடிகளாகவும் கணக்கிடப் பட்டன. இறக்குமதியின் மொத்த வரவு, செலவுக் கணக்கு ரூ. 5,750 கோடிகளாகக் கணக்கிடப்பட்டது. இதற்கு ஏற்றுமதி வருவாய் ரூ. 3,700 கோடிகளாகக் கணக்கிடப்பட்டது. இவற் றுடன் மூலதன நடவடிக்கைகள் கணக்கில் அயல் நாட்டு மாற்றுக் களின் தேவை ரூ. 550 கோடிகள் சேர்க்கப்பட்டன. இதில் சிந்துநதி நீர் ஒப்பந்த ஏற்பாட்டின்படி (Indus Water Treaty Agreement) பாகிஸ்தானுக்குச் செலுத்தக்கூடிய கடன்களும் சேர்க்கப் பட்டன. இவ்வாறு மொத்தச் செல்லுகளின் பற்ருக்குறை ரூ. 2,600 கோடிகளாக எதிர்பார்க்கப்பட்டது. மூன்ரும் ஐந்தாண்டுத் திட்டக் காலத்தில் இதுதான் அயல் நாட்டு உதவியின் அளவாகும்.

இந்த ஐந்தாண்டுத் திட்டக் காலத்தில் அயல் நாட்டுச் செல்லுகளின் மொத்தத் தொகை 1961—62-லிருந்து 1965—66 முடிய வேறுவிதமாக இருந்தது. வணிக நிலையின் மொத்தப் பற்ருக்குறை ரூ. 2,484 கோடிகளாக இருந்தது. ஆனல் புலனுகாச் சாதக வணிக நிலைக் கணக்கில் ரூ. 432 கோடிகள் இருந்தன. ஆகவே நடப்பு அயல் நாட்டுச் செல்லுகளின் பற்ருக்குறை ரூ. 2483—ரூ. 432=2052 கோடிகள் ஆகும். இந்த இடைவெளி முழுவதும் அயல் நாட்டு வளங்களான கடன்கள், மானியங்கள், பன்னுட்டுப் பண நிதி (International Monetary Fund) புனரமைப்பும் வளர்ச்சிக்குமான பாங்கிலிருந்து (International Bank for Reconstruction and Development) எடுப்பு முதலிய வற்ருல் சரிக்கட்டப்பட்டது. ஆகவே, அயல் நாட்டு மாற்றுக் களுக்காகக் குறைவான அளவே பண விடைகள் அனுப்பப் பட்டன.

மூன்ரும் ஐந்தாண்டுத் திட்டக் காலத்திற்குப் பிந்திய இரண்டு ஆண்டுக் காலங்களில் புலனுகாக் கணக்கின் நிகர இருப்பு நிலை பாதகமாகவே (1966—'67, 1967—'68) இருந்தது. அயல் நாட்டுச் செல்லுகளின் பற்ருக்குறை பாதக வணிக நிலையின் இடைவெளியைவிட மிகுதியாகவே இருந்தது. நடப்பு அயல் நாட்டுச் செல்லுகளின் மொத்தப் பற்ருக்குறை இவ்விரண் டாண்டுக் காலங்களில் ரூ. 1,617 கோடிகளாகவே இருந்தது. மூல தனக்கணக்கில் உள்ள செல்லுகளின் இருப்பு, நடப்புக் கணக்கின் பற்ருச்குறையைவிட மிகுதியான உபரியையே காண்பித்தது. மூலதன நிகர இறக்குமதிகள் ரூ. 1,687 கோடிகளாகும். அயல் நாட்டு மாற்றுக்களின் இருப்புக்கு இவ்வாறு செல்வாக்கு மிகுதியா யிற்று. நடப்பு இருப்பின் பற்ருக்குறை 1968, ஏப்ரலிலிருந்து

1969, டிசம்பர் 31 முடிய ரூ. 492 கோடிகளாக மதிப்பிடப் பட்டது. இப் பற்றுக்குறை ரூ. 692 கோடி மதிப்புடைய மூலதனப் பொருள்கள் இறக்குமதியின்மூலம் சரிக்கட்டப்பட்டது. இக்காலத்தில் அயல் நாட்டு மாற்றுக்களின் இருப்பு ரூ. 430 கோடி களாகவும் அதிகரித்தது. நட்பு நாடுகளின் உதவிகளால் நமக்குப் பேருதவி கிடைத்தது. 1970, ஜனவரி 1-ல் பன்னாட்டுப் பண நிதி (I.M.F.) ஒதுக்கப்பட்ட ரூ. 92 கோடிகளால் அயல் நாட்டு மாற்றுக்களின் இருப்பு மேலும் வலுவடைந்தது.

## அயல் நாட்டு மாற்று நிலையின் காரணிகள்

முன்னேற்ற நாடுகளின் அயல் நாட்டு மாற்றுக்களின் தேவை முற்போக்குத் திட்டங்களுக்கான மூலதனப் பொருள்களின் இறக்குமதிகளால் அதிகரித்தது. பொருளாதாரம் வளர, வளர மற்ற பொருள்களின் இறக்குமதிகளும் பெருகும். இறக்குமதி களுக்கு மிகுந்த கட்டுப்பாடுகள் இருந்த போதிலும் அனேக பொருள்கள் இறக்குமதி செய்யப்பட்டன. உற்பத்தி பெருகிய போதிலும் அதன் தேவை அந்த உற்பத்தியைவிட மிகுதியாய் இருப்பதால் அப் பொருள்களின் தேவை அவற்றின் அளிப்பைவிட மிகுதியாய் இருக்கிறது. சில பொருள்களுக்குரிய தேவைகள் மட்டும் நீண்டகாலத்தில் அவற்றிற்குரிய மாற்றுப் பொருள்களை இறக்குமதி செய்வதன்மூலம் சரிக்கட்ட முடியும். உள்நாட்டு உற்பத்தி எதிர்பார்த்த அளவு எய்திய போதிலும் அப் பொருள்களின் இறக்குமதி தொடர்ந்து அதிக அளவில் நிகழ்ந்து கொண்டிருக்கும். இக் காரணிகள் அனைத்தும் இந்தியாவில் மிகுந்த அளவில் செயல் பட்டுக் கொண்டிருக்கின்றன. இத்துடன் இந் நாட்டின் உணவுத் தேவை முழுவதும் உள்நாட்டு உற்பத்தியின்மூலம் சரிக்கட்டப் படவில்லை. இரண்டாம் உலகப்போருக்குப் பிறகு நாட்டில் உள்ள பற்றுக்குறை மிகுதியாக ஒவ்வொரு ஆண்டின் மொத்த இறக்குமதியில் உணவு இறக்குமதி உன்னத இடத்தை வகிக்கிறது. 1962-ல் சீனத் தாக்குதலுக்குப்பிறகு இந்தியாவின் போர்த் தளவாடங்கள், போர்த் தளவாடத் தொழிற்சாலைகளின் தேவையும் மிகுதியாயிற்று. இக் காரணிகள் அனைத்தும் அனைத்துப் பொருள்களின் இறக்குமதியை மிகுதியாக்கி அயல் நாட்டு மாற்றுத் தேவைகளையும் மிகுதியாக்கிற்று.

ஒரு நாட்டின் ஏற்றுமதிகள், இறக்குமதிகளில் உள்ள அதே விகிதத்தில் மிகாது. வழக்கமான தேயிலை, காபி, பஞ்சு, சணல் போன்ற ஏற்றுமதிகளின் அளவு மொத்த ஏற்றுமதி அளவில் பாதிப்பங்கு பெற்றிருந்தபோதிலும் அவற்றின் தேவை நெகிழ்ச்சி

அற்றதாகவே இருக்கின்றன. மேலும் அனேக ஏற்றுமதிப் பொருள்கள் மற்ற நாட்டுப் பொருள்களுடன் போட்டியிட வேண்டியநிலையில் இருக்கின்றன. பல முனைகளிலும் ஏற்றுமதியைப் பெருக்கிப் புதிய அங்காடியைப் பிடிப்பதற்கு முயன்றாலும் திட்டக் காலங்களில் முன்னேறும் நாடுகள் அவற்றின் இறக்குமதி அளவுக்கு ஏற்றுமதியைப் பெருக்குவது என்பது இயலாததாகும். ஆகவே, அயல் நாட்டுச் செல்லுகள் பற்றுக்குறையும், அயல் நாட்டு மாற்றுக்களின் பற்றுக்குறையும் பொருளாதாரத்தை மிகவும் பாதித்தது. முன்னர் கூறியதுபோல் உலகப் போரின்போது குவிந்த அயல் நாட்டு மாற்றுக்களின் (ஸ்டெர்லிங்) இருப்புக்கள் முதல் ஐந்தாண்டுத் திட்டக் காலத்திற்கும், இரண்டாம் ஐந்தாண்டுத் திட்டத்தின் முற்பகுதியிலும் பயன்பட்டன. இரண்டாம் ஐந்தாண்டுத் திட்டத்தின் இரண்டாம் ஆண்டிற்குப் பிறகு அயல் நாட்டு மாற்றுத் தேவைகளை நிறைவேற்றத் தகுந்த இருப்புக்கள் இல்லை. ஆகவே நட்பு நாடுகளின், பன்னாட்டு நிறுவனங்களின் உதவிகளும், அயல் நாட்டுத் தனியார் முதலீடுகளும்தான் இந்திய அயல் நாட்டு மாற்றுகளுக்குப் பெருந் துணைபுரிந்தன. அயல் நாட்டு மாற்றுக்களின் பற்றுக்குறையானது நாட்டுக்குத் தேவையான இன்றியமையாப் பொருள்களையும், கருவிகளையும் வாங்கும் திறனைக் குறைத்துப் பொருளாதார முன்னேற்றத்தை மிகவும் பாதித்தது.

## ஏற்றுமதிப் பெருக்கம்
## (Export Promotion)

நாட்டின் அயல் நாட்டு மாற்றுத் தேவைகளின் வளர்ச்சியானது அரசின் சுறுசுறுப்பான ஏற்றுமதிக் கொள்கைகளுக்கு வித்திட்டது. ஆரம்பத் திட்ட முன்னேற்றக் காலங்களில் மாற்றுக் கட்டுப்பாட்டுத் திட்டத்தின் அடிப்படையில் ஏற்றுமதிகளின்மேல் கட்டுப்பாடுகள் விதிக்கப்பட்டன. முதல் ஐந்தாண்டுத் திட்டக் காலத்தில் பங்குவீத முறைகள் (quota system) அளிக்கப்பட்டன. ஏற்றுமதி வணிகம் தளர்த்தப்பட்டு ஏற்றுமதிகளைத் தூண்டுவதற்கு விலைகளும் குறைக்கப்பட்டன. இரண்டாவது திட்டக் காலத்தில் அயல் நாட்டு மாற்றுக்களின் தேவை மிகவும் கடினமாகி ஏற்றுமதி முன்னேற்றம் மிகவும் இன்றியமையாததாகியது. ஏற்றுமதிக் கட்டுப்பாடுகள் தளர்த்தப்பட்டு அனேக பொருள்கள் அக் கட்டுப்பாட்டிலிருந்து நீக்கப்பட்டன. ஏற்றுமதி வரிகள் குறைக்கப்பட்டுத் தயாரிப்பாளர்களுக்கும், ஏற்றுமதியாளர்களுக்கு அனேக சலுகைகள் அளிக்கப்பட்டன. மூன்றாவது

ஐந்தாண்டுத் திட்டமும் ஏற்றுமதித் தேவையை உணர்ந்து அதன் வளர்ச்சிக்கு வேண்டிய நடவடிக்கைகள் எடுத்தது. இதுவரையில் அதற்குரிய நடவடிக்கைகள் எடுக்கப்பட்டு அதற்குரிய நிறுவனங் களும் தோற்றுவிக்கப்பட்டன, அரசுக் கொள்கையில் ஏற்றுமதி முன்னேற்றம் ஒரு சிறந்த பகுதியாகும்.

## ஏற்றுமதி முன்னேற்றத்திற்குரிய தூண்டுகோல்கள்

அண்மைக் காலத்தில் ஏற்றுமதி முன்னேற்றத்திற்கு அனேக நடவடிக்கைகள் மேற்கொள்ளப்பட்டன. ஒரு சில பொருள் களைத்தவிர மற்ற அனைத்துப் பொருள்களுக்கும் ஏற்றுமதிக் கட்டுப் பாடுகள் தீர்க்கப்பட்டன. அச் சில பொருள்களுக்குக்கூட ஏற்றுமதிக் கட்டுப்பாடு தொடர்ந்திருக்கலாமா அல்லது தீர்க்கப்படலாமா என்று பரிசீலிக்கப்பட்டது. இவற்றிற்குக் கூடுதலாகப் பல பொருள்களுக்குள்ள ஏற்றுமதியைப் பெருக்கு வதற்கு உறுதியான தூண்டுகோல்கள் அளிக்கப்பட்டன.

(i) அனேக பொருள்களுக்கு ஏற்றுமதி வரிகள் தீர்க்கப் பட்டன. தேயிலைக்கு ஏற்றுமதி வரி படிப்படியாகக் குறைக்கப் பட்டு அறவே நீக்கப்பட்டது. ஆனால் ஜுன், 1966-ல் ரூபாய் மதிப்புக் குறைக்கப்பட்டபோது மீண்டும் சில பொருள்களுக்கு ஏற்றுமதி வரிகள் விதிக்கப்பட்டன.

(ii) ஏற்றுமதிப் பொருள்களைத் தயாரிப்பதற்குரிய கச்சாப் பொருள்களின் இறக்குமதி வரியை நீக்கி உற்பத்தி வரியும் திரும்ப அளிக்கப்பட்டது.

(iii) அங்காடி முன்னேற்ற நிதி (Marketing Development Fund) ஒன்று ஜுலை, 1963-ல் தொடங்கப்பட்டது. ஏற்றுமதி முன்னேற்றக் குழுக்களுக்கு (Export Promotion Councils) மானியம் அளிப்பதற்கும் அயல் நாட்டுச் சந்தைகளில் இந்திய ஏற்றுமதிப் பொருள்களுக்குத் தகுந்த திட்டங்களின் அடிப் படையில் நிதியுதவி அளிப்பதற்கும் மைய வரவு, செலவுக் கணக்கில் ஒரு குறிப்பிட்ட அளவு நிதி ஒதுக்கப்பட்டது.

(iv) ஏற்றுமதியாளர்களுக்கு நேரடி வரிச் சலுகை அளிக்கப் பட்டது.

(v) ஏற்றுமதிப் பொருள்களைத் தயாரிக்கும் தொழிற் சாலைகளுக்குக் கச்சாப் பொருள்கள் தொடர்ந்து கிடைப்பதற்காக அப் பொருள்களுக்குரிய இறக்குமதி வரிகளும் நீக்கப்பட்டன.

(vi) ஏற்றுமதியைப் பெருக்குவதற்காகவும், இன்றியமையாத கச்சாப் பொருள்களை இறக்குமதி செய்வதற்காகவும் ஏற்றுமதியாளர்கள் தாங்கள் ஈட்டிய அயல் நாட்டுச் செலாவணியின் ஒரு பகுதியைத் தாங்களே இருத்திக் கொள்ளலாம். ஆனால் இம்முறை 1966-ல் கைவிடப்பட்டது.

(vii) புகைவண்டியின்மூலம் ஏற்றுமதிப் பொருள்களை ஏற்றி அனுப்புவதற்கு முதலிடம் அளிக்கப்பட்டுக் குறிப்பிட்ட புகைவண்டி நிலையங்களுக்கிடையே புகைவண்டிக் கட்டணத்திலும் சலுகை அளிக்கப்பட்டது.

(viii) சரக்குக் கூலிக் கப்பல் சத்த ஆய்வு அலுவலகம் (Freight Investigation Bureau) ஒன்று, கப்பலைப் பற்றிய சிக்கல்களை ஆராயும் பொருட்டுப் பம்பாயில் கப்பல் பொதுத் தலைமை இயக்குநர் அலுவலகம் (Office of the Director General of Shipping) ஒன்று தோற்றுவிக்கப்பட்டது.

(ix) ஏற்றுமதியாளர்களுக்குரிய கடன் சலுகைகள் இந்திய பாங்குகளால் மிகுதிப்படுத்தப்பட்டன. 1966, ஏப்ரலில் இக் கடன் சலுகைகளை ஆராயும் பொருட்டுக் குழு ஒன்று நியமிக்கப் பட்டு மிகுதியான பரிந்துரைகளை அனுப்பிற்று. இவற்றில் அனேக பரிந்துரைகள் செயல்படுத்தப்பட்டன.

(x) ஏற்றுமதியாளர்களின் இன்னல்களைத் தவிர்ப்பதற்கும், வீண் நேரத்தைக் குறைப்பதற்கும் ஏற்றுமதி நடவடிக்கைகள் எளிதாக்கப்பட்டன. இவ்வாறு ஏற்றுமதி விரைவாக்கப்பட்டது.

(xi) ஒரு நாட்டின் ஏற்றுமதிப் பொருள்கள் வேண்டிய தன்மைகளில் இருக்கின்றன என்பதை உறுதிப்படுத்தும் பொருட்டு 1963-ல் ஏற்றுமதிச் (தன்மை, கட்டுப்பாடு, ஆய்வு) சட்டம் பிறப்பிக்கப்பட்டது. சரக்கின் தன்மையை உறுதிப்படுத்துவதற்கும் சரக்குகளைக் கப்பலில் ஏற்றுவதற்குமுன் ஆய்வதற்கும் இச் சட்டம் வகை செய்கிறது. மூன்றாவது ஐந்தாண்டுத் திட்ட இறுதிக்குள் 80 சதவிகித ஏற்றுமதிச் சரக்குகள் இச் சட்டத்தின் அடிப்படையில் சரிபார்க்கப்பட்டன.

## ஏற்றுமதிப் பெருக்கத்திற்கு மேலும் கருத்தெரிவித்தல்

மேற்சொன்ன நடவடிக்கைகளுக்கும் மேலாக ஏற்றுமதி முன்னேற்றத்திற்காகச் சில நடவடிக்கைகள் மேற்கொள்ளப் பட்டிருக்கின்றன. நான்காம் ஐந்தாண்டுத் திட்டக் காலத்தில்

கீழ்க்கண்ட நடவடிக்கைகள் எடுக்கப்பட வேண்டுமென்று அத் திட்டத்தில் தீட்டப்பட்டிருக்கிறது.

1. ஏற்றுமதியில் தகுந்த ஆதாயம் பெறும்பொருட்டு ஏற்றுமதிப் பொருள்களுக்குரிய உற்பத்தி, முதலீடுகளின் இலக்குகளை இத் திட்டம் குறிப்பிடுகிறது. இந்த இலக்குகளை அடைவதற்குரிய தேவைகளையும், அவை சார்ந்த புதுத் தொழிற்சாலைகளுக்கு அனுமதி அளிக்கக்கூடிய குறிக்கோளையும் இத் திட்டம் வலியுறுத்துகிறது.

2. இந்த ஏற்றுமதிப் பொருள்களின் உள்நாட்டு மிகுதிப் பயன்பாட்டைத் தடுப்பதும் அதற்குரிய நடவடிக்கைகளை மேற் கொள்வதும் அவசியமாகும்.

3. இந்தியப் பொருள்கள் அயல் நாட்டுப் பொருள்களுடன் விலையிலும் தரத்திலும் தகுந்த போட்டியுடையதாக இருந்தால் தான் இந்தியத் தயாரிப்புப் பொருள்களின் ஏற்றுமதி பெருகும். ஆகவே, வேலைப்பகுப்பு முறைகள், சிறந்த அமைப்பு, தகுந்த தொழில் முறைகள்மூலமாக உற்பத்தித் திறனைப் பெருக்குதல் அவசியமாகும். உலோக, இரசாயனத் தொழில்களில் மிகுந்த சக்தியுடைய ஏற்றுமதிகளைப் பெருக்கலாம்.

4. இத் துறையில் உற்பத்திப் பொருள்களைப் பெருக்குவதற்குத் தனிப்பட்ட நிறுவனங்களை ஏற்படுத்தலாம் என இத் திட்டம் கூறுகிறது. இந் நிறுவனங்கள் தொழில் துறையில் புதுமையாகவும் அமைப்பு முறையில் திறனுள்ளதாகவும் இருத்தல் வேண்டும். இந் நிறுவனங்கள் பொதுவாகப் பொதுத்துறையிலும் தகுந்த உற்பத்தி நிர்வாகத்தை அமைத்துக் கொண்டு அயல் நாடுகளில் தங்கள் விற்பனைக் கிளைகளை அமைத்துக் கொள்ள வேண்டும்.

5. ஏற்றுமதிப் பெருக்கத்திற்கு வெவ்வேறுவித உற்பத்தியும் அதன் அகன்ற, பரந்த சந்தைகளும் தேவை. ஏற்றுமதியாளர்கள், வணிகர்கள் அயல் நாடுகளில் சுற்றுலாச் செல்வதற்கும், அயல் நாடுகளில் விற்பனைப் பெருக்கம், அந் நாடுகளில் அலுவலகங்களையும், விற்பனைக் கடைகளையும் தொடங்கும் பொருட்டு, ஏற்றுமதிச் சந்தைகள் அயல் நாட்டுச் செலாவணிகளை ஒதுக்கிக் கொடுக்கவேண்டும்.

6. ஏற்றுமதியானது கச்சாப் பொருள்கள், இடைப் பொருள்கள், இணைப்புப் பொருள்களின் பற்றுக்குறையால்

பாதிக்கப்படக்கூடாது. இப் பொருள்களின் இறக்குமதிகள் பொதுவாக அனுமதிக்கப்பட்டிருக்க வேண்டும்.

7. இவை தவிர்த்துக் குறிப்பிட்ட பொருள்களுக்கு உகந்த குறிப்பிட்ட நடவடிக்கைகள் எடுக்கப் படவேண்டும்.

நான்காம் ஐந்தாண்டுத் திட்டத்தில் சொல்லப்பட்ட நடவடிக்கைகளுடன் கீழ்க்கண்ட நடவடிக்கைகளும் ஏற்றுமதிப் பெருக்கத்திற்கு எடுக்கப்படலாம்:

1. இந்தியப் பொருள்களின் அதிக உற்பத்திச் செலவுகள் அதன் ஏற்றுமதிகளுக்கு ஒரு தடையாகும். நிர்வாகத்திலும், செயல் முறையிலும் முன்னேற்றம் கண்டால் உற்பத்திச் செலவுகளைக் குறைக்கலாம். உலக விலைகளோடு இந்திய விலைகளையும் ஒருமுகமாகக் கொண்டுவர மிகுந்த முயற்சிகளில் ஈடுபட வேண்டும்.

2. பன்னாட்டுச் சந்தைகளிலும், கண் காட்சிகளிலும், இந்தியா பங்கெடுத்துக் கொள்கிறது. இவ்வாறு பங்கெடுத்துக் கொள்வதால் இந்தியப் பொருள்களுக்குத் தகுந்த விளம்பரங்களும், உகந்த பின் நடவடிக்கைகளும் இருந்தால்தான் இந்தியச் சரக்குகளுக்கு அயல் நாட்டினரிடமிருந்து மிகுந்த ஆணை (order) கிடைக்கும்.

3. ஏற்றுமதியாளர்களுக்கு ஏற்றுமதியைப் பெருக்கத் தூண்டுவதற்குரிய ஏற்றுமதி அங்காடிகளின் தகவல்கள் தெரிந்திருக்கவேண்டும். அதாவது, அயல் நாடுகளில் இறக்குமதி செய்யக் கூடியவர்கள், அயல் நாட்டுச் சந்தைகளில் இந்தியப் பொருள்களின் தேவை, அங்கு எவ்வளவில் சரக்குகள் தேவைப்படுகின்றன போன்றவற்றை அயல் நாடுகளில் இருக்கும் இந்திய வணிகக் குழுவின் (Indian Trade Commission) மூலம் அறிந்து கொள்ளலாம்.

4. ஏற்றுமதி நிறுவனங்கள் அயல் நாடுகளில் அலுவலகங்களைத் தொடங்கப் பயிற்சி பெற்ற பணியாளர்களை நியமித்தல் வேண்டும்.

## நிறுவனத் திட்ட வேலை
## (Institutional Frame Work)

ஏற்றுமதிப் பெருக்கத்தைச் சிறந்த முறையில் செயல்படுத்துவதற்கு இந்தியா சிறந்த நிறுவனத் திட்ட வேலைகளை மேற்கொண்டுள்ளது.

1. பன்னாட்டு வணிகத் துறை: 1962-ல் வணிக அமைச்சகத்தில் பன்னாட்டு வணிகத் துறை புதிதாகத் தொடங்கப்பட்டது. வணிகத்திலுள்ள அனைத்து நடவடிக்கைகளையும் ஆராய்ந்து இந்திய அரசுக்கு ஏற்றுமதிப் பெருக்கத்தைப்பற்றிப் பரிந்துரைக்க வணிக உயர்மட்டக் குழு ஒன்று அமைக்கப்பட்டது. ஏற்றுமதிப் பொருள்களுக்குரிய ஏற்றுமதித் திட்டங்கள், இலக்குகள், உற்பத்திச் செலவுகள் குறைப்பு முதலானவை அனைத்தையும் இப் பன்னாட்டு வணிகத் துறை தீட்டியது. இக் குழு இந்திய ஏற்றுமதிகளுக்குப் பொருள் வாரி, நாட்டு வாரியாகக் கருத்துரை அளித்தது.

பயிற்சி, ஆராய்ச்சி, அங்காடிப் படிப்பு முதலானவற்றை நடத்தும் பொருட்டுத் தன்னாட்சிக்கீழுடைய இந்திய அயல் நாட்டு வணிகக் கழகம் ஒன்று தொடங்கப்பட்டது.

2. ஏற்றுமதி (பெருக்க) முன்னேற்ற அறிவுரைக் குழு (Export Promotion Advisory Council): இக் குழு தொழில், வர்த்தகத் தலைவர்களை உறுப்பினர்களாகக் கொண்டு, தொழில் வர்த்தக அமைச்சரால் தலைமை வகிக்கப்பட்டு ஏற்றுமதி முன்னேற்றத்திற்கு எடுக்கப்பட்டிருக்கும் நடவடிக்கைகள் யாவும் போதுமானதா பயனுடையதா என்று கலந்தாலோசிக்கும் இடமாக அமைக்கப்பட்டிருக்கிறது. ஒவ்வோர் ஆண்டிற்கும் அரசு மேற்கொண்டிருக்கும் ஏற்றுமதிக் கொள்கைகளுக்கு இக் குழு கருத்தறிவிக்கிறது.

3. வணிகர்களை உறுப்பினர்களாகக் கொண்ட வட்டார ஏற்றுமதி முன்னேற்றப் பரிந்துரைக் குழுக்கள் (Regional Export Promotion Advisory Committees): வெவ்வேறு வட்டாரங்களிலிருந்து ஏற்றுமதி செய்யப்படும் சரக்குகளைப்பற்றி நன்றாக ஆய்ந்து அவ் வட்டாரத்தில் அந்த ஏற்றுமதிகளுக்குரிய சிக்கல்களை எடுத்துரைக்கும் பொருட்டுச் சென்னை, பம்பாய், கொச்சி முதலிய இடங்களில் இவை அமைக்கப்பட்டன. இக் குழுக்கள் அரசுக்கும், வணிகர்களுக்கும் இடைநிலையாளர்களாக இருந்து கொண்டு குறிப்பிட்ட ஏற்றுமதியாளர்களுக்கு ஏற்படும் இன்னல்களை நிவர்த்திக்கிறது.

4. ஏற்றுமதி முன்னேற்றக் குழு (Export Promotion Council): ஏராளமான தலைசிறந்த ஏற்றுமதிப் பொருள்களுக்காக இக் குழுக்கள் அமைக்கப்பட்டன. ஏற்றுமதி முன்னேற்றத்திற்குரிய அங்காடி ஆராய்ச்சிகள், வணிகத் தூதுக்குழு, கண்காட்சிகள், விளம்பரங்கள், தரக்கட்டுப்பாடுகள் முதலியனபற்றி அரசு, உள்ளாட்சிப் பொது நிர்வாகத்தினருக்குப் பரிந்துரை வழங்குவதே இக் குழுக்களின் செயல்களாகும்.

சில பொருள்களின் உற்பத்தி, ஏற்றுமதிகளைப் பெருக்கத் தனிப்பட்ட 'சரக்குக் கழகங்கள்' (Commodity Board) தேயிலை, காபி, கயிறு முதலியவற்றிற்காக அமைக்கப்பட்டுள்ளன.

5. ஏற்றுமதி இடர்க் காப்பீட்டுக் கழகம், ஏற்றுமதிக் கடன், உத்தரவாதக் கழகம் (Export Risks Insurance Corporation and Export Credit and Guarantee Corporation): ஏற்றுமதிகளைத் தூண்டும் பொருட்டு 'ஏற்றுமதி இடர்க் காப்பீட்டுக் கழகம்' (Export Risks Insurance Corporation) ஏற்படுத்தப்பட்டது. கடன் தவணையில் ஏற்றுமதி செய்யப்படும்போது ஏற்படும் இடர்களுக்குக் காப்பீடு அளிப்பதே இக் கழகத்தின் நோக்கமாகும். சரக்கு வாங்குபவர் கடனைத் திருப்பித் தராமல் காலம் கடத்தல், திவாலாதல், அரசியல் இடர்கள், உள்நாட்டுப் போர்கள், அயல் நாட்டுப் போர்கள், இறக்குமதிக் கட்டுப்பாடுகள், மாற்றுத் தடைகள் முதலியவற்றிலிருந்து ஈடுசெய்யும் பொருட்டே இக் கழகங்கள் தோன்றின. தனியார் காப்பீட்டுக் கழகங்கள் இவ் விடர்களைக் காப்பீடு செய்யாததால் பொதுக் கழகங்கள் இன்றியமையாதவைகளாகக் கருதப்பட்டன. இக் கழகங்கள் பயனுள்ள பணிகளைச் செய்து ஏற்றுமதிக்குப் பேருதவி புரிந்தன.

1964, ஜனவரியில் ஏற்றுமதிக் கடன், உத்தரவாதக் கழகம் (Export Credit and Guarantee Coporation) ஏற்படுத்தப்பட்டு அத்துடன் ஏற்றுமதி இடர்க் காப்பீட்டுக் கழகம் இணைந்துள்ளது. தற்போது இருக்கும் ஏற்றுமதி நிதி நிலையங்களின் நடவடிக்கைகளை வலுப்படுத்தவே இக் கழகங்கள் தோன்றின. ஏற்றுமதி முன்னேற்றத்திற்கும், மேம்பாட்டிற்கும் கடன் உத்தரவாதமளிப்பதே இக் கழகத்தின் தலையாய பணியாகும்.

6. மாநில வணிகக் கழகங்கள் (The State Trading Corporations): மே, 1956-ல் மாநில வணிகக் கழகங்கள் அமைக்கப்பட்டன. ஏற்றுமதி வணிகத்தைப் பெருக்குவதும் இன்றியமையாப் பொருள்களின் இறக்குமதிகளுக்கு வழிசெய்வதும் இதன் தலையாய பணியாகும். வணிக ஒப்பந்தங்களில் நேர்முகமாக ஈடுபடுவதும், இந்திய, அயல் நாட்டு வணிகர்களுக்கிடையே வணிக ஒப்பந்தத்தை முடிவு செய்வதும் இக் கழகத்தின் கடமைகளாகும். சரக்கின் தரத்துக்கும், உரிய காலத்தில் சரக்கனுப்புதல், பணம் செலுத்துதல் முதலியவற்றிற்கும் உறுதிமொழியளித்தது. இரு முனைகளிலும் இக் கழகம் வணிகத்தைத் தூண்டுகிறது. அதன் எல்லைக்குட்பட்ட சரக்குகளின் ஏற்றுமதிக்கு மிகவும் துணைபுரிகிறது.

கனிப் பொருள்களையும், உலோகப் பொருள்களையும் ஏற்றுமதி செய்யும் பொருட்டு அக்டோபர், 1963-ல் 'கனிப் பொருள்கள் உலோகப் பொருள்கள் வணிகக் கழகம்' ஏற்படுத்தப்பட்டது. இப் பொருள்களை ஏற்றுமதி செய்வதில் இக் கழகம் மிகவும் துணை புரிந்தது.

## இருபுற வணிக ஒப்பந்தங்கள்
## (Bilateral Trade Agreements)

பல்வேறு நாடுகளுடன் இந்தியா வணிக ஒப்பந்தங்களில் ஈடுபட்டிருக்கிறது. பல வழிகளிலும் அதனுடைய வணிகத்தை விரிவுபடுத்துவதே இந்த ஒப்பந்தங்களின் நோக்கங்களாகும். இதற்குமுன் வணிகத் தொடர்பு இல்லாத மற்ற நாடுகளுடன் இப்பொழுது வணிகத் தொடர்பு கொண்டுள்ளது.

வணிகம், காப்பு வரியின் மேலுள்ள பொது ஒப்பந்தத்தில் இந்தியா ஒரு கையொப்ப நாடாகும். அக் கையொப்ப நாடு களுக்குள் இந்தியா குறைந்த அளவு காப்பு வரிகளையும், சிறந்த வணிகப் பழக்கவழக்கங்களையும் அனுபவிக்கிறது. ஒரு குறிப்பிட்ட அளவு ஏற்றுமதி வணிகத்திற்கு இது துணைபுரிகிறது. இதனுடன் 'சரிசம வணிக ரூபாய்ச் செலுத்துதல்' ஒப்பந்தத்தில் இந்தியா சேர்ந்து கொண்டது. ஒவ்வொரு நாடும் ஒரு குறிப்பிட்ட சரக்கைக் குறிப்பிட்ட அளவில் உறுப்பு நாடுகளுக்கிடையே இறக்குமதி ஏற்றுமதி செய்து கொள்ளவேண்டும் என்று இந்த ஒப்பந்தம் கூறுகிறது. அயல் நாடுகளிலிருந்து எவ்வளவு சரக்குகளை இந்தியா இறக்குமதி செய்ய சலுகைகள் அளிக்கப்படுகின்றனவோ அதே அளவில் இந்தியச் சரக்குகளை அந் நாடுகள் இறக்குமதி செய்து கொள்வதற்குப் பங்கொதுக்கீடு முறை (quota system) கையாளப் படுகிறது. சில சந்தர்ப்பங்களில் இந்த ஒப்பந்தத்தில் ஈடுபட்டுள்ள நாடுகள் தங்களுக்குள் சரக்கு ஏற்றுமதி, இறக்குமதி செய்து கொள்வதற்குரிய சலுகைகளை மட்டுமே இந்த ஒப்பந்தம் கொண் டிருக்கும். அதனால் இந்தியாவின் ஏற்றுமதி வணிகம் மிகவும் சிறப்புற்றுள்ளது. ஆப்கானிஸ்தான், இலங்கை, சைல், ஃபிரான்சு, இரான், மேற்கு ஜெர்மனி, கிரீஸ், இராக், ஜோர்டன், மொராக்கோ, நேபாளம், சுவீடன், சுவிட்சர்லாந்து, முன்னேசியா போன்ற நாடுகளுடன் இந்தியா வணிக ஒப்பந்தத்தில் ஈடுபட்டு உள்ளது.

ஏற்றுமதி இறக்குமதிகளுக்குரிய செல்லுகளைச் செலுத்து வதற்குக் குறிப்பிட்ட ஏற்பாடுகளைச் செய்து கொள்ளப்படும்

வகையில் இந்தியா எகிப்து, ரஷ்யா, ஃபிரான்சு, இத்தாலி, மேற்கு ஜெர்மனி, யூகோஸ்லேவியா, மற்றும் மேற்கு ஐரோப்பியக் கம்யூனிச நாடுகளுடன் ஒப்பந்தத்தில் ஈடுபட்டது. இந் நாடுகளிலிருந்து இந்த ஒப்பந்த அடிப்படையில் செய்யப்படும் இறக்குமதிப் பொருள்களுக்கு இந்தியா ரூபாய்களிலேயே பணமளிக்கிறது. மற்ற நாடுகளுக்கும் இந்தியாவுக்கும் உள்ள வணிகம் சமநிலையில் இருக்க இந்த ஒப்பந்தம் பயன்படுகிறது. இந்தியாவுக்கு ஏற்றுமதி செய்யும் ஒரு நாடு அதே அளவுள்ள சரக்குகளை இந்தியாவிலிருந்து இறக்குமதி செய்து கொள்ளவேண்டும். இந்த ஒப்பந்தத்தினால் இதற்குமுன் வணிகத் தொடர்பு அற்ற நாடுகளுடன் இந்தியா அதன் வணிகத்தை வேகமாக வளர்த்துக் கொண்டது. ஆகவே இந்தியாவின் வாணிபமும் உயர்ந்தது.

## ரூபாயின் மதிப்பைக் குறைத்தல்
## (Devaluation of Rupee)

ஒரு நாட்டின் முற்றிய பாதக அயல் நாட்டுச் செலுத்து நிலைகள் அந் நாட்டின் செலாவணி மதிப்பைக் குறைப்பதன்மூலமே சரிக்கட்டப்படவேண்டும். பொன்னுக்குகந்த அல்லது வேறு எந்தச் செலாவணி அளவில் ஒரு நாட்டின் செலாவணி மதிப்புக் குறைக்கப் படுமானால் அந் நாட்டுச் சரக்குகள் அயல் நாட்டங்காடிகளில் மலிவாகி அச் சரக்குகளுக்கு அவ்வங்காடிகளில் கிராக்கி ஏற்பட்டு மற்ற நாட்டுப் பொருள்களுடன் போட்டியிட ஏதுவாகிறது. இதனால் ஏற்றுமதிப் பெருக்கம் ஏற்படுகிறது. உள்நாட்டில் இறக்குமதிப் பொருள்கள் அதிக விலைகளில் விற்கப்படுவதால் அவற்றின் தேவை குறைந்து இறக்குமதியும் குறைகிறது.

விடுதலைக்குப் பிறகு இந்தியா இரண்டு முறைகள் அதன் செலாவணியை மதிப்புக் குறைப்புச் செய்திருக்கிறது. 1949, செப்டம்பரில் பொன், அமெரிக்க டாலர், ஸ்டெர்லிங் மண்டலத்திலுள்ள மற்ற நாட்டுச் செலாவணிகளுக்கீடாக இந்திய ரூபாய் 30·5 சதவிகிதம் குறை மதிப்புச் செய்யப்பட்டது. ஸ்டெர்லிங் மண்டலத்திலுள்ள மற்ற நாடுகளும் அவற்றின் செலாவணிகளைக் குறை மதிப்புச் செய்யவேண்டிய சூழ்நிலை உருவாயிற்று. கடினச் செலாவணி (hard currency) நாடுகளுடன் உள்ள பாதக அயல் நாட்டுச் செலுத்து நிலை குறை மதிப்பினால் பயனடையக்கூடும். இந் நடவடிக்கையின்மூலம் அயல் நாட்டுச் செலாவணிப் பற்றுக்குறை, ரூபாய் குறை மதிப்புச் செய்யப்பட்ட சில நாட்களுக்குள்ளேயே மிகவும் குறைந்துவிட்டது. ஆனால் இந்நிலைமை அதிக நாட்கள் நீடிக்கவில்லை.

1966, ஜூன் 6ஆம் தேதி அன்று ரூபாய் மேலும் குறை மதிப்புச் செய்யப்பட்டது. ரூபாயின் புறமதிப்பு 36·5 சதவிதத் துக்குக் குறைக்கப்பட்டது. இதன் காரணமாக ரூபாய்—டாலர் மாற்று மதிப்பு ரூ. 4.76-ல் இருந்து ரூ. 7.50 = 1 டாலர் என்ற விகிதத்திலும், ரூபாய்—ஸ்டெர்லிங் மாற்று மதிப்பு ரூ. 13·33-ல் இருந்து ரூ. 21 = 1 பவுண்டு என்ற விகிதத்துக்கு ரூபாய் குறை மதிப்புச் செய்யப்பட்டிருக்கிறது. இதனால் அயல் நாட்டு அங்காடியில் இந்தியச் சரக்குகளுக்குத் தேவை கூடும் என்றும், இந்திய அங்காடிகளில் அயல் நாட்டுப் பொருள்களுக்கு உரிய தேவை குறையும் என்றும் எதிர்பார்க்கப்பட்டது. பன்னிரண்டு ஏற்றுமதிப் பொருள்களின்மேல் ஏற்றுமதி வரிகள் விதிக்கப்பட்டன. ஏற்றுமதிகளுக்குச் சமமான இறக்குமதிகள் நிறுத்தப்பட்டு நாணய வரிச் சான்றிதழ்கள் நீக்கப்பட்டன.

தொடர்ந்த இறக்குமதி அதிகரிப்பு, ஏற்றுமதி வளர்ச்சியின் தோல்வியுமே அரசு இந் நடவடிக்கையை மேற்கொள்வதற்குக் காரணமாக இருந்தது. இந்தியப் பொருளாதாரத்தில் மிகுந்த பணப் பெருக்கத்தின் அழுத்தத்தினால் மற்ற நாடுகளில் நிலவும் விலைகளைவிட இந்தியாவில் விலைகள் மிகுதியாகி உலகச் சந்தையில் மற்ற நாட்டுப் பொருள்களுடன் இந்தியப் பொருள்கள் போட்டி யிட முடியவில்லை. மற்றொரு பக்கத்தில் இறக்குமதிகள் அதிகரித்துக் கொண்டிருந்தன. பொருளாதார முன்னேற்றத்திற்குத் தேவை யான எந்திரத் தளவாடங்கள், உறுப்புப் பொருள்கள், கச்சாப் பொருள்களின் தேவை அதிகரிப்பாலும், போர்ச் சாதனங்களும், உணவுப் பொருள்களும் மிகுதியாக இறக்குமதி செய்ய வேண்டி இருந்ததால் நாட்டின் இறக்குமதி மிகுதியாயிற்று. அயல் நாட்டு மாற்றுக்களின் மிகுந்த இடைவெளியானது தகுந்த பரிகாரம் தேடத் தூண்டியது. அந் நேரத்தில் நிலவிய மாற்று விகிதத்திற்கு ரூபாய் மிகை மதிப்புடையதாக இருந்தது. தன்னிச்சை அதிகார மற்ற பணச் சந்தையில் ரூபாய் அதன் அதிகார மதிப்பைவிடக் குறைவாக மாற்றித் தரப்பட்டது, இம் மிகை மதிப்பை உணர்த் தியது. ஆகவே அரசு ரூபாயைக் குறை மதிப்புச் செய்யத் தீர்மானித்தது.

ரூபாயின் குறை மதிப்பானது பொருளாதாரத்தில் கீழ்க்கண்ட மாற்றத்தை ஏற்படுத்தியது :—

1. நாட்டின் வணிக இருப்புநிலை, ரூபாய் குறை மதிப்பிற்குப் பிறகு ஓரளவு முன்னேற்றத்தைக் கண்டது. இறக்குமதி குறைந்து ஏற்றுமதி பெருகியது. ஏற்றுமதி 1966—'67-ல் ரூ. 1,156 கோடி

களிலிருந்து 1968—'69-ல் ரூ. 1,354 கோடிகளாக அதிகரித்தது. இக்காலத்தில் இறக்குமதி ரூ. 2,078 கோடிகளிலிருந்து ரூ. 1,785 கோடிகளாகக் குறைந்தது. ரூபாய் குறை மதிப்புமட்டுமல்லாமல் மற்ற ஏற்றுமதி முன்னேற்ற நடவடிக்கைகளும் ஏற்றுமதியைப் பெருக்கின. உள்நாட்டுச் சரக்குகளுக்கு உள்நாட்டிலேயே தேவை குறைந்ததால் தயாரிப்பாளர்கள் அயல் நாட்டுச் சந்தையை நாட வேண்டியிருந்தது.

2. குறை மதிப்பானது பணப் பெருக்கத்தின் வலிமையை மிகுதியாக்கியது. ரூபாயின் மாற்று மதிப்பிறக்கத்தால் இறக்கு மதிப் பொருள்களின் விலை கூடின. அதுபோல உள்நாட்டுப் பொருள்களின் விலைகளும் அதிகரித்தன. அனைத்துப் பொருள்களின் மொத்த விற்பனை விலைக் குறியீடெண்கள் 1965—'66-ல் 137·5-ல் இருந்து 1970, ஜூலையில் 181·1 ஆக உயர்ந்தன. விலைகளின் உயர்வு பணத்தின் குறை மதிப்பால்மட்டுமல்ல. 1965-'66-ல் ஏற்பட்ட மிகுந்த உணவுப் பற்றுக்குறையாலும் விலைகள் அதிகரித்தன.

3. ஏற்றுமதிகள்மூலம் அயல் நாட்டு மாற்றுக்களால் வரக்கூடிய வருவாய் குறைய முற்பட்டது. குறை மதிப்பிற்குப் பிறகு நாட்டின் ஏற்றுமதி அதிகரித்தபோதிலும் ரூபாயின் மாற்று மதிப்பிறக்கத்தால் அயல் நாட்டுச் செலாவணியில் அதன் அளவு குறைந்தது. மற்ற காரணிகளும் அதற்குத் துணைபுரிந்தன. இறக்குமதிகள் வீழ்ச்சி அடைந்தன. மற்ற வகைகளிலிருந்து கிடைக்கக்கூடிய அயல் நாட்டு மாற்றுக்களின் அளவும் அதிகரித்தது. 1966—'67-ல் ரூ. 478 கோடிகளாக இருந்த அயல் நாட்டு மாற்றுக்களின் இருப்பு 1970, ஜூலையில் ரூ. 822 கோடிகளாகக் கூடிற்று.

4. நாட்டின் இறக்குமதிச் செலவுகள் அதிகரித்தன. அயல் நாட்டுச் செலாவணியில் இறக்குமதிப் பண்டங்களின் மதிப்பளவு முன்பிருந்ததைவிட தற்பொழுது (இந்திய ரூபாய்) அதிகமாக இருக்கிறது.

5. ரூபாய்க் குறை மதிப்பு அயல் நாட்டுக் கடன் செலவுகளையும் அதிகரித்தது. அயல் நாட்டினருக்குத் திருப்பிச் செலுத்த வேண்டிய கடன் தொகை, வட்டி முதலானவற்றை அந் நாட்டுச் செலாவணியிலேயே செலுத்த வேண்டியுள்ளதால் ரூபாய்க்கு அயல் நாட்டுச் செலாவணி மதிப்பு மிகுதியாக இருந்ததால் இந்தியா அதிகப் பணம் செலுத்தவேண்டி வந்தது.

## நிதி நிறுவனங்களும், ஏற்றுமதி வணிகமும்

வணிகப் பாங்குகள் மற்ற நிதி நிறுவனங்கள்மூலம் இந்திய அயல் நாட்டு வணிகமும், ஏற்றுமதி வணிகமும் மிகுதியான உதவிகளைப் பெற்றன. வணிக ஓட்டம் நன்முறையில் நடைபெறுவதற்கு இந் நிறுவனங்கள் அளிக்கும் உதவிகளே காரணங்களாகும். இவ்வுதவிகளில் நிதி உதவி மிகவும் தலைசிறந்ததாகும். இந் நிறுவனங்கள் ஏற்றுமதி வணிகத்திற்கு மிகவும் துணை புரிகின்றன.

வணிகப் பாங்குகள் ஏற்றுமதி வணிகத்திற்கு நிதியுதவி அளிக்கின்றன. மேலும், அயல் நாட்டுப் பொருள்களை வாங்குவோர், அங்காடிகளைப் பற்றிய விவரங்களை ஏற்றுமதியாளர்களுக்குத் தெரிவிப்பது, அவர்கள் வெளிநாடுகளில் வணிகச் சுற்றுலாச் செல்லும் பொருட்டு அறிமுகக் கடிதங்கள் வழங்குதல், வளர்ந்து வரும் அங்காடிகளில் அந் நாட்டுச் சரக்குகளுக்குகந்த உதவி புரிவதன்மூலம் ஏற்றுமதியாளர்களுக்கு வணிகப் பாங்குகள் பேருதவி புரிகின்றன.

அண்மையில் துவங்கப்பட்ட ஏற்றுமதிக் கடன், உத்தரவாதக் கழகமானது (Export Credit Guarantee Corporation) ஏற்றுமதி வணிகத்திலுள்ள சில பொருளாதார, அரசியல் இடர்களுக்குக் காப்பீடு செய்தும் வணிகர்களுக்குக் கடன் உத்தரவாதமளிக்கிறது. மற்ற செயல்களைச் செய்வதோடு தொழில் வளப் பாங்கு (Industrial Development Bank) ஏற்றுமதி வணிகத்துக்கு நிதியுதவி அளிக்கிறது. இதே உதவி இந்திய ரிசர்வ் பாங்குமூலமும் கிடைக்கிறது.

## பாங்குகள் அயல் நாட்டு வணிகத்துக்குச் செய்யும் பணிகள்

ஏற்றுமதி வணிக முன்னேற்றத்தில் வணிகப் பாங்குகள் பேருதவி புரிகின்றன. ஏற்றுமதியாளர்களுக்கு நிதி, மற்ற உதவிகளை அவற்றின் பழக்கவழக்கங்களுக்கு ஏற்ப மேலும் செய்கின்றன. விரைந்த ஏற்றுமதிப் பெருக்கத்தாலும், தொழில் வளர்ச்சிக்கு அரசு மேற்கொள்ளும் நடவடிக்கைகளுக்கு உகந்தவாறும் பாங்குகள் அவற்றின் போக்குகளை மாற்றிக்கொண்டு நிதியுதவி செய்து வருகின்றன.

## ஏற்றுமதி வணிகத்துக்கு நிதியுதவி

ஏற்றுமதி வணிகத்துக்குப் பாங்குகளால் கீழ்க்கண்டவாறு நிதியுதவி அளிக்கப்படுகின்றன.

1. நாணயக் கடிதங்கள்மூலம் எழுதப்படும் உண்டியல்களை வணிகப் பாங்குகள் மாற்றித் தருகின்றன. அயல் நாட்டு இறக்குமதியாளர் இந்திய ஏற்றுமதியாளர்களுக்குச் சாதகமாகக் கடன் தொடங்குகிறார். இந்த உண்மையை ஏற்றுமதியாளர் குறிப்பிட்டுச் சரக்குகளைக் கப்பலில் ஏற்றி உண்டியல் ஒன்று எழுதி நாணயக் கடிதத்தில் குறிப்பிட்டவாறு மற்ற பத்திரங்களையும் தயாரிக்கிறார். பிறகு ஏற்றுமதியாளர் இப் பத்திரங்களைத் தமது பாங்கிடம் சேர்ப்பிக்கிறார். அப் பத்திரங்கள் நாணயக் கடிதங்களில் கண்டு உள்ளவாறு தயாரிக்கப்பட்டிருந்தால் அந்த ஏற்றுமதியாளர்களுக்கு அப் பாங்கு பணம் செலுத்துகிறது. இந்த ஏற்பாடு, சரக்குகளைக் கப்பலில் ஏற்றியவுடன் கடனீந்தோன் பாங்குமூலம் பணம் பெற்றுக்கொள்ள வகை செய்கிறது.

2. சில சமயங்களில் வணிகப் பாங்குகள் அந்த உண்டியல்களை விலைக்கே வாங்குகின்றன. இக் காரணத்துக்காக ஒரு வரம்பு நிர்ணயித்து அவ்வரம்புக்குட்பட்டு உண்டியல்களைப் பாங்குகள் வாங்குகின்றன.

3. சில சமயங்களில் வசூலிக்கும் பொருட்டும் பாங்குகள் அவற்றின் வாடிக்கையினரிடமிருந்து உண்டியல்களைப் பெறுகின்றன. இந்த உண்டியல்கள் இறக்குமதியாளர்கள் நாடுகளுக்கு அனுப்பப்பட்டுப் பணம் வசூலான பிறகே ஏற்றுமதியாளர்களுக்குச் செலுத்தப்படுகின்றன.

4. சில சமயங்களில் ஏற்றுமதியாளர்களுக்கு, கப்பலில் சரக்கு ஏற்றப்படுவதற்கு முன்னரே பாங்குகளால் கட்டுக்கடன் (Packing credit) என்ற நிதியுதவி அளிக்கப்படுகிறது. அதாவது நாணயமுள்ள முதல்தர வாடிக்கையாளர்களுக்குச் சரக்கு விற்பனை, ஒப்பந்தப் பத்திரம், நாணயக் கடிதங்களின் ஈட்டின்பேரில் ஏற்றுமதிக்காக, சரக்குத் தயாரிக்க, வாங்க, கட்டுமானம் செய்யப் பாங்குகளால் கடனளிக்கப்படுகிறது.

5. சரக்குகள் கிடங்குகளில் அல்லது பயணத்தில் இருக்கும்போது அவற்றின் அடமானத்தின்மீதும் ஏற்றுமதியாளர்களுக்குப் பாங்கு கடன் அளிக்கிறது.

6. தொழில் வளப் பாங்குகளிடமிருந்து நிதியுதவி பெற்றுப் பாங்குகள் 6 மாதங்களிலிருந்து 5 ஆண்டுகள்வரையில் உள்ள இடைக்கால நிதி உதவி அளிக்கின்றன.

பாங்குகளால் அளிக்கப்படும் இந்நிதி உதவிகள் அனைத்தும் ஏற்றுமதியாளர்கள் எதிர்பார்த்த அளவில் இல்லை. பாங்குகள் அளவுக்குமீறிய எச்சரிக்கையுடன் பழைய மாற்ற இயலாப் பழக்கங்களையே மேற்கொண்டு வந்தன. உண்டியல்களை மாற்றும் போது பத்திரங்கள், நாணயக் கடிதத்தில் கண்டுள்ளபடித் தயாரிக்கப்பட்டிருக்கின்றனவா என்று எச்சரிக்கையுடன் பாங்கு ஆராயும். ஏதாவது சிறு தவறு இருந்தாலும் ஏற்றுமதியாளர் உத்தரவாதக் கடிதம் அளித்தபிறகே உண்டியல்கள் கழிவு செய்து கொடுக்கப்படும். உண்டியல்களை வாங்குவதற்கு ஓர் எல்லையை நிர்ணயித்து அவ்வெல்லையை மாற்றியமைக்க வாடிக்கையாளர்களுக்குப் பாங்குகள் எச்சந்தர்ப்பமும் அளிப்பதில்லை. உண்மையிலேயே மிகக் குறைந்த பாங்குகளே வாடிக்கையாளர்களின் நாணய நிலைமையைக் கண்டறியும் வல்லுநர்களை அமர்த்தி இருக்கும்.

நோக்கங்களைக் கருத்தில்கொண்டு, பாங்குகள் கடன் முறையை எளிதாக்கி அதன் எல்லையை விரிவுபடுத்தலாம். ஏற்றுமதியாளர்களுக்கு வழங்கப்படும் கடன் நிபந்தனைகளைத் தளர்த்தலாம். ஆனால், எச்சரிக்கையுடன் இருந்துகொண்டு நடைமுறைகள் எளிதாக்கப்பட்டு கடன் வேண்டுவோருக்கு உடனுக்குடன் நடவடிக்கைகள் எடுக்கலாம்.

கடன் எல்லையைத் தளர்த்துவதால் இடர்கள் மிகுதியாக இல்லை என்று பாங்குகள் உணர்ந்தால் அக் கடன் எல்லையைத் தளர்த்துவதற்கு மிகுந்த எச்சரிக்கை தேவையில்லை. கட்டுக் கடன்களும் (Packing credit) அதிகப்பற்றும் (Over draft) பாங்குகளால் அதிகமாக அளிக்கப்படலாம். தகுந்த காரணங்களுக்காக ரிசர்வ் பாங்கு அதன் கட்டுப்பாட்டு நடவடிக்கையிலிருந்து ஏற்றுமதிக் கடன்களை நீக்கலாம். நாட்டுடைமையாக்கப்பட்ட 14 வணிகப் பாங்குகள்மூலம் ஏற்றுமதி வணிகத்திற்குத் தேவையான நிதி அளிக்கப்படும் என்று எதிர்பார்க்கப்படுகிறது.

இந்திய அரசால் சில நடவடிக்கைகள் மேற்கொள்ளப்பட்டு ரிசர்வ் பாங்கு ஏற்றுமதி வணிகத்திற்குரிய நிதியுதவியை மேற்கொண்டிருக்கிறது. அவை 'ரிசர்வ் பாங்கின் ஏற்றுமதி உண்டியல் அங்காடித் திட்டம்' (Reserve Bank Export Bill Market Scheme), 'ஏற்றுமதிக் கடன் உத்தரவாதக் கழகம்' (Export Credit and

Guarantee Corporation) அமைத்தல், தொழில் வளப் பாங்குகள் (Industrial Development Banks) மற்ற பாங்குகள் அளித்த கடன்களுக்கு மறுநிதி வழங்குதல் ஆகும்.

மேற்கண்ட நிதியுதவியை அடுத்துப் பாங்குகள் மேலும் பல உதவிகளை ஏற்றுமதியாளர்களுக்கு அளிக்கின்றன.

1. அயல் நாட்டு அங்காடிகளிலுள்ள பொருளாதார நிலைமைகளையும், பலவித சரக்குகளுக்கு ஏற்றுமதி நிகழக்கூடிய வழிவகைகளையும் அதன் கிளை அல்லது தொடர்புப் பாங்குமூலம் அறிந்து, ஏற்றுமதி செய்யும் அல்லது செய்யப்புகும் அதன் வாடிக்கையாளர்களுக்குப் பரிந்துரை வழங்கும். அயல் நாட்டிலிருக்கும் சரக்கு வாங்குபவர்களின் நிலைமைகள் பற்றி அறிக்கை தயாரித்து ஏற்றுமதியாளர்களுக்கு வழங்குகிறது. சில சமயங்களில் பாங்குகள் அவற்றின் வாடிக்கையாளர்களை அயல் நாடுகளிலிருககும் இறக்குமதியாளர்களுடன் தொடர்பு கொள்ள உதவிபுரிகின்றன.

2. தீர்வு காணவேண்டிய வேறு வழிகள், ஏற்றுமதி வணிகத்தில் செல்லுகள் பெறுவதற்குரிய வழிவகைகளின் இடர்ப்பாடுகள், மாற்றுக் கட்டுப்பாட்டின் சிக்கல்கள் பற்றியும் பாங்கு வாடிக்கையாளருக்கு அறிவுரை வழங்கும்.

3. வாணிபத்தின் பொருட்டு அயல் நாடுகளில் பயணம் செய்யும் அதன் வாடிக்கையாளர்களை அயல் நாடுகளிலிருக்கும் அதன் பதிலாட்கள் அல்லது தொடர்புப் பாங்குகளுக்குப் பாங்குகள் அறிமுகம் செய்து வைக்கின்றன. அயல் நாட்டுத் தேவைகளுக்காக அப் பயணிகளுக்குப் பயணச் செக்குகள், அயல் நாட்டு மாற்றுக்களையும் அளிக்கும். அவ்வயல் நாடுகளில் புழக்கத்தில் இருக்கும் செலாவணி ஒழுங்கு முறைகளைப் பற்றியும் அறிவுரை வழங்கும்.

## ஏற்றுமதிக் கடன், பொறுப்புறுதிக் கழகம்
## (Export Credit and Guarantee Corporation)

ஏற்றுமதியைத் தூண்டுவதற்கு வணிக அரசியல் காரணங்களால் இறக்குமதியாளர்கள் பணம் செலுத்தத் தவறினல் ஏற்றுமதியாளர்களுக்குக் காப்பீடு அளிக்கும் முறையில் இத் திட்டம் தேவைப்பட்டது. 'ஏற்றுமதி இடர்க் காப்பீட்டுக் கழகம்' (Export Risks Insurance Corporation) என்ற பெயரில் 1957, ஜுலையில் இத் திட்டம் புகுத்தப்பட்டது. இக் கழகம் பின்னர் 1964, ஜனவரியில் ஏற்றுமதிக் கடன் உத்தரவாதக்

கழகத்துடன் (Export Credit and Guarantee Corporation) இணைந்துவிட்டது. ஏற்றுமதிக் கடன் உத்தரவாதக் கழகம் நாட்டுடைமையானது. ஆனால், அது வணிக வழியில் இயங்கக் கூடிய ஒரு தன்னாட்சி நிறுவனமாகும்.

செயல்கள் : ஏற்றுமதிக் கடன் உத்தரவாதக் கழகம் கீழ்க் கண்ட பணிகளைப் புரிகின்றன.

1. கடன் முறையில் அயல் நாட்டு இறக்குமதியாளர் களுடன் வணிகம் செய்வதில் ஏற்படும் இடர்களைத் தவிர்ப்பதற்கு ஏற்றுமதியாளர்களுக்குத் தரமுள்ள கொள்கைகளை உருவாக்கித் தருகிறது.

2. அயல் நாட்டு இறக்குமதியாளர்களால் ஆணை பிறப்பிக்கப் பட்டுச் சரக்குகள் தயாரிக்கும் ஏற்றுமதியாளர்களுக்குக் கடன் வழங்கும். பாங்குகளின் இடர்களைச் சரிக்கட்ட இக் கழகம் நிதி உறுதி அளிக்கிறது.

3. மேலும் தனிப்பட்ட பல பணிகளையும் ஏற்றுமதியாளர் களுக்கு இக் கழகம் புரிகிறது.

தரமுள்ள காப்புறுதிகள் : அயல் நாட்டுக் கடன் இடர்ப்பாடு களிலிருந்து ஏற்றுமதியாளர்களைக் காப்பாற்றும் பொருட்டு ஏற்றுமதிக் கடன் உத்தரவாதக் கழகமானது (E C. G C.) பல தரமான காப்புறுதிகளை வகுத்துத் தருகிறது. அவை (i) கப்பல் சரக்குக் காப்புறுதிகள்; (ii) ஒப்பந்தக் காப்புறுதிகள் என்று இரண்டு வகைகளாகப் பிரிக்கப்படுகின்றன. முதல் வகை கப்பலில் சரக்கேற்றப்படும் நாட்களிலிருந்து ஏற்படும் இடர்களைக் காப்பீடு செய்கிறது. இரண்டாவது வகை ஒப்பந்த நாட்களி லிருந்து ஏற்படுகிற இடர்களைக் காப்பீடு செய்கிறது. இவ்விரண்டு வகைகளிலுமே ஏற்றுமதியாளர் வணிக அல்லது அரசியல் இடர்களையோ, இரண்டையும் சேர்த்தோ காப்பீடு செய்து கொள்ளலாம்.

இக் காப்புறுதிகள் பொதுவாகப் பன்னிரண்டு திங்களுக்குக் கப்பலில் ஏற்றக்கூடிய சரக்குகளைக் கணக்கில் கொள்கின்றன. வணிக இடர்களில் 80 சதவிகிதம், அரசியல் இடர்களில் 85 சத விகிதம் காப்பீடு செய்யப்படுகின்றன. காப்பீட்டுக் கழகத்திலிருந்து பணம் கேட்டுப் பெற்றுக் கொண்டபிறகு பெறக்கூடிய பணங்களை அதே விகிதத்தில் கழகமும், ஏற்றுமதியாளர்களும் பகிர்ந்து கொள்ள வேண்டும். ஏற்றுமதிக் கடன் உத்தரவாதக் கழகத்தின் காப்புறுதியானது பங்குகளுக்குத் தகுந்த (ஈடாக) பிணையமாக

இருப்பதால் ஏற்றுமதி வணிகத்திற்கு நிதியுதவி புரிய பாங்குகளுக்கு வசதியாக இருக்கிறது.

## வணிக இடர்கள்
## (Commercial Risks)

(i) சரக்கு வாங்குபவர் திவாலாதல் (Insolvent).

(ii) ஏற்றுக்கொண்ட சரக்குகளுக்குரிய பணத்தை வாங்குபவர் கொடுக்கத் தவறுதல்.

(iii) ஏற்றுமதியாளரின் நடவடிக்கைகள் சரக்கு வாங்குபவர் சரக்கினை ஏற்றுக்கொள்ளத் தடையாக இல்லை என்று நிரூபித்த பிறகும் வாங்குபவர் சரக்கை ஏற்றுக் கொள்ளாதிருத்தல்.

## அரசியல் இடர்கள்
## (Political Risks)

(i) அரசு நடவடிக்கைகளால் ஏற்றுமதியாளர்களுக்குப் பணம் மாற்றிக் கொடுத்தலில் தடையோ, தாமதமோ ஏற்படல்.

(ii) சரக்கு வாங்குபவர் நாட்டுக்கும், இந்தியாவுக்கும் இடையே போர் மூளல்.

(iii) போர், புரட்சி, சமூகக் குழப்பம் ஆகியவை சரக்கு வாங்குபவர் நாட்டில் ஏற்படுதல்.

(iv) சரக்கு வாங்குபவர் நாட்டில் புது இறக்குமதி அனுமதிக் கட்டுப்பாடுகள் புகுத்தப்படுதல் அல்லது ஒழுங்கான இறக்குமதி அனுமதிகளை ரத்து செய்தல்.

(v) இந்தியாவில் ஏற்றுமதி அனுமதியை ரத்து செய்தல் அல்லது புது ஏ்ற்றுமதி அனுமதிக் கட்டுப்பாடுகளை விதித்தல்.

(vi) கப்பலை வேறு வழியில் செலுத்துவதாலோ, கப்பல் பயணத் தடைகளாலோ ஏற்படக்கூடிய தூக்குக் கூலி, பயணச் செலவு, இன்சூரன்சு முதலிய செலவுகளைச் சரக்கு வாங்கியவரிடமிருந்து திரும்பப் பெறமுடியாத நிலைமை.

(vii) ஏற்றுமதியாளர் அல்லது இறக்குமதியாளரால் கட்டுப்படுத்த முடியாத காரணங்களால் இந்தியாவில் ஏற்படும் நட்டங்கள்.

## நிதிப் பொறுப்புறுதிகள்
## (Financial Guarantees)

ஏற்றுமதிக் கடன் உத்தரவாதக் கழகங்களால் வழங்கப்படும் காப்புறுதிகள் பாங்குகளிடமிருந்து கடன் பெறுவதற்குப் பிணையமாகப் பயன்படுகின்றன. ஏற்றுமதியாளர் நிதி பெறுவதற்கு இது போதுமான வசதியாகாது. ஆகவே ஏற்றுமதிக் கடன் உத்தரவாதக் கழகம் பலவித நிதி உத்தரவாதங்களை, ஏற்றுமதியாளருக்குப் பாங்குகள் கொடுத்த கடன்களுக்குப் பாதுகாப்பாக வழங்குகிறது.

(i) ஏற்றுமதி செய்யப்படும் பொருட்டுத் தயாரிக்கப்படும், வாங்கப்படும் அல்லது கட்டுமானம் செய்யப்படும் சரக்குகளின் மீது பாங்குகள் அளித்த கடன்களில் ஏற்படும் நட்டங்களில் $66\frac{2}{3}\%$ கட்டுமானக் கடன் உத்தரவாதம் (Packing Credit Guarantee) வழங்கப்படுகிறது.

(ii) ஏற்றுமதி உண்டியல்கள் வாங்குதல், கழிவு செய்தல், மாற்றிக் கொடுத்தல்மூலம் பாங்குகளுக்கு ஏற்படும் நட்டங்களுக்குக் 'கப்பலில் சரக்கேற்றியபிறகு ஏற்படும் ஏற்றுமதிக் கடன் உத்தரவாதம்' பாதுகாப்பளிக்கிறது (Post—shipment Export Credit and Guarantee).

(iii) சரக்கின் உள்நாட்டு விலை மதிப்பில், கப்பலில் சரக்கேற்றிய பிறகு அளிக்கப்படும் நிதியின்மீது ஏற்றுமதி நிதி உத்தரவாதம் (Export Finance Guarantee) அளிக்கப்படுகிறது.

(iv) ஏற்றுமதி விலைக்கும், உள்நாட்டு விலை மதிப்பிற்கும் உள்ள இடைவெளியை 'ஏற்றுமதி உற்பத்தி நிதி உத்தரவாதம்' (Export Production Finance Guarantee) நிரப்புகிறது.

சிறப்புப் பணிகள்: ஏற்றுமதிக் கடன் உத்தரவாதக் கழகம் மற்ற பணிகளைச் செய்வதுடன் ஏற்றுமதியாளர்களுக்குதவியாக சிறப்புக் காப்பீடுகளையும் வழங்குகிறது.

1. ஏற்றுமதியாளர்கள் அங்காடிச் சரக்குத் தயாரிப்பவர்களிடமிருந்து கடன் பெறுவதுடன், அத் தயாரிப்பாளர்களுக்கு ஏற்றுமதிக்காகச் சரக்கு உற்பத்தி செய்வதற்கும், வகைப்படுத்துவதற்கும் கடன் அளிக்கின்றனர். முதலில் உள்ள நடவடிக்கையில் ஏற்படும் இடர்ப்பாடுகள் தயாரிப்பாளர் கடன் காப்புறுதிகளாலும் (Manufacturer's Credit Insurance Policies), பிந்திய

நடவடிக்கைகளில் ஏற்படும் இடர்ப்பாடுகள் ஏற்றுமதிக் கடன் காப்புறுதிகளாலும் (Exporter's Credit Insurance Policies) ஈடு செய்யப்படுகின்றன.

2. அயல் நாட்டு அங்காடியின் முன்னேற்றத்திற்காக இந்திய ஏற்றுமதியாளர்களுக்கு அங்காடி ஆராய்ச்சி, விளம்பரம், சரக்கு இருப்பு வைத்திருந்தால், மற்ற முன்னேற்ற நடவடிக்கைகளால் ஏற்படும் செலவுகளை ஏற்றுமதிக் கடன் உத்தரவாதக் கழகம் (Export Credit and Guarantee Corporation) பகிர்ந்து கொள்ளுகிறது.

3. இந்தியத் தயாரிப்பாளர்களுக்கும் ஏற்றுமதியாளர்களுக்கும், ஏற்றுமதி செய்யப்படும் சரக்குகளுக்குத் தேவையான கச்சாப் பொருள்கள், இணைப்புக் கருவிகள், உதிரிக் கருவிகள் முதலானவற்றை இறக்குமதி செய்வதற்குரிய, சுழல் முறை அயல் நாட்டு மாற்றுக்களைப் பெறுவதற்காக ஏற்றுமதிக் கடன் திட்டத்தை உத்தரவாதக் கழகம் செயல்படுத்துகிறது. இத் திட்டத்தின்படி இந்திய வணிகப் பாங்குகள் அயல் நாடுகளிலுள்ள அவற்றின் தொடர்பு அல்லது கிளை பாங்குகளிடமிருந்து அயல் நாட்டு மாற்றுகளுக்குரிய கடன்களைப் பெறுகின்றன. இன்றியமையாத கச்சாப் பொருள்களை அவ்வயல் நாடுகளிலிருந்து இந்திய ஏற்றுமதியாளர்களும், தயாரிப்பாளர்களும் இறக்குமதி செய்து கொள்ள வசதியாக இக் கடன்கள் இருக்கின்றன. இக் கச்சாப் பொருள்கள், ஏற்றுமதிப் பொருள்கள் உற்பத்தி செய்யப் பயன்படுத்தப்படுவதால் அவற்றை ஏற்றுமதி செய்வதினின்றும் கிடைக்கக்கூடிய வருவாயைக் கொண்டு இக் கடன்கள் அடைக்கப் படுகின்றன. ஏற்றுமதிக் கடன் உத்தரவாதக் கழகம், ஏற்றுமதியாளர், வணிகப் பாங்கு, அரசு இவற்றிற்கு ஒன்றிப்புப் பதிலாளாகச் செயல்படுகிறது.

## இந்தியத் தொழில் வளர்ச்சி வங்கி
## (The Industrial Development Bank of India)

இந்திய ரிசர்வ் பாங்குக்கு முழுவதும் உரிமையான துணை பாங்காக 1964, ஜூலையில் இந்தியத் தொழில் வளர்ச்சி வங்கி ஏற்படுத்தப்பட்டது. இதன் முக்கியப் பணி இந்தியத் தொழில் வளர்ச்சிக்கு நிதியுதவி அளிப்பதாக இருந்த போதிலும் சில வழிகளில் ஏற்றுமதி வணிகத்துக்கும் துணைபுரிகிறது. இந்தியக் கூட்டுறவு, வணிகப் பாங்குகளால் 6 திங்களிலிருந்து 5 ஆண்டுகளுக்குட்பட்ட மத்திம கால ஏற்றுமதிக் கடன்களுக்கு மறு

நிதிச்சலுகை (Refinance) வழங்குகிறது. அண்மையில் இந்தியத் தொழில் வளர்ச்சிப் பாங்கால் புகுத்தப்பட்ட திட்டத்தின்படி மூலதன, பொறியியல் பொருட்கள், பணிகளை ஏற்றுமதி செய்வதற்குத் தனியார், பொதுத் துறை நிறுவனங்களுக்கு இடைக்கால நிதி, உத்தரவாதச் சலுகைகளை அளிப்பதற்கு இப் பாங்கு தகுதியுடைய வணிகப் பாங்குகளுடன் சேர்ந்து கொள்கிறது. 6 மாத காலத்திற்குட்பட்டுக் கப்பலில் சரக்கு ஏற்றப்படுவதற்கு முன்னும், கப்பலில் சரக்கு ஏற்றியபிறகும் ஏற்றுமதிக் கடன்கள் வழங்குவதற்கும், ஏற்றுமதியாளர்கள் சார்பாக நிதி உத்தரவாதம் அளிப்பதற்கும் இத் திட்டத்தில் வகை செய்யப்பட்டிருக்கிறது.

## இந்திய ரிசர்வ் வங்கியும், அயல் நாட்டு வணிக நிதியும்

மற்ற மைய பாங்குகளைப் போலவே இந்திய ரிசர்வ் வங்கியும் அயல் நாட்டு வணிகத்துக்கு நிதியுதவி அளிக்கும் வழியில் செயல் புரிகிறது. ரூபாயின் புறமதிப்பை நிலைநாட்டி அயல் நாட்டு மாற்றுக்களை அதன்வசம் வைத்திருக்கிறது. இந்தியா பன்னாட்டுப் பண நிதியின் (I.M.F.) உறுப்பு நாடாகையால் இந்திய ரிசர்வ் பாங்கு அப் பன்னாட்டுப் பண நிதி சார்ந்த நடவடிக்கைகளையும் மேற்கொள்ளுகிறது. இந்தியாவின் மாற்றுக் கட்டுப்பாடு இப் பாங்கால் நடைபெறுகிறது. 'உண்டியல் அங்காடித் திட்டத்தின்'கீழ் (Bill Market Scheme) ஏற்றுமதி உண்டியல்களுக் கீடாக வணிகப் பாங்குகளுக்கு இந்திய ரிசர்வ் பாங்கு நிதி உதவி அளிக்கிறது. நாட்டின் தலைமைப் பாங்காக இருப்பதால் இந்திய ரிசர்வ் பாங்கு மற்ற நடவடிக்கைகளிலும் அயல் நாட்டு வணிகத்துக்கு நிதியுதவி அளிப்பதுடன் வணிக நிதித் திட்டத்தின் கட்டுப்பாட்டு அலுவலகமாகவும் செயல்படுகிறது.

## அயல் நாட்டு மாற்று விகிதமும், இருப்பும்

காலத்திற்குக் காலம் இந்திய அரசால் நிர்ணயிக்கப்படுகிற விகிதத்தில் இரண்டு இலட்ச ரூபாய்களுக்குக் குறையாத அயல் நாட்டு மாற்றுக்களை அதிகாரம் பெற்ற நபர்களிடமிருந்து வாங்கல் அல்லது அவர்களுக்கு விற்றலை உடையதாய் இந்திய ரிசர்வ் பாங்கின் அயல் நாட்டு மாற்றுப் பொறுப்புகள் உடையதாய் இருக்கும். பன்னாட்டுப் பண நிதியுடன் இருக்கிற அதன் பொறுப்புகளை ஒப்பு நோக்கி இந்திய அரசால்

நிபந்தனைகள் பிறப்பிக்கப்படுகின்றன. (எ. கா.): இந்தியா பன்னாட்டுப் பண நிதியின் உறுப்பு நாடாக இருப்பதால் ரூபாயின் முகமதிப்பு பொன்னிலேயே மதிப்பிடப்பட்டிருக்கிறது. இந்தியாவில் இம் முகமதிப்பு விகிதத்திலேயே மற்றெல்லா மாற்று விகிதங்களும் கணிக்கப்படுகின்றன. 1947-வது அயல் நாட்டு மாற்று ஒழுங்குமுறைச் சட்டத்தின்கீழ் (Foreign Exchange Regulation Act, 1947) அயல் நாட்டு மாற்றுக்களை வாங்கி விற்க உரிமையுடையவனே அதிகாரம் பெற்ற நபராகக் கருதப்படுகிறான். இது தொடர்பாகப் பாங்கின் பெரும் பொறுப்பு ரூபாய்—ஸ்டெர்லிங் மாற்றின் தொடர்பாகும். இந்திய ரிசர்வ் பாங்கு வணிகப் பாங்குகளுக்கு அல்லது அவற்றிடமிருந்து ஸ்டெர்லிங்கை 5·33 பவுண்டுகள் = ரூ. 100 அல்லது 1 ஷில்லிங், 27 பென்னிகள் = ரூ. 1 என்ற விகிதத்தில் விற்கிறது அல்லது வாங்குகிறது.

இந்திய ரிசர்வ் பாங்கு இந் நாட்டின் அயல் நாட்டு மாற்று இருப்புக்களை வைத்திருக்கிறது. இந்தியா ஸ்டெர்லிங் மண்டலத்தின் உறுப்பு நாடாக விளங்குவதால் அதன் பண இருப்பின் பெரும் பகுதியை ஸ்டெர்லிங்குகளாகவே வைத்திருக்கிறது. இரண்டாம் உலகப் போரின்போது இப் பாங்கின் ஸ்டெர்லிங் இருப்புக்கள் மிகுதியான அளவில் அதிகரித்திருந்தன. போருக்குப் பிறகு ஆங்கில அரசால் விடப்பட்ட போர்த் தளவாடங்களை விலக்குவதற்கும், இந்தியப் படையிலிருந்து ஓய்வுபெற்ற ஆங்கிலேயப் போர் வீரர்களுக்கு ஓய்வுக்கால ஊதியம் வழங்குவதற்கும் ஸ்டெர்லிங் இருப்பின் பெரும்பகுதி செலவாயிற்று. முதல், இரண்டாம் ஐந்தாண்டுத் திட்டக் காலத்தில் அயல் நாடுகளிலிருந்து மூலதனப் பொருள்கள், உறுப்புப் பொருள்கள், உணவுப் பொருள்கள், போர்த் தளவாடங்கள் முதலியவற்றை இறக்குமதி செய்வதற்கும் ஸ்டெர்லிங் இருப்பின் பெரும்பகுதி செலவாயிற்று. 1949, மார்ச்சில் இந்திய ரிசர்வ் பாங்கில் அயல் நாட்டு மாற்று இருப்புக்கள் ரூ. 136 கோடிகளாக இருந்து 1964—'65-ல் ரூ. 86 கோடிகளாகக் குறைந்துவிட்டது. அதற்குப் பிறகு அயல் நாட்டு இருப்புக்கள் படிப்படியாக உயர்ந்து 1968—'69-ல் ரூ. 324 கோடிகளாக அதிகரித்தன.

## ஏற்றுமதி உண்டியல்களின் பேரில் பாங்குகளுக்குக் கடன் அளித்தல்
## (Advances to Bank Against Export Bills)

1952, ஜனவரியிலிருந்து உண்டியல் அங்காடித் திட்டத்தின் (Bill Market Scheme) கீழ் இந்திய ரிசர்வ் பாங்கு பணிபுரிந்து

வருகிறது. இத் திட்டத்தின் அடிப்படையில் இந்திய ரிசர்வ் பாங்கு வணிகப் பாங்குகளுக்கு அவற்றின் வாடிக்கையாளர்களின் பழக்கமான உறுதிப் பத்திர ஈடுகளின்பேரில் 'கேட்புக் கடன்கள்' அளிக்கிறது. வணிகப் பாங்குகள் அவற்றின் வாடிக்கையாளர்களுக்கு உண்டியல்களின்பேரில் கடன் அளிக்கின்றன. தேவையுள்ள போது இந்த உண்டியல்களை வணிகப் பாங்குகள் ரிசர்வ் பாங்கிடம் ஈடாக வைத்துக் கேட்புக் கடன்களைப் பெற்றுக் கொள்கின்றன. 1958, அக்டோபரிலிருந்து இத் திட்டம் ஏற்றுமதி உண்டியல்களையும் (Export Bills) உள்ளடக்கிக்கொண்டது. இதனால் வணிகப் பாங்குகள் ஏற்றுமதி உண்டியல்களையும் ரிசர்வ் பாங்கிடம் ஈடாக வைத்துக் கடன்கள் பெற்றுக்கொள்வதால் அவற்றின் வாடிக்கையாளர்களுக்கும் இந்த ஏற்றுமதி உண்டியல்களுக்கு ஈடாக வணிகப் பாங்குகள் கடன் வழங்குகின்றன.

1963, மார்ச்சில் இந்திய ரிசர்வ் பாங்கு ஏற்றுமதி உண்டியல் கடன் திட்டத்தைப் (Export Bills Credit Scheme) புகுத்தியது. இத் திட்டத்தின்படிக் கேட்கும்போது திரும்பத்தரப்படக்கூடிய உறுதிப் பத்திரங்களுக்கு ஈடாகவோ, அயல் நாட்டுச் செலாவணியில் அல்லது இந்திய ரூபாயில் எழுதப்பட்ட தகுதியுடைய ஏற்றுமதி உண்டியல்களின் ஈட்டின்பேரிலோ இந்திய ரிசர்வ் பாங்கு வணிகப் பாங்குகளுக்கு கடன் உதவி அளிக்கிறது. இவ்வாறு வணிகப் பாங்குகள் அதன் ஏற்றுமதி உண்டியல்களின் மீது இந்திய ரிசர்வ் பாங்கிடமிருந்து கடன் பெற்றுக்கொள்ளலாம் என்ற உறுதிப்பாட்டில் அவற்றின் வாடிக்கையான ஏற்றுமதியாளர்களின் ஏற்றுமதி உண்டியல்களை வாங்கி அல்லது தள்ளுபடி செய்து அவர்களுக்கு நிதியுதவி அளிக்கிறது. இந்திய ரிசர்வ் பாங்கின் பாங்கு விகிதத்திலேயே வணிகப் பாங்குகளுக்குக் கடன்கள் கிடைக்கின்றன. இது மிகுந்த சாதகப் பாங்கு விகிதமாகும்.

**இத் திட்டத்தின் நலன்கள்**

(i) அவற்றிடமுள்ள பழக்கப்பட்ட ஏற்றுமதி உண்டியல்கள் இருப்புக்களின் அறிவிப்பின்பேரில் வணிகப் பாங்குகள் ரிசர்வ் பாங்கிடமிருந்து கடன் வாங்குவதால், ரிசர்வ் பாங்கு ஈடுகளின் மீது கடன் வழங்கும் எல்லையை அதிகரிக்கிறது.

(ii) வணிகப் பாங்குகள், முத்திரை வரிகள் செலுத்தாத காரணத்தால் ஓரளவு குறைந்த விகிதத்திற்கே கடன் பெறுகின்றன.

(iii) இத் திட்டத்தின்படி வணிகப் பாங்குகள் தங்களுக்கு வழங்கப்பட்டிருக்கும் கடன் மட்டத்தைவிடக் கூடுதலாகக் கடன் வழங்குகிறது.

ஏற்றுமதி உண்டியல்களின் மதிப்பில் 100-க்கு 100 பங்கு வணிகப் பாங்குகள் கடன் பெற்றுக் கொள்ளலாம். வணிகப் பாங்கு ரூ. 1,00,000-க்கு மேல் கடன் பெறக்கூடாது.

## இந்திய ரிசர்வ் வங்கியும், மாற்றுக் கட்டுப்பாடும்

மாற்றுக் கட்டுப்பாட்டை இந் நாட்டில் இந்திய ரிசர்வ் பாங்கு புகுத்துகிறது. இரண்டாம் உலகப் போரின்போது இந்தியாவில் மாற்றுக் கட்டுப்பாடு தற்காலிக நடவடிக்கையாகப் புகுத்தப் பட்டது. ஆனல், பாதக அயல் நாட்டுச் செலுத்துநிலை இரண்டாம் உலகப் போருக்கும், பிற்பட்ட ஆண்டுகளிலும் தொடர்ந்து நிலவி வந்ததால் '1947ஆம் ஆண்டின் அயல் நாட்டு மாற்று ஒழுங்கு முறைச் சட்டத்தின்'கீழ் (Foreign Exchange Regulation Act of 1947) மாற்றுக் கட்டுப்பாடு இந்தியாவில் நிரந்தரமாக்கப்பட்டது. தற்போது இக் கட்டுப்பாடு ஸ்டெர்லிங், ஸ்டெர்லிங் அல்லாத மண்டலங்களுக்குப் பரவலாக்கப்பட்டிருக்கிறது.

இம் மாற்றுக் கட்டுப்பாட்டுத் திட்டத்தின்படி அனுமதிபெற்ற வணிக நிறுவனங்கள்மூலமே அனைத்து மாற்று நடவடிக்கைகளும் நிகழ்தல் வேண்டும். இவ்வணிக நிறுவனங்கள் அயல் நாட்டு மாற்று நடவடிக்கைகளை மேற்கொள்ள இந்திய ரிசர்வ் பாங்கால் அனுமதிக்கப்பட்ட வணிகப் பாங்குகளாகும். இறக்குமதிப் பெருக்கத்தாலும் ஏற்றுமதிக்குரிய பற்றுக்குறை அயல் நாட்டு வருவாயாலும் நாட்டின் மிகுதியான நலனை நோக்கமாகக் கொண்டு அயல் நாட்டு மாற்றுக்களைப் போட்டித் தேவைக் குகந்தவாறு பகிர்ந்தளித்தல் வேண்டும். இருக்கக்கூடிய இருப்பிற் குகந்தவாறு பலவிதக் கணக்குகளில் அயல் நாடுகளுக்குச் செல்லு களைச் செலுத்தலாம். அனைத்து மூலதன இயக்கங்கள் எல்லாம் ரிசர்வ் பாங்கின் முன் அனுமதியுடனே நிகழ்த்தல் வேண்டும்.

இந்தியாவுக்கு வரக்கூடிய அயல் நாட்டு மாற்றுக்களின் வருவாய்களையும், அவை ரிசர்வ் பாங்கால் அனுமதிக்கப்பட்ட எவ்வளவு காலத்திற்குள் செலவழிக்கப்பட வேண்டும் என்பதையும் நிலைநாட்ட இந் நாட்டுச் சரக்கு ஏற்றுமதிகள் கட்டுப்படுத்தப் படுகின்றன. குறிப்பிட்ட முறையில் ஏற்றுமதிகளுக்கு நிதி வழங்கப்பட்டு நாட்டின் ஏற்றுமதியினுல் வரும் வருவாய் உச்சக்

கட்டத்தில் இருக்கிறது. மாற்றுக் கட்டுப்பாட்டுச் சட்டங்கள் நகைகள், செலாவணித் தாள்கள், ஈடுகள் (Securities), ஆயுள் காப்பீட்டுப் பாலிசிகள், ஈடுகளின்மேல் உள்ள வைப்பு இரசீதுகள் முதலியனவற்றிற்கும் பொருந்தும். இவைகளை எல்லாம் ஏற்றுமதி செய்வதற்கு இந்திய ரிசர்வ் பாங்கின் முன் அனுமதி வேண்டும்.

அனுமதிக்கப்பட்ட பாங்குகள் அயல் நாட்டு நடவடிக்கைகளில் ஈடுபட்டிருப்பதை மேற்பார்வையிடும் பொருட்டு, குறிப்பிட்டப் படிவங்களில் அயல் நாட்டு மாற்றுக்களை வாங்குதல், விற்பனை செய்தல் பற்றிய அறிக்கையைக் கண்டிப்பாக ரிசர்வ் பாங்கு அனுப்பவேண்டும். இவ்வறிக்கை இந்தியாவின் அயல் நாட்டுச் செல்லு நிலைகள், அயல் நாட்டு மாற்று நிலைகளைப்பற்றிப் புள்ளி விவரம் சேகரிப்பதற்குப் பயன்படுகிறது.

## பன்னாட்டு அமைப்புகளின் தொடர்புகள்

இந்திய ரிசர்வ் பாங்கு இந்திய அரசின் பதிலாளாகப் பன்னாட்டுப் பண நிதி (I.M.F.) புனரமைப்பும், வளர்ச்சிக்குமான பன்னாட்டுப் பாங்கு ஆகியவற்றின் உறுப்பினராக இருந்து வருகிறது. இவ்விரண்டு பன்னாட்டு நிறுவனங்களுக்கும் இந்திய ரிசர்வ் பாங்கு நடப்புக் கணக்கு வசதி செய்து கொடுக்கிறது. இந் நிறுவனங்களுக்காக உள்ள நடப்புக் கணக்குகள் எக் கட்டணமும் இல்லாமல் தொடங்கி வைக்கப்பட்டிருக்கின்றன. இந் நிறுவனங் களுடன் இந்திய நடவடிக்கைகளை மேற்கொள்வதற்கும் இந் நாட்டின் நிர்வாகச் செலவுகளுக்குப் பயன்படுத்தப்படுவதற்கும் இக் கணக்குகள் தொடங்கப்பட்டிருக்கின்றன. இந் நிறுவனங் களின் சார்பாக வரும் வருவாய்கள் அனைத்தும் வரவு வைக்கப் பட்டு அனைத்துச் செலுத்துகளும் இக் கணக்குகளிலிருந்து செலுத் தப்படுகின்றன. பன்னாடுப் பதிலாட்களுடன் தொடர்பு கொள்ளும்போது இந்திய ரிசர்வ் பாங்கு அரசுடன் கூட்டாகச் செயல்படுகிறது.

# 9. அயல் நாட்டு மாற்று இடர்களைக் களைதல்

## மாற்று விகித இடர்கள்

மாற்று விகிதங்களின் ஏற்ற இறக்கத்தினல் ஏற்படும் இடர்கள் தான் ஆரம்பத்தில் அயல் நாட்டு மாற்று வணிகத்திலுள்ள அயல் நாட்டு மாற்று இடர்களாகக் கருதப்பட்டன. ஒரு குறிப்பிட்ட கால இறுதியில் பணத்தைப் பெறும் அல்லது அளிக்கும் வணிகர் ஒருவருக்கு அவ்விறுதிக் காலத்தில் பணம் செலுத்தும்போது அல்லது பெறும்போது அவ்வந்நியச் செலாவணி மிகுதியான மதிப்பு அல்லது குறைவான மதிப்பு உடையதாக இருக்கலாம். அதனல் அவ் வணிகருக்கு நட்டம் ஏற்படும். (எ.கா.): இந்தியாவில் இருக்கும் ஏற்றுமதியாளர் ஒருவர் இலண்டனில் இருக்கும் இறக்குமதியாளர் ஒருவருக்கு ரூ. 10,000 மதிப்புடைய சரக்கினை விற்று, மாற்று விகிதம் ரூ. 1=15 பென்னிகளாக இருக்கும்போது அவ்விறக்கு மதியாளர்மீது 3 மாதத்தவணை ஸ்டெர்லிங் உண்டியல் ஒன்று எழுதப் பெறுகிறார் எனக் கொள்வோம். மேற்கண்ட விகிதப்படி ரூ. 10,000-க்குரிய இங்கிலாந்து ஸ்டெர்லிங்குகளின் மதிப்பு 625 பவுண்டுகளாகும். தந்தி மாற்றுமூலம் (Telegraphic Transfer) அச் செல்லுகள் பெறப்பட்டால் ஏற்றுமதியாளர் ரூ. 10,000-யும் முழுமையாகப் பெற்றுக் கொள்ளலாம். அவர் மூன்று மாதங்களுக்குப் பிறகு அத் தொகையைப் பெற்றுக்கொள்ள நேர்ந்தால் அவ்விடைக் காலத்தில் மாற்று விகிதம் மாற்றமடையக் கூடும். மூன்று மாதங்களுக்குப் பிறகு பணம் செலுத்தப்படும் நாளன்று ஸ்டெர்லிங்—ரூபாய் மாற்று விகிதம் ரூ. 1=16 பென்னிகளாக இருந்தால், தந்தி மாற்றம்மூலம் கிடைத்திருக்கக்கூடிய 625 பவுண்டுகள் இந்திய ஏற்றுமதியாளருக்கு ரூ. 10,000-க்குப் பதிலாக ரூ. 9,375 மட்டுமே அளித்து ரூ. 625 நட்டம்

ஏற்படுத்தும். குறிப்பிட்ட தவணைக் காலத்தின் இறுதியில் ஸ்டெர்லிங்கில் பணம் செலுத்த ஒப்புக் கொண்டிருக்கும் இறக்குமதியாளர் அவ்விறுதிக் காலத்தில் ரூபாய்—ஸ்டெர்லிங் மாற்று விகிதம் குறைவாய் இருப்பதை உணர்கிறார். ஆகவே, அவ்விறக்குமதியாளர் இறக்குமதி ஒப்பந்தத்தில் ஈடுபட்டபொழுது கொடுக்கப்படும் அளவைவிட மிகுதியான அளவு ரூபாய்களைத் தவணை இறுதிக்காலத்தில் கொடுக்க வேண்டியிருக்கிறது.

மாற்று அங்காடிகள் தடையற்றவையாக இருக்கும்போது மேற்குறிப்பிட்ட வணிகர்களின் இடர்களைப் போக்கும் பொருட்டு முன்னோக்கிய மாற்று அங்காடியின் பணிகள் கிடைக்கின்றன. முக்கிய நாடுகள் பொன் திட்டத்தைக் கைவிட்டவுடன் நிலவிய உயர்ந்த நிலையற்ற மாற்று விகிதங்களே முன்னோக்கிய மாற்று அங்காடிகளைத் தோற்றுவித்தன. மாற்று விகிதங்களில் உள்ள ஏற்ற இறக்கத்தின் இடர்களைப் போக்குவதற்கு முன்னோக்கிய மாற்றுக்களைத் தவிர அயல் நாட்டு உண்டியலில் அயல் நாட்டு மாற்று வாசகம் ஒன்றை இணைப்பது போன்ற வேறு சில வழிகளும் உள்ளன.

## முன்னோக்கிய மாற்றுக்கள்
## (Forward Exchanges)

ஒரு குறிப்பிட்டக் கால இறுதியில் முடிவடையக்கூடிய செலாவணி நடவடிக்கைகளைக் குறிப்பதே முன்னோக்கிய மாற்றுக்களாகும். அச் செலாவணிகளுக்கிடையே உள்ள மாற்று விகிதம் வணிக ஒப்பந்தம் ஏற்படும் பொழுதே உறுதி செய்யப்படுகிறது. ஒரு குறிப்பிட்ட அளவு அந்நியச் செலாவணிகள் குறிப்பிட்ட தவணைக் கால இறுதியில் தற்பொழுது நிர்ணயிக்கப்பட்ட மாற்று விகிதத்தில் செலுத்தப்படும் என்று விற்பவர், வாங்குபவர்களுக்கிடையே ஏற்படும் ஒப்பந்தமே முன்னோக்கியச் செலாவணி நடவடிக்கையாகும். அந்நியச் செலாவணி சேர்ப்பிக்கப்படும் பொழுதுதான் உள்நாட்டுச் செலாவணிப் பணமும் செலுத்தப்படும். (எ. கா.): மூன்று மாதங்களுக்குப்பிறகு இலண்டனில் உள்ள ஏற்றுமதியாளர் ஒருவருக்கு ஸ்டெர்லிங் செலாவணியில் ஒப்பந்தமான பணத்தைக் கொடுக்கவேண்டிய இந்திய இறக்குமதியாளர் ஒருவர், குறிப்பிட்ட மாற்று விகிதத்தில் 3 மாதங்கள் முன்னோக்கிய ஸ்டெர்லிங் செலாவணியை வாங்கலாம். ஆனால், வாங்குபவருக்கு ஸ்டெர்லிங் செலாவணி சேர்ப்பிக்கப்படும் பொழுதுதான் அதை வாங்குபவர் அவற்றிற்குரிய பணத்தைச் செலுத்துவார். அதுபோல் குறிப்பிட்ட எதிர்காலத்தில் அந்நியச்

செலாவணியில் செல்லுகளைப் பெற வேண்டிய ஏற்றுமதியாளர் ஒருவர் அச் செலாவணியைத் தற்பொழுது நிர்ணயிக்கப்பட்ட மாற்று விகிதத்தில் முன்னேக்கி விற்க ஏற்பாடு செய்யலாம்; ஆனல், செலாவணி சேர்ப்பிக்கப்படும்பொழுதுதான் அந்த ஏற்று மதியாளர் அதற்குரிய செல்லுகளைப் பெறலாம். முன்னேக்கியச் செலாவணி மாற்று நடவடிக்கைகள் பொதுவாக அங்காடியில் நடைபெறுகின்றன. அவற்றின் வாடிக்கையாளர்களுக் கிடையேயும் முன்னேக்கியச் செலாவணியின் மாற்று நடவடிக் கைகள் நடைபெறுகின்றன.

## முன்னேக்கியச் செலாவணி மாற்று விகிதம் குறிப்பிடல் (Quotations)

முன்னேக்கிய அந்நியச் செலாவணி மாற்று விகிதங்கள் அச் செலாவணியின் உடனடி விகிதத்தைப் (Spot) பொறுத்துப் பொதுவாக உயர்ந்த அளவிலோ, குறைந்த அளவிலோ ('at par' or 'at margin' i.e, 'at premium' or 'at discount') குறிக்கப்படுகின்றன. சில சமயங்களில் முழுமையுள்ள விகிதம் (out right rate) குறிப்பிடப்படும். ஆனல் இவ்விகிதம் தற்பொழுது நிலவும் உடனடி விகிதத்துக்கும் உயர்வாகவோ, குறைவாக வோதான் குறிப்பிடப்படுகிறது.

ஓர் அந்நியச் செலாவணி, உயர்மதிப்பில் முன்னேக்கி அளிக்கப் படுகிறது என்ருல் தற்பொழுது நிலவும் உடனடி விலையைவிட (Spot price) மிகுதியான விலையில் அச் செலாவணி கிடைக்கிறது என்று பொருள்படும் (பவுண்டு செலாவணி அல்லது மறைமுக விகிதங்களில்). உள்நாட்டுச் செலாவணியின் மாற்று விகிதம் குறிக்கப்பட்டால், முன்னேக்கிய மாற்று விகித விலைக்குறிப்பு உடனடி விகிதத்தைவிடக் குறைவாகவே இருக்கும். (எ. கா.): இலண்டன் செலாவணி மாற்று அங்காடியில் டாலர்களுக்கான முன்னேக்கிய விலைக் குறிப்பு கீழ்க்கண்டவாறு உள்ளதாகக் கொள்வோம். ஒரு பவுண்டுக்குள்ள டாலரின் உடனடி அல்லது தந்தி மாற்று விகிதம் ஒரு பவுண்டு $= 4 \cdot 85\frac{1}{2}$ டாலர்கள்.

ஒரு மாத முன்னேக்கிய மாற்று விகிதம்—$\frac{1}{4}$ செண்டு மதிப்புயர்வு (Premium)

இரண்டு மாத முன்னேக்கிய மாற்று விகிதம்—$\frac{3}{8}$ செண்டு மதிப்புயர்வு

மூன்று மாத முன்னேக்கிய மாற்று விகிதம்—$\frac{1}{2}$ செண்டு மதிப்புயர்வு

அதாவது ஒரு மாத முன்னேக்கிய மாற்று விகிதம்
1 பவுண்டு $= 4 \cdot 85\frac{1}{4}$ டாலர்கள்

இரண்டு மாத முன்னேக்கிய மாற்று விகிதம்
1 பவுண்டு $= 4 \cdot 85\frac{1}{8}$ டாலர்கள்

மூன்று மாத முன்னேக்கிய மாற்று விகிதம்
1 பவுண்டு $= 4 \cdot 85$ டாலர்கள்

என்று பொருள்படும். முன்னேக்கிய டாலர்கள் உயர்மதிப்பில் உள்ளதால் உடனடி டாலர்களைவிட அவற்றின் விலை மிகுதியாய் இருக்கிறது. குறிப்பிட்ட காலத்துக்குரிய முழுமையான முன்னேக்கு மாற்று விகிதத்தைத் கணிக்கும்போது ஒவ்வொரு காலத்துக்கும் கூடுதல் மதிப்புத் தொகை உடனடி மாற்று விகிதத்திலிருந்து கழிக்கப்பட்டு விடவேண்டும்.

முன்னேக்கியச் செலாவணி குறை மதிப்பில் (discount) இருக்கும்போது உடனடி விகிதத்தில் குறிப்பிடப்பட்டுள்ளதை விடக் குறைவான விலையிலேயே விற்கப்படுகிறது. உள்நாட்டுச் செலாவணியின் ஓர் அலகுக்கீடான முன்னேக்கிய அந்நியச் செலாவணியின் விகிதம் குறிப்பிடப்படும்பொழுது முன்னேக்கிய விகிதம் உடனடி விகிதத்தைவிட மிகுதியாக இருக்கும். இலண்டன் செலாவணி மாற்று அங்காடியில் முன்னேக்கிய ஃபிராங்குகள் கீழ்க்கண்டவாறு குறிப்பிடப்படும்.

உடனடி ஃபிராங்குகள் 92

ஒரு மாத முன்னேக்கிய ஃபிராங்குகள் 10 செண்டுகள் தள்ளுபடி

இரண்டு மாத முன்னேக்கிய ஃபிராங்குகள்
20 செண்டுகள் தள்ளுபடி

மூன்று மாத முன்னேக்கிய ஃபிராங்குகள்
30 செண்டுகள் தள்ளுபடி

அதாவது ஒரு மாத முன்னேக்கிய விகிதம் ஒரு பவுண்டு $= 92 \cdot 10$ ஃபிராங்குகள்

இரண்டு மாத முன்னேக்கிய விகிதம் ஒரு பவுண்டு $= 92 \cdot 20$ ஃபிராங்குகள்

மூன்று மாத முன்னேக்கிய விகிதம் ஒரு பவுண்டு $= 92 \cdot 30$ ஃபிராங்குகள்

அந்நியச் செலாவணியின் ஓர் அலகுக்கீடான (பென்னி அல்லது நேர்முக விகிதம்) உள்நாட்டுச் செலாவணியின் முன்னேக்கிய மாற்று விகிதம் குறிப்பிடப்படும்பொழுது உயர் மதிப்பாக (at premium) இருந்தால் உடனடி விகிதத்துடன் முன்னேக்கிய இறுதி நிலை (margin) கூட்டப்படுகிறது; குறை மதிப்பாக இருந்தால் (at discount) அவ்விறுதி நிலை கழிக்கப்படுகிறது. முன்னேக்கியச் செலாவணி மாற்று அங்காடிகள் சுறுசுறுப்பாக இயங்கும்போது இவ்வித இறுதி நிலைகள் நேர்முக விகிதத்துக்குக் குறிப்பிடுவது அரிதாகும்.

உடனடி விகிதங்கள் (Spot rates) குறிப்பிடப்படுவது போலவே வாங்குவோர், விற்போர் முன்னேக்கியச் செலாவணி மாற்று விகிதங்கள் இரண்டு விதங்களில் குறிப்பிடப்படுகின்றன. (எ. கா.): 'பாரிசு'க்குரிய முன்னேக்கிய மாற்று விகிதங்கள் இலண்டனில் 'ஒரு மாதத் தள்ளுபடி 10-20 செண்டுகள்' என்று குறிப்பிடப்பட்டிருக்கின்றன என்று கொள்வோம். அதே நாளில் 120·00—120·15 செண்டுகள் என்று இலண்டனில் உடனடி விகிதம் குறிப்பிட்டால் வாடிக்கையாளர்களுடன் மாற்று நடவடிக்கைகளில் பாங்குகள் ஈடுபடும்பொழுது கீழ்க்கண்ட விகிதங்களை மேற்கொள்ளலாம்.

| | விற்பனை ஃபிராங்குகள் | கொள்முதல் ஃபிராங்குகள் |
|---|---|---|
| உடனடி மாற்று விகிதம் (ஒரு பவுண்டுக்கு) | 120·00 | 120 15 |
| ஒரு மாத முன்னேக்கிய மாற்று விகிதம் | 120·10 | 120·35 |
| இரண்டு மாத முன்னேக்கிய மாற்று விகிதம் | 120·20 | 120·55 |
| மூன்று மாத முன்னேக்கிய மாற்று விகிதம் | 120·30 | 120·75 |

## விருப்ப முன்னேக்கு மாற்றுக்கள் (Option Forward Exchanges)

சில சமயங்களில் பாங்குடன் வாடிக்கையாளர் முன்னேக்குச் செலாவணி மாற்று ஒப்பந்தத்தில் ஈடுபடும் பொழுது எந்நாளில் அவ்வொப்பந்தத்தை அவரால் முடிக்கவியலும் என்று உறுதியாகக் கூறமுடியாது. குறிப்பிட்ட காலத்துக்குள் எந்நாளில் செல்லுகளைச் செலுத்துவதற்காக அவ் வாடிக்கையாளருக்கு அந்நியச் செலாவணி தேவைப்படும் என்றும் அல்லது அவருடைய கடனாளியிடமிருந்து எப்பொழுது அந்நியச் செலாவணி பெறக் கூடும் என்றும் வாடிக்கையாளருக்கு உறுதியாகத் தெரியாது.

இச் சந்தர்ப்பங்களில் அவர் முன்னேக்கு மாற்றுச் செலாவணி ஒப்பந்தங்களில் ஈடுபடலாம். இவ்வொப்பந்தத்தின்மூலம், இரு குறிப்பிட்ட தேதிகளுக்கிடையே உள்ள அல்லது ஒரு குறிப்பிட்ட காலத்திற்குள்ள எந்த நாளிலும் வாடிக்கையாளர் அவருடைய விருப்பத்திற்குகந்தவாறு ஒப்பந்தத்தை நிறைவேற்றி முடித்துக் கொள்ளலாம் என்று பாங்கு அனுமதி அளிக்கிறது. இவ்வித ஒப்பந்தத்தில் வாடிக்கையாளர் ஒப்பந்தத்தை முடித்துக் கொள்ளக்கூடிய நாள்தான் அவர் விருப்பத்திற்கு விடப்படுகிறது. மற்றெல்லா விதங்களிலும் சாதாரண முன்னேக்கு ஒப்பந்தத்தில் உள்ளதுபோல் ஒப்பந்த நபர்கள் அதனை நிறைவேற்றக் கடமைப் பட்டுள்ளார்கள்.

விருப்ப முன்னேக்கு நடவடிக்கைகளை வேறுபடுத்தும் பொருட்டுக் குறிப்பிட்ட நாளில் செலாவணிகள் சேர்ப்பிக்கப் படவேண்டிய சாதாரண முன்னேக்கு நடவடிக்கைகள் 'நிலையான முன்னேக்கு' (Fixed forward) நடவடிக்கைகள் என்றழைக்கப்படு கின்றன.

நிலையான முன்னேக்கிய மாற்று விகிதங்களின் குறிப்பீட்டின் (quotation) அடிப்படையில், முன்னேக்கிய ஒப்பந்தங்களுக்கும், பாங்கு வாடிக்கையாளருக்கு விகிதம் குறிப்பிட வேண்டும். விருப்ப ஒப்பந்தத்தில், விருப்பக் காலத்திற்குள்ள எந்த நாளிலும் ஒப்பந்தத்தை நிறைவேற்ற வாடிக்கையாளர் விரும்பலாம். நிலையான முன்னேக்கு ஒப்பந்தத்தில் கால வேறுபாட்டுக் குகந்தவாறு முன்னேக்கு விகிதங்களும் மாறுபடும். விருப்ப ஒப்பந்தத்தில் குறிப்பிட்ட காலம் முழுவதும் ஒரே விகிதம் நிலவும். அவ் விகிதம் பொதுவாகப் பாங்குக்குச் சாதகமாகவே இருக்கும்.

(எ. கா.): இலண்டனில் ஸ்டெர்லிங் — டாலர்களுக்குரிய நடப்பு முன்னேக்கு விகிதக் குறிப்பு கீழ்க்கண்டவாறு உள்ளதாகக் கொள்வோம்.

| | டாலர்கள் |
|---|---|
| உடனடி விகிதம் (Spot rates) | $4 \cdot 88\frac{1}{2}$—$4 \cdot 92\frac{1}{2}$ |
| ஒரு மாத முன்னேக்கிய மாற்று விகிதம் | 5—6 செண்டுகள் தள்ளுபடி |
| இரண்டு மாத முன்னேக்கிய மாற்று விகிதம் | $10$—$11\frac{1}{2}$ செண்டுகள் தள்ளுபடி |
| மூன்று மாத முன்னேக்கிய மாற்று விகிதம் | $15\frac{1}{2}$—$17\frac{1}{2}$ செண்டுகள் தள்ளுபடி |

முன்னேக்கு நடவடிக்கைகளுக்குரிய முழுமையான விலைக் குறிப்பு கீழ்க்கண்டவாறு இருக்கும் :

| | விற்பனை டாலர்கள் | கொள்முதல் டாலர்கள் |
|---|---|---|
| உடனடி மாற்றுக்கள் | $4 \cdot 88\frac{1}{2}$ | $4 \cdot 92\frac{1}{2}$ |
| நிலையான ஒரு மாத முன்னேக்கிய மாற்றுக்கள் | $4 \cdot 93\frac{1}{2}$ | $4 \cdot 98\frac{1}{2}$ |
| நிலையான இரண்டு மாத முன்னேக்கிய மாற்றுக்கள் | $4 \cdot 98\frac{1}{2}$ | $5 \cdot 04$ |
| நிலையான மூன்று மாத முன்னேக்கிய மாற்றுக்கள் | $5 \cdot 04$ | $5 \cdot 09\frac{1}{2}$ |

தற்பொழுது தொடர்ந்த ஒரு மாதத்துக்குள் தன் விருப்பப்படி வாடிக்கையாளர் டாலர்களை முன்னேக்கி வாங்க விரும்பினுல், குறிப்பிட்ட மாதத்தின் எத் தேதியிலும் டாலர்களை ஒப்படைக்கும் என்று பாங்கு அவ் வாடிக்கையாளருக்கு உறுதி கூறும். ஆகவே, வாடிக்கையாளர் அம் மாதத்தின் முதல் அல்லது இறுதி நாள் அல்லது இவ்விரு தேதிகளுக்கிடையேயுள்ள எத் தேதியிலும் டாலர்களை ஒப்படைக்குமாறு, அப் பாங்கை வேண்டலாம். அம் மாதத்திற்குரிய எத் தேதியிலும் டாலர்களை வாடிக்கையாளர்களுக்கு ஒப்படைக்க வேண்டும் என்று பாங்கு அறிந்திருக்கும். இந் நடவடிக்கைகளுக்குரிய மாற்று விகிதத்தைக் குறிப்பிடும்பொழுது அப்பொழுது நிலவும் மாற்று விகிதங்களையும் பாங்கு ஆராயும். ஆகவே, பாங்கு தனக்குச் சாதகமான விகிதத்தையே குறிப்பிடும்.

இவ்வடிப்படையில், வாடிக்கையாளர் தனக்கு உடனடியாகச் செலாவணி வேண்டும் என்று விரும்பினுல் பாங்கின் உடனடி விற்பனை விகிதம் $4 \cdot 88\frac{1}{2}$ டாலர்களாக இருக்கும். ஒரு மாத இறுதிக்குள் பாங்கு தன்னிடம் செலாவணியை ஒப்படைக்க வேண்டும் என்று வாடிக்கையாளர் விரும்பினுல் நிலையான ஒரு மாத முன்னேக்கு மாற்று விகிதம் $4 \cdot 93\frac{1}{2}$ டாலர்களாக இருக்கும். ஒரு மாதத்துக்கு மிகுதியான விருப்ப முன்னேக்கு மாற்றுக்களுக்கு, பாங்கு தனக்கு மிகவும் சாதகமான விகிதத்தையே ($4 \cdot 88\frac{1}{2}$ டாலர்கள்) குறிப்பிடும். இம் முறையே இரண்டு அல்லது மூன்று மாத விருப்ப முன்னேக்கு மாற்றுக்களுக்கும் கடைப்பிடிக்கப்படும். இரண்டு மாத விருப்ப முன்னேக்கு மாற்றுக்களுக்குப் பாங்கால் குறிக்கப்படும் விகிதம் $4 \cdot 93\frac{1}{2}$ டாலர்கள் அதாவது இரண்டாவது மாதத்தின் முதல் தேதியில் ஒப்படைக்கக்

கூடிய டாலர்களாகும். இவ்விகிதமே இரண்டாவது, மூன்றாவது மாதத்துக்கும் பொருந்தும். மூன்றாவது மாதத்தின் முதல் நாளிலேயே ஒப்படைக்கக்கூடிய மாற்று விகிதம் $4 \cdot 98\frac{1}{2}$ டாலர்கள் ஆகும்.

இதே கொள்கையின் அடிப்படையில் வாடிக்கையாளர் பாங்குக்கு டாலர்களை விற்க விரும்பினால் அவ்வாடிக்கையாளரிடமிருந்து டாலர்களைப் பாங்கு வாங்கும் விகிதம் முதல் மாதத்தின் முதல் நாள், இறுதி நாளுக்குமுள்ள மாற்று விகிதம் $4 \cdot 92\frac{1}{2}$, $4 \cdot 98\frac{1}{2}$ டாலர்கள் என்று பாங்கு குறிப்பிடும். இவ்விகிதம்தான் பாங்குக்கு (ஒரு பவுண்டுக்கு) மிகுதியான டாலர்களைக் கொடுக்கும் (அதாவது $4 \cdot 98\frac{1}{2}$ டாலர்கள்). இதுபோல் இரண்டு மாத முன்னேக்கு மாற்றுக்களுக்கு $5 \cdot 04$ டாலர்கள் என்றும், மூன்று மாத முன்னேக்கு மாற்றுக்களுக்கு $5 \cdot 09\frac{1}{2}$ டாலர்கள் என்றும் பாங்கு வாங்கும் விகிதம் குறிப்பிடப்படும்.

கீழ்க்கண்டவாறு முன்னேக்கிய மாற்று விகிதங்கள் பாங்கால் குறிக்கப்படுகின்றன :

| | விற்பனை டாலர்கள் | கொள்முதல் டாலர்கள் |
|---|---|---|
| ஒரு மாத விருப்ப முன்னேக்கிய மாற்றுக்கள் | $4 \cdot 88\frac{1}{2}$ | $4 \cdot 93\frac{1}{2}$ |
| இரண்டு மாதங்கள் விருப்ப முன்னேக்கிய மாற்றுக்கள் | $4 \cdot 88\frac{1}{2}$ | $5 \cdot 04$ |
| இரண்டு மாதங்களுக்கு மிகுதியான விருப்ப முன்னேக்கிய மாற்றுக்கள் | $4 \cdot 93\frac{1}{2}$ | $5 \cdot 04$ |
| மூன்று மாதங்களுக்கு விருப்ப முன்னேக்கிய மாற்றுக்கள் | $4 \cdot 88\frac{1}{2}$ | $5 \cdot 09\frac{1}{2}$ |
| இரண்டு, மூன்று மாதங்களுக்கும் மிகுதியான விருப்ப முன்னேக்கிய மாற்றுக்கள் | $4 \cdot 93\frac{1}{2}$ | $5 \cdot 09\frac{1}{2}$ |
| மூன்று மாதங்களுக்கும் மிகுதியான விருப்ப முன்னேக்கிய மாற்றுக்கள் | $4 \cdot 98\frac{1}{2}$ | $5 \cdot 09\frac{1}{2}$ |

டாலர்கள் உயர் மதிப்பில் (at a premium) இருக்கும்போது இக் கொள்கையே கடைப்பிடிக்கப்படும். ஒரு குறிப்பிட்ட நாளில் அங்காடி மாற்று விகிதங்கள் கீழ்க்கண்டவாறு இருந்தால் :

| | டாலர்கள் |
|---|---|
| உடனடி விகிதம் (Spot rate) | $4 \cdot 88\frac{1}{2}$—$4 \cdot 92\frac{1}{2}$ |
| ஒரு மாத முன்னேக்கிய மாற்று விகிதம் | 3 — 2 செண்டுகள் |
| இரண்டு மாத முன்னேக்கிய மாற்று விகிதம் | 6 —$4\frac{1}{2}$ செண்டுகள் |

மூன்று மாதங்கள் முன்னோக்கிய மாற்று
விகிதம் 9 —7 செண்டுகள்

அடியில் கண்டவாறு அந் நாளில் டாலர்கள் உயர் மதிப்பில் விகிதங்கள் குறிப்பிடப்படும் :

| | விற்பனை டாலர்கள் | கொள்முதல் டாலர்கள் |
|---|---|---|
| உடனடி மாற்று விகிதம் (Spot rate) | 4·88½ | 4·92½ |
| நிலையான ஒரு மாத முன்னோக்கிய மாற்று விகிதம் | 4·85½ | 4·90½ |
| நிலையான இரண்டு மாத முன்னோக்கிய மாற்று விகிதம் | 4·82½ | 4·88 |
| நிலையான மூன்று மாத முன்னோக்கிய மாற்று விகிதம் | 4·79½ | 4.81½ |
| ஒரு மாத விருப்ப முன்னோக்கிய மாற்று விகிதம் | 4·85½ | 4·92½ |
| இரண்டு மாத விருப்ப முன்னோக்கிய மாற்று விகிதம் | 4·82½ | 4·92½ |
| இரண்டு மாதங்களுக்கு மிகுதியான விருப்ப முன்னோக்கிய மாற்று விகிதம் | 4·82½ | 4·90½ |
| மூன்று மாத விருப்ப முன்னோக்கிய மாறுற்று விகிதம் | 4·79½ | 4·92½ |
| இரண்டு, மூன்று மாதங்களுக்கு மிகுதியான விருப்ப முன்னோக்கிய மாற்று விகிதம் | 4·79½ | 4·90½ |
| மூன்று மாதங்களுக்கு மிகுதியான விருப்ப முன்னோக்கிய மாற்று விகிதம் | 4·79½ | 4·88 |

## முன்னோக்கிய விகிதங்களை நிர்ணயித்தல்

மற்ற விலைகளைப்போல் முன்னோக்கிய மாற்றுக்களின் (செலாவணிகள்) தேவை, அளிப்பைப் பொறுத்து அவற்றின் விலைகள் (விகிதங்கள்) நிர்ணயிக்கப்படுகின்றன. முன்னோக்கியச் செலாவணியின் தேவை அதன் அளிப்பைவிட மிகுதியாக இருந்தால் உள் நாட்டுச் செலாவணியில் அதன் விலை உயர்கிறது அல்லது முன்னோக்கியச் செலாவணி மதிப்பு உயர்கிறது. மாறாக, தேவையும் அளிப்பும் எதிர் நிலையில் இருக்கும்போது மாறுபட்ட விகிதம் நிலவும்.

இயல்பான காலங்களில் முன்னோக்கிய விகிதம் உடனடி விகிதத்துடன் நெருங்கிய தொடர்புடையது. இரண்டு பண அங்காடிகளிலுள்ள வட்டி விகிதங்களின் வேறுபாட்டைப் பொறுத்தே முன்னோக்கிய மாற்றுக்களின் இறுதி நிலை இருக்கும். ஏனென்றால், அந்நியச் செலாவணியை முன்னோக்கி வாங்கும் அல்லது விற்கும் வணிகர் ஒருவர் உடனடி அங்காடியில் அவற்றுக் கெதிரான மாற்று நடவடிக்கைகளில் ஈடுபட்டு அவற்றைச் சரிக் கட்டுகிறார். இவ்வாறு முன்னோக்கியக் கொள்முதல் உடனடிக் கொள்முதலால் சரிக்கட்டப்படுகிறது. மாற்று விகிதங்களில் பாதக மாற்றங்களால் ஏற்படும் நட்டங்களைத் தவிர்த்துத் தகுந்த நிதிகளை அவற்றிற்குகந்த இடங்களில் பெற்று முன்னோக்கிய வணிகத்தி லுள்ள ஒப்பந்தப் பொறுப்புகளை வணிகர் சரிக்கட்டுகிறார். இரண்டு இடங்களில் ஏற்படும் வெவ்வேறு வட்டி விகிதங்களைப் பொறுத்து வணிகர் ஓர் இடத்திலிருந்து மற்றோர் இடத்திற்கு நிதி மாற்றத்திற்கு வழிகோலுகிறார். முன்னோக்கிய வணிகத்தில் குறிக்கப்படும் விகிதத்தில் வட்டி நட்டத்திற்கும், வட்டி இலாபத் திற்கும் தகுந்த ஒதுக்கீடு செய்யப்படுகிறது,

இலண்டனில் உள்ள அயல் நாட்டு மாற்று வணிகர் ஒருவர் உடனடிக் கொள்முதல் மூலம் முன்னோக்கு ஃபிராங்குகள் விற்பனைச் சரிக்கட்டுகிறார் என்றால் இலண்டனில் உள்ள ஃபிராங்கு இருப்புக் களைக் குறைத்து, பாரிசில் மிகுதியான ஃபிராங்குகள் இருப்புக் களைக் கைக்கொள்ளுகிறார் என்று பொருள். பாரிசில் குறுங்கால முதலீடுகளின் வட்டி விகிதங்கள் இலண்டனில் உள்ள வட்டி விகிதங்களைவிட மிகுதியாக இருந்தால் உடனடி ஃபிராங்குகள் கொள்முதல் அவ் வணிகருக்கு இலாபமளிக்கிறது. ஆகவே, அவர் ஃபிராங்குகளைத் தள்ளுபடியில் முன்னோக்கி அளிக்கத் தயாராய் இருக்கிறார். அவர் அளிக்கக் கூடிய தள்ளுபடி அளவானது அவருக் குகந்த இலாபத்தை நீக்கி, இலண்டனிலிருந்துப் பாரிசுக்கு நிதி யைப் பெறுவதில் அவருக்குக் கிடைக்கும் அளவில்தான் இருக்கும். உண்மையிலேயே வணிகர்களுக்கிடையே ஏற்படும் போட்டிச் சக்திகள் சிறிது தள்ளுபடி அளிக்கச் செய்து அவர்கள் ஈட்டிய வட்டிகள் யாவும் அத் தள்ளுபடியில் சரிக்கட்டப்பட்டுவிடும். இதைவிட மிகுதியான தள்ளுபடி, வணிகர்கள், மேலும் முன்னோக் கியப் ஃபிராங்குகள் விற்பனை செய்வதைத் தடைப்படுத்துகிறது, ஆகவே, அவர்கள் முன்னோக்கிய ஃபிராங்குகளை வாங்கி உடனடி விற்பனை செய்யலாம். இக் காரணத்தால் பாரிசில் உள்ள வட்டி விகிதங்கள் இலண்டனில் உள்ளதைவிடக் குறைவாக இருந்தால் முன்னோக்கு ஃபிராங்குகளின் மதிப்புயரும் (Premium). (எ.கா.): இலண்டன்-பாரிஸ் உடனடி விகிதம் 121 ஃபிராங்குகள் = 1

பவுண்டு; குறுங்கால வட்டி விகிதம் இலண்டனில் 4%, பாரிசில் 6% அதாவது வேறுபாடு 2% எனக் கொள்வோம். இலண்டனிலிருந்துப் பாரிசுக்கு ஒரு பவுண்டுக்குச் சமமான நிதியை மாற்றினால், ஒரு மாதத்தில் வட்டி விகித வேறுபாட்டிலிருந்து வணிகர் 20 செண்டுகள் இலாபம் அடைகிறார். சில்லரைச் செலவுகளுக்கும், சிறு அளவு இலாபத்துக்கும் 8 செண்டுகள் ஒதுக்கிய பிறகு, உடனடி ஃபிராங்குகளைவிட முன்னோக்கிய ஃபிராங்குகளுக்கு 12 செண்டுகள் சலுகை அளிக்க அவ் வணிகர் தயாராக இருப்பார்.

ஆகவே,

ஒரு மாதத்துக்குரிய முன்னோக்கிய விகிதம் 124·12 செண்டுகள்

இரண்டு மாதத்துக்குரிய முன்னோக்கிய விகிதம் 121·24 செண்டுகள்

மூன்று மாதங்களுக்குரிய முன்னோக்கிய விகிதம் 121·36 செண்டுகள்

ஆகும். கால மாறுபாட்டு விகித அளவிலேயே செலவுகளும், இலாபமும் மாற்றமடையா. அதுபோல இலண்டன் வட்டி விகிதம் பாரிசைவிட மிகுதியாக இருந்தால் இலண்டனில் உள்ள உடனடி அங்காடியில் முன்னோக்கிய ஃபிராங்குகளின் மதிப்புயர்ந்திருக்கும்.

இவ்விரண்டு இடங்களில் உள்ள வட்டி விகிதங்களில் மாறுபாடு மிகுதியானால் முன்னோக்கு, உடனடி விகிதங்களிலும் வேறுபாடு மிகுதியாகும். வட்டி விகிதங்களின் இடைவெளி குறுகினால் முன்னோக்கு, உடனடி விகிதங்களின் இடைவெளியும் குறுகும்.

## முன்னோக்கிய விகிதங்களைப் பாதிக்கக்கூடிய மற்ற காரணிகள்

உடனடி முன்னோக்கு விகிதங்களில் இருக்கும் இறுதி நிலைகளானது அவை தொடர்புள்ள இரண்டு இடங்களிலுமுள்ள வட்டி விகிதங்களைப் பொறுத்தது. ஆனால் முன்னோக்கு வணிகம் தொடர்புள்ள தேவை அளிப்பு நிலைமைகள் மற்ற காரணிகளாலும் பாதிக்கப்பட்டு முன்னோக்கு விகிதங்களுக்கும் பாதிப்பை ஏற்படுத்துகின்றன. இவ் விகிதங்களைக் கணிப்பதற்குச் சில சந்தர்ப்பங்களில் இயல்பான விதிகள் பொருந்தாமல் போகலாம். உண்மையிலேயே முன்னோக்கியச் செலாவணி நடவடிக்கைகளின்

அளவுகள் ஒப்புக்கொண்ட எக் காரணிகளாலும் கட்டுப்படுத்தப் படுவன அன்று.

சில காரணங்களால் ஓர் இடத்திலுள்ள தொழிலகங்களின் நிதிகள் சிறிது காலத்திற்குப் பிறகு வேறு ஓர் இடத்தில் தேவைப் பட்டால் மற்ற நாட்டுச் செலாவணிக்கான தேவை முன்னேக்கு அங்காடியில் அதிகரிக்கும். அம் முன்னேக்கியச் செலாவணியின் மதிப்புயர்வு மேலும் அதிகரிக்கும். அச் செலாவணியிலுள்ள தள்ளுபடி—மதிப்பிறக்கம் மாறி மதிப்புயர்வாக ஆகலாம்.

போர்க் காலத்தின்போது ஒரு நாட்டிலிருந்து மற்றொரு நாட்டிற்கு மிகுதியான மூலதனப் பெயர்ச்சி ஏற்படுவதால் முன்னேக்கியச் செலாவணியின் இறுதி நிலையைக் கணிக்கும் இயல் பான விதிகள் செயல்படா. ஒரு நாட்டின் அரசியல், பொருளா தார இடர்கள், மூலதன வெளியோட்டத்துக்குக் (outflow of capital) காரணமாக விளங்கினல் அந் நாட்டுச் செலாவணி அளிப்பு மிகுதியாக இருக்கும். ஈடுகளையும் (Securities), முதலீடு களையும் (Investments) பணமாக மூலதனப் பெயர்ச்சிக்குக் கால தாமதம் ஆகும் ஆதலால் செலாவணி முன்னேக்கி அளிக்கப்படு கிறது. வெவ்வேறு இடங்களில் நிலவும் பல்வேறுபட்ட வட்டி விகிதங்களுடன் தொடர்ப்பு கொள்ளாமல் அப்பொழுது முன்னேக்குச் செலாவணியில் தள்ளுபடி (குறை மதிப்பு) அதிகரிக்கும். முன்னேக்கு அங்காடியின் நிலைமைகள் பாதிக்கப் பட்டு அங்காடி செயலற்றுப் போகிறது.

அதுபோல் செலாவணியின்மீதான நம்பிக்கை இழப்பு அச் செலாவணிக்கெதிரான ஊக வணிகத்தைத் தூண்டுகிறது. மாற்று அங்காடியில் உள்ள ஊக வணிகம் சிக்கலாக இருக்கும். அதாவது உடனடி அங்காடியில் தகுந்த கொள்முதல் இல்லாமல் அச் செலாவணியில் மிகுதியான முன்னேக்கு விற்பனை நிகழும். மிகுதியான முன்னேக்கு விற்பனைத் தள்ளுபடியை (மதிப்புக் குறைப்பை) அதிகரிக்கும். முன்னேக்கு விற்பனையால் ஏற்படும் தங்கள் பொறுப்புக்களைச் சரிக்கட்ட பிற்காலத்தில் சாதக விகிதங் களில் செலாவணிகளை வாங்கிக் கொள்ளலாம் என்று வணிகர்கள் உடனடிக் கொள்முதலில் ஈடுபடாமல் முன்னேக்கு விற்பனையில் மட்டும் ஈடுபடுகிறார்கள். இச் செயல்கள் மாற்று விகிதங்கள் செலாவணிக்கெதிராகப் பெயரக் காரணமாக இருக்கின்றன. செலாவணியைக் குறைந்த மாற்று மதிப்பில் நிலை நிறுத்துவதற்குத் தகுந்த நடவடிக்கைகள் பண அதிகாரிகளால் எடுக்கப்படும் வரையில் இப் பெயர்ச்சி தொடர்ந்து நிகழும். பிறகு ஊக வணிகம்

செயலற்று முன்னேக்கு இறுதி நிலை (margin) உடனடி விகிதத்தின் சமநிலைக்கு வந்துவிடும்.

## முன்னேக்கியச் செலாவணி நடவடிக்கைகளுக்குரிய பாதுகாப்பு

முன்னேக்கியச் செலாவணி நடவடிக்கைகளில் ஈடுபடும் பாங்கு, வாடிக்கையாளர்களுக்கு மாற்று விகித ஏற்ற இறக்கத்தால் ஏற்படும் இடர்களுக்குக் காப்பீடு அளிக்கிறது. ஆனால், முன்னேக்கியச் செலாவணிகளை வாங்கும்போதும் அல்லது விற்கும் போதும், பாங்கு எதிர்காலத்தில் பாதகமான விகிதத்தில் (ஏற்கனவே வாங்கிய) செலாவணிகளை விற்பதற்கும், திரும்பவும் வாடிக்கையாளர்களுக்கு அளிப்பதற்காக அவற்றை வாங்குவதற்கும், இடர்ப்பாட்டில் தன்னை ஈடுபடுத்திக் கொள்கிறது. 4·86 டாலர்கள் = 1 பவுண்டு என்ற விகிதத்தில், இலண்டன் பாங்கு ஒன்று மூன்று மாத முன்னேக்கிய டாலர்களை விற்று, வாடிக்கையாளருக்குச் செலுத்தப்படும்பொருட்டு மூன்ருவது மாத இறுதியில் (அப்பொழுது) நிலவும் 4·85 டாலர்கள் = 1 பவுண்டு என்ற உடனடி விகிதத்தில் அச் செலாவணியை வாங்கி நட்டம் அடைகிறது. ஆனால், பாங்கு ஊக வணிகத்தைத் தவிர்த்து நிலையில்லா வணிகத்தில் ஈடுபடாது. ஆகவே, முன்னேக்கிய நடவடிக்கைகளில் ஏற்படும் இடர்களிலிருந்து அவற்றைக் காத்துக் கொள்ளும்பொருட்டுப் பாங்குகள் தகுந்த நடவடிக்கைகள் எடுக்கின்றன. அந் நடவடிக்கைகளாவன:—

1. முன்னேக்கியச் செலாவணி விற்பனைக்கீடான முன்னேக்குச் செலாவணிகளை வாங்கியும், முன்னேக்கியச் செலாவணிக் கொள்முதலுக்கீடான முன்னேக்குச் செலாவணிகளை விற்றும் ஒரு வகையில் பாங்கு அதனைக் காத்துக் கொள்ளலாம். (எ.கா.): ஒரு பாங்கு, மூன்று மாதங்கள் முன்னேக்கிய டாலர்களை விற்கும். அதே நேரத்தில் மூன்று மாதங்கள் முன்னேக்கிய டாலர்களை அங்காடியில் நிலவும் முன்னேக்கிய விகிதத்தில் வாங்குகிறது. மூன்று மாதங்களுக்குப் பிறகு, வாங்கியவருக்கு டாலர்களை ஒப்படைக்கவேண்டிய நேரத்தில் பாங்கு அதன் சொந்தக் கொள் முதல் தொகையிலிருந்து டாலர்களை அளிக்கிறது. முன்னேக்குச் செலாவணியை விற்பதற்காக வாடிக்கையாளரிடமிருந்து கிடைக்கக்கூடிய இயல்பான கழிவு தவிர இம் முன்னேக்கு மாற்று நடவடிக்கையில் பாங்குக்கு எவ்வித இலாப, நட்டமும் இல்லை. அப் பாங்கு அந்நியச் செலாவணியை வாங்கும்போது அதற்கு எவ்விதக் கழிவும் கிடைக்காது.

எப்படி இருந்தபோதிலும் செலாவணியின் உடனடி மாற்று விகிதம் வேகமாக ஏற்ற இறக்கம் அடையும்போது அதே வேகத்தில் முழுமையானக் கொள்முதல் அல்லது விற்பனை செய்வது பாங்குக்குப் பாதுகாப்புடையதல்ல. முன்னேக்குச் செலாவணியின் இறுதி நிதி மாற்றமடைவது அரிது. ஆகையால் உடனடி விகிதம் பாதக நிலையை அடைகிறது. இவ்விதப் பாதுகாப்பு நடவடிக்கைகள் பாங்குக்கு நட்டத்தை விளைவிக்கும்.

2. முன்னேக்கியச் செலாவணியை விற்ற அளவுக்குச் சமமாக உடனடி மாற்றுக்களை வாங்கி அவ் விற்பனையை நிரப்பலாம். அது போல் உடனடி விற்பனைமூலம் முன்னேக்கியக் கொள்முதலை நிரப்பலாம். ஒரு குறிப்பிட்ட அளவு அந்நியச் செலாவணிகளை முன்னேக்கி விற்றவுடன், தந்தி மாற்று (Telegraphic Transfer) அல்லது அஞ்சல் மாற்று (Mail Transfer) அல்லது செக்கு அல்லது காட்சிப் பண விடை (Sight Draft) வாங்குவதன்மூலம் அயல் நாட்டில் பணம் கிடைக்கும். இவ்வாறே முன்னேக்கியச் செலாவணிக் கொள்முதல் அதற்கிணையான உடனடிச் செலாவணிகளை விற்பதன்மூலம் நிரப்பப்படுகிறது. முன்னேக்கு மாற்று விகிதத்துக்கும், உடனடி மாற்று விகிதத்துக்கும் இடையேயுள்ள வேறுபாட்டால் ஏற்படும் இலாப, நட்டம் இரண்டு நாடுகளிலுள்ள வட்டி விகித வேறுபாட்டால் ஏற்படும் நட்ட, இலாபத்தால் சரிக்கட்டப்படும். வணிகரின் கழிவே (Commission) அவருக்கு இயல்பான வருவாயாகும். (எ. கா.): இலண்டனில் உள்ள பாங்கு ஒன்று மூன்று மாத முன்னேக்கிய டாலர்களை ஒரு பவுண்டு $= 4 \cdot 86\frac{1}{2}$ டாலர்கள் என்ற விகிதத்தில் செய்த விற்பனையை உடனடி அங்காடியில் ஒரு பவுண்டு $= 4 \cdot 86$ டாலர்கள் என்ற விகிதத்தில் டாலர்களை வாங்கி நிரப்பி $\frac{1}{2}$ செண்டு நட்டம் அடைகிறது. ஆனல், நியூயார்க்கில் மூன்று மாதங்களுக்கு நிலுவையாக உள்ள $4 \cdot 86$ டாலர்களுக்குக் கிடைக்கக்கூடிய வட்டி $\frac{1}{2}$ செண்டை விட மிகுதியாக இருக்கும். குறுங்கால வட்டி விகிதம் இலண்டனில் இருப்பதைவிட நியூயார்க்கில் உயர்ந்த விகிதத்தில் இருக்கிறது என்பதை, உடனடி விகிதத்தைவிடக் கூடுதலாக இருக்கும் முன்னேக்கிய விகிதம் உணர்த்துகிறது. ஆகவே, இரண்டு நடவடிக்கைகளையும் ஆராயும்போது இரண்டிலும் நட்டமோ, இலாபமோ இல்லை.

அந்நியச் செலாவணியில் உடனடிக் கொள்முதல் அல்லது விற்பனையால் ஒரே இடத்தில் சில காலத்துக்குப் பாங்கு நிதிகள் தேங்கிக்கிடப்பது அவ்வளவு உகந்ததல்ல. மூன்று மாதங்கள் முன்னேக்கிய டாலர்கள் விற்பனையை நிரப்புவதற்குப் பாங்கு

உடனடி டாலர்கள் வாங்கினல் நியூயார்க்கில் அப் பாங்கின் பணம் மூன்று மாதங்கள் தேங்கிக்கிடக்கும். இப்போக்கைப் பாங்கு பொதுவாக விரும்பாது. இவ்விரு முறைகளிலும் உள்ள இடையூறுகளைத் தவிர்ப்பதற்காகப் பாங்குகள் கீழ்க்கண்ட மூன்ருவது வகை நடவடிக்கையை மேற்கொள்ளுகின்றன.

3. வாடிக்கையாளரிடமிருந்து பாங்கு முன்னேக்கியச் செலாவணியை வாங்கியவுடன் அல்லது விற்றவுடன் அதற்கீடான தொகையை உடனடி அங்காடியில் விற்று அல்லது வாங்கி நிரப்பிக் கொள்ளும். ஆனல் எவ்வளவு விரைவில் முடியுமோ அவ்வளவு விரைவில் அப் பாங்கு 'மாற்று நடவடிக்கைகளில்' (Swap deals) ஈடுபடும். அதாவது முன் நடவடிக்கைகளில் ஏற்பட்ட நட்டத்தைச் சரிக்கட்ட அந் நடவடிக்கைகளுக்கு நேர் எதிரான உடனடி, முன்னேக்கு மாற்று நடவடிக்கையில் பாங்கு ஈடுபடும். (எ.கா.): இலண்டனில் உள்ள பாங்கு ஒன்று அதன் வாடிக்கையாளருக்கு மூன்று மாதங்கள் முன்னேக்கிய டாலர்களை விற்ற உடன் அவற்றிற்குச் சமமான உடனடி டாலர்களை வாங்குகிறது. மறுநாளோ இரண்டு, மூன்று நாட்களுக்குள்ளோ அதே பாங்கு மூன்று மாத முன்னேக்கிய டாலர்களை வாங்கி அதே அளவு உடனடி டாலர்களை விற்கிறது. இவ்வாறு முதல் நடவடிக்கையில் விற்பனையான முன்னேக்கிய டாலர்கள் இரண்டாவது நடவடிக்கையில் வாங்கப்பட்ட முன்னேக்கிய டாலர்களால் சரிக்கட்டப்படுகின்றன. முதல் நடவடிக்கையில் வாங்கப்பட்ட முன்னேக்கிய டாலர்கள் இரண்டாவது நடவடிக்கையில் விற்கப்பட்ட டாலர்களால் சரிக்கட்டப்படுகின்றன. முதல் நடவடிக்கையின்போது உடனடி மாற்று விகிதம் 1 பவுண்டு $=4 \cdot 86\frac{1}{4}$ டாலர்கள் என்றும், மூன்று மாத முன்னேக்கிய மாற்று விகிதம் $\frac{1}{2}$ செண்டு தள்ளுபடி என்றும், ஆகவே மூன்று மாத முன்னேக்கிய மாற்று விகிதம் 1 பவுண்டு $=4 \cdot 86\frac{3}{4}$ டாலர்கள் என்றும் கொள்வோம். இரண்டாவது நடவடிக்கையின்போது உடனடி மாற்று விகிதம் 1 பவுண்டு $=4 \cdot 86$ டாலர்களாக மாறி, தள்ளுபடி முன்புபோலவே இருந்தால் மூன்று மாத முன்னேக்கிய மாற்று விகிதம் ஒரு பவுண்டு $=4 \cdot 86\frac{1}{2}$ டாலர்கள் ஆகும். முதல் வகை நடவடிக்கையில் முன்னேக்கிய டாலர்களுக்குத் தான் பெறுவதற்கு ஒப்புக்கொண்ட அளவுக்குமேல் உடனடி டாலர்களுக்கு பவுண்டு ஒன்றுக்கு—கூடுதலாகக் கொடுக்கப்பட்ட $\frac{1}{2}$ செண்டு, இரண்டாவது மாற்று நடவடிக்கையில் முன்னேக்கிய டாலர்களுக்குத் தான் கொடுக்க ஒப்புக்கொண்ட அளவுக்குமேல் உடனடி டாலர்களுக்குக் கிடைக்கப் பெறும் கூடுதலான $\frac{1}{2}$ செண்டு டாலரால் சரிக்கட்டப்படும். இவ்வாறு முதல் நடவடிக்கையினல் ஏற்படக்கூடிய

நட்டம் இரண்டாவது நடவடிக்கையின்மூலம் கிடைக்கக்கூடிய இலாபத்தினால் சரிக்கட்டப்படுகிறது.

## இரட்டை மாற்று நடவடிக்கைகள்
## ( Swaps )

குறிப்பிட்ட ஒரே நேரத்தில் நிகழக்கூடிய உடனடிச் செலாவணி, விற்பனை, கொள்முதல், அச் செலாவணியின் அதே அளவு முன்னோக்குச் செலாவணி வாங்குதல், விற்பனை நடவடிக்கைகளைக் குறிப்பதே 'இரட்டை மாற்று நடவடிக்கைகள்' (Swap or Double deals) ஆகும்.

அயல் நாட்டில் குறுங்கால முதலீடு செய்வதற்கோ, குறுங்கால வைப்புகளில் செலுத்துவதற்கோ உடனடிச் செலாவணியை வாங்கும் முதலீட்டாளர் ஒருவர் அந் நிதிகளைத் திரும்பப் பெறும்போது மாற்று விகிதத்தில் ஏற்படும் பாதக ஏற்ற இறக்கத்தைச் சரிக்கட்டும் பொருட்டு முன்னோக்குச் செலாவணியை விற்கிறார். அயல் நாட்டு நிதிகள் மீண்டும் உள் நாட்டுச் செலாவணியில் மாற்றப்படும் விகிதம் இவ்வாறு உறுதி செய்யப்படுகிறது. அவருடைய முதலீடுகள்மீதான வட்டி, முன்னோக்கிய விற்பனை இறுதி நிலையின் (margin) அடிப்படையில் முதலீட்டாளர் அவருடைய இலாபத்தைக் கணிக்கலாம்.

ஒரு நாட்டிலுள்ள பாங்கு அயல் நாட்டுப் பாங்கு ஒன்றுடன் கீழ்க்கண்ட ஒப்பந்தங்களில் ஈடுபடலாம். உள்நாட்டுப் பாங்கு ஒன்று ஒரு குறிப்பிட்ட காலத்துக்கு அயல் நாட்டுப் பாங்கு ஒன்றில் ஒப்புக்கொண்ட வட்டி விகிதத்தில் வைப்பாகச் செலுத்தும் பொருட்டுக் குறிப்பிட்ட அளவு அந்நியச் செலாவணியை வாங்கும் என்றும், ஒப்புக்கொண்ட இறுதி நிலையில் அயல் நாட்டுப் பாங்கின் வைப்பாக அதே காலத்துக்கு அதே அளவு முன்னோக்குச் செலாவணியை விற்கும் என்றும் அவ்விரு நாட்டுப் பாங்குகள் ஒப்பந்தம் செய்துகொள்ளும். இவ்வித நடவடிக்கைகள் இரட்டை, வைப்பு நடவடிக்கைகள் (Swap and Deposit Operations) எனப்படும். இரட்டை, வைப்பு நடவடிக்கைகள் ஒரே அயல் நாட்டுப் பாங்குடன் நிகழ்கின்றன. இந் நாட்டில் நிதி தேவை உள்ள அயல் நாட்டுப் பாங்குக்கு இவ்வொப்பந்தம் செய்து கொள்ளும் எண்ணம் ஏற்படலாம். இந் நடவடிக்கைகள் உள் நாட்டுப் பாங்குக்கு இலாபம் அளிப்பதால் இந் நடவடிக்கைகளில் ஈடுபட அப் பாங்கு ஒப்புக்கொள்கிறது. இரண்டு நாடுகளிலும் நிலவும் குறுங்கால வட்டி விகிதங்களில் ஏற்படும் வேறுபாடு,

முன்னேக்கு நடவடிக்கையில் ஏற்றுக்கொண்ட இறுதி நிலையைப் (margin) பொறுத்தே இந் நடவடிக்கைகளில் உள்ள இலாபம் கணிக்கப்படுகிறது.

மற்றொரு வகை நடவடிக்கையில், ஒரு குறிப்பிட்ட காலத்துக்கு அயல் நாட்டில் தனது நிதியை வைத்திருக்க விரும்பும் முதலீட்டாளர் (பாங்கு அல்லது நிறுவனம் அல்லது தனியார்) ஒருவர் அவருக்குத் தேவையான உடனடிச் செலாவணியை வாங்கி அதே நேரத்தில் அந் நிதியைத் தன்னுடைய நாட்டில் மாற்றுவதற்கு எதிர்பார்த்தால் அதே அளவு செலாவணியை எதிர் காலத்துக்கு முன்னேக்கி விற்பதற்கு ஏற்பாடுசெய்கிருர். உடனடிச் செலாவணிக் கொள்முதல்மூலம் பெற்ற தேவையான நிதிகள் அயல் நாட்டில் பயன்படுத்தப்படலாம்; அல்லது நிலையான வைப்புக்களில் (Fixed Deposit) செலுத்தப்பட்டு உண்டியல்கள் அல்லது குறுங்காலப் பத்திரங்கள் வாங்குவதற்கும் அல்லது பங்கு மாற்று அங்காடிகள் அல்லது சரக்கு அங்காடி நடவடிக்கைகளில் ஈடுபடுவதற்கும் பயன் படுத்தப்படலாம். இச் செயல் முறைகள் இரட்டை, முதலீட்டு நடவடிக்கைகள் (Swap and Investment) எனப்படுகின்றன. இந்த அயல் நாட்டு முதலீடுகளிலிருந்து வரும் வருவாய், உள்நாட்டில் தள்ளுபடி மூலம் (discount) பெற்ற வருவாய், முன்னேக்கு விற்பனையில் அளித்த மிகுதித் தொகை (premium) முதலியவற்றைப் பொறுத்தே இந் நடவடிக்கைகளில் உள்ள இலாபம் கணிக்கப்படும்.

## அயல் நாட்டு மாற்று இடர்களைக் களைவதற்குரிய மற்ற வழிகள்

அயல் நாட்டு மாற்று (சட்ட) வாசகங்களைப் புகுத்துவதன் மூலம் சில சமயங்களில் மாற்று இடர்கள் களையப்படுகின்றன. அயல் நாட்டு இறக்குமதியாளர்களால் அவர்கள் நாட்டுச் செலாவணிகளில் பணம் செலுத்தப்படுவதை நிர்ணயிப்பதற்காக இங்கிலாந்து ஏற்றுமதியாளர்கள் ஸ்டெர்லிங்கில் உண்டியல் எழுதும்போது அயல் நாட்டு மாற்று (சட்ட) வாசகங்களை அவ்வுண்டியலுடன் சேர்க்கிருர்கள் உண்டியல்களை மாற்றும் பாங்குகளுக்கு இவ் வாசகங்கள் பாதுகாப்பளிக்கின்றன. இதே காரணத்துக்காக வேறு சில 'சொற்றொடர்களும்' (terms) உண்டியல்களில் சேர்க்கப்படுகின்றன.

## அயல் நாட்டு மாற்று வாசகங்கள்

உண்டியல் எழுதப்படுவோரின் முழுமையான முன் இசைவின் பேரில்தான் அயல் நாட்டு மாற்று (சட்ட) வாசகங்கள் உண்டியலில் எழுதப்படுகின்றன. உண்டியலுக்குரிய சரக்குக் கொள்முதல், விற்பனை ஒப்பந்தங்களிலேயே ஒரு பகுதியாக அயல் நாட்டு மாற்று (சட்ட) வாசகங்கள் விளங்குகின்றன. அவற்றில் மிகவும் முக்கிய மான வாசகங்கள் கீழே குறிப்பிடப்பட்டுள்ளன.

1. மேலெழுத்துப்படியான மாற்று (Exchange as per Endorsement): உண்டியலில் ஸ்டெர்லிங் தொகைக்கு அருகிலேயே 'மேலெழுத்துப்படியான மாற்று' (Exchange as per Endorsement) என்ற சொற்றொடர் குறிப்பிடப்படுகிறது. இச் சொற்றொடர்மூலம் எவ்விகிதத்தில் உண்டியல் எழுதப்படுபவர் உண்டியலுக்குரிய பணத்தை அயல் நாட்டுச் செலாவணியில் கொடுக்க வேண்டியிருக்கும் என்று உண்டியல் மாற்றுப் பாங்கால் (Negotiating Bank) நிர்ணயிக்கமுடிகிறது. புறக்குறிப்பில் ஸ்டெர்லிங் தொகைக்குமேல் மாற்று விகிதத்தைக் குறிப்பிட்டு அதற்கிணையான அந்நியச் செலாவணியும் உண்டியலின் முகப்பில் குறிப்பிடப்படுகிறது. புறக்குறிப்பு கீழ்க்கண்டவாறு குறிப்பிடப் பட்டிருக்கும்.

"ஒரு பவுண்டு ஸ்டெர்லிங்குக்கு.......... என்ற விகிதத்தில் பாங்கு அல்லது அதன் ஆணைக்குக் கொடு"

புறக்குறிப்புக்குப் பிறகு இவ்வுண்டியல் ஸ்டெர்லிங் உண்டியலாகாமல் குறிப்பிட்ட தொகைக்குரிய உண்டியலாக மாறுகிறது.

உண்டியல் எழுதப்படுவோரால் (drawee) உண்டியல் ஏற்கப் பட்ட பிறகு அவ்வுண்டியல் பாங்கால் வாங்கப்படும் பொருட்டு உண்டியல் எழுதுவோனால் (drawer) அளிக்கப்படும்போது பாங்கு மாற்று விகிதத்தை நிர்ணயிக்கிறது, ஆகவே இவ் விகிதம் 'டெல் குவல்' (Telquel) விகிதம் என்றழைக்கப்படுகிறது. இவ் விகிதம் தந்தி மாற்று (Telegraphic Transfer) விகிதத்தின் அடிப்படையில் நிர்ணயிக்கப்படுகிறது. (i) பாங்கு உண்டியலை வாங்கிய தேதியிலிருந்து உண்டியல் எழுதப்படுவோனால் பணம் செலுத்தப்படும் நாள்வரையில் உள்ள காலத்துக்குத் தள்ளுபடி விகித அடிப்படையான வட்டி, (ii) அயல் நாட்டு முத்திரைச் செலவுகள், அயல் நாட்டுப் பதிலாளுக்கு உண்டியல் வசூலிக்கும் செலவு (iii) நேர்மை

யான இலாபம் தந்தி மாற்று விகிதத்துடன் கூட்டப்பட்டு 'டெல்குவல்' விகிதம் பாங்கால் நிர்ணயிக்கப்படுகிறது.

2. அந்நியச் செலாவணி மாற்றலில் எவ்வித நட்டமும் இல்லாமல் செலுத்துதல் (Payable without loss in exchange): 'செலாவணி மாற்றலில் எவ்வித நட்டமும் இல்லாமல் செலுத்துதல்' என்ற வாசகத்துடன் கூடிய உண்டியல் ஒன்று அதன் ஸ்டெர்லிங் முகமதிப்பில் வசூல் செலவும், அயல் நாட்டு முத்திரைச் செலவும் கழித்து உண்டியல் எழுதுவோனிடம் (drawer) இருந்து பாங்கால் வாங்கப்படுகிறது. அயல் நாட்டிலுள்ள உண்டியல் வசூல் பாங்கு உண்டியல் எழுதப்படுவோனுக்கு (drawee) சேர்ப்பிக்கப்பட்டவுடன் அவ்வுண்டியல் அப் பாங்கால் நிர்ணயிக்கப்பட்ட விகிதப் படி அந் நாட்டுச் செலாவணியாக மாற்றப்படுகிறது. எப்படி இருந்தபோதிலும், உண்டியல் வசூல் பாங்கால் அனுமதிக்கப் பட்ட மற்றொரு பாங்கிலிருந்து, உண்டியலுக்குரிய ஸ்டெர்லிங் மதிப்பில் வாங்கிய இலண்டனில் செலுத்தக்கூடிய காட்சிப் பண விடை மூலம் உண்டியலுக்குரிய பணத்தைச் செலுத்த உண்டியல் எழுதப்படுவோன் விரும்பலாம். இக் காட்சிப் பண விடையை (Sight Draft) அவருக்குச் சாதகமான விகிதத்திலேயே வாங்கலாம். இலண்டனில் காட்சிப் பண விடை விற்பதால் கிடைக்கக்கூடிய இலாபம், இச் செயலால், உண்டியல் மாற்றுப் பாங்குக்குத் தவிர்க்கப்படுகிறது. இவ் வாசகம் இக் காலத்தில் அடிக்கடி பயன் படுத்தப்படவில்லை.

3. முழுமுக மதிப்பில் இலண்டனில் செலுத்தக்கூடிய ஒப்புக் கொண்ட பாங்குச் செக்குகளின் மூலம் செலுத்தலாம் (Payable by approved banker's cheque on London for full face value): உண்டியலில் குறிக்கப்பட்ட விகிதம் ஏற்றுக்கொள்ளக் கூடியதாக இருந்தால்தான் உண்டியல் எழுதுவோனுக்கு வசூல் செய்யும் பாங்கு இலண்டன் பண விடைகளை விற்கும் என்றாலும் அதனை எங்கிருந்தும் வாங்க அவருக்கு உரிமையுண்டு.

4. செலுத்தக்கூடிய நாளில் இலண்டன் காட்சிப் பண விடைகளை வசூல் செய்யும் பாங்கின் விற்பனை விகிதத்தில் செலுத்தலாம் (Payable at collecting bankers' selling rate for sight drafts on London on dates of payment).

இவ்விதச் செல்லுகள் அந்தந்த நாட்டின் பழக்க வழக்கங் களுக்கு உகந்தவாறு மாறுபடுகின்றன. இவ்வித வாசகம், வாசகத்தில் குறிப்பிட்டுள்ளபடி இலண்டனில் செலுத்தக்கூடிய

செல்லுகளை விற்பதற்குத் தயாராக இருக்கும் மாற்று விகிதத்தை நிர்ணயிக்க உண்டியலில் குறிப்பிடப்பட்ட உண்டியல் வசூல் பாங்குக்கு அல்லது வேறு ஒரு பாங்குக்கு அதிகாரம் அளிக்கிறது. உண்டியல் எழுதப்படுவோன் இவ்விதச் செல்லுகளையே பாங்கு நிர்ணயித்த விகிதத்தில் ஏற்றுக் கொள்ளவேண்டும்.

5. வசூல் செலவுகள்கூடிய இலண்டனில் செலுத்தக்கூடிய கேட்புப் பண விடைகளுக்குரிய பாங்கு அல்லது நடப்பு மாற்று விகிதத்தில் செலுத்தலாம் (Payable at the Bank's or current rate of exchange for demand drafts on London together with all collecting charges)

இவ் வாசகம் உள்நாட்டுச் செலாவணியில் உண்டியலை மாற்றுவதற்குரிய விகிதத்தை நிர்ணயிக்க உண்டியலில் குறிப்பிடப்பட்டுள்ள பாங்குக்கு அதிகாரம் அளிக்கிறது. நடப்பு மாற்று விகிதத்தில் உண்டியலுக்குரிய பணம் செலுத்தப்பட வேண்டியதாக இருந்தால் உண்டியல் எழுதப்படுவோன் தனக்குச் சாதகமான விகிதத்தில் ஸ்டெர்லிங்கை எங்கிருந்து வேண்டுமானாலும் வாங்கிக் கொள்ளலாம். ஆனால், உண்டியல் எழுதப்படுவோனால் செலுத்தப்படும் உண்டியலில் குறிப்பிட்ட தொகையுடன் உண்டியல் மாற்றுப் பாங்கும், வசூல் செய்யும் பாங்கும் அவற்றின் வசூல் செலவுகளைச் சேர்க்கும். உண்டியல் வசூல் செலவுகளும், குறிப்பிட்ட காலத்துக்குரிய வட்டி விகிதமும் உண்டியலுடன் சேர்க்கப்படுகிறது.

6. இலண்டனில் செலுத்தப்படும் முத்திரை வரிகளுடன் கூடிய பண விடைகளுக்குரிய பாங்கு குறிப்பிடும் விகிதத்தில் செல்லுகள் செலுத்தப்படலாம். உண்டியல் வசூல் செலவுகளுடன் கூடிய இலண்டனில் செலுத்தப்படக்கூடிய கேட்புப் பண விடைகளின் நடப்பு மாற்று விகிதத்தில் செல்லுகள் செலுத்தப்படலாம்.

## உண்டியல்கள் மாற்றலும், வசூலும்
## (Collection and Negotiation of Bills)

பாங்கு ஒன்றிடம் வசூலுக்காகச் சேர்ப்பிக்கப்பட்ட உண்டியலை, உண்டியல் எழுதப்படுவோன் நாட்டிலுள்ள தனது

பதிலாளுக்கு அப் பாங்கு அனுப்பும். அயல் நாட்டிலுள்ள தனது பதிலாளிடமிருந்து வசூலான தொகையைப் பெறும்வரையில் அல்லது பதிலாளின் கணக்குப் பதிவேட்டில் அப் பாங்குக் கணக்கு வரவு வைக்கப்பட்டிருக்கிறது என்ற தகவல் கிடைக்கும்வரையில் பாங்கு தனது வாடிக்கையாளருக்கு, வசூலுக்கு அனுப்பப்பட்ட உண்டியலின் தொகையை அளிக்காது. உண்டியல் எழுதியவர், எழுதப்பட்டவரின் நிலைமை சரியில்லை என்று கருதப்பட்டால்தான் பாங்கு உண்டியல்களை 'வசூலுக்கு மட்டும்' பெற்றுக்கொள்கிறது.

பாங்கு உண்டியலை மாற்றும்போது அதாவது உண்டியலை வாங்கும்போது அல்லது தள்ளுபடி செய்துகொடுக்கும்போது, உண்டியலின் முகமதிப்பில், உண்டியல் வசூலாகும் காலத்துக்குரிய வட்டி, வசூல் செலவுகள், கட்டணங்கள்போக பாக்கித் தொகையைமட்டுமே வாடிக்கையாளருக்குக் கொடுக்கும். அதாவது பாங்கு, இவ்வுண்டியலில் குறிப்பிடப்பட்ட காலத்துக்கு இவ்வுண்டியலின்மீது கடன் வழங்குகிறது. உண்டியல் மாற்றுப் பாங்கு உண்டியலின்மீது முழு உரிமை கொண்டுள்ளது. பத்திரங்கள் சேர்ந்த உண்டியலாக இருந்தால் அது தொடர்பான சரக்குகள்மீதும் பாங்குக்கு உரிமை உண்டு. உண்டியல் வசூலாகாமல் திரும்ப வரப்பெற்றால் வாடிக்கையாளர் உண்டியல் மாற்றுப் பாங்கிடமிருந்து தான் பெற்ற பணம், அதற்குரிய வட்டி, பாங்குக்கு உண்டான மற்ற செலவுகள் அனைத்தையும் அப் பாங்குக்குத் திருப்பிக் கொடுக்கவேண்டும்.

## ஒரே நிலையான மாற்று விகிதம்
## (A Flat Rate of Negotiation)

ஸ்டெர்லிங்கில் எழுதப்பட்டு, செலாவணி மாற்று வாசகங்களுடன் கூடிய அயல் நாட்டு உண்டியல்கள் மாற்றப்படும்போது அவற்றை வாங்குவதற்கு இலண்டன் பாங்கு பொதுவாக ஒரே நிலையான விகிதம் (Flat Rate) அல்லது அனைத்து உண்டியல்களுக்கும் ஒரே சதவிகித மாற்றத்தையே பயன்படுத்துகிறது. இவ் விகிதத்தைக் கணிக்கும்போது உண்டியல் வசூலாகும் காலத்துக்குரிய வட்டி இழப்பு, முத்திரை வரி, உண்டியல் வசூலாகும் பதிலாளின் கழிவு (Commission), பாங்கின் இலாபம் ஆகிய அனைத்தையும் சேர்த்துக்கொள்ளும்.

## இறுதி நிலை வைப்புக்கள்
## (Marginal Deposits)

அயல் நாட்டிலுள்ள இறக்குமதியாளரின்மீது ஏற்றுமதி யாளரால் நேராக எழுதப்பட்ட உண்டியல்களை, அந் நபர்களின் நிலைமை சரியில்லை என்றால், அவற்றின் தற்கால முழு மதிப்பில் மாற்றிக்கொடுக்கப் பாங்குகள் ஏற்றுக்கொள்ளா. அவ்வுண்டியல் களின் தற்கால முழு மதிப்பில் ஒரு குறிப்பிட்ட சதவிகிதமே வாடிக்கையாளருக்குக் கடனுகப் பாங்கால் அளிக்கப்படும். பாக்கித் தொகை வாடிக்கையாளரின்பேரில் பாங்குக் கணக் கேட்டில் வரவு வைக்கப்படும் அல்லது இறுதி நிலை வைப்புக் கணக்கில் (Marginal Deposit Account) வரவு வைக்கப்படும். பாங்கு, உண்டியல் வசூலுக்கு விதிக்கும் அதே விகிதத்தில் வைப்புக் களுக்கும் பாங்கு வட்டி அளிக்கும். உண்டியலுக்குரிய பணம் வசூலாகி வந்தஉடனும், அயல் நாட்டில் வசூலாகும் திரும்ப அனுப்பப்பட்ட உண்டியலுக்குரிய பணத்தை வாடிக்கையாளர் திரும்பக் கட்டியவுடனும் இவ்விறுதி நிலை வைப்புக் கணக்கில் உள்ள பணம் வாடிக்கையாளருக்குக் கொடுக்கப்படும்.

## அயல் நாட்டுச் செலாவணிக் கணக்குகள்
## (Foreign Currency Accounts)

வசூலுக்காக, வசூல் செய்யும் பாங்குக்கு அனுப்பப்பட்ட உண்டியல்களின் பணத்தை அவருடைய அயல் நாட்டுச் செலாவணிக் கணக்கில் வரவு வைத்துச் செலாவணி மாற்றலில் ஏற்படும் நட்டத்தைக் கடனீந்தோர் தவிர்த்துக் கொள்ளுகிறார். மாற்று விகிதம் தனக்குச் சாதகமாக உள்ள நல்ல சந்தர்ப்பத்தில் அப் பணத்தைத் தனது நாட்டுச் செலாவணிகளாக அவர் மாற்றிக் கொள்கிறார் அல்லது அயல் நாட்டிலோ, வேறு எந்த நாட்டிலோ தனக்குத் தேவையான சரக்குகளை வாங்க அப் பணத்தைப் பயன்படுத்திக் கொள்கிறார். எதிர்காலத்தில் அச் செலாவணிகளைப் பயன்படுத்தும் தன்மையிலிருந்து அதிலி ருந்து ஏற்படும் நட்டம் அல்லது இலாபத்தைக் கண்டறியலாம். தன்னுட்டுச் செலாவணியில் அயல் நாட்டுச் செலாவணி மதிப்புக் குறையும் என்று அக் கடனீந்தோர் எதிர்பார்த்தால் பாதகமான விகிதத்தில் அவ்வயல் நாட்டுச் செலாவணியைத் தன்னுட்டுச் செலாவணியாக மாற்றி நட்டத்துக்குள்ளாவார். சில சமயங்களில்

அவ்வயல் நாட்டுச் செலாவணியைக் கொண்டு அயல் நாடுகளில் சிறந்த சரக்குகளை வாங்கி இறக்குமதி செய்து உள்நாட்டில் விற்று மிகுதியான இலாபம் ஈட்டலாம்.

குறிப்பிட்ட ஒரு சில சிறப்புக் காரணங்களுக்குமட்டுமே ஒரு நாட்டு மக்கள் அயல் நாடுகளில், அயல் நாட்டுச் செலாவணிக் கணக்குகளை வைத்துக் கொள்ளலாம் என்று அயல் நாட்டு மாற்றுக் கட்டுப்பாட்டு விதிகளில் காணப்படுகிறது.

# 10. மாற்றுக் கட்டுப்பாடு
## (Exchange Control)

### மாற்றுக் கட்டுப்பாட்டின் தன்மைகள்

ஒரு நாட்டுச் செலாவணியின் மாற்று மதிப்பில் உள்ள அழுத் தத்தைப் போக்கும் பொருட்டு அயல் நாட்டுச் செலாவணிகளில் செய்யப்படும் ஒழுங்குமுறை விதிகளை மாற்றுக் கட்டுப்பாடு உணர்த்துகிறது. அயல் நாட்டு மாற்று அங்காடியில் உள்ள தடைகள் அனைத்தையும் இக் கட்டுப்பாடு உணர்த்துகிறது. இக் கட்டுப்பாடுகள் அனைத்தையும் அரசோ, மையப் பாங்கோ மேற்கொண்டிருக்கிறது. அரசு எடுக்கும் நடவடிக்கைகளாவன:

1. அயல் நாட்டுச் செலாவணியைப் பெறுவதற்கு ஒரு நாட்டுக் குடிமக்கள் அதிகார மாற்று விகிதத்தை நிர்ணயித்தல்.

2. எவ்வளவுதான் அவர்கள்வசம் அயல் நாட்டுச் செலா வணிகள் வந்து சேர்ந்தபோதிலும் அவர்கள் அவற்றை விற்பனை செய்வதற்குரிய விகிதம்.

3. உள்நாட்டுச் செலாவணியை மற்ற நாட்டுக் குடிமக்கள் வாங்குவதற்கு மாற்றுக் கட்டுப்பாடு விதிக்கக்கூடிய விகிதம்.

(அ) மேற்கண்ட நடவடிக்கைகளுடன் ஒரு நாட்டுக் குடிமக்கள் தாங்கள் பெற்ற அயல் நாட்டுச் செலாவணிகளை அரசிடமோ, அரசு அதிகாரம் பெற்றவர்களிடமோ ஒப்படைக்க வேண்டும்.

(ஆ) அயல் நாட்டுச் செலாவணியைப் பயன்படுத்துவதற்கு விண்ணப்பிக்கும் நாட்டின் முன்னேற்றிற்குகந்தவாறு அயல் நாட்டுச் செலாவணியை அளித்தல்.

(இ) அயல் நாட்டினரால் உள்நாட்டுச் செலாவணியைப் பயன்படுத்துவதற்குக் கட்டுப்பாடு விதித்தல். (ஈ) குறிப்பிட்ட முறையில் நாடுகளுக்கிடையே எவ்வாறு செல்லுகளைச் செலுத்திக் கொள்வது என்பது பற்றி அந் நாடுகளிடையே ஏற்படும் ஒப்பந்தம்.

மேற்கண்ட மாற்றுக் கட்டுப்பாடு அரசு நடவடிக்கைகளின் கூடுதல் வேறுபாடுகளால் தாங்கப்படுகிறது. அயல் நாட்டுச் செலாவணியின் செலாவணித் தேவை அளிப்பைப் பாதிக்கும் பொருட்டு (1) வணிக ஒப்பந்தங்கள் ஏற்படுத்துதல்; (2) சுங்கவரி விதித்தல்; (3) ஏற்றுமதிகளின்மேல் ஊக்க உதவி அளித்தல்; (4) இறக்குமதிக் கட்டுப்பாடு, இறக்குமதிப் பங்கு ஒதுக்கீடு செய்தல் (quotas); (5) ஏற்றுமதி அனுமதி வழங்குதல் ஆகிய நடவடிக்கைகள் மேற்கொள்ளப்பட்டன. இந் நடவடிக்கைகள் அனைத்தும் மாற்றுக் கட்டுப்பாட்டை உணர்த்தாமல் வணிக மேம்பாட்டையும், கட்டுப்பாட்டையுமே உணர்த்துகின்றன.

1. மாற்றுக் கட்டுப்பாட்டின் நோக்கங்கள்: ஒரு நாட்டின் சொத்துக்கள், ஈடுகள் பாங்கு வைப்புகள் முதலானவற்றில் முதலீடு செய்யும் முதலாளிகளின் முதலீட்டுப் பணத்தை அவர்கள் நாட்டுச் செலாவணிகளில் மாற்றும் செயலே மூலதன ஓட்டமாகும். முதலீடு செய்யப்பட்டிருக்கிற நாடுகளின் பண நிதி நிலையற்ற தன்மையும் அரசியல் மாற்றங்களுமே அம் முதலீட்டாளர்களின் மூலதன ஓட்டத்தைத் தூண்டுகின்றன. மிகுதியான மூலதன ஓட்டத்தைத் தடுக்காவிடில் ஒரு நாட்டின் அயல் நாட்டுச் செலாவணி இருப்புக்கள் யாவும் தீர்ந்து உள்நாட்டுப் பொருளாதார நிலைமையையும் பாதிக்க வழிகோலும்.

2. சில குறிப்பிட்ட நோக்கங்களுக்குப் போதுமான அயல் நாட்டுச் செலாவணிகளை உறுதிப்படுத்துதல்: மாற்றுக் கட்டுப்பாட்டைப் புகுத்தும் ஒரு நாடு அயல் நாடுகளிலிருந்து அதற்குத் தேவையான பொருள்களைப் பெறுவதற்குப் போதுமான அயல் நாட்டு மாற்றுக்களைக் கையிருப்பு வைத்திருக்க வேண்டும். அயல் நாட்டுத் தாக்குதல்களிலிருந்தும், அச்சுறுத்தல்களிலிருந்தும் தன்னைக் காத்துகொள்ளும் பொருட்டு, போர்த் தளவாடங்களை நிரப்பிக்கொள்வதற்கு இவ்வயல் நாட்டு மாற்றுக்கள் ஒரு நாட்டுக்கு இன்றியமையாதனவாகும். ஒரு நாடு மற்றொரு நாட்டுடன் போரில் இறங்கும் போது அப் போர் வெற்றியுடன் நடந்தேறுவதற்கு அயல் நாட்டுச் செலாவணிகளை அந் நாடு பெருக்கிச் சேர்த்து வைத்திருத்தல் வேண்டும். மேலும், ஒரு நாடு அதன் ஏழை மக்களின் வாழ்க்கைத்

தரத்தை உயர்த்தும்பொருட்டு அதன் பொருளாதார முன்னேற்றத்தை விரைவில் அடைய முயல வேண்டும். பொருளாதார முன்னேற்றத் திட்டமானது அதிகமான தொழிற்சாலைகளை நிர்மாணிப்பதாகும். மூலதனப் பொருட்கள், இறக்குமதித் தொழில் வல்லுநர் முதலானவற்றைத் தொழிற்சாலைகள் நிர்மாணிக்கப் படும், ஆரம்பக் கட்டத்திலாவது முன்னேற்ற நாடுகளிலிருந்து இறக்குமதி செய்யப்படுதல் வேண்டும். இந்த இறக்குமதிகளுக்கெல்லாம் மிகுதியான அயல் நாட்டு மாற்றுக்கள் தேவைப்படுகின்றன. மாற்றுக் கட்டுப்பாடுகள் மூலமே இவற்றைச் சேர்த்து வைத்திருக்க முடியும். எடுத்துக்காட்டாக 1951ஆம் ஆண்டில் இந்தியா பொருளாதார முன்னேற்றத்தை மேற்கொண்ட போது அயல் நாட்டு மாற்றுக்களை முன்னேற்பாடாக முதலீடுகளில் முடக்கி வைத்திருந்ததால்தான் அத் திட்டங்களை வெற்றிகரமாகச் செயலாற்ற முடிந்தது. 1962ஆம் ஆண்டின் சீனத் தாக்குதலானது நமது பொருளாதார முற்போக்குத் திட்டங்களையும், போர்த் தளவாடங்களையும் பெருக்கிக்கொள்ளாமல் சீன, பாகிஸ்தான் தாக்குதல்களிலிருந்தும் பாதுகாத்துக் கொள்ளத் தூண்டியது. ஆகவே, அயல் நாட்டு மாற்றுக்களைச் சேகரித்துவைத்தல் என்பது ஒரு புது திருப்பத்தை ஏற்படுத்தியது. அயல் நாட்டு மாற்று நடவடிக்கைகளைக் கட்டுப்படுத்தாத அளவில் உள்நாட்டு உற்பத்திகளையும், விலைகளையும் ஒழுங்குபடுத்துவதால் பயனில்லை.

3. **பன்னாட்டுக் கடன்களைத் திரும்ப அளித்தல்:** பன்னாட்டளவில் ஒப்பந்தமான கடன்கள் அவற்றிற்கான வட்டிகளைத் திரும்பத் தருவதற்கும், அயல் நாட்டினரால் முதலீடு செய்யப்பட்ட மூலதனம், அதற்கான வட்டியைத் திரும்பத்தருவதற்கும் அயல் நாட்டு மாற்றுக்களைச் சேர்த்துவைப்பதற்கு மாற்றுக் கட்டுப்பாடு துணைபுரிகிறது. ஒரு நாட்டுச் செலாவணியின் மாற்று மதிப்பு தடையற்ற அங்காடி நிலைகளில் நிலவும் மட்டத்தைவிட உயர்ந்த மட்டத்திலேயே நிர்ணயிக்கப்பட்டுச் சில சமயங்களில் நிலைப் படுத்தப்பட்டிருக்கும். அதாவது அயல் நாட்டுச் செலாவணிகளில் ஒப்பந்தமான கடன்களின் பளு குறைக்கப்படுவதால் ஒரு நாட்டுச் செலாவணி மிகை மதிப்புச் (over valuation) செய்யப் படுகிறது. செலாவணி மிகை மதிப்பு, நெகிழ்ச்சியற்ற ஏற்றுமதி நிலவும்போது ஒரு நாடு அயல் நாட்டு மாற்றுக்களின் வருவாயை அதிகரிக்கச் செய்கிறது; உள்நாட்டுச் செலாவணியில் இன்றியமையாத இறக்குமதிகளுக்குக் கொடுக்கக்கூடிய விலையைக் குறைக்கிறது.

4. உள்நாட்டுச் செலாவணியின் புறமதிப்பை நிலைப்படுத்தல்: உள்நாட்டுச் செலாவணியின் புறமதிப்பை நிலைப்படுத்தும் பொருட்டு, மற்ற நாட்டுச் செலாவணிகளோடு உள்நாட்டுச் செலாவணிகளின் தொடர்பை நிலைப்படுத்துவதற்கு மாற்றுக் கட்டுப்பாடு முறை வகைசெய்கிறது. ஒரு நாட்டுச் செலாவணியின் புறமதிப்பானது அதாவது மற்ற செலாவணிகளுக்கிடான இதன் மாற்று மதிப்பானது அச் செலாவணிக்குரிய உலகத் தேவைகளையும் அதன் அளிப்பிற்குரிய தொடர்பையும்பொறுத்து ஒரு நாட்டுச் செலாவணியின் அதிகத் தேவை அல்லது அதிக அளிப்பினால் அந் நாட்டு வர்த்தக நிதிக்கணக்கில் ஏற்படுகிற பற்று அல்லது வரவு இருப்பானது அதன் மாற்று மதிப்பு அதற்குகந்த வாறு பெயர்ந்து செல்லக் காரணமாகிறது. ஒரு நாடு அதன் செலாவணிக்குரிய மூலதனத்தை நீக்கிவிட்டால் அச் செலாவணி தடையற்றதாகிறது. அச் செலாவணி கட்டுப்பாடற்ற நிலையில் இருக்கும்போது மற்ற செலாவணிகளுக்குரிய அதன் மாற்று மதிப்பு தொடர்புற்ற வாங்கும் திறனால் நிர்ணயிக்கப்படுகிறது. அனேக நாடுகள் மிகை மதிப்புச் செலாவணிகளை வைத்திருப்பதை இன்றியமையாததாகக் கருதின. அயல் நாட்டுக் கடன்களை அடைப்பதற்கும் அயல் நாட்டு வியாபார மந்த நிலையைப் போக்குவதற்கும் இம் மிகை மதிப்பு வரவேற்கப்பட்டது.

5. ஒரு நாட்டுப் பொருளாதாரத்தை மற்ற நாடுகளின் பொருளாதார அழுத்தத்திலிருந்து தடுத்தல்: ஒரு நாட்டு அதிகாரிகள் அயல் நாடுகளில் ஏற்படும் வியாபார அழுத்தத்தை முன்னேக்கலாம். வேலையில்லாத் திண்டாட்டத்தின் மிகுதியால் ஒரே நிலைப் பன்னாட்டுச் செல்லுகளுக்குத் தங்கள் அயல் நாட்டுச் செலாவணிச் சேமிப்பைக் காக்கும் பொருட்டுத் தங்கள் உள்நாட்டுச் செலாவணியைச் சுருக்குவதற்கு மறுப்பார்கள். அதற்குப் பதிலாக ஏற்றுமதித் தொழிற்சாலைகளின் சுருக்கத்தை ஈடுசெய்ய உள்நாட்டுப் பண, கருவூலக் கொள்கையைக் கடைப்பிடிப்பார்கள். இதன் மூலம் அயல் நாட்டுச் செலுத்து நிலைப் பற்றுக்குறையைப் பெருக்குவார்கள். பன்னாட்டு வாணிகத்தின் அளவைக் குறைத்துக் கொள்ளுவதன்மூலம் அயல் நாடுகளில் நிலவும் குறை மதிப்பும், விலை மலிவும் உள்நாட்டுப் பொருளாதாரத்தைப் பாதிக்காமல் இருக்க மாற்றுக் கட்டுப்பாடு அதிகாரிகளுக்கு அனுமதி வழங்கப் படுகிறது.

6. அயல் நாட்டுச் செலுத்து நிலைக்குப் பாதுகாப்பளித்தல் (Protection of balance of payment): அயல் நாட்டுச் செலுத்து நிலைக்குப் பாதுகாப்பளித்தல் மாற்றுக் கட்டுப்பாட்டின் சிறந்த

தொரு நோக்கமாகும். ஒரு நாட்டின் அயல் நாட்டுச் செலுத்து நிலைப் பற்றுக்குறை மிகுதியாக இருந்தால் அது தானாகவே சரிக் கட்டிக் கொள்ளப்படும் என்பது இயலாத ஒன்றாகும். அவ்வாறு சரிக்கட்டச் சுறுசுறுப்பான நடவடிக்கைகள் மேற்கொள்ளப்பட வேண்டும். இயல்பான காலங்களில் பாதகமான அயல் நாட்டுச் செலுத்து நிலை ஒரு நாட்டுச் செலாவணியின் மாற்று மதிப்பு வீழ்ச்சியுறக் காரணமாக இருந்து அச் செலுத்து நிலை சமநிலை எய்துவதற்கும் துணைபுரிகிறது. ஆனால், ஒரு நாட்டுச் செலாவணி யுடைய மாற்று மதிப்பு வீழ்ச்சியாலும் அந் நாட்டு இறக்குமதி ஏற்றுமதிகளில் எவ்வித பாதிப்பையும் ஏற்படுத்தாத நிலைமை களும் உள்ளன. இன்றியமையாத உணவுப் பொருள்கள், கச்சாப் பொருள்கள், மூலதனப் பொருள்களின் இறக்குமதிகள் இம் மாற்று மதிப்பு வீழ்ச்சியால் பாதிக்கப்படமாட்டா. இப் பொருள்களின் தேவை அல்லது அளிப்பு அல்லது இரண்டுமே நெகிழ்ச்சி அற்றதாக இருப்பதால் ஏற்றுமதிகளும், இம் மாற்று மதிப்பு வீழ்ச்சியால் அதிகரிக்கா. இந் நிலைமைகளில் மாற்று விகிதத்திலுள்ள இறக்கமானது ஒரு நாட்டுப் பொருளாதார வளத்திலும், செலாவணித் திறனிலும் அந் நாட்டு மக்கள், அயல் நாட்டு மக்களின் நன்னம்பிக்கையை இழக்கச் செய்து அந் நாட்டி லிருந்து மிகுதியான மூலதன வெளியேற்றத்திற்கு வித்தாகிறது. ஆகவே, தடையற்ற நிலைகளில் இருப்பதைவிட உயர்ந்த மட்டத்தில் ஒரு நாட்டுச் செலாவணியின் மாற்று மதிப்பு நிலை நாட்டப்பட வேண்டும். சில சந்தர்ப்பங்களில் ஏற்றுமதி, இறக்குமதிப் பெயர்ச்சிகளில் ஒழுங்கு நடவடிக்கைகள் எடுப்பதன் மூலம் அயல் நாட்டுச் சொத்துகளில் கட்டுப்பாடுகள் போன்ற தீவிர நடவடிக்கைகள் தவிர்க்க முடியாதவைகளாகத் தோன்றுகின்றன.

7. விலைகளின் உயர்ந்த மட்டங்கள்: இயற்கையான மட்டத்தைவிடக் குறைந்த மட்டத்தில் ஒரு செலாவணியின் மாற்று மதிப்பை நிலைப்படுத்த மாற்றுக் கட்டுப்பாடு, சில சமயங் களில் செய்யப்படுகிறது. அதாவது செலாவணி மிகை மதிப்புச் செய்யப்படுகிறது. இறக்குமதிப் பொருள்களின் விலை ஏற்ற மானது நாட்டின் மற்ற பொருள்களுக்கும் பரவி இருக்கிறது.

8. மாற்று விகிதங்களில் உள்ள குறுங்கால ஏற்ற இறக்கத்தைக் களைதல்: சில சந்தர்ப்பங்களில், மாற்று விகிதத்தைச் சம மட்டத்தில் (equilibrium level) அதாவது அங்காடிச் சக்திகளால் நிர்ணயிக்கப்படுகிற மட்டத்தில் நிலைநிறுத்த மாற்றுக் கட்டுப்பாடு தேவைப்படுகிறது. மாற்றுக் கட்டுப்பாட்டு அதிகாரிகளால்

ஆழ்ந்து ஆராய்ந்து எடுக்கப்படுகிற நடவடிக்கைகளால் அயல் நாட்டு வாணிகம், இன்றியமையாத மூலதன இறக்குமதிகள், நாட்டுக்கு உள்ளும் புறமும் செல்லுகளில் பாதிப்பு ஏற்பட்டு மாற்று விகிதங்களில் உள்ள குறுங்கால ஏற்ற இறக்கங்கள் காணப்படுகின்றன.

9. பொருளாதாரத் திட்டங்கள்: பொருளாதாரத் திட்டத்தில் மாற்றுக் கட்டுப்பாடு ஓர் இன்றியமையாத பொருளாதாரக் கொள்கையாகும். திட்டங்களைச் செயல்படுத்துவதற்கு இன்றியமையாத பொருள்களை இறக்குமதி செய்வதற்கு ஒரு நாடு அதன் அயல் நாட்டு மாற்றுக்களை நன்முறையில் பயன்படுத்த வேண்டும். ஏற்றுமதிகள் நன்குகக் கவனிக்கப்பட்டு, இறக்குமதிகளில் கட்டுப்பாடு விதிப்பதன்மூலம் ஒரு நாட்டின் அயல் நாட்டுச் செலாவணி வருவாய் சிறந்த முறையில் ஒழுங்கு படுத்தப் படுகிறது. இடையூறற்ற மூலதன உள்ளோட்டத்தை (inflow of capital) அனுமதிப்பதற்கு மாற்று விகிதங்கள் நிலையாக இருத்தல் வேண்டும்.

10. பொருளாதார நடவடிக்கைகளைத் தூண்டுதல்: பொருளாதார நடவடிக்கைகளுக்கு ஊக்கமளித்தலே மாற்றுக் கட்டுப்பாட்டின் நோக்கமாகும். சில பொருள்களின் இறக்குமதிகளைக் குறைத்தும், அவ்விறக்குமதிகளுக்குச் செலுத்தக்கூடிய அந்நியச் செலாவணிகளைச் சுருக்கியும் நாட்டின் சில தொழிற்சாலைகளின் (முன்னேற்றத்தை) வளர்ச்சியைத் தூண்டலாம். ஒரு நாட்டில் அயல் நாட்டுச் சுற்றுலாவினரை ஊக்குவிக்கும் பொருட்டுச் சாதக விகிதங்களில் உள்நாட்டுச் செலாவணிகள் அவர்களுக்குக் கிடைக்கும்படிச் செய்யலாம்.

11. மாற்றுக் கட்டுப்பாட்டின் மற்ற நோக்கங்கள்: (i) தொழிற்சாலைகளின் பாதுகாப்பை அளந்தறிவதற்கும், மற்ற நாடுகளால் புகுத்தப்படுகிற வியாபார, மாற்றுத் தடைகளுக்கு எதிர் நடவடிக்கைகள் எடுக்க ஒரு சிறந்த ஆயுதமாகவும்; (ii) மாற்றுத் தடைகள், சுங்கவரி, பங்கு ஒதுக்கு (quots), வணிகத் தடை, முதலான தடைகள் அயல் நாடுகளால் விதிக்கும்போது உகந்த எதிர் நடவடிக்கை எடுப்பதற்கும்; (iii) எதிரி நாடுகள், அவற்றின் மக்கள், கட்டுப்பாட்டுக்குட்பட்ட அல்லது பொதுநிலை நாடுகளில் வசிக்கும் அவற்றின் பதிலாட்களால் அந் நாட்டு வாங்குந்திறனைப் பயன்படுத்துவதைத் தடுப்பதற்கும் மாற்றுக் கட்டுப்பாடு புகுத்தப் படுகிறது.

## சிறந்த மாற்றுக் கட்டுப்பாட்டின் சிறப்பியல்புகள்

மாற்றுக் கட்டுப்பாடு சிறப்பெய்துவதற்கு அனைத்து அயல் நாட்டு மாற்று நடவடிக்கைகளும் மைய அதிகாரிகளிடம் அல்லது அவர்கள் அதிகாரம் பெற்ற பதிலாட்களிடம் வந்து சேர்ந்துவிட வேண்டும். அயல் நாட்டு மாற்றுக்களை வாங்க விரும்பும் ஒரு நாட்டுக் குடிமக்கள் அல்லது அமைப்பு மைய அதிகாரிகள் இடமிருந்தோ, அவர்கள் அதிகாரம் பெற்ற பதிலாட்களிடமிருந்தோ அவ்வப்போது நிலவும் அதிகார மாற்று விகிதத்தில் அயல் நாட்டு மாற்றுக்களை வாங்குதல் வேண்டும். மற்ற வழிகளில் வாங்குவது குற்றமாகும். அது போன்று அயல் நாட்டுச் செலாவணிகளை விற்க விரும்பும் ஒரு நாட்டுக் குடிமகன் அல்லது அமைப்பு அதிகார மாற்று விகிதத்தில் மைய அதிகாரிகளிடமோ, அவர்கள் அதிகாரம் பெற்ற பதிலாட்களிடமோ விற்றல் வேண்டும். வேறு வழிகளில் அவர்கள் அயல் நாட்டுச் செலாவணிகளை விற்கமுடியாது. மைய அதிகாரிகளாலும் அவர்கள் அதிகாரம் பெற்ற பதிலாட்களாலும் சர்வாதீன முறையில் (monopoly) அயல் நாட்டு மாற்று நடவடிக்கைகளை மேற்கொள்வது அயல் நாட்டுச் செல்லுகளை அவற்றின் வருவாய்க்குகந்தவாறு புகுத்தி அவற்றின் தேவை, அளிப்பைச் சரிக்கட்ட முயலுவதால் அயல் நாட்டுச் செலுத்து நிலைகளை அதிகார மாற்று விகிதத்தில் சமநிலைப்படுத்த முடிகிறது.

## மாற்றுக் கட்டுப்பாட்டு முறைகள்

மாற்றுக் கட்டுப்பாட்டை ஒழுங்குபடுத்துவதற்கும், பன்னாட்டுச் செல்லுகளுக்கு அம் மாற்றுக்களைப் பயன்படுத்துவதற்கும், கட்டுப்படுத்துவதற்கும் ஒரு நாடு முறையான மாற்றுக் கட்டுப்பாட்டு ஆட்சி முறையைத் தனியாக நிர்ணயித்துக் கொள்ளவேண்டும்; அல்லது மற்ற நாடுகளுடன் ஏற்படுத்திக் கொண்ட ஒப்பந்தங்களின்படிச் செயல்பட வேண்டும். இவ்வாறு நாம் ஒருதலை, இருதலை மாற்றுக் கட்டுப்பாடுகள் பற்றி ஆராய்தல் வேண்டும். எனினும் இருவித மாற்றுக் கட்டுப்பாடுகளும் நேர்முகமானதும் மறைமுகமானதுமாகும். பொருள்களின் பன்னாட்டுப் பெயர்ச்சியைப் பலவழிகளிலும் ஒழுங்குபடுத்துவதன்மூலம் ஒரு குறிப்பிட்ட எல்லையில் அயல் நாட்டு மாற்று ஏற்ற இறக்கத்தை நிலைநாட்ட, குறிப்பிட்ட விகிதத்தில், குறிப்பிட்ட அளவில் அயல் நாட்டுச் செலாவணிகளை வாங்கவும் விற்கவும் ஏற்பாடு செய்வதன்மூலம் மறைமுக மாற்றுக்

கட்டுப்பாடு செயல் படுத்தப்படுகிறது. முன்கூறிய முறையில் சுங்க வரிகள், பங்கு ஒதுக்கீடு (quotas) முறைகள், கொடைகள் (bounties) ஏற்றுமதி, இறக்குமதிச் சட்டங்கள் முதலிய நடவடிக்கைகளைக் குறிக்கும் அயல் நாட்டு மாற்றுக்களின் உள்நாட்டுத் தேவைகளைக் குறைப்பதற்கும் அதன் அமைப்பைச் செயற்கை முறையில் அதிகரிப்பதற்கும் இந் நடவடிக்கைகள் கடைப்பிடிக்கப் படுகின்றன. இவ் வழிகளனைத்தும் அயல் நாட்டு மாற்றுக்களைப் பாதிப்பதற்காக அன்றிக் கட்டுப்படுத்துவதற்கன்று. இம் முறைகள் அவற்றிற்குரிய வரையறைகளைக் கொண்டுள்ளதால் அயல் நாட்டு மாற்றுக்களை முழுக் கட்டுப்பாட்டின்கீழ்க் கொண்டு வரும் முழுச் சக்தியுடையனவன்று. பின்னர் கூறிய முறை அயல் நாட்டு மாற்றுக்களின் அளவையும், அந்தந்த நாடு பயன் படுத்தக்கூடிய பொன் இருப்பையும் பொறுத்துள்ளது. கட்டுப் பாட்டு அதிகாரிகள் எப்பொழுதும் உள்நாட்டுச் செலாவணியை விற்று, மற்ற நாட்டுச் செலாவணிகளைக் குவித்துக் கொள்ளலா மானாலும், அதன் செலாவணி இருப்புக்களை அயல் நாடுகளில் கொண்டிருந்தால் அல்லது அவர்கள் நாட்டில் மிகுதியான பொன் இருப்புக்களைப் பெற்றிருந்தால் ஒழிய, அவர்கள் எண்ணற்ற அளவில், மற்ற நாட்டுச் செலாவணிகளுக்குப் பதிலாகத் தங்கள் நாட்டுச் செலாவணியை வாங்க முடியாது.

## நேர்முக மாற்றுக் கட்டுப்பாடு

1. அரசு அல்லது மையப் பண அதிகாரிகள் அயல் நாட்டு மாற்று அங்காடிக்குள் நேர்முகமாகப் புகுந்து, வேண்டிய மட்டத்தில், மாற்று விகிதத்தை உயர்த்துவதற்கோ, இறக்கு வதற்கோ அயல் நாட்டுச் செலாவணியை வாங்கலாம் அல்லது விற்கலாம்.

2. அரசு அல்லது மையப் பண அதிகாரிகள் அயல் நாட்டு மாற்று அங்காடிகளுக்கு நேர்முகமாகச் செல்லாமலேயே அச் செலாவணிக்குரிய தேவை, அளிப்பைத் தடுக்கலாம்.

## நிலைப்படுத்தல்
### (Pegging)

நாடுகள் தங்கள் செலாவணிகளின் மதிப்பை மற்ற செலா வணிகளுக்கு நெருங்கிய தொடர்புடன் வைத்திருப்பதை 'நிலைப் படுத்திய விகிதங்களில்' வைத்திருப்பதாகக் கொள்ளப்படும்.

ஒரு நாடு தனது செலாவணியை அயல் நாட்டுச் செலாவணிகளுடன் நிலையான மாற்று விகிதத்தில் வைத்திருப்பது நிலைப்படுத்தல் (Pegging) எனப்படும். நிலைப்படுத்தல் என்பது மேல் நிலைப்படுத்தல் அதாவது நிலையான மிகை மதிப்பு அல்லது கீழ் நிலைப்படுத்தல் அதாவது நிலையான குறைமதிப்புச் செய்தல் ஆகும். மேல் நிலைப்படுத்தல் (Pegged up) என்பது அந்நியச் செலாவணியின் மிகுதியானத் தேவையையும், கீழ் நிலைப்படுத்தல் (Pegged down) என்பது உள்நாட்டுச் செலாவணியின் மிகுதியானத் தேவையையும் குறிக்கும். தன்னுடைய செலாவணியை மேல் நிலைப்படுத்தும் ஓர் அரசு அத் தொகைக்கு அந்நியச் செலாவணியைக் கொடுத்துத் தன்னுட்டுச் செலாவணியை வாங்கத் தயாராய் இருத்தல் வேண்டும். மாறாகத் தனது செலாவணியைக் கீழ் நிலைப்படுத்தும் ஓர் அரசு தனது செலாவணியைக் கொடுத்து எண்ணற்ற அளவில் அந்நியச் செலாவணிகளை வாங்கத் தயாராய் இருத்தல் வேண்டும். மாற்று விகிதத்தை அதன் இயல்பான விகிதத்தில் நிலை நிறுத்தி வைப்பது நிலைப்படுத்தலின் மற்றொரு செயலாகும். அயல் நாட்டு மாற்றுக்களை வாங்குதல், விற்பதன்மூலம் மாற்று விகிதத்திலுள்ள குறுங்கால ஏற்ற, இறக்கத்தைத் தவிர்க்கலாம். மாற்று அங்காடியில் உள்நாட்டுச் செலாவணியை விற்று அயல் நாட்டுச் செலாவணிகளை வாங்குவதன்மூலம் உள்நாட்டுச் செலாவணியின் மதிப்புயர்வதைத் தவிர்க்கலாம். அதுபோல் மாற்று அங்காடியில் அயல் நாட்டுச் செலாவணிகளை விற்று உள்நாட்டுச் செலாவணிகளை வாங்குவதன்மூலம் உள்நாட்டுச் செலாவணியின் மதிப்பிறக்கத்தைத் தவிர்க்கலாம். உள்நாட்டுச் செலாவணிகளின் காப்பிருப்புக்கள் மாற்றுக் கட்டுப்பாட்டு அதிகாரிகளால் நிலை நிறுத்தி வைக்கப்பட்டிருக்கின்றன.

## மாற்றுத் தடைகள்
## (Exchange Restrictions)

சாதாரண வணிக நடவடிக்கையில் சரிசெய்ய முடியாப் பாதக அயல் நாட்டுச் செலுத்து நிலை உருவாகும்போது மாற்றுத் தடை தேவைப்படுகிறது. இன்றியமையாத சரக்குகளின் இறக்குமதியை வேண்டிய அளவில் குறைக்க முடியாது. அயல் நாட்டு அங்காடிகளின் அச் சரக்குகளின் தேவையும், அளிப்பும் நெகிழ்ச்சியுற்றதாக விளங்குவதால் அந்த இன்றியமையாத சரக்குகளின் இறக்குமதிகளையும் பெருக்க முடியாது. அயல் நாட்டுச் செலுத்து நிலையில் சமநிலை எய்துவதற்கு மிகுதியாகத் திருப்பிச் செலுத்தக்கூடிய அயல் நாட்டுக் கடன்கள், அவற்றின் வட்டிகளின் அளவையும்

குறைக்க முடியாது. இவ்வித நிலைமை நீடித்திருந்தால் உள்நாட்டுச் செலாவணியில் குழப்பம் ஏற்பட்டு ஒரு நாட்டின் மூலதன வெளியோட்டம் மிகுதியாகும். ஆகவே, மாற்றுத் தடையான (Exchange restriction) உச்சக்கட்ட மாற்றுக் கட்டுப்பாடு விதிக்க வேண்டிய நிலை ஏற்படுகிறது.

இவ்விதக் கட்டுப்பாட்டில் அயல் நாட்டு மாற்று அங்காடிகள் செயலற்றுவிடுகின்றன. அயல் நாட்டு மாற்று நடவடிக்கைகள் அனைத்தும் அரசின் பதிலாட்கள்மூலமே நடைபெறுகின்றன. பொதுவாக, பாங்குகளே அரசின் பதிலாட்களாகச் செயல்பட்டு அயல் நாட்டு மாற்றுக்களை வாங்கி விற்கின்றன. நாட்டு மக்கள் அனைவரும் ஈட்டிய அயல் நாட்டுச் செலாவணிகள் அனைத்தையும் இக் காரணத்திற்காக நிர்ணயிக்கப்பட்ட மாற்று விகிதங்களில் இவ்வதிகாரம் பெற்ற பதிலாட்களிடம் சேர்ப்பித்துவிடவேண்டும். அயல் நாடுகளில் செலுத்தவேண்டிய செல்லுகளுக்காக அம் மக்கள் அயல் நாட்டுச் செலாவணிகளை இப் பதிலாட்களிடமிருந்து நிர்ணயிக்கப்பட்ட விகிதங்களில் வாங்கிக் கொள்ளவேண்டும்.

இறக்குமதிகளுக்கும், சுற்றுலா, கல்வி முதலான மற்ற காரணங்களுக்காக அயல் நாடுகளுக்குப் பயணம் செய்வதற்குத் தடை விதித்தும் மற்ற நாடுகளுக்குச் செலுத்தக்கூடிய செல்லுகளைக் கட்டுப்படுத்தலாம். அயல் நாடுகளுக்குச் செலுத்துவதற்குரிய அந்நியச் செலாவணிப் பங்கொதுக்கீடு செய்து அளிக்கப்படுகிறது. ஒரு நாட்டுக் குடிமக்கள் கணக்கிலிருந்து அயல் நாட்டுக் குடிமக்கள் கணக்குகளில் மாற்றப்படும் மாற்றங்கள் யாவும் சோதனை செய்யப்பட்டுக் கட்டுப்படுத்தப்படுகின்றன.

அதிகாரம் பெற்ற பதிலாட்களிடம் ஈட்டிய அயல் நாட்டு மாற்றுக்கள் யாவும் சேர்ப்பிக்கப்பட்டுள்ளனவா என்று அறிவதன் மூலம் அயல் நாட்டு வருவாய்கள் அனைத்தும் கட்டுப்படுத்தப்படுகின்றன. ஒரு நாட்டு ஏற்றுமதிகள் யாவும் சோதனை செய்யப்பட்டு, சுங்க அலுவலகங்கள் வழியாக அவை செல்ல அனுமதிக்கப்படுவதற்கு முன்னர் அவற்றின் உண்மை மதிப்பும், அளவும் மதிப்பிடப்படுகின்றன. உள்நாட்டிற்கு அனைவரும் அயல் நாட்டினர் வைத்திருக்கும் அயல் நாட்டு மாற்றுக்கள் அனைத்தையும் காண்பிக்கும்படிச் செய்து புலனாகா இனங்களும் கட்டுப்படுத்தப்படுகின்றன.

மூலதன ஏற்றுமதிகள் சிறப்பான சிக்கலாக இருக்கும்போது மூலதன வளர்ச்சியின் கடுமையான கட்டுப்பாடு விதிப்பது மாற்று நிர்வாகிகளின் சிறப்பு வேலையாகும். மூலதன இறக்குமதிகள்

மூலம் கிடைக்கக்கூடிய அனைத்து வருவாய்களையும் அதிகாரம் பெற்ற மாற்று வணிகர்களிடம் ஒப்படைத்தல் வேண்டும். மூலதன ஏற்றுமதி முழுவதும் தடுக்கப்படுகிறது அல்லது கடினமான நிபந்தனைகளின்பேரில் அனுமதிக்கப்படுகிறது. இறக்குமதிகளின் இடாப்புத் தொகையை அதிகப்படுத்துதல் ஏற்றுமதிகளின் இடாப்புத் தொகையைக் குறைப்பதன்மூலம் நீக்கம் செய்யப்படும் மூலதன ஏற்றுமதிகள் எச்சரிக்கையுடன் தடுக்கப்பட வேண்டும். இப் பழக்கங்களைத் தடுப்பதற்கு இடாப்புக்களையும், ஏற்றுமதி இறக்குமதிப் பொருள்களின் மதிப்பையும் சுங்க அதிகாரிகள் ஆராய்ந்தறிவது மிகவும் இன்றியமையாததாகும். அதிகாரமற்ற நீண்டகால மூலதனப் பெயர்ச்சியைத் தடுக்கும் பொருட்டு ஒரு நாட்டுக் குடிமக்களால் வாங்கி விற்கப்படும் அயல் நாட்டு ஈடுகளும், அதுபோல் அயல் நாட்டு மக்களால் வாங்கி விற்கப்படும் உள்நாட்டு ஈடுகளும் கடினமாகக் கட்டுப்படுத்தப் படுகின்றன.

## தீர்வக, செல்லுகள் ஒப்பந்தங்கள்
## (Clearing and Payment Agreement)

சில காலங்களில் நிர்வாகத்திற்கும் செல்லுகளுக்கும் இரு பக்கமும் ஏற்பாடுகள் செய்யப்படுகின்றன. இது காரணமாகக் கடன்பட்ட நாடு கடனீந்த நாட்டுடன் ஒப்பந்தம் செய்துகொண்டு இரண்டு நாடுகளுக்கிடையே உள்ள பணச் செல்லுகளுக்குக் கட்டுப்பாடு விதிக்கலாம்.

தீர்வக ஒப்பந்தத்தின்கீழ் ஒவ்வொரு நாடும் அந் நாட்டிலுள்ள கணக்கிலேயே பணத்தைச் செலுத்துவதன்மூலம் அயல் நாடுகளுக்குச் செல்லுகளை அனுப்புகிறது. இக் கணக்குகளிலிருந்து அயல் நாட்டு ஏற்றுமதியாளர்களுக்குப் பணம் அனுப்பப்படுகிறது. இரு நாடுகளிடையேயுள்ள செல்லுகள் இவ்வாறு தீர்த்துக்கொள்ளப் படுகின்றன. கடனுளி நாட்டில் அயல் நாட்டுக் கடனீந்தோரின் கணக்கின்பேரில் உள்ள அதிக நிலுவைகள் வேறு நோக்கங்களுக்குப் பயன்படுத்தப்படுகின்றன. கடனீந்த நாடுகளிலுள்ள ஏற்றுமதியாளர்கள் அயல் நாடுகளில் பொருள்களை விற்க விரும்பினுல் அந் நாடுகளிலிருந்து வேறு பொருள்களை வாங்கவேண்டும். கடன் பெற்ற நாடு அந் நாட்டுக்கு உள்ளும்புறமும், அனுப்பப்படும் செல்லுகளைக் கவனமாகக் கண்காணிக்கிறது.

செல்லுகள் ஒப்பந்தத்தின்கீழ் கடனுளி நாடு அதன் பாதக நிலுவைகளைப் பெற்றிருக்கும் மற்றொரு நாட்டுக்குரிய செல்லு

களுக்கு மாற்றுக் கட்டுப்பாடு விதிக்கிறது. கடனாளி நாடு அதன் அயல் நாட்டுச் செலாவணி வருவாயிலிருந்து ஒரு பகுதியை நடப்புக் கணக்கில் செலுத்தி மற்றொரு பகுதியைக் கடன், வட்டிகளை அடைப்பதற்குப் பயன்படுத்துகிறது. ஆகவே கடனீந்த நாடு அதன் ஒப்பந்தத்திற்குகந்தவாறு சுருக்கிக் கொள்ளுகிறது.

## கட்டுப்பாடு செய்தல் அல்லது மாற்றுப் பங்கொதுக்கீடு செய்தல்

மாற்றுக் கட்டுப்பாடு முறையைக் கையாளும் ஓர் அரசு கீழ்க் கண்ட மூன்று செயல்களைச் செய்தல் வேண்டும்.

(1) பொதுவாக மையப் பாங்கிடமோ அல்லது மாற்றுக் கட்டுப்பாடு வாரியத்திடமோ ஒரு நாடு அதன் அனைத்து அயல் நாட்டுச் செலாவணி நடவடிக்கைகள் யாவையும் மையப் படுத்தல் வேண்டும். (2) முன் அனுமதி இல்லாமல் ஒரு நாட்டுச் செலாவணி மாற்றாக அளிக்கப்படக்கூடாது. (3) அதிகாரமற்ற அயல் நாட்டுச் செலாவணி நடவடிக்கைகளில் ஈடுபடுதல் குற்றச் செயலாகக் கருதப்படவேண்டும். உள்நாட்டு ஏற்றுமதியாளர்கள் அனைவரும் தங்கள் சரக்குகளை அந்நியச் செலாவணிக்கே விற்கச் செய்து அதிலிருந்து வரும் அந்நியச் செலாவணிகளைக் குறிப்பிட்ட நிலையான விகிதங்களில் மையப் பாங்கிடம் சேர்ப்பிக்கச் செய்தல் வேண்டும். அவ்வாறு கிடைத்த அந்நியச் செலாவணிகளை அனுமதி பெற்ற இறக்குமதியாளர்களுக்கு அதிகாரிகள் பங்கிட்டுக் கொடுப் பார்கள். இந் நிலையில் மாற்றுக் கட்டுப்பாட்டு அதிகாரிகள் கிடைத்தற்கருமையான அந்நியச் செலாவணியை (1) மூலதனப் பொருள்கள், இன்றியமையாத பொருள்கள், இன்றியமையாத நுகர்வுப் பொருள்கள், ஆடம்பரப் பொருள்கள் முதலான (1) பலவித இறக்குமதிச் சரக்குகள், (2) வியாபாரச் சரக்கிறக்கு மதிகள், இறக்குமதிப் பணிகள், வட்டி இலாப ஈவு, கடன் திரும்ப அளித்தல், அயல் நாடுகளில் சுற்றுலாச் செல்பவர்களுக்கு அளிக்கப்படும் வெளிச் செல்லுகள், (3) புதிதாக இறக்குமதிகளைத் தொடங்கும் பலவித நாடுகள், (4) அந்நியச் செலாவணிகளுக்காக விண்ணப்பித்திருக்கும் பலவித விண்ணப்பதாரர்களுக்கும்; பங்கிட்டு ஒதுக்குவதில் மிகவும் கடினமான செயலை அனுபவிக் கிறார்கள். மாற்றுக் கட்டுப்பாடு அதிகாரிகள் அந்நியச் செலாவணியின் உள்நாட்டு இருப்பைச் சேமித்துப் பகிர்ந்தளிக்கும் வேலையை நிறைவு செய்ய வேண்டும். இறக்குமதியாளர்களுக்கு அந்நியச் செலாவணியை அளிக்கலாமா அல்லது அளிக்கவேண்டிய

தில்லையா என்று கட்டுபாட்டு அதிகாரிகளே தீர்மானிக்கலாம். சுங்க அதிகாரிகள் தங்கள் சட்டமுறை விதிகளைக் கடைப்பிடிப்பதற்குரிய உதவி, வழிவகைகளை நிர்ணயிக்கலாம். வேறுபடுத்திக் காட்டும் சர்வாதீனராகவும் அவ்வதிகாரிகள் இயங்கலாம். அதாவது இன்றியமையாத பொருள்கள் இறக்குமதிகளுக்குக் குறைவான மாற்று விகிதத்தையும், ஆடம்பரப் பொருள் இறக்குமதிகளுக்கு அதிகமான விகிதத்தையும் சில நாடுகளின் செலாவணிகளைப் பெறும் பொருட்டுப் பயனுள்ள விகிதங்களாலும் சலுகைகளாலும் அந் நாடுகளுக்கு ஏற்றுமதிகளைத் தூண்டுதல் முதலான செயல்களில் மாற்றுக் கட்டுப்பாடு அதிகாரிகள் ஈடுபடலாம். அந்நியச் செலாவணித் தேவையின் நோக்கங்களைப் பொறுத்தும் அயல் நாட்டுச் செலுத்துநிலை இடர்களைப்பொறுத்தும் அயல் நாட்டுச் செலாவணிப் பங்கீடு முறை முழுமையாகவும் அல்லது பகுதியாகவும் இருக்கலாம். அவ்வந்நியச் செலாவணித் தேவை மிகுதியாகவும், அதனைப்பெறும் இடர்கள் மிகுதியாகவும் இருப்பின் அனைத்து விகிதப் பன்னுட்டு நடவடிக்கைகளால் பெறப்படும் அந்நியச் செலாவணிகள் யாவும் மைய அதிகாரிகளிடம் சேர்ப்பிக்கப்பட வேண்டும் என்று கட்டாயப்படுத்தலாம். அப்பிரச்சினை சற்று எளிதாக இருந்தால் சில குறிப்பிட்ட சதவிகித அந்நியச் செலாவணிமட்டும் மைய அதிகாரிகளிடம் சேர்ப்பிக்கப்படலாம் என்று கோரலாம். பகுதிப் பங்கீட்டு முறையில் எஞ்சியுள்ள அந்நியச் செலாவணிகளைப் பெற்றிருப்பவர்கள் தடையற்ற அங்காடியில் அவற்றை விற்கலாம். ஆகவே கட்டுப்படுத்தப்பட்ட அங்காடியும், கட்டுபாடற்ற தடையற்ற அங்காடியும் அருகருகே செயல்படுகின்றன. முழுமையான பங்கீட்டு முறை நிலவும்போது அந்நியச் செலாவணிகளைப் பயன்படுத்தும் அனைவரும் தங்களுக்குத் தேவையான அந்நியச் செலாவணிகளுக்கு மைய அதிகாரிகளிடம் விண்ணப்பிக்கவேண்டும். பகுதிப் பங்கீட்டு முறையில் இன்றியமையாத தேவைகளுக்குத்தான் மைய அதிகாரிகள் அந்நியச் செலாவணிகளை அளிப்பர். மற்றவர்கள் அனைவரும் தங்களுக்குத் தேவையான அந்நியச் செலாவணிகளைத் தடையற்ற மாற்று அங்காடியில் வாங்கிக் கொள்ளலகம்.

## அதிகார விகிதங்கள்

பங்கீட்டு முறையில் அறிவிக்கப்பட்ட அதிகாரிகள் சட்ட விதிமுறைகளின்படி தாங்கள் அந்நியச் செலாவணிகளை வாங்குதல், விற்றல் விகிதங்களை அறிவிப்பர். அங்கு ஒரே வாங்கும் விகிதமும், ஒரே விற்கும் விகிதமும் நிலவும். பங்கீட்டு முறைச் செலவுகளைச்

சரிக்கட்ட வாங்குதல் விற்பனை விகிதத்தில் சிறிது வேறுபாடுதான் இருக்கும். இவ்வதிகார விகிதம் அந்நியச் செலாவணி கிடைத்தற்கு அருமையுடையதாக உள்ளபோது ஓரளவு கட்டுப்பாட்டுடன் செயல்படும், இதில் முதன்மையானது இறக்குமதிக் கட்டுப்பாடாகும். அனுமதி எப்பொழுது வாங்குவது, எச் சரக்கை இறக்குமதி செய்வது, அந்நியச் செலாவணியைச் செலுத்தக்கூடிய வேறு எந்தப் பணியை வாங்கவேண்டும் என்பனவற்றை அரசு நிர்ணயிக்கவேண்டும். இறக்குமதி அனுமதி வழங்கும் அதிகாரிகள், எந் நாட்டிலிருந்து, எவ்வளவில், எந் நிறுவனத்திடமிருந்து சரக்குகளை இறக்குமதி செய்யவேண்டும் என்று நிர்ணயிப்பார்கள். மாற்றுக் கட்டுப்பாட்டை மேற்கொண்ட நாடுகளில் அதிகார மாற்று விகிதத்தால் ஏற்படும் உள்நாட்டுச் செலாவணியின் மதிப்பு உயர்வினுல் 'கறுப்புச் சந்தைகள்' (Black Markets) நிலவி மாற்றுக் கட்டுப்பாடு அதிகாரிகளின் கட்டுப்பாட்டிற்கடங்காமல் சட்ட முரண்பாடான அந்நியச் செலாவணி நடவடிக்கைகள் நடைபெறுகின்றன. இக் கறுப்புச் சந்தைகள் மாற்று கட்டுப்பாடுத் திட்டத்தின் வெற்றிக்கு ஒரு சவாலாக அமைந்திருக்கின்றன. இதன் முடிவு, மிகுந்த தண்டனைக்குரிய சட்ட முரண்பாடான அந்நியச் செலாவணி நடவடிக்கைகளில் ஈடுபடுதலாகும்.

## பன்முக மாற்று விகித முறைகள்

ஒரே அதிகார விகிதம், அல்லது சிறு வேறுபாட்டுடன் கூடிய வாங்குதல், விற்பனை விகிதங்கள், இரண்டு அல்லது அதற்கு மேற்பட்ட விகிதங்கள் நிலவும்போது வெற்றி பெறும். வாங்குதல், விற்பனை விகிதங்கள் போதுமான அளவில் மாறுபடும்போது அல்லது இரண்டுக்கு மேற்பட்ட விகிதங்கள் நிலவும்போது அயல் நாட்டு மாற்றுக்களை வாங்கக்கூடிய பலவித வாங்குபவர்களையும், பலவித விற்பனையாளர்களையும் வேறுபடுத்தக்கூடிய மாறுபட்ட விலை நிலவும். அங்கு இரண்டுவிதப் பன்முக விகிதங்கள் நிலவும். எந்தெந்த நாடுகளில் அயல் நாட்டு மாற்று நடவடிக்கைகள் நடைபெறுகின்றன என்பனவற்றைக் கவனிக்காமல் பலவித நடவடிக்கைகளுக்கும் தனிப்பட்ட விகிதங்கள் நிலவுகின்றன. பலவித நாடுகளுக்கும் பலவித மாற்று விகிதங்கள் நிலவுவதை மற்றொருவிதப் பன்முக மாற்று விகிதம் என்றழைக்கலாம். 1920, 1930-ல் பல நாடுகள் பன்முக மாற்று விகிதங்களைப் பின்பற்றுவதற்குப் பல நோக்குகளைக் கொண்டிருந்தன. அந் நோக்கங்கள் :

1. ஒரு நாடு அதற்குச் சாதகமான வணிகத்தைப் பெருக்கிக் கொள்ளல் ;

2. அடிப்படை இறக்குமதிகளுக்குரிய உள்நாட்டு விலைகளைக் குறைத்து வைத்திருத்தல் ;

3. உள்நாட்டுத் தொழிற் சாலைகளைப் பாதுகாத்தல் ;

4. ஏற்றுமதிக்காக உற்பத்தி செய்பவர்கள் ஏற்றுமதி அங்காடியில் போட்டியிட முடியாத நேரத்தில் அவர்களுக்கு ஊக்க உதவி அளித்தல் ;

5. அயல் நாட்டுச் செலாவணிகளைச் சேமித்து வைத்தல் ;

6. பொதுக் கருவூலத்தின் வருவாயைப் பெருக்குதல்.

பல நடவடிக்கைகளுக்கு நிதிவசதி அளிப்பதற்காகப் பற்பல விகிதங்களில் அந்நியச் செலாவணிகளை விற்பனை செய்வதன் மூலம் அயல் நாட்டுச் செலுத்து நிலையில் ஒரு நாடு மிகுந்த பாதிப்பை ஏற்படுத்துகிறது. இதே பாதிப்பு சுங்க வரிகளை மாற்றுவதன் மூலமும், ஏற்றுமதி இறக்குமதித் தொகையை வழங்குவதன் மூலமும் ஏற்படுகிறது. மற்ற காரணங்களுக்கு விற்பதைவிடத் தேவையான அந்நியச் செலாவணிகளைக் குறைந்த விகிதத்தில் விற்பதன்மூலம் இன்றியமையாச் சரக்குகளின் இறக்குமதிகளை ஊக்குவிக்கலாம். மாறுபட்ட உயர்ந்த விகிதங்களை விதிப்பதன் மூலமும் இன்றியமையாத தேவை அல்லாத சரக்குகள், பணிகள் இறக்குமதி செய்யப்படுவதை வேறுபடுத்திக் காட்டலாம். இது போல் ஏற்றுமதிச் சரக்குகளுக்கு அதிக விகிதங்களில் அந்நியச் செலாவணிகளை வழங்கி ஏற்றுமதிகளை அதிக அளவில் பெருக்கலாம். அயல் நாடுகளில் விற்பனை செய்யப்படுவதால் பெறக்கூடிய அந்நியச் செலாவணிகளுக்குக் குறைவான மாற்று விகிதம் விதிப்பதன்மூலம் கிடைத்தற்கருமையான பொருள்கள் ஏற்றுமதி செய்யப்படுவதை மறைமுகமாகத் தடைசெய்யலாம். சில குறிப்பிட்ட சரக்குகள் ஏற்றுமதி செய்யப்படுவதை ஊக்குவிப்பதும், சில குறிப்பிட்ட சரக்குகள் இறக்குமதி செய்வதைத் தடைசெய்வதும், பன்முக மாற்று விகிதங்களின் நோக்கமாகும். ஒரு நாடு கட்டுப்பாடு, கட்டுப்பாடற்ற அங்காடியில் பன்முக மாற்று விகிதங்களை விதிப்பதன் நோக்கம் பன்முகச் செலாவணிப் பழக்கங்களில் ஈடுபடுவதாகும். பற்பலப் பண அலகுகளைப் பெற்றிருந்தால் ஒவ்வொருவிதப் பண அலகும் ஒவ்வொருவிதப் பொருளை வாங்குவதற்குப் பயன்படுத்தப்படும்.

அயல் நாட்டுப் பாங்கு அல்லது வியாபாரக் கணக்குகளைக் கட்டுப்படுத்துவதன்மூலம், இந் நடவடிக்கைகளுக்குதான் அக் கணக்குகளில் இருக்கும் அந்நியச் செலாவணிகள் பயன்படுத்த

படவேண்டும் என்றும், அயல் நாட்டுக் கடன்கள் திரும்ப அனுப்பப் படுவதற்கு இடைக்காலத் தடை விதிப்பதன்மூலமும் மேற் சொன்ன மாற்றுக் கட்டுப்பாடுகள் கடைப்பிடிக்கப்படவேண்டும். மாற்றுக் கட்டுப்பாடுகளைச் செயல்படுத்தக்கூடிய வழிவகைகள் :— (1) செலுத்து ஒப்பந்தங்கள் ; (2) தீர்வக ஒப்பந்தங்கள் ; (3) நிலைபேற்று ஒப்பந்தங்கள் ; (4) மாற்று இடைக்காலத் தடை ; (5) தடைப்பட்ட கணக்குகள்.

## செலுத்து ஒப்பந்தங்கள்

ஒரு நாடு, மற்றொரு நாட்டிலிருந்து கடன், அதற்குரிய வட்டி முதலியவற்றைத் திரும்பப் பெறுவதற்குச் செலுத்து இருப்புக்கள் அடையக்கூடிய அதே சமயத்தில், கடனீந்த நாடு, கடன் பெற்ற நாடுகளிடமிருந்து மிகுதியான கச்சாப் பொருள் களையும், உணவுப் பொருள்களையும் இறக்குமதி செய்துகொண் டிருந்தால், இவ்விறக்குமதிகளால் கடன்பட்ட நாடுகளுக்கும் கிடைக்கக்கூடிய அந்நியச் செலாவணியின் ஒரு பகுதியை அவற்றிற் குரிய கடன்களை அடைப்பதற்குப் பயன்படுத்த வேண்டும் என்று நிபந்தனை அளிக்கும். கடன் பெற்ற நாடு கடன் ஈந்த நாட்டின் மூலம்தான் அதன் சரக்குகளை ஏற்றுமதி செய்யவேண்டியிருப்பின் கடன் ஈந்த நாடு விதிக்கும் நிபந்தனைகளைக் கடன்பெற்ற நாடு ஏற்றுக்கொள்ளுவதைவிட வேறு வழியில்லை. இச் செலுத்து ஒப்பந்தத்தினால்கூட கடன்பெற்ற நாடு அது ஏற்றுமதி செய்ததால் கிடைக்கக்கூடிய அந்நியச் செலாவணியின் பெரும்பகுதியை அதுவே பயன்படுத்திக் கொள்ளலாம். மேலும் பன்னாட்டளவில் அதன் புறப் பொருள்களையும் சரிப்படுத்திக் கொள்ளலாம்.

இரு நாடுகளுக்கிடையே ஏற்படும் செலுத்து ஒப்பந்தமானது, ஒரு சில செல்லுகளுக்கு அவ்விரு நாடுகளில் ஏற்று அது பெற்ற அந்நியச் செலாவணியின் ஒரு பகுதியைச் செலுத்துவதே மாற்றுப் பங்கீடு ஒப்பந்தமாகும். தடையற்ற மாற்றுக்கள் நிலவும் நாட்டுக்கு ஏற்றுமதி செய்வதன்மூலம் கிடைக்கக்கூடிய அந்நியச் செலாவணியை மாற்றுக் கட்டுப்பாட்டை விதிக்கும் நாடு பகிர்ந் தளிக்கவேண்டும் என்று செலுத்து ஒப்பந்தத்தில் குறிப்பிடப் பட்டிருக்கும். இறக்குமதிக்காகச் செலுத்தக்கூடிய செல்லு களுக்கு இவ்வாறு பெற்ற செலாவணிகளிலிருந்து பெறுவது கடினப்படுத்தப்பட்டுள்ளது. இவ்வாறு பெருக்கப்பட்ட அந்நியச் செலாவணியின் ஒரு பகுதி தடையற்ற மாற்றுக்கள் நிலவும் நாடு களுக்குக் கடன், வட்டி திரும்பத் தருவதற்கும், குறிப்பிட்ட

செல்லுகளைச் செலுத்துவதற்கும் பயன்படுத்தப்படும். எஞ்சியுள்ள பகுதி மாற்றுக் கட்டுப்பாடு விதிக்கும் நாட்டின் விருப்பப்படிப் பயன்படுத்தப்படும்.

## தீர்வக ஒப்பந்தங்கள்

சரி சமவலுவுள்ள இரு நாடுகளுக்கிடையே உள்ள ஒப்பந்தமே தீர்வக ஒப்பந்தமாகும். இந்த ஒப்பந்தத்தின்கீழ் ஒவ்வொரு நாடும் அதன் ஏற்றுமதியாளர்களுக்கு, இறக்குமதியாளர்களிடமிருந்து பெறக்கூடிய அந்நியச் செலாவணிகளைச் செலுத்தும். இவ்வாறு, இயல்பான அந்நிய மாற்று அங்காடிகளில் நிலவும் செயல் முறைகளைத் தீர்வக ஒப்பந்தம் விலக்கிவைக்கிறது. தீர்வக ஒப்பந்தத்தின்படி ஒவ்வொரு நாட்டின் இறக்குமதியாளர்களும், மையப் பாங்கு அதிகாரிகளால் வைக்கப்பட்டிருக்கிற ஒரு நிதியில் உள்நாட்டுச் செலாவணியிலேயே செல்லுகளைச் செலுத்துகின்றனர். இந் நிதியில் சேர்ந்த உள்நாட்டுச் செலாவணிகள் செலுத்துவதற்குப் பயன்படுத்தப்படுகின்றன. இரண்டு செலாவணிகளுக்குள்ள மாற்று விகிதம் ஒப்பந்த நிபந்தனைக்குகந்தவாறு நிர்ணயிக்கப்படுகிறது. அயல் நாட்டுச் செலுத்து நிலையில் சமநிலை ஏற்படுத்தும் பொருட்டு அரசு விருப்பப்படி இறக்குமதிகளை ஒழுங்குபடுத்துவதும், ஏற்ற இறக்க மாற்று விகிதத்தின் நிலையாமையைத் தடுப்பதும் இந்த ஒப்பந்தத்தின் நோக்கங்களாகும். மும்முனை வணிகச் செலவில் இருபக்க வணிகத்தை இம் முறை தூண்டுகிறது. இத் தீர்வக ஒப்பந்தம், இவ்வாறு பன்னாட்டு வணிகத்தில் கட்டுப்பாட்டுப் பாதிப்பை ஏற்படுத்துகிறது. மேலும் செலாவணி ஓரிடத்தில் குவிவதையும், செலாவணி குறை மதிப்பையும் இவ்வொப்பந்தம் தடைசெய்கிறது. போர்க் காலங்கள், அயல் நாட்டுச் செலுத்து நிலையில் சமநிலையற்ற காலங்கள் தவிர மற்ற காலங்களில் இம் முறை தவறென்று கூறப்படுகிறது.

அந்நியச் செலாவணி இருப்புக்களைப் பெற்றிராத நாடுகள் சரக்குகளை இறக்குமதி செய்ய இம் மாற்றுத் தீர்வகம் மிகவும் பயனளிக்கிறது. ஆனால், ஒப்பந்த நாடுகளுக்கிடையே சில செயல்களில் ஒத்த ஒப்பந்தங்கள் நிகழ்தல் வேண்டும். முதலாவதாக இந் நிதியிலிருந்து எச் செல்லுகளை முன்கூட்டிச் செலுத்தவேண்டும் என்று நிர்ணயிக்கப்படும். இந் நிதியின் ஒரு பகுதி ஒவ்வொரு நாட்டின் சரக்கு ஏற்றுமதிக்கு ஒதுக்கப்படவேண்டும். மற்றொரு பகுதி இரு நாடுகளிடையே உள்ள கடன்கள், மூலதனப் பணிகளுக்கும் பயன்படுத்தப்படவேண்டும். பிறிதொரு பகுதி

புலனுகா இனங்களுக்குச் செலுத்துவதற்காகப் பயன்படுத்தப்பட வேண்டும். பொதுவாக இந்த ஒப்பந்தம் ஒரு நாட்டுச் செலா வணியை மற்றொரு நாட்டுச் செலாவணியாக மாற்றுவதற்குரிய மாற்று விகிதத்தை நிர்ணயிக்கிறது. இரண்டாவதாக இந்த ஒப்பந்த நாடுகளுடைய நிதியில் ஏற்படும் பற்றுக்குறை அல்லது உபரியைச் சரிசெய்வதற்கு இந்த ஒப்பந்தம் வகை செய்கிறது.

## அசையாநிலை ஒப்பந்தம்

அயல் நாட்டுக் குறுங்காலக் கடன் நிலுவைகளுக்கு இடைக் காலத் தடை விதிப்பதன்மூலம் இவ்வொப்பந்தம் மூலதனப் பெயர்ச்சியைத் தடுக்கிறது. குறுங்காலக் கடன்கள் நீண்டகாலக் கடன்களாக மாற்றப்படுகின்றன அல்லது அக் கடனைப் படிப்படி யாகத் திரும்ப அளிக்க வகைசெய்யப்படுகிறது.

## மாற்றுத் தடை

இம் முறையின்கீழ் இறக்குமதியாளர்களும், மற்றவர்களும் தங்கள் அயல் நாட்டுக் கடன்களை, உள்நாட்டுச் செலாவணிகளில், குறிப்பிட்ட அதிகாரிகளிடம் செலுத்துவார்கள். கடன் திரும்பத் தருவதற்குரிய இடைக்காலத் தடை முடிந்தவுடன் இந் நிதிகள் அயல் நாடுகளுக்குச் செலுத்தப்படுகின்றன. சில சந்தர்ப்பங் களில் இடைக்காலத் தடை விதிக்கப்பட்டிருக்கிற கடன் நிதிகளை, மாற்றுத் தடை விதிக்கப்பட்டிருக்கிற நாட்டு அரசின் நிபந்தனைக் குகந்தவாறு அந் நாட்டுக் கடனீந்தோர் பயன்படுத்திக் கொள்ளலாம்.

## தடைப்பட்ட கணக்குகள்
## (Blocked Accounts)

உள்நாட்டுப் பாங்கு அல்லது கடன் நிறுவனத்தின்மூலம் ஓர் அயல் நாட்டுக் குடிமகன், தொழில் நிறுவனம் அல்லது கூட்டமைப்புக்கு அனுப்பப்பட்ட நிதியை அவர்கள் பெறுவதற்கும், பயன்படுத்துவதற்கும் அந் நாட்டு அரசால் கட்டுப்படுத்தப் படுவதே தடைப்பட்ட கணக்குகளாகும் (Blocked Accounts).

ஒரு நாடு தடைப்பட்ட கணக்கை மாற்றுக் கட்டுப்பாடு செய்வதற்குரிய ஒருவழியாகக் கொண்டால் பொதுவாக அயல்

நாட்டினருக்குச் செலுத்தவேண்டிய செல்லுகளைத் தன்னுட்டுச் செலாவணியிலேயே அளிக்கிறது. ஆனால், அச் செல்லுகளை அந்நியச் செலாவணிகளாக மாற்றிக்கொள்ள அனுமதிக்கப் படுவதில்லை. அதாவது கடன் பெற்ற நாடு அதன் அயல் நாட்டுப் பொறுப்புக்களைத் தீர்ப்பதற்கு வகை செய்வதோடு அதன் வசம் உள்ள பொன், அந்நியச் செலாவணிகளைச் செலவழிக்காமல் சேர்த்து வைத்துக்கொள்வதற்கும் வகை செய்கிறது. மேலும் நடப்பு ஏற்றுமதிகளால் கிடைக்கக்கூடிய அந்நியச் செலவணிகளைப் பழைய கடன்களை அடைப்பதற்குப் பயன்படுத்துவதற்குப் பதிலாகப் புதிய இன்றியமையாத சரக்குகளை இறக்குமதி செய் வதற்குப் பயன்படுத்திக் கொள்ளலாம். தடைவிதிக்கும் நாட்டில் பாங்குக் கணக்கு வைத்திருக்கக்கூடிய அந்நிய நாட்டினர், அக் கணக்கில் உள்ள பணத்தைத் தங்கள் நாட்டுச் செலாவணியாக மாற்றிக்கொள்ள அனுமதிக்கப்படமாட்டார்கள். தடை விதிக்கப் பட்டிருக்கும் நாட்டில் ஈடுகள், சொத்துக்களை வைத்திருக்கக்கூடிய அயல் நாட்டினர் அவற்றை விற்று அதனுல் வரும் வருவாயைத் தடைப்பட்ட கணக்கில் செலுத்த அனுமதிக்கப்படுகின்றனர். இது போல், வட்டி, இலாப ஈவு பெறும் அயல் நாட்டினர் அவற்றை இத் தடைப்பட்ட கணக்கிலேயே செலுத்தலாம். இவ்வாறு தடை செய்யும் நாடு அயல் நாடுகளுக்குச் சரக்கு விற்பதால் கிடைக்கக் கூடிய நிதியைத் தடைப்பட்ட கணக்குகளால் செலுத்தவேண்டிய செல்லுகளுக்குச் சேர்த்து வைக்கவேண்டியதில்லை. தடைப்பட்ட கணக்குகளில் இருப்புக்களைப் பயன்படுத்துவதற்குப் பல வழிகளி லும் ஒழுங்குப்படுத்தப்பட்டிருக்கிறது. சில சந்தர்ப்பங்களில் தடைப்பட்ட கணக்குகளுக்குரியவர்கள் வட்டிகள், இலாப ஈவுகளால் அக் கணக்கில் சேர்ந்த நிதியை நீண்டகால ஈடுகளில் முதலீடு செய்ய அனுமதிக்கப்படுவார்கள் அல்லது தடைப்பட்ட கணக்குக்குரிய நாட்டின் வேறு எந்தச் சொத்திலாவது முதலீடு செய்ய அனுமதிக்கப்படுவார்கள். சில சந்தர்ப்பங்களில் தடை செய்யும் நாடு அக் கணக்கில் இருக்கும் இருப்பை ஏற்றுமதிச் சரக்குகளுக்குரிய தொகையின் ஒரு பகுதியை அடைக்கவும் அனுமதிக்கும். மேலும் தடைப்பட்ட கணக்கிற்குரியவர்கள் அக் கணக்கிருக்கும் நாட்டில் பயணம் அல்லது சுற்றுலாச் செய்ய விரும்புபவர்களுக்கும் அச் செலாவணியை விற்கலாம். தடைப் பட்ட கணக்குக்குரியவர்கள் திறந்த அங்காடியில் அவற்றை அதிகத் தள்ளுபடியில் வாங்கலாம். அத் தடைப்பட்ட கணக்கில் எவ்வளவு கட்டுப்பாடு இருக்கிறதோ அவ்வளவில் தள்ளுபடிச் சத விகிதம் இருக்கும். அயல் நாட்டுச் சொத்து நிலையில் மிகுதியான இடுக்கண்களைப் பெற்ற நாடு தடைப்பட்ட கணக்கைச் சரிசெய்து கொள்ளும்பொருட்டு மிகுதியான சரக்குகளை அந் நாட்டிலிருந்து

இறக்குமதி செய்துகொள்ளும். அந்நியச் செலாவணி இருப்புப் போதுமான அளவு எட்டும்வகையில் இறக்குமதிக்குள்ள செல்லுகளைத் தள்ளிப்போட்டுக்கொண்டே வருவார்கள். ஆனால், அயல் நாட்டு ஏற்றுமதியாளர்கள் தங்களுக்குச் சேரவேண்டிய பணம் தள்ளிப்போவதைவிரும்பாமல் அயல் நாட்டினரின் விருப்பம் இல்லாமலேயே தடைப்படுத்தப்பட்ட கணக்குகள் ஏற்படுத்தப் பட்டு அவற்றில் அவர்களுடைய சொத்துக்கள் பிணைக்கப்பட்டி ருக்கின்றன. அயல் நாட்டினர் தங்கள் சொத்துக்களை அங்காடியில் விற்று அவற்றிற்குரிய வருவாயைப் பெறுவதற்கு எவ்விதச் சந்தர்ப்பமும் அளிக்கப்படாமல் அவர்கள் கணக்குகள் தடைப் படுத்தப்படுகின்றன.

## ஒரு நிலைப்படுத்தப்பட்ட மாற்று நிதிகள்
## (Exchange Stabilization Fund)

ஒரு நிலைப்படுத்தப்பட்ட மாற்று நிதியானது போதுமான அளவு உள்நாட்டுச் செலாவணி அந்நியச் செலாவணிகள், பொன் இருப்புக்களைக் கொண்டது ஆகும். இந் நிதியின்மூலம் ஒரு நாட்டு அரசு அல்லது அவ்வரசால் நியமிக்கப்பட்ட அதிகாரிகள் அயல் நாட்டு மாற்று விகிதங்களை ஏற்படுத்தக்கூடிய அளவில் அந்நியச் செலாவணிகளை வாங்குதல் அல்லது விற்பதன்மூலம் மாற்று விகி தங்களைப் பாதிக்கச் செய்கின்றனர். ஆனால், இந் நிலைப்படுத்தப் படுத்தப்பட்ட நிதியானது கட்டுப்பாட்டைப் பயன்படுத்தாத அந்நியச் செலாவணிகளாக இயங்குகிறது. நிலைப்படுத்தப்பட்ட மாற்று நிதிகளை நிர்வகிப்பவர்கள் தடையற்ற மாற்று அங்காடிச் செயல்களைப் பாதிக்கச் செய்வதில்லை. மாற்று விகிதங்களின் அளவுக்கு மீறிய ஏற்ற இறக்கத்தைத் தடுப்பதே நிலைப்படுத்தப் பட்ட மாற்று நிதியின் செயலாகும். மிகை மதிப்பு அல்லது மதிப் புக் குறைப்புச் செய்யப்பட்ட செலாவணிகள் மற்ற செலாவணி களை அதே அளவு மதிப்புக் குறைப்பு அல்லது மிகை மதிப்புச் செய்து மற்ற நாடுகளின் செலவில் ஏற்றுமதிப் பயன் எய்துவதற்கு இந் நிதிகள் பயன்படுத்தப்படுகின்றன.

இந் நோக்கங்களை நிறைவு செய்வதற்கு நிலைப்படுத்தப்பட்ட மாற்று நிதி அதன்வசம் போதுமான அளவு அந்நியச் செலாவணி, பொன், உள் நாட்டுச் செலாவணி இருப்புக் கணக்கு கொண் டுள்ளதாக இருத்தல் வேண்டும். அதன் அந்நியச் செலாவணி இருப்புக்களும் மற்ற இருப்புக்களுமே அந்நியச் செலாவணி மாற்று விகிதம் உயரும்போது முன் நடவடிக்கை எடுப்பதற்குரிய

கருவிகளாக அமைகின்றன. இதுபோன்று மிகையான உள் நாட்டுச் செலாவணியைக் கையிருப்பு வைத்துக்கொண்டு, அந்நியச் செலாவணி மாற்று விகிதத்தின் அதிக வீழ்ச்சியானது நிலைப் படுத்தப்பட்ட மாற்று நிதியுடைய நாட்டுக்குப் பாதகமாக இருக்கும்போது அவ்வந்நியச் செலாவணியை வாங்கி அவ் வீழ்ச்சி யைத் தடுக்கும். நிலைப்படுத்தப்பட்ட நிதியின் சொத்துக்கள் அடிக்கடி மாறிக்கொண்டிருக்கும். இந் நிதி உள்நாட்டுச் செலா வணியை ஆதரிக்கும்போது அச் செலாவணிகளுக்காக அந்நியச் செலாவணியையும், பொன்னையும் திருப்பியளிக்க வேண்டிவரும். அதுபோல் அந்நியச் செலாவணியை ஆதரிக்கும்போது அவ் வந்நியச் செலாவணிக்கும் பொன்னுக்கும் உள்நாட்டுச் செலா வணியை மாற்றவேண்டிவரும். எப்படி இருந்தபோதிலும் நிலைப் படுத்தப்பட்ட நிதியின் செயல்கள் ஒரு நாட்டால் ஒருதலையாக நிர்ணயிக்கப்படுவதால் ஒரு குறிப்பிட்ட மட்டத்தில் மாற்று விகிதங்களை நிர்ணயிக்கும்போது மற்ற நாட்டுப் பாதக நிலையை விளைவிக்கும். இந் நிலைமை ஒரு மாற்று விகிதப் போரையே உருவாக்கும். இவற்றைத் தவிர்ப்பதற்காகவே நாடுகள் இருதலை (இருபுற) அல்லது பன்முக மாற்றுக் கட்டுப்பாட்டை மேற் கொள்ளுகின்றன.

## மதிப்புக்குறைப்பும், மறுமதிப்பும்
## (Devaluation and Revaluation)

நிலையான மாற்று விகிதத்தில் ஒரு நாட்டுச் செலாவணி மதிப்புக் குறைப்பு அல்லது மறுமதிப்புச் செய்யப்படுகிறது. இந் நிலையான மாற்று விகிதம் வாங்குந்திறன் சமநிலைக்கும் மிகுதியாக இருந்தால் அந் நாட்டுச் செலாவணி மிகை மதிப்புச் செய்யப் படுகிறது. இம் மாற்று விகிதம் வாங்குந் திறன் சமநிலையைவிடக் குறைவாக இருந்தால் அந் நாட்டுச் செலாவணியின் மதிப்பும் குறைக்கப்படுகிறது. ஒரு நாட்டுச் செலாவணியின் உள்நாட்டு வாங்குந்திறன் அயல் நாட்டு வாங்குந்திறனுடன் சமநிலைப்படுத் தும் விகிதமே வாங்குந்திறன் சமநிலை ஆகும். ஒரு நாட்டுச் செலாவணி மிகை மதிப்புச் செய்யப்பட்டால் அச் செலாவணி யினை ஒருகுறிப்பிட்ட அலகுகள் உள்நாட்டில் வாங்குவதைவிட அயல் நாடுகளில் அதிகமான சரக்குகளை வாங்கி, ஏற்றுமதிகளை விட இறக்குமதிகளை அதிகரிக்கச் செய்து அந் நாட்டுக்குப் பாதகச் செலுத்து நிலையை உண்டாக்கும். ஒரு நாட்டுச் செலாவணியின் மதிப்புக் குறைப்பானது அந் நாட்டுக்குச் சாதகச் செலுத்து நிலையை ஏற்படுத்தும்.

ஒரு நாட்டுச் செலாவணியில் மதிப்பு ஏற்றம் அல்லது மதிப்புக் குறைப்பு நீடித்துக்கொண்டே சென்றால் அந் நாட்டு அயல் நாட்டுச் செலுத்து நிலை மிகவும் கடினமாக இருக்கும். இந் நிலைமையில் அந் நாட்டுச் செலாவணியின் புறமதிப்பில் (external value) மறுமதிப்பு (revaluation) செய்யப்படவேண்டியது தவிர்க்க முடியாத ஒன்றாகும். ஒரு நாட்டுச் செலாவணியில் மிகைமதிப்பு (under valuation) அல்லது குறை மதிப்பும் ஏற்படுகிற பாதக நிலையைப் பொறுத்து அச் செலாவணியில் மதிப்புக் குறைப்பு (devaluation) அல்லது மறுமதிப்பு (revaluation) செய்யப் படுகிறது.

## மதிப்புக்குறைப்பு
## (Devaluation)

ஒரு செலாவணியின் பொன் சமநிலைக் குறைக்கப்படும்போதும் அல்லது அச் செலாவணிக்கீடான பொன்னின் விலை கூட்டப்படும் போதும் அச் செலாவணியின் மதிப்புக் குறைக்கப்பட்டிருக்கிறது என்று பொருள்படும். 1931-ல் பிரிட்டனில் பொன் திட்டம் கைவிடப்பட்டபோது பொன்னுக்கு ஈடான பவுண்டின் மதிப்பு வீழ்ச்சியடைந்தது. அமெரிக்காவில், 1934-ல் ஒரு அவுன்சு பொன்னுக்கு ஈடாக 35 டாலர்கள் மாற்று விகிதம் நிர்ணயிக்கப் பட்டபோது டாலரின் பழைய பொன் மதிப்பில் 59·06 சதவிகிதம் மதிப்புக் குறைக்கப்பட்டிருக்கிறது என்று பொருள்படுகிறது. ஃபிரான்சில் 1936-ல் ஃபிராங்கின் மதிப்பு 25·2-ல் இருந்து 34·3 சத விகிதம் மதிப்புக் குறைக்கப்பட்டது. இந்திய ரூபாயின் மதிப்பு செப்டம்பர், 1949-ல் 30·5 சதவிகிதமும், ஜூன், 1966-ல் 36·5 சதவிகிதமும் குறைக்கப்பட்டது. நவம்பர், 1967-ல் இங்கிலாந்தில் பவுண்டு ஸ்டெர்லிங்கின் மதிப்பு 14 சதவிகிதம் குறைக்கப்பட்டது.

ஒரு செலாவணியின் மதிப்புக் குறைப்பிற்கும் (devaluation) குறை மதிப்புக்கும் (depreciation) (அல்லது மதிப்பிறக்கம்) நெருங்கிய தொடர்பு உள்ளது. மற்ற செலாவணிகளுக்கீடாகக் கொடுக்கக்கூடிய ஒரு நாட்டுச் செலாவணியின் மாற்று மதிப்பி லுள்ள இறக்கமானது அதன் குறைமதிப்பைப் புலப்படுத்துகிறது. ஒரே சதவிகிதத்தில் அனைத்துச் செலாவணியின் மதிப்புக்கள் குறைக்கப்பட்டால் அது மதிப்புக் குறைப்பு என்றும் (devaluation) ஒரு செலாவணி குறைந்த சதவிகிதத்திலும், அல்லது பழைய பொன் சமநிலையிலேயே அதன் மாற்று மதிப்பை நிலைப்படுத்திக் கொண்டும், மற்றொரு செலாவணி அதிக சதவிகிதத்தில் மதிப்புக்

குறைப்புச் செய்யப்பட்டால் அந்த அதிகச் சதவிகிதத்தில் மதிப்புக் குறைப்புச் செய்யப்பட்ட செலாவணி மற்ற செலாவணி களுடன் ஒப்பிடும்போது குறைமதிப்புச் செய்யப்பட்டிருப்பதாகப் புலப்படும். 1949-ல் பவுண்டும், ஸ்டெர்லிங் மண்டலத்தைச் சேர்ந்த நாடுகளின் செலாவணிகளும் மதிப்புக் குறைப்புச் செய்யப்பட்டபோது அமெரிக்கா மட்டும் அதன் பழைய பொன் சமநிலையிலேயே மதிப்பை நிலைநிறுத்திக் கொண்டிருந்தால் டாலர்களுக்கீடான மற்ற செலாவணிகள் குறைமதிப்பு அல்லது மதிப்பிறக்கம் செய்யப்பட்டிருப்பதாகக் கொள்ள வேண்டும். 30·225 செண்டுகளில் இருந்து 21 செண்டுகளாக (டாலர்) ரூபாய் மதிப்பிறக்கம் செய்யப்பட்டது.

## மதிப்புக் குறைப்பின் நோக்கங்கள் (Objects of Devaluation)

சரிசெய்ய முடியாப் பாதக அயல் நாட்டுச் செலுத்து நிலையைச் சரிக்கட்டுவதற்கு ஒரு நாட்டுச் செலாவணியில் மதிப்புக் குறைப்பு செய்யப்படுகிறது. ஒரு நாட்டுச் செலாவணி மிகை மதிப்புச் செய்யப்படும்போது உலக விலைகள், செலவுகளை ஒப்பிடும்போது உள்நாட்டு விலைகள், செலவுகள் அனைத்தும் மிகுதியாகி ஏற்றுமதி வணிகம் பாதிக்கப்பட்டு இறக்குமதி வணிகம் பெருகுகிறது.

மற்ற நடவடிக்கைகள் அனைத்தும் சரிப்பட்டுவராதபோது தான் செலாவணி மதிப்புக் குறைப்புச் செய்யப்படுகிறது. இறக்குமதிகளைக் குறைப்பதன்மூலம் ஒரு நாட்டின் பாதகச் செலுத்து நிலை சரிக்கட்டப்படும். ஆனால், இறக்குமதி யிலுள்ள கடுமையான குறைப்பானது வணிகத்தின் குறைந்த மட்டத்திலுள்ள செல்லுகளைச் சரிக்கட்டும். மேலும் பணவாட் டத்தினாலும் (deflation) பணம் (கடன்களின் அளவைக் குறைப் பதன்மூலம்) அயல் நாட்டுச் செலுத்து நிலையில் சமநிலை திருப்பி அமைக்க முடியும். விலைகளும், வருவாய்களும் எப்பொழுதும் கடினமாகவே இருக்கும். இந் நிலைமைகளில் பணவாட்டம் வேலை வாய்ப்பின் அளவைத்தான் குறைக்கும். ஆகவே அவ்வப் போது நிலவும் சந்தர்ப்பங்களுக்குகந்தவாறு மற்ற நடவடிக் கைகள் ஒத்துவராதபோது அயல் நாட்டுச் செலுத்து நிலைச் சிக்கல் களுக்குச் செலாவணியின் மதிப்புக் குறைப்பே தகுந்த நடவடிக்கை யாகும். ஆனால், செலாவணி மதிப்புக் குறைப்பு அடிக்கடி நிகழ்ந்து அதற்குரிய தொடர் நடவடிக்கைகள் உடனுக்குடன் எடுக்காவிடில் மக்கள் அச் செலாவணிக்குரிய தங்கள் நன்னம்பிக் கையை இழந்து (உள் நாட்டினர், அயல் நாட்டினர்) அவர்கள்

தங்கள் மூலதனத்தை வேறு நாடுகளுக்கு மாற்ற முயற்சிப்பார்கள். ஆகவே மூலதன வெளியோட்டம் தடுக்கப்படாமல் தொடர்ந்து நிகழ்ந்து கொண்டிருக்கும்.

## செலாவணி மறு மதிப்பு
## (Revaluation)

செலாவணி மறு மதிப்பு, செலாவணி மதிப்புக் குறைப்பிற்கு எதிரானதாகும். செலாவணியின் பொன் சமநிலைக்கு மேல் மறு மதிப்புச் செய்யப்படுவதாகும். ஒரு நாட்டுச் செலாவணி மதிப்புக் குறைப்புச் செய்யப்படும்போது உலக விலைகள், உற்பத்திச் செலவுகளுக்கு ஒப்பிடும்போது அந் நாட்டு விலைகளும், உற்பத்திச் செலவுகளும் குறைவாக இருக்கும். ஆகவே, அந் நாட்டின் இறக்குமதித் தேவை குறைவாக இருக்கும்போது உலக அங்காடிகளில் அந் நாட்டு ஏற்றுமதிகளுக்கு வலுவான போட்டிப் பயன்பாடு ஏற்படுகிறது. உபரியான அயல் நாட்டுச் செலுத்து நிலை மிகுதியாகி அந் நாட்டுச் செலாவணியை மறு மதிப்புச் செய்ய தீர்மானிக்கப்படுகிறது.

1961-ல் மேற்கு ஜெர்மனியும், ஆலந்தும் (Holand) அவற்றின் செலாவணிகளை 5 சதவிகிதம் மறு மதிப்புச் (Revaluation) செய்தன. அக்டோபர், 1969-ல் ஜெர்மன் 'மார்க்குகள்' (Marks) $8\frac{1}{2}$ சதவிகிதம் மறு மதிப்புச் செய்யப்பட்டது. அதாவது மார்க்கின் மதிப்பு ஒரு டாலர் = 25 செண்டுகளிலிருந்து ஒரு டாலர் = 27·3224 செண்டுகளாக உயர்த்தப்பட்டது.

# 11. இந்தியாவில் அயல் நாட்டு மாற்றுக் கட்டுப்பாடு
## (Foreign Exchange Control in India)

இந்தியாவில் தற்காப்பு விதி முறைகளின்கீழ் (Defence of India Regulations) போர் நடவடிக்கைகளுக்காக 1939-ல் இந்தியாவில் மாற்றுக் கட்டுப்பாடு புகுத்தப்பட்டது. இன்றியமையாத போர்ச் சாதனங்களை வாங்கும் பொருட்டு அயல் நாட்டு மாற்றுக்களைக் குவிப்பதற்காக இம் மாற்றுக் கட்டுப்பாடு கொண்டு வரப்பட்டது. போரால் உருவான நிலைமைகளைச் சமாளிப்பதற்குத் தற்காலிக நடவடிக்கையாக இது கையாளப்பட்டது. ஆனல் போருக்கு முந்திய, பிந்திய ஆண்டுகளில் அயல் நாட்டுச் செல்லுகளில் ஏற்பட்ட பற்றுக்குறையானது இக் கட்டுப்பாட்டைக் கால வரம்பின்றி நீட்டிப்பதற்குத் தூண்டுகோலாக அமைந்தது. ஆகவே '1947ஆம் ஆண்டு அயல் நாட்டு மாற்றுச் சட்ட விதி'களின்படி, இக் கட்டுப்பாடு நிரந்தரமாக்கப்பட்டது. 1947-ல் கடைப்பிடிக்கப்பட்ட மாற்றுக் கட்டுப்பாட்டுத் திட்டமானது 1939-ல் புகுத்தப்பட்டது போன்றதாகும். ஆனல் அவ்வப்போது உருவாகும் நிலைமைகளுக்குகந்தவாறு தேவையான மாற்றங்களைப் புகுத்திக் கொள்ளலாம்.

இந்தியாவின் ஐந்தாண்டுத் திட்டங்களைக் கருத்தில் கொண்டு இம் மாற்றுக் கட்டுப்பாட்டின் பொருளும் நோக்கமும் மாறுபடுகின்றன. இந்தியாவின் முன்னேற்றத் திட்டங்களுக்குத் தேவையான மூலதனப் பொருள்கள், உறுப்புப் பொருள்கள், கச்சாப் பொருள்களின் இறக்குமதிகளுக்கு நிதியுதவி செய்ய அயல் நாடுகளிலிருந்து அதிகமான கடன்களைப் பெறவேண்டியிருந்தது. இறக்குமதிகளின் மிகுதியான தேவையும் அயல் நாட்டுக் கடன்களின் பணியும் அயல் நாட்டுச் செல்லுகளின் கட்டுப்

பாட்டை மிகுதிப்படுத்தின. ஆகவே, இம் மாற்றுக் கட்டுப் பாட்டுத் திட்டம், நல்ல நிலைமையில் அயல் நாட்டு நிதிகளை வைத்திருப்பதற்கு இன்றியமையாத பணிபுரிகிறது. அயல் நாட்டு மாற்றுக்கள் தொடர்பான அனைத்து நடவடிக்கைகளான நாட்டுக்கு உள்ளும் புறமும் நிலவும் மூலதன இயக்கமும் விலையுயர்ந்த கற்கள் (precious stones), பொற் கட்டிகள் (bullions), செலாவணியின் ஏற்றுமதி, இறக்குமதிகளும் இந் நாட்டுப் பொருளாதாரத்தில் இன்றியமையாத தன்மை எய்தின.

## மாற்றுக் கட்டுப்பாட்டின் அமைப்பு

இத் திட்டத்திற்கு மற்ற நாடுகளில் உள்ளதுபோலவே இந் நாட்டிலும் மாற்றுக் கட்டுப்பாட்டுச் செயல் முறைக்காக விரிவான நிறுவனம் உள்ளது. மாற்றுக் கட்டுப்பாட்டை ஒழுங்குபடுத்துவதற்கும் அயல் நாட்டு மாற்றுக் கட்டுப்பாட்டை ஒழுங்குபடுத்துவதற்கும் அயல் நாட்டு மாற்று ஒழுங்குமுறைச் சட்டத்தின் விதிகளைத் தகுந்தபடி நிலைநாட்டுவதற்கும் அவ் விதிகளைத் தவறான வழிகளில் பயன்படுத்தாமல் செய்வதற்கும் உரிய அதிகாரம் பெற்ற அதிகாரிகள் இந் நிறுவனத்தில் உள்ளனர். இம் மாற்றுக் கட்டுப்பாட்டுத் திட்டத்தில் அயல் நாட்டு மாற்று நடவடிக்கைகளை மேற்கொள்ள அனுமதிக்கப்பட்ட வணிக நிறுவனங்கள் மிகவும் இன்றியமையாதன. மாற்றுக் கட்டுப்பாடு ஒழுங்குபடுத்தப்பட்ட மாற்று விகித முறையை அடிப்படையாகக் கொண்டது.

## இந்திய ரிசர்வ் வங்கியும் அதிகாரம் பெற்ற வணிகர்களும்

இந்திய ரிசர்வ் பாங்குடன் கலந்தாலோசித்து மைய அரசால் வகுக்கப்பட்ட கொள்கைகளின்படி இந்தியாவில் இந்திய ரிசர்வ் பாங்கால் மாற்றுக் கட்டுப்பாடு கொண்டு வரப்பட்டது. மாற்றுக் கட்டுப்பாட்டுச் செயல்களைப் புரிவதற்கு இந்திய ரிசர்வ் பாங்க் மாற்றுக் கட்டுப்பாட்டுத் துறை ஒன்றை நிறுவியுள்ளது. இத் திட்டத்தின்படி அயல் நாட்டு மாற்று நடவடிக்கைகள் தொடர்புள்ள பொன், வெள்ளி, செலாவணித் தாள்கள், ஈடுகள் முதலியவற்றை ஏற்றுமதி இறக்குமதி செய்வதற்கு அனுமதி வழங்க ரிசர்வ் பாங்கு பொதுமக்களிடம் நேரடித் தொடர்பு கொள்ளாது. பல வணிகப் பாங்குகளுக்கு 'அதிகாரம் பெற்ற வணிகர்'களாக அனுமதி வழங்கப்பட்டு, அப் பாங்குகள் அயல்

நாட்டு மாற்றுக்கள் சம்பந்தப்பட்ட அனைத்து நடவடிக்கைகளையும் கவனிக்கின்றன. ரிசர்வ் பாங்கால் வகுக்கப்பட்ட விதிகளின்படி குறிப்பிட்ட காரணங்களுக்காக இவ் வணிகப் பாங்குகள் அயல் நாட்டு மாற்றுக்களை வாங்கி விற்கின்றன. அயல் நாட்டுச் செலா வணிகளையும் நாணயங்களையும் வாங்கி விற்பதற்குப் பண மாற்றுளர்களுக்கும் அதிகாரம் வழங்கப்பட்டிருக்கிறது.

அயல் நாட்டு மாற்று நடவடிக்கைகளில் பொது மக்கள் அயல் நாட்டு மாற்றுக்களில் அதிகாரம் பெற்ற வணிகர்களிடம் தொடர்பு கொள்ளும் பொருட்டு, அவ் வணிகர்களுக்கு இந்திய ரிசர்வ் பாங்கு பொதுவான கட்டணங்களைப் பிறப்பித்துள்ளது. ஏற்றுமதிகள், இறக்குமதிகள், அயல் நாட்டுப் பணச் செல்லுகள், அயல் நாட்டுக் குடிமக்கள் தங்கள் நாட்டிலுள்ள குடும்ப நிர்வாகத்துக்கு அனுப்பும் பணங்கள், முதலீட்டு வருவாய் மாற்றல், அயல் நாடுகளிலுள்ள இந்தியக் குடிமக்களால் மூலதன மாற்றல், மற்றுமுள்ள புலனுகா இனங்கள் சம்பந்தப்பட்ட நடவடிக்கைகளுக்கும் இக்கட்டணங்கள் பொருந்தும். செலாவணி மாற்றல் வகையான நடவடிக்கைகள் நிகழ்வதற்கு முன் இந்திய ரிசர்வ் பாங்கின் அனுமதி பெறும் பொருட்டு அதிகாரம் பெற்ற வணிகர்களால் இந்திய ரிசர்வ் பாங்குக்கு அம் மாற்றல் பற்றிய நடவடிக்கைகள் தெரியப்படுத்த வேண்டும். சில செல்லுகளுக்கு இந்திய ரிசர்வ் பாங்கின் முன் அனுமதி தேவையில்லை. (எ.கா.): அயல் நாட்டுக் குடிமக்கள் தங்கள் வருவாய்களைத் தங்கள் நாட்டிலிருக்கும் குடும்பத்தினருக்கு அனுப்பும்போது அச் செல்லுகள் இந்திய ரிசர்வ் பாங்கால் வரையறுக்கப்பட்ட தொகைக்குட்பட்டிருந்தால் அப் பாங்கின் முன் அனுமதி பெறவேண்டியதில்லை. அதிகாரம் பெற்ற பண மாற்றுளர்கள் அயல் நாட்டுச் செலாவணிகளை வாங்கி விற்கும் பணியை மேற்கொண்டுள்ளனர். அயல் நாட்டுச் செலாவணிகளைக் கொண்டுவந்து கொடுத்து இந்தியச் செலாவணியை வாங்கும், இந்தியச் செலாவணியைக் கொடுத்து அயல் நாட்டுச் செலாவணிகளை வாங்கும் அயல் நாட்டுச் சுற்றுலாவினருக்கும் பயணிகளுக்கும் இம் மாற்றுளர்களின் பணி மிகவும் இன்றியமையாததாகும். அயல் நாடுகளுக்குச் செல்லும் இந்தியப் பயணிகளும், இப் பண மாற்றுளர்களிடமிருந்து ரிசர்வ் பாங்கால் வரையறுக்கப்பட்ட அளவு அயல் நாட்டுச் செலா வணிகளை வாங்கிக்கொள்ளுகிறார்கள். மற்ற அயல் நாட்டுச் செலாவணி நடவடிக்கைபோன்று பண மாற்றுளர்களின் நடவடிக்கைகளும் இந்திய ரிசர்வ் பாங்கின் கட்டுப்பாட்டுக் குட்பட்டவையாகும்.

மாற்றுக் கட்டுப்பாட்டுச் சட்டத்தை நிறைவேற்றுவதற்கும், அச் சட்டத்தை மீறி நடப்பவர்கள்மீது ஒழுங்கு நடவடிக்கைகள் எடுப்பதற்கும் ஒரு தனிப்பட்ட சாதனம் அமைந்துள்ளது. இந்திய நிதி அமைச்சகத்தில் இணைக்கப்பட்டுள்ள 'சட்ட நிறைவேற்று இயக்குநரகத்திடம்' இச் செயல் ஒப்படைக்கப்பட்டுள்ளது. கட்டுப்பாட்டுச் சட்டத்தை மீறுபவர்களின்மீது தக்க நடவடிக்கைகள் எடுப்பதற்கும், தண்டனை வழங்குவதற்கும் இவ்வியக்குநரகம் அதிகாரம் பெற்றுள்ளது. கட்டுப்பாட்டுச் சட்டத்தை மீறி நடக்கும் சில வழக்குகளுக்குத் தீர்ப்புக் கூறவும் இதற்கு அதிகாரம் வழங்கப்பட்டுள்ளது.

## மாற்றுவிகிதம்
## (Exchange Rate)

கட்டுப்பாட்டு அதிகாரிகளால் நிர்ணயிக்கப்பட்டுள்ள மாற்று விகிதத்தில் அயல் நாட்டு மாற்றுக் கட்டுப்பாடு செயல்படுகிறது. மற்ற நாட்டுச் செலாவணிகளுக்குள்ள இந்திய ரூபாயின் மாற்று மதிப்பை நிர்ணயிக்க இந்திய ரிசர்வ் பாங்குக்கு அதிகாரம் வழங்கப்பட்டுள்ளது. இந்திய ரிசர்வ் பாங்கால் அதிகாரம் பெற்ற மாற்று வணிகர்களும் பண மாற்றுளர்களும் அவர்களுடைய அயல் நாட்டு மாற்று நடவடிக்கைகளை இவ் விகிதங்களிலேயே நிறைவேற்றல் வேண்டும்.

இந்தியா, பன்னாட்டுப் பணநிதியின் (I.M.F.) ஓர் உறுப்பு நாடாகையால் இந்திய ரூபாயின் முகமதிப்பு பொன்னால் நிர்ணயிக்கப்பட்டு இருக்கிறது. ஒரு ரூபாய்=0·118489 கிராம் பொன் அல்லது ரூ. 7·50=ஒரு டாலர் என்று ரூபாய் மாற்று மதிப்பு அல்லது மாற்று விகிதம் நிர்ணயிக்கப்பட்டிருக்கிறது. மற்ற விகிதங்கள் அனைத்தும் இம் முகமதிப்புடன் தொடர்பு கொண்டுள்ளன.

ஸ்டெர்லிங்கில் உள்ள அயல் நாட்டு மாற்று நடவடிக்கைகள் அனைத்தும், இந்திய ரிசர்வ் பாங்கின் அறிவுரையுடன் அயல் நாட்டு நாணய மாற்று வணிகர் சங்கம் (Foreign Exchange Dealers Association) நிர்ணயித்துள்ள விகிதங்களில் அதிகாரம் பெற்ற வணிகர்கள்மூலமாக நடைபெறுகின்றன. ஸ்டெர்லிங்கில் மற்ற செலாவணிகளுக்கு நிர்ணயிக்கப்பட்டுள்ள இலண்டன் அங்காடி விகிதங்களில் மற்ற நாடுகளின் செலாவணி நடவடிக்கைகள் நடைபெறுகின்றன. ஸ்டெர்லிங் மண்டலத்தில் உறுப்பினராக இல்லாத நாடுகளின் செலாவணிகளை இலண்டன் அங்காடியில்

பெற்றுக்கொள்ள அதிகாரம் பெற்ற வணிகர்கள் அனுமதிக்கப்படுகிறார்கள். இரட்டைக் கணக்குகள் குழுவில் அடங்காத மற்ற நாடுகளின் செலாவணிகளில் அதிகாரம் பெற்ற அந் நாட்டுப் பாங்குடன் 6 மாதங்களுக்கு மிகாத முன்னேக்கிய அல்லது உடனடி நடவடிக்கைகளில் ஈடுபட அவ் வணிகர்கள் அனுமதிக்கப் படுகிறார்கள்.

தற்பொழுது இலண்டனில் தந்தி மாற்றுமூலம் (அங்காடி மாற்று விகிதங்கள்) ரூ. 100-ஐக் கொண்டு 5·5605 பவுண்டுகளை வாங்கலாம். ரூ. 100-க்கு 5·5280 பவுண்டுகளை விற்கலாம். நியூயார்க்கில் வாங்கும் விகிதம் ரூ. 100 = 13·31 டாலர்கள், விற்பனை விகிதம் ரூ, 100 = 13·11 டாலர்கள். மற்ற நாடுகளின் செலாவணி மாற்று விகிதங்களும் இவ்வாறே நிர்ணயிக்கப் படுகின்றன.

பன்முகச் செலாவணிப் பழக்கமுள்ள பன்னாட்டுப் பண நிதியின் கொள்கைகளையே இந்தியா தழுவி நிற்கிறது. பன்முக மாற்று விகிதங்கள் தவிர மற்ற அயல் நாட்டு மாற்று நடவடிக்கைகள் அனைத்தும் ஒரே விகிதத்தின் அடிப்படையில் நிகழ்தல் வேண்டும் என்று இந்தியாவின் அயல் நாட்டு மாற்றுக் கட்டுப்பாட்டு முறை அமைந்திருக்கிறது. மாற்றுக் கட்டுப்பாடு அனைத்துச் செல்லுகளையும் அதன்வசம் அடக்கிக்கொண்டுள்ளது. தடையற்ற அங்காடியில் எந்த நடவடிக்கையும் விட்டுவைக்கப்படவில்லை. ஆகவே, அங்குப் பன்முறை விகித முறைக்கே தேவையில்லாமல் போகிறது.

## அயல் நாட்டுச் செல்லுகள் செலுத்தங்கள் (Foreign Payments)

ஏற்றுமதி, இறக்குமதிகளுக்காகச் செல்லுகள் செலுத்தப்படுகின்றன அல்லது பெறப்படுகின்றன. ஒரு சில சரக்குகளுக்குரிய திறந்த பொது அமைதியைத் தவிர மற்ற சரக்குகளுக்கு இறக்குமதிக் கட்டுப்பாடு உள்ளது. இக் கட்டுப்பாட்டின்படி இந்தியாவுக்கு இறக்குமதி செய்யப்படும் எச் சரக்குக்கும் அனுமதி கிடைக்கப் பெறவேண்டும். இறக்குமதி செய்வதற்குரிய அனுமதி பெற்றிருந்தால்தான் அதிகாரம் பெற்ற வணிகரிடமிருந்து அந்நியச் செலாவணி கிடைக்கும். புலனாகா இனங்களுக்குச் செலுத்தக் கூடிய அந்நியச் செலாவணிகளுக்குக்கூட மாற்றுக் கட்டுப்பாடுகள் உள்ளன. பொதுவாக ஏற்றுமதி தடையற்று நிலவுகிறது. ஆனால் அவ்வேற்றுமதிகளுக்காகக் கிடைக்கப்பெற்ற அந்நியச் செலாவணிகள் ரூபாய்களுக்கு மாற்றாக அதிகாரம் பெற்ற வணிகர்

களிடம் அளிக்கப்படவேண்டுமென்று கட்டுப்பாடு விதிக்கப்படு கிறது. புலனுகா இனங்களில் கிடைக்கப்பெற்ற சில செலாவணி களின் வருவாய் திருப்பிச் செலுத்தப்படவேண்டும்.

## இறக்குமதிகளுக்காகச் செலுத்தப்படும் செல்லுகள் செலுத்தங்கள்
## (Payments for Imports)

இந்தியாவின் பன்னுட்டு நடவடிக்கைகளில் பெரும்பகுதி ஏற்றுமதி இறக்குமதி வணிகத்தையே கொண்டுள்ளன. இந்தியாவின் இறக்குமதிகள் யாவும் உரிம முறையால் (Licencing system) ஒழுங்குமுறைச் செய்யப்பட்டிருக்கின்றன. வணிகக் கட்டுப்பாடு அதிகாரிகளால் வழங்கப்படும் முன் அனுமதியில் இறக்குமதி செய்யப்படும் சரக்கின் தன்மை, மதிப்பு, சரக்கு இறக்குமதி செய்வதற்குரிய காலவரை முதலியன குறிப் பிடப்பட்டிருக்கும். இறக்குமதி அனுமதிபெற்ற இறக்குமதியாளர் அவ்விறக்குமதிக்குத் தேவையான அயல் நாட்டு மாற்றுக்களுக்கு உரியவராக்கப்படுகிறுர். இவ்வாறு வெளிப்படுத்தப்பட்ட அயல் நாட்டு மாற்றுக்கள் யாவும் அனுமதிக்கப்பட்ட நோக்கங்களுக்கே பயன்படுத்தப்படவேண்டும்.

சில இறக்குமதியாளர்களுக்கும், தொழிற்சாலைகளுக்கும் தேவை யான குறிப்பிட்ட கச்சாப் பொருள்கள் திறந்த பொது உரிமத்தின் கீழ் (Open general licence) இறக்குமதி செய்யப்படுகின்றன. அதாவது இவ்விறக்குமதிகளுக்குத் தனிப்பட்ட உரிமம் தேவையில்லை. இச் சரக்குகள் அடிக்கடி அறிவிக்கப்படுகின்றன. மற்ற சரக்குகளுக்கெல்லாம் தனித்தனியாக உரிமங்கள் பெறப் படுகின்றன. இறக்குமதிகள் யாவும் கடுமையான கட்டுப்பாட்டின் கீழ் உள்ளனவாதலால், உணவுப் பொருள்கள், உரங்கள், கச்சாப் பொருள்கள், ஏற்றுமதிகளுக்கும் முதல்தரத் தொழிற் சாலைகளுக்கும் வேண்டிய மூலதனப் பொருள்கள் போன்ற குறிப் பிட்ட சரக்குகளின் இறக்குமதிகளுக்கே உரிமம் வழங்கப்படுகிறது. ஏற்றுமதியில் ஒரு குறிப்பிட்ட நிலையை அடைந்து ஒரு குறிப்பட்ட அளவு இறக்குமதி உரிமங்களைப் பயன்படுத்திய தொழிற்சாலைகள் அவற்றின் இறக்குமதிகளைத் தொடர்ந்து நடத்த அனுமதிக்கப்படு கின்றன. முழுவதும் தடையற்ற அயல் நாட்டு மாற்றுக்களில் இறக்குமதி அனுமதிகள் வழங்கப்படுவதில்லை. ஒரு பகுதி (பாதி) தடையற்ற அயல் நாட்டு மாற்றுக்களிலும் மறுபகுதி சில நாடுகளி லிருந்து பெறும் கட்டுப்படுத்தப்பட்ட கடன் உதவிகளுக்கெதி ராகவும் அனுமதிகள் வழங்கப்படுகின்றன. ஏற்றுமதிகளுக்காகத்

தயாரிக்கப்படும் நகைகளுக்கல்லாமல் மற்ற காரணங்களுக்கும் இந்தியக் குடிமக்களால் இறக்குமதி செய்யப்படும் பொன்னுக்கும் தடைவிதிக்கப்படுகிறது. பண அதிகாரிகள் மட்டுமே பொன் இறக்குமதி செய்யலாம்.

அனுமதிக்கப்பட்ட இறக்குமதிகளுக்கு மட்டுமே அயல் நாட்டு மாற்றுக்கள் அளிக்கப்படுகின்றன. இறக்குமதி அனுமதிகள் இரு படிகளாக (two copies) வழங்கப்படுகின்றன. ஒன்று 'சுங்கக் காரணப் படி' (Customs purpose copy) என்று குறிக்கப்பட்டுச் சுங்க இலாகாவிலிருந்து சரக்குகளைப் பெறப் பயன்படுத்தப்படு கிறது. மற்றொன்று 'மாற்றுக் கட்டுப்பாட்டுக்குரிய படி' (Exchange control copy) என்று குறிக்கப்பட்டு விண்ணப்பத் துடன் இணைக்கப்பட்டு அயல் நாட்டு மாற்றுக்களை வழங்குவதற்கு அதிகாரம் பெற்ற வணிகரிடம் அளிக்கப்படுகிறது. இறக்குமதி களுக்காக அயல் நாட்டு மாற்றுக்களைப் பெறுவதற்குரிய விண்ணப் பங்கள் குறிப்பிட்ட படிவங்களில் எழுதப்படும். பயன்படுத்தப் படுகிற விண்ணப்பப் படிவத்தின் தன்மை செலுத்தப்படுகிற செலா வணியைப் பொறுத்துள்ளது, அதிகாரம் பெற்ற வணிகர்கள் நாணயக் கடிதங்களை ஆரம்பிக்கிறார்கள் அல்லது அனுமதி பெற்ற இறக்குமதியாளர்கள் மாற்றுக் கட்டுப்பாட்டுப் படிவத்தை அளித்தவுடன் காட்சிப் பண விடைக்கெதிராகப் (Sight draft) பணமளிக்கிறார்கள்.

இறக்குமதி உரிமத்தின் அடிப்படையில் ஆரம்பிக்கப்பட்ட நாணயக் கடிதமானது அவ்வுரிமத்தில் குறிப்பிடப்பட்டபடி கப்பலில் சரக்கேற்றிய 30 நாட்களுக்குப் பிறகு செல்லுபடி யாகாது. இறக்குமதிக் கட்டுப்பாட்டுத் திட்டத்தில் சரக்கிறக்கு வதற்காக அளிக்கப்பட்ட காலம் முடிந்த பிறகும் 15 சலுகை நாட்கள் அளிக்கப்படுகின்றன. கூடுதலான 15 நாட்கள் பத்திரங் களின் செலாவணி முழுமையடைவதற்காக நாணயக் கடிதச் செயல் முறையில் குறிப்பிடப்பட்டுள்ளது. அதிகாரம் பெற்ற வணிகர்கள் அனுமதியின் மாற்றுக் கட்டுப்பாட்டுப் படியைப் (copy) பெற்றுக்கொண்டு நாணயக் கடிதத்தின் மதிப்பை அப்படியே பின் பக்கம் குறிக்கிறார்கள். ஒரே உரிமத்தின்கீழ் பல நாடு களிலிருந்தும் செயல்படும் இறக்குமதிகளுக்கு வழங்கப்பட்ட நாணயக் கடிதங்களுக்கு (Letters of Credit) தனித்தனியாகக் குறிப்பு எழுதவேண்டும். திறந்த பொது உரிமத்தின்கீழ்ச் (Open general licence) செய்யப்படும் இறக்குமதிகளுக்கும் நாணயக் கடிதங்கள் ஆரம்பிக்கப்படுகின்றன. அக் கடிதத்தின் செல்லுபடிக் காலம் 6 மாதங்களுக்கு மிகாது. அக் கடிதங்கள் ஒவ்வொரு

வகைச் சரக்கிற்கும் தனித்தனியே ஆரம்பிக்கப்படுகின்றன. ஒவ்வொரு நாட்டிற்கும் அளிக்கப்படும் நாணயக் கடிதம் நன்கு தெளிவுபடுத்தப்படுதல் வேண்டும்.

கப்பல் பத்திரங்களைப் பெற்றபிறகே இறக்குமதிகளுக்குரிய பணம் செலுத்தப்படும். சில சிறப்புக் காரணங்களுக்காகச் சிறப்பு அதிகாரங்கள் வழங்கப்படுவதன்மூலம் முன்கூட்டியே பணம் செலுத்தப்படுகின்றன. மூலதனப் பொருள்களும், கனரக மின் விசைப் பொருட்களையும் இறக்குமதி செய்வதற்கு முன்பணமாக ஒரு பகுதித் தொகையை ஏற்றுமதியாளருக்குச் செலுத்த இந்திய ரிசர்வ் பாங்கு அனுமதியளிக்கிறது. இறக்குமதி செய்யப்படும் சரக்கின் மொத்த மதிப்பில் ஒரு பகுதியை முன் பணமாகச் செலுத்த அனுமதிகோரும் இறக்குமதியாளர்கள் (1) விண்ணப் பிக்கப்பட்டுள்ள தொகையை முன் பணமாகச் செலுத்தினுல் ஒழிய அயல் நாட்டு ஏற்றுமதியாளர் தன்னுடன் வியாபாரம் செய்யத் தயாராய் இல்லை என்ற உறுதிமொழி; (2) இறக்குமதிக் குரிய அனுமதியின் மாற்றுக் கட்டுப்பாட்டுப் படி; (3) ஏற்றுமதி யாளருடன் ஏற்பட்ட ஒப்பந்தத்தின் அத்தாட்சிப் பத்திரம் அல்லது செல்லுகளுக்கு ஆதாரமாக உள்ள பிற பத்திரங்கள் முதலிய வற்றை இந்திய ரிசர்வ் பாங்கிடம் சேர்ப்பிக்க வேண்டும்.

இறக்குமதி அனுமதியின்கீழ் வழங்கப்படும் அயல் நாட்டு மாற்றுக்கள் ரூபாய் மதிப்பில் குறிப்பிடப்பட்டிருக்கும். விலை, இன்சூரன்சு, சத்தம் அடங்கிய இறக்குமதிச் சரக்கின் மதிப்பு இம் மதிப்பில் அடங்கியிருக்கும். கப்பலில் ஏற்றும் செலவுட்பட்ட விலை அடங்கிய சரக்குகள் இறக்குமதி செய்யப்படும்போது இறக்கு மதியாளர் உரிமத்தின் (licence) ஒரு பகுதியை இன்சூரன்சு, சத்தம் ஆகிய செலவுகளுக்கு இருத்திக் கொள்ளலாம். எந்த நாட்டிலிருந்து சரக்கு உற்பத்தியாகி இறக்குமதி செய்யப் படுகிறதோ அந்த நாட்டுச் செலாவணியிலேயே பணம் செலுத்தப் படவேண்டும். கப்பலில் ஏற்றும் செலவு உட்பட்ட விலையில் இறக்குமதி செய்யப்படும்போது கப்பல் சத்தம் இன்சூரன்சுக்குரிய பணம் இந்திய ரூபாயிலோ அல்லது கப்பல் கம்பெனி பதிவாகி உள்ள நாடு அல்லது இன்சூரன்சு பாலிசி விடுத்த நாட்டின் செலாவணியிலோ (பணம்) செலுத்தப்படும்.

## புலனுகா இனங்களுக்குள்ள செல்லுகள்
## (Payments for Invisibles)

புலனுகா இனங்களுக்குள்ள செல்லுகள் யாவும் பெரும்பாலும் மாற்றுக் கட்டுப்பாட்டுக்குட்பட்டே நிகழ்கின்றன. அயல் நாடு

களுக்குச் செலுத்தப்படும் இச்செல்லுகள் அனைத்துக்கும் பொதுவாக அனுமதி தேவை. தனிப்பட்ட முறையில் அயல் நாடுகளில் வியாபாரச் சுற்றுலா, கல்வி, மருத்துவச் சிகிச்சை முதலானவற்றிற்கு அயல் நாட்டுச் செலாவணிகள் அளிக்கப் படுகின்றன. அயல் நாடுகளில் உள்ள வசதியைப்போல் இந்தியாவில் இல்லை என்றால்தான் அயல் நாடுகளில் கல்வி பயிலுவதற்கு அனுமதி அளிக்கப்படுகிறது. அயல் நாடுகளில் மருத்துவச் சிகிச்சைக்குச் செல்பவர்களுக்கும் இந் நிபந்தனை பொருந்தும். அயல் நாடுகளில் சுற்றுலாச் செல்பவர்களுக்கு அயல் நாட்டுச் செலாவணி அளிக்கப்படுவதில்லை. அயல் நாட்டுச் செலாவணி அளிக்கப்பட்டிருந்தால் அல்லது இந்திய ரிசர்வ் பாங்கு தனிப்பட்ட அனுமதி வழங்கியிருந்தால் ஒழிய இந்தியக் குடிமக்கள் அயல் நாடுகளுக்குப் பயணம் செய்வதற்குப் பயணப் பதிலாட்களால் 'பயணச் சீட்டு' அளிக்க அனுமதிக்கப்படமாட்டாது. இவ்வளவு கட்டுப்பாடுகளும், நிபந்தனைகளும் விதிக்கப்பட்டிருந்தபோதிலும் ஏதாவது ஒரு காரணத்தைக் கற்பித்துக்கொண்டு அநேக நபர்கள் அயல் நாடுகளுக்குச் செல்வதால் பெருமளவு அயல் நாட்டுச் செலாவணி நட்டம் ஏற்பட்டுள்ளது. இப் பொறுப்புகளுக்காக இந்திய ரிசர்வ் பாங்கால் அளிக்கப்பட்டிருக்கும் அதிகாரிகளுக்கு அயல் நாட்டு மாற்று அனுமதிக்கான விண்ணப்பங்களைப் பரிசீலனை செய்து அனுப்புவதற்கு அதிக வேலையும், காலச் சிதைவும் ஏற்படுகின்றன. இக் கட்டுப்பாடுகளில் ஓரளவு தளர்ச்சி ஏற்பட்டால் அயல் நாட்டுச் செலாவணியில் சற்று அதிகமான நட்டம் ஏற்படும். ஆனால் இந்திய ரிசர்வ் பாங்குக்கு இதனால் அதிகத் தொந்தரவு இருக்காது. ஆகவே, தற்பொழுது இக் கட்டுப்பாட்டில் ஓரளவு தளர்ச்சி ஏற்பட்டுள்ளதால் அயல் நாட்டுப் பயணம் முன்னிருந்ததைவிட இப்பொழுது சற்று எளிதாக உள்ளது.

இறக்குமதிப் பொருட்களுக்கும் அயல் நாட்டு ஒப்பந்தங்கள் வாயிலாக நிகழும் பொறுப்புகளுக்கும் அயல் நாட்டுச் செலாவணிகள் தடையற்ற முறையில் கிடைக்கின்றன. அயல் நாட்டுச் செலாவணிகளில் வழங்கப்பட்ட காப்புறுதிகளுக்கு (Policies) ரூபாய்களாகவோ, காப்புறுதி வழங்கப்பட்ட அச் செலாவணியிலோ குடிமக்கள் செலுத்தலாம். ஆனால் இந்தியக் குடிமக்கள் அயல் நாட்டுச் செலாவணிகளில் ஆயுள் காப்புறுதிகளை (Life policies) எடுத்துக் கொள்ள அனுமதிக்கப் படுவதில்லை. நடப்பு வரிகள், பொறுப்புக்கள் யாவும் நிறைவேற்றப்பட்டு விட்டால் அயல் நாட்டினரால் செலுத்தப்படும் இலாபம், இலாப ஈவு, வட்டி முதலியவற்றிற்குக் கட்டுப்பாடுகள்

இல்லை. 1963, ஜனவரி, முதல் தேதிக்குப் பிறகு 1968, ஏப்ரல், 30ஆம் தேதிக்குள் இந்தியாவிலிருந்து அயல் நாடுகளில் குடியேறுவதற்கு அனுமதி வழங்கப்பட்டு அவ்வாறு குடியேறியவர் களுக்கு இந்திய ரிசர்வ் பாங்கின் முன் அனுமதியுடன் இலாப ஈவுகள் இந்தியாவிலுள்ள பங்குத் தொகைகள், முதலீடுகள், வைப்புக்கள் மீதான வட்டிகள் செலுத்தப்படலாம். இச் செல்லுகள் ஓர் ஆண்டுக்கு ரூ. 20,000-க்கு உட்பட்டே இருத்தல் வேண்டும். 1968, ஏப்ரல், 30ஆம் தேதிக்குப் பிறகு அயல் நாடுகளில் குடியேறுவதற்கு அனுமதிக்கப்பட்டவர்களுக்கு வருவாய்களைச் செலுத்துவதற்கு அனுமதிக்கப்படமாட்டாது.

இந்தியாவில் பணிபுரியும் பாகிஸ்தானியர்கள் அல்லாத அயல் நாட்டுப் பணித்துறையாளர்கள் அவர்கள் நாடுகளிலுள்ள அவர்கள் குடும்பத்தினர் செலவுகளுக்கும், மற்ற செலவினங் களுக்கும் காப்பீட்டுக் கட்டணங்களுக்கும் செல்லுகள் செலுத்து வதற்கு அனுமதிக்கப்படுகிறார்கள். அவர்களுடைய நிகர வருவாயில் பாதித் தொகைக்குமிகாமலோ, ஒரு மாதத்திற்கு ரூ 2,360-க்கு மிகாமலோ, (ரூபாய் மதிப்பு குறைக்கப்பட்ட போது) 1966, ஜூன், 6ஆம் தேதிக்கு முன்னதாக இறுதி 12 மாதங்களுக்குச் செலுத்தப்பட்ட சராசரிச் செல்லுகளுக்கு மிகா மலோ அவர்கள் செலுத்தலாம். அதற்கும் மிகுதியான செல்லுகளைச் செலுத்துவதற்குரிய வேண்டுகோளின் சிறப்புத் தன்மைக்குகந்தவாறு தனித்தனியே பரிசீலிக்கப்படும்.

மற்ற அயல் நாட்டுச் செலாவணிகளை இந்தியா ஏற்றுமதி செய்வதற்கு மிகுந்த கட்டுப்பாடுகள் உள்ளன. நேபாளத்திற்கு அல்லாமல் வேறு நாடுகளுக்கு இந்திய ரூபாய்த் தாள்களும், காசுகளும் ஏற்றுமதி செய்யப்படுவதற்குத் தடை உள்ளது. நேபாளத்திற்குக்கூட ரூ. 100 அல்லது அதற்கு மேற்பட்ட எண்ணிக்கையுள்ள செலாவணித் தாள்களை அனுப்பப்படுவது தடை செய்யப்பட்டுள்ளது. இருந்தபோதிலும் கப்பல் மூலம் பர்மா, மலேசியா, சிங்கப்பூர் பார்சிய வளைகுடா. கிழக்கு ஆப்பிரிக்கா முதலான இடங்களுக்குப் பயணம் செய்பவர்களும், பாகிஸ்தான், இலங்கை செல்பவர்களும் ஒரே நேரத்தில் ரூ. 20 அல்லது இந்திய ரூபாயும் அயல் நாட்டுச் செலாவணியும் சேர்ந்து ரூ. 30-க்கு மிகாமல் கைப் பணமாக எடுத்துச் செல்லலாம். இந்தியக் குடிமக்கள் அயல் நாட்டுச் செலாவணித் தாள்கள் காசுகள் சேர்ந்து மூன்று பவுண்டு 10 ஷில்லிங்குகள் அல்லது அதற் கீடானத் தொகையை எடுத்துச் செல்லலாம். விமான நிலையம் துறைமுகங்களிலுள்ள அதிகாரம் பெற்ற பண மாற்றாளர்கள்,

கப்பல் பயணிகள் அல்லது பாகிஸ்தான், இலங்கை, நேபாளம், பூடான் செல்லும் பயணிகள் அல்லது அயல் நாடுகளில் வழங்கப் பட்ட தேதி குறிப்பிடப்படாத, திரும்பிச் செல்வதற்குரிய அனுமதிச் சீட்டுகள் பெற்றுள்ள பயணிகள் தவிர மற்றெல்லாப் பயணிகளுக்கும் 3 பவுண்டு 10 ஷில்லிங்குகளையோ அல்லது அதற்கீடான தொகையையோ விற்க அனுமதிக்கப்படுகிறார்கள். பாகிஸ்தானுக்குச் செல்லும் பயணிகள் பாகிஸ்தான் செலாவணித் தாள்கள், காசுகள் சேர்ந்து ரூ. 30-க்குள்ளோ, அதற்கு ஈடான தொகையோ இலங்கை செல்லுபவர்கள் ஒரு பவுண்டு 10 ஷில்லிங்குகளோ எடுத்துச் செல்ல அனுமதிக்கப்படுகிறார்கள். அயல் நாட்டினர் தாங்கள் கொண்டுவந்த செலாவணித் தாள்களில் காசுகளில் இந்திய அதிகாரம் பெற்ற வணிகர்களிடம் விற்றது போக மீதி உள்ளதை இந்தியாவிலிருந்து திரும்ப எடுத்துச் செல்லவும் அனுமதிக்கப்படுகிறார்கள்.

## அயல் நாட்டுச் செலாவணி இல்லாமல் பயணம் செய்தல்

அயல் நாட்டுச் செலாவணிகள் இல்லாமலேயே இந்தியர்கள் அயல் நாடுகளில் பயணம் செய்கின்றனர். அயல் நாட்டு விருந்தினர்களாகவோ, அயல் நாட்டு அரசு, அயல் நாட்டு நிறுவனங்களின் ஏற்பாட்டின்பேரில் இந்தியக் குடிமக்கள் அயல் நாடுகளுக்குச் செல்கின்றனர். அயல் நாட்டுப் பல்கலைக் கழகங்கள் அளிக்கும் உபகாரச் சம்பளங்கள்(Scholarships) பேரிலும் இந்திய மாணவர்கள் அவ்வயல் நாட்டுப் பல்கலைக் கழகங்களுக்குச் சென்று படிக்கின்றனர். அரசியல்வாதிகள், தொழிலாளர் தலைவர்கள், அரசுப் பணியாளர்கள் அயல் நாடுகளில் நடக்கும் மாநாடுகளுக்கும், கருத்தரங்குகளுக்கும் அந் நாட்டு அரசுகள், நிறுவனங்களின் செலவுகளில் செல்கின்றனர். அயல் நாடுகளில் வசிக்கும் இந்தியர்களின் குடும்பத்தினரும் நண்பர்களும் அவர் களுடன் வசிக்கச் செல்கின்றனர். இவ்வனைத்துக் காரணங் களுக்கும் அயல் நாட்டுச் செலாவணிக்காக வேண்டுகோள் விடுக்காமல் அயல் நாடுகளுக்குப் பயணம் செய்வதற்குமட்டுமே அவர்கள் அனுமதி கோரி விண்ணப்பம் விடுக்கிறார்கள்.

அனைத்து அயல் நாட்டுப் பயணங்களிலும் அயல் நாட்டுச் செலாவணி செலவிடப்படவில்லை என்று சொல்ல முடியாது. அதிகாரமற்ற வழிவகைகளிலும் மக்களால் அயல் நாட்டுச் செலாவணிப் பெறப்படுகிறது. ஒருவிதப் பயண உள்தரகர்கள்

முனைந்து தங்களைப் பயணப் பதிலாட்களாகப் பாவித்துக் கொண்டு நடைமுறை விதிகளை மாற்றித் தவறான வழிகளில் மக்களுக்கு அயல் நாட்டுச் செலாவணிகளைப் பெற உதவுகின்றனர்.

சில சமயங்களில் அயல் நாட்டுப் பார்வையாளருக்கு அவ்வயல் நாட்டு நிறுவனங்கள் செலவிடப்படும் செலவுகள் யாவும் இந் நாட்டில் இருக்கும் அந் நிறுவனங்களின் பதிலாட்களால் அளிக்கப் பட்டுச் சரிக்கட்டப்படுகிறது. அயல் நாடுகளில் பயணம் செய்பவர்களுக்கு ஆகும் செலவுகளை ஏற்கும் அந் நாட்டு நிறுவனங்கள் அயல் நாட்டுச் செலாவணிகளை விற்று அவை களுக்குப் பதிலாக இந்திய ரூபாய்களைப் பெறுகின்றன. பயனுள்ள அயல் நாட்டுச் செலாவணி இவ்வாறு விரயமாகிறது.

தனி நபர்களிடமும், தொழில் நிறுவனங்களிடமும் அயல் நாட்டுக் கணக்குகளின்பேரில் தங்கியிருக்கும் அயல் நாட்டுச் செலாவணிகள் திருட்டுத்தனமாக வைக்கப்பட்டிருக்கின்றன. இறக்குமதி இடாப்புகளின் தொகையைக் குறைப்பதாலும், ஏற்றுமதி இடாப்புகளின் தொகையை அதிகப்படுத்துவதாலும் கிடைக்கக்கூடிய அயல் நாட்டுச் செலாவணிகளை வெளிக் காட்டாமல் கற்பனைப் பெயர்களிலோ அயல் நாட்டிலுள்ள அவர்கள் நண்பர்கள் பெயரிலோ வைத்திருப்பார்கள். அயல் நாட்டுப் பயணங்களுக்கு அதிகாரமுறையில் அயல் நாட்டுச் செலாவணி வேண்டப்படாதபோது இக் கணக்குகளிலிருந்து அயல் நாட்டுச் செலாவணி அளிக்கப்படுகிறது.

இவ்வாறு நமது அயல் நாட்டுச் செலாவணி வருவாய்களில் தவறுகள் ஏற்பட்டு இன்றியமையல்லாத தேவையற்ற அயல் நாட்டுப் பயணங்களுக்கு அயல் நாட்டுச் செலாவணி விரயமாக்கப் படுகிறது. இம் முறையில் உள்ள குறைபாடுகளைக் களையத் தகுந்த நடவடிக்கைகளை அதிகாரிகள் மேற்கொள்ளுகிறார்கள். மாற்றுக் கட்டுப்பாட்டைச் செயல்படுத்தும் அதிகாரிகள் இப் பழக்கங்களைக் களைய விழிப்புடன் இருக்கவேண்டும். அயல் நாடுகளில் பயணஞ்செய்ய விரும்பும் பயணிகள் அவ்வயல் நாடுகளில் ஏற்படும் செலவுகளைச் சரிக்கட்டத்தகுந்த அயல் நாட்டுச் செலாவணி அவர்களிடம் இருக்கிறதா என்று தெரிவிக்க வேண்டும். அயல் நாட்டு அரசுகளும், நிறுவனங்களும் நெருங்கிய உறவினர்களுமே அயல் நாட்டு விருந்தோம்பாளர்களாக ஏற்றுக் கொள்ளப்படுவார்கள். அயல் நாட்டுப் பயணச் சிக்கல்கள்யாவும் தேவையற்ற காரணங்களுக்கு அயல் நாட்டுச் செலாவணி கிடைக்கப்படாமல் அயல் நாட்டுச் செலாவணிக்குரிய விண்ணப் பிக்கும் முறை எளிதாக்கப்பட்டுள்ளது.

## ஏற்றுமதிகளிலிருந்து கிடைக்கும் வருவாய்கள்

அநேகமாக இந்தியாவிலிருந்து ஏற்றுமதியாகும் பொருள்கள் யாவும் கட்டுப்பாடற்ற முறையிலேயே செல்கின்றன. சில பொருள்கள் கட்டுப்படுத்தப்பட்டு அனுமதிகள் இனுமாக வழங்கப் படுகின்றன. சில பொருள்களின் ஏற்றுமதிப் பங்கொதுக்கீடு (quotas) முறையில் நடைபெறுகிறது. அமெரிக்கா, பிரிட்டன் முதலிய நாடுகளுக்கு ஒப்பந்த அடிப்படையில் சர்க்கரை ஏற்றுமதி நடைபெறுகிறது. போர்ச்சுகல், தென் அமெரிக்கா, ரொடீஷியா, தென்மேற்கு ஆப்பிரிக்கா, திபேத்து முதலிய நாடுகளுக்கு ஏற்றுமதிகள் அனுமதிக்கப்படவில்லை. ஏற்றுமதி செய்யப்படுவதற்கு நகைகளாகச் செய்யப்படும் பொன் அல்லாமல் வேறு பொன் ஏற்றுமதிக்கு அனுமதி அளிக்கப்படுவதில்லை. நகைகள்கூடப் பயணிகளின் சொந்த உடைமைகளாகவே கருதப் படுகின்றன. பண அதிகாரிகளால் அல்லது அவர்கள் சார்பாக மட்டுமே பொன் அதன் உண்மை வடிவத்தில் ஏற்றுமதி செய்யப் படலாம்.

நேபாளம், பூடான் தவிர மற்ற நாடுகளிடமிருந்துவரும் ஏற்றுமதி வருவாயும் மாற்றுக் கட்டுப்பாட்டுக்குட்பட்டது. ஆகவே அனைத்து ஏற்றுமதி நடவடிக்கைகளும் குறிப்பிட்ட படிவங்களின் (forms) மூலம் இந்திய ரிசர்வ் பாங்குக்குத் தெரியப் படுத்தப்படவேண்டும். பயன்படுத்தக்கூடிய படிவத்தின் (form) தன்மை ஏற்றுமதி செய்யப்படும் சரக்கு இறுதியில் போய்ச் சேரக் கூடிய இடத்தையும், அதற்குரிய செலவுகள் இந்தியாவுக்கு வந்து சேரக்கூடிய விதத்தையும் பொறுத்திருக்கிறது. அப் படிவத்தில் ஏற்றுமதி நடவடிக்கைகள் சம்பந்தப்பட்ட சரக்கின் விவரம், போய்ச் சேருமிடம், இடாப்பு மதிப்பு, அந்நியச் செலா வணியை வாங்கித் தரக்கூடிய அதிகாரம் பெற்ற வணிகரின் பெயர், படிவத்தில் குறிப்பிட்டுள்ள சரக்கின் விலை மதிப்பு, வணிக ஒப்பந்தத்தில் குறிப்பிட்டுள்ள உண்மையான மதிப்பு என்ற உறுதிப்பாடு முதலியவற்றைக் குறிப்பிடவேண்டும். அதிகாரம் பெற்ற வணிகர்கள்மூலம், ஏற்றுமதியினுல் கிடைக்கப் பட்ட அயல் நாட்டு மாற்றுக்களைத் திரும்பத் தருவதற்குரிய உறுதி மொழியும் அல்லது குறிப்பிட்ட காலத்திற்குள் இந்திய ரிசர்வ் பாங்கால் அனுமதிக்கப்பட்ட முறையில் அயல் நாட்டுச் செலாவணியை விற்பதற்கு உறுதிமொழி எடுத்துக் கொள்ள வேண்டும்.

அயல் நாட்டுச் செலாவணி ஒழுங்குமுறை விதி முறைகளின் படி ஏற்றுமதிச் சரக்குகளுக்குரிய முழு மதிப்பும் கப்பலில்

சரக்கேற்றப்பட்ட 6 மாத காலங்களுக்குள் பெறப்பட வேண்டும். குறிப்பிட்ட காலத்திற்குள் ஏற்றுமதியாளர்கள் பணம் பெற முடியாதென்றும் ஆனல் திட்டமிட்ட காலத்திற்குள் அப் பணத்தைப் பெறமுடியும் என்றும் காரணம் காட்டி கால நீட்டிப்புக்காக இந்திய ரிசர்வ் பாங்கிடம் விண்ணப்பிக்கலாம்.

## புலனுகா இனங்களிலிருந்து வருவாய்கள் (Invisible Items)

மாற்றுக் கட்டுப்பாடு ஒழுங்குமுறை விதிகளில் குறிப்பிடப் பட்டுள்ள சில புலனுகா (Invisible) இனங்களின் வாயிலாகவும் வரும் செலாவணிகளைத் திரும்பத்தர வேண்டிவரும் செலா வணியின் இறக்குமதி பொதுவாகத் தடுக்கப்பட்டுள்ளது. இருந்த போதிலும் கப்பல் மூலம் மலேசியா, சிங்கப்பூர், பார்சிய வளைகுடா துறைமுகங்கள், கிழக்கு ஆப்பிரிக்காவிலிருந்து வரும் பயணிகளும் இலங்கை பாகிஸ்தானிலிருந்து வரும் பயணிகளும் தாங்கள் ஏற்கனவே இப் பணத்தை ஏற்றுமதி செய்துவிட்டோம் என்ற சான்று காட்டி ஒவ்வொருவரும் இருபது ரூபாய்கள் இறக்குமதி செய்து கொள்ளலாம். பர்மாவிலிருந்து வரும் ஒவ்வொரு நபரும் (வயது வந்தவர்கள்) ரூ. 50-ம், 12-லிருந்து 18 வயதுக்குட் பட்டவர்கள் ரூ. 25-ம் கொண்டு வரலாம். இந் நாட்டிற்குள் அயல் நாட்டுச் செலாவணி எவ்வளவு வேண்டுமானலும் இறக்குமதி செய்யப்படலாம். இவ்வயல் நாட்டுச் செலாவணித் தொகை தருவிக்கப்பட்டவுடன் உயர்ந்த அதிகாரிகளிடம் காண் பிக்கப்பட்டு அதிகாரம் பெற்ற வணிகர்களிடமும், பண மாற்ருளர்களிடமும் விற்கப்படவேண்டும்.

## மூலதன நடவடிக்கைகள் (Capital Transactions)

ஒரு நாட்டிற்கு வரும் மூலதனம், வெளிச்செல்லும் மூல தனத்தை ஒழுங்குபடுத்துதல் மாற்றுக் கட்டுப்பாட்டு நோக்கங் களில் ஒன்ருகும். மூலதனங்களைப் பயன்படுத்துவதில் இந்திய அரசின் ஒப்புதலைப் பெறும் மூலதனங்களைத் தவிர மற்றெல்லா மூலதனங்களும் தடையின்றி இந்தியாவிற்குள் வரலாம். அயல் நாட்டு முதலீட்டு வாரியத்தின் (Foreign Investment Board) மேற்பார்வைக்குட்பட்டே அயல் நாடுகளில் நேரடியாகவே முதலீடுகள் செய்யப்படுகின்றன. இந்தியாவில் இருக்கும் பாங்குகள் அயல் நாடுகளில் இருக்கும் அவற்றின் கிளை அல்லது

தொடர்புப் பாங்குகளிடமிருந்து தங்குதடையின்றிக் கடன்கள் வாங்கலாம். ஆனால் இரண்டு இலட்ச ரூபாய்களுக்கு மிகுதியாக உள்ள தொகை இந்திய ரிசர்வ் பாங்கிடமிருந்து ரூபாய்களை வாங்கப் பயன்படுத்தப்படவேண்டும். கடன் வாங்கிய பாங்கு, இந்திய ரிசர்வ் பாங்குக்கும் மற்ற பாங்குகளுக்கும் நிலுவையாக நிற்கக்கூடிய கடன்களை அடைத்தபிறகே இக் கடன்கள் திரும்பத் தரப்படும்.

பாகிஸ்தான், டென்மார்க், நார்வே, சுவீடன் முதலிய நாடுகளைத் தவிர பொன் திட்ட மண்டலத்திலுள்ள நாடுகளில் வசிக்கும் மக்கள் தங்கள் தாய் நாடுகளுக்கு மூலதனத்தை அனுப்புவதற்குக் கூலியில்லாமல் அனுமதிக்கப்படுகிறார்கள். வெளி நாட்டுக் குடிமக்களால் 1950, ஜனவரிக்குப் பிறகு இந்திய முன்னேற்றத் திட்டங்களுக்கு முதலீடு செய்யப்பட்ட தொகையை எப்பொழுது வேண்டுமானாலும் திரும்பப் பெற்றுக்கொள்ளலாம். நீர்மையான அயல் நாட்டு மூலதனத்தின் கீழ் வரும் வருவாய்களை அந் நாடுகளுக்குத் திரும்ப அனுப்ப முடியாததால் அவை தேக்கி வைக்கப்பட்டிருக்கின்றன. அயல் நாட்டினரால் கட்டுப் படுத்தப்பட்டுள்ள நிறுவனங்கள் இந்தியாவிலிருந்து தடையின்றிக் கடன்களைப் பெறமுடியாது.

இந்தியாவில் வசிக்கும் அயல் நாட்டுக் குடிமக்கள் (ஆனால் இந்தியக் குடியுரிமையற்றவர்கள்) அவர்களுடைய ஓய்வுக் காலத்தில் தாங்கள் செய்த முதலீடுகளின் விற்பனையிலிருந்து வரும் வருவாய்களில் ரூ. 75,000-க்கு மிகாமலும், ஆண்டுத் தவணையாக ரூ. 20,000-க்கு மிகாமலும், தங்கள் தாய் நாடுகளுக்கு மாற்றிக் கொள்ளலாம், இம் மாற்றங்களைப் பெறுவதற்கு அனுமதிக்கப் படுவதற்குரிய நிபந்தனைகள் யாவை எனில் அவற்றிலடங்கிய பங்குகள், முதலீடுகள் யாவும் இந்தியாவில் ஒப்புக்கொள்ளப் பட்ட பங்கு மாற்று அங்காடிகளில் (Stock Exchanger Markets) விலை குறிக்கப்படவேண்டும். இந்தியாவிற்குள்ளேயே அவர்க ளுடைய சொத்துக்கள் யாவையும் மாற்றலாம். அயல் நாடுகளில் குடி பெயர்வதற்கு அனுமதிக்கப்பட்ட இந்தியக் குடிமக்கள் இந்தியாவில் உள்ள தங்கள் சொத்துக்களை அவ்வயல் நாடுகளுக்கு மாற்றிக்கொள்ள அயல் நாட்டுச் செலாவணி வசதி அளிக்கப்பட மாட்டாது. தவிர்க்க முடியாத காலங்களில் ஒரே நேரத்தில் ரூ. 25,000-க்கு மிகாமல் அயல் நாட்டுக்குக் குடிபெயர்ந்து செல்பவர்களுக்கு அயல் நாட்டுச் செலாவணி வசதி செய்து கொடுக்கப்படுகிறது. அவர்களின் மற்றெல்லாச் சொத்துக்களும் வருவாய்களும் முடக்கப்பட்டு அவர்களின் ஓய்வுக்காலச் சம்பளங்கள்கூட நிறுத்தி முடக்கி வைக்கப்படுகின்றன.

இந்திய அயல் நாட்டு ஈடுகள் யாவும் தடையின்றி இந்தியாவிற்குள் இறக்குமதி செய்யப்படுகின்றன. ஈடுகளின் ஏற்றுமதி, குடியுரிமை அற்றவர்களுக்கு அவற்றை மாற்றுதல், விற்றல், அயல் நாட்டு ஈடுகளில் அவற்றை விற்றல் ஆகிய நடவடிக்கைகள் யாவும் ரிசர்வ் பாங்கின் அனுமதிக்குட்பட்டே நடைபெறுதல் வேண்டும். இந்தியாவில் வசிப்பவர்கள் அயல் நாட்டுச் செலாவணி விதிகளுக்கு முரண்பாடாக இல்லாத அளவில் அயல் நாட்டு முதலீடுகளைத் தங்கள் வசம் வைத்துக்கொள்ள அனுமதிக்கப் படுகிறார்கள். இருந்தபோதிலும் அயல் நாட்டுக் குடிமக்கள் அல்லாத குடிமக்கள், அதாவது தனிப்பட்ட நபர்கள் அயல் நாட்டு ஈடுகளை வாங்குவதற்கு அனுமதிக்கப்படுவதில்லை.

## செல்லுகளைச் செலுத்தும் விதம்
## (Methods of Payments)

இந்தியாவுக்கும் மற்ற நாடுகளுக்கும் உள்ள நடவடிக்கைகள் குறிப்பிட்ட சில முறைகளில் தீர்த்துக் கொள்ளப்படுகின்றன. அயல் நாடுகளுக்குச் செல்லுகளைச் செலுத்துவதற்கும் அந் நாடுகளிலிருந்து செல்லுகளைப் பெறுவதற்கும் உள்ள செலாவணிகளை மாற்றுக் கட்டுப்பாட்டு விதிகள் நிர்ணயிக்கின்றன. தனியார்கள், இந்தியாவில் குடியிருப்பு அற்றவை என்று கருதப்படுகிற நிறுவனங்கள் பாங்குகள் முதலியவைகள் இந்தியாவில் வைத்திருக்கும் கணக்குகளில் உள்ள ரூபாய்கள் மூலமே பொதுவாகச் செல்லுகள் செலுத்தப்படுகின்றன அல்லது பெறப்படுகின்றன. குடியிருப்பு அற்றவர்களின் கணக்குகளுக்கு வசதிகளும் வரையறைகளும் நிர்ணயித்திருப்பது இச் செலுத்து முறையின் சிறப்பியல்பாகும்.

## செலாவணிக் குறைப்பு

இந்தியா, ஸ்டெர்லிங் மண்டலத்தின் உறுப்பு நாடாகையால் இங்கிலாந்தில் உள்ளதுபோன்ற மாற்றுக் கட்டுப்பாட்டுத் திட்டத்தின்கீழ் இந்தியச் சூழ்நிலைக்குகந்தவாறு கடைப்பிடிக்கப் படுகிறது. செல்லுகளைக் குறிப்பிட்ட செலாவணிகளில் செலுத்துவதற்கு நாடுகள் மூன்று பிரிவுகளாகப் பிரிக்கப் பட்டிருக்கின்றன. அவை 1. ஸ்டெர்லிங் வட்டார நாடுகள் 2. இரு புறக் கணக்குக் கொண்ட நாடுகள் 3. மாற்ற இயலும் கணக்குக் கொண்ட நாடுகள் ஆகும். காமன்வெல்த் நாடுகளில் அடங்கிய கனடா, பிரிட்டனில் பாதுகாப்புப் பகுதிகள், பர்மா,

ஐஸ்லாந்து,ஜோர்டன், லிபியா நீங்கலாக மற்ற நாடுகள் அனைத்தும் ஸ்டெர்லிங் மண்டலத்தில் அடங்கும். இரு புறச் செலுத்து ஒப்பந்தத்தில் இந்தியா புகுந்திருக்கும் நாடுகள் அனைத்தும் இரு புறக் கணக்கு நாடுகளில் அடங்கும். இவற்றில் ஆப்கானிஸ்தான் பல்கேரியா, செக்கோஸ்லோவேகியா, கிழக்கு ஜெர்மனி, அங்கேரி, வடகொரியா, போலந்து, ருமேனியா, ரஷ்யா, யுகோஸ்லேவியா ஆகிய நாடுகள் அடங்கும். சூடான், ஐக்கிய அரபுக் குடியரசுடன் உள்ள செல்லுகளைத் தீர்ப்பதற்கு இந்தியா தனிப்பட்ட கணக்கு வைத்துள்ளது. குறிப்பிட்ட சில சரக்குகளை வாங்குவதற்கு இந்தியா டன்னேசியாவுடன் தனிப்பட்ட கணக்கு வைத்திருக்கிறது. மாற்றவியலும் கணக்கு நாடுகளில் மற்ற நாடுகள் அனைத்தும் அடங்கும்.

ஸ்டெர்லிங் மண்டலத்திலடங்கிய நாடுகள் ஸ்டெர்லிங் செலாவணியிலோ, இந்திய ரூபாய் தவிர மற்ற நாடுகளின் செலாவணியிலோ தங்கள் கணக்குகளில் பற்று அல்லது வரவு வைத்துக்கொள்வதன்மூலம் செல்லுகளைச் செலுத்திக் கொள்ளலாம் அல்லது வரவுகளைப் பெற்றுக்கொள்ளலாம். இந்தியா தவிர மற்ற நாடுகள் பாங்குக் கணக்குகளின் மூலம் செல்லுகளை இந்திய ரூபாய்களில் செலுத்தலாம் அல்லது பெறலாம். இரு புறக் கணக்குகளில் அடங்கிய நாடுகளின் நடவடிக்கைகளின்பேரில் உள்ள செல்லுகளை இந்திய ரூபாயில் செலுத்தலாம் அல்லது பெற்றுக்கொள்ளலாம். மாற்றக்கூடிய செலாவணியுடைய நாடுகளுக்கிடையே உள்ள செல்லுகள் ரூபாய் களிலோ, மற்ற ஸ்டெர்லிங் மண்டல நாடுகளின் செலாவணியிலோ செலுத்தப்படலாம் அல்லது பெறப்படலாம். பட்டியலில் குறிப்பிடப்பட்ட எந்தச் செலாவணியிலும் செல்லுகள் செலுத்தப்படலாம்.

## குடியுரிமை அற்றவர்களின் கணக்குகள்

இந் நாட்டில் குடியுரிமையற்றவர்கள் இந்திய ரூபாயில் வைத்திருக்கும் கணக்குகள் குடியுரிமை அற்றவர்களின் கணக்குகள் என்றழைக்கப்படும். நேபாளம், பூடான் தவிர மற்ற நாடுகள் இந்தியாவில் வைத்திருக்கும் கணக்குகள் குடியுரிமையற்றவர்களின் கணக்குகளாகும். இக் கணக்குகள் பாங்குகள் கணக்கு, தனியார் அல்லது நிறுவனங்களின் கணக்குகள் என்று இரு வகைப்படும். ஸ்டெர்லிங் மண்டலத்தின் கணக்கு, இரு புறக் கணக்கு, மாற்றக்கூடிய கணக்கு என்று பாங்குகளின் கணக்கு, மூவகையாய்ப் பிரிக்கப்படும். குடியுரிமை

யற்றவர்களின் பாங்குக் கணக்கில் உள்ள மாற்றங்கள் யாவும் அந்தப் பாங்குகளின் நாட்டைச் சார்ந்தவர்களுக்குரிய செல்லுக ளாக மாற்றுக் கட்டுப்பாட்டினுல் நிர்வகிக்கப்படுகிறது. ஆனுல் ரூபாய்களின் மாற்றல் இந்திய ரிசர்வ் பாங்கின் ஒப்புறுதி அல்லாமல் நிகழாது. ஆகவே இம் முறையில் அதனைச் செயல் படுத்த முடியாது. இந்திய ரூபாய்க் கணக்கில் அடங்கிய நடவடிக்கைகள் யாவும் மாற்றுக் கட்டுப்பாட்டிற்குட்பட்டது.

## பாங்குகளின் கணக்குகள்

பாங்குகளின் கணக்குகள் கீழ்க்கண்ட இனங்களுடன் வரவு வைக்கப்பட்டிருக்கின்றன :

(i) இறக்குமதிகள், வட்டிகள், இலாப ஈவுகள் மற்ற அதிகாரம் பெற்ற செல்லுகளுக்குச் செலுத்தப்படும் செல்லுகள்.

(ii) குடியுரிமையற்ற தனியார் நிறுவனங்களின் கணக்குகளி லிருந்து அதிகாரம் பெற்ற மாற்றல்கள்.

(iii) கணக்கு வைக்கப்பட்டிருக்கும் நாட்டுச் செலாவணியை விற்பதால் கிடைக்கக்கூடிய வருவாய்.

(iv) இந்தியாவில் குடியுரிமையற்றவர்களுக்கு ஸ்டெர் லிங்குகளை விற்பதால் கிடைக்கக்கூடிய வருவாய்.

பாங்குகளின் கணக்குகளில் கீழ்க்கண்ட இனங்கள் பற்று வைக்கப் படுகின்றன :

(i) ஏற்றுமதிகளுக்காகவும் மற்ற செல்லுகளுக்காகவும் இந்தியக் குடி மக்களுக்குச் செலுத்தப்படும் செல்லுகள்.

(ii) இந்தியக் குடியுரிமையற்ற தனியார் நிறுவனங்களின் கணக்குகளின் மாற்றல். இக் கணக்குகளில் உள்ள மற்ற பதிவுகள் அனைத்துக்கும் இந்திய ரிசர்வ் பாங்கின் முன் அனுமதி தேவை.

## தனியார் நிறுவனங்களின் கணக்குகள்

குடியுரிமையற்றவர்களின் (பாங்குக் கணக்கல்லா) தனிக் கணக்குகளில் கீழ்க்கண்ட இனங்கள் முன் ஒப்புதல் இன்றி வரவு வைக்கப்படுகின்றன.

(i) இலாப ஈவு, முதலீடு, பாங்குகள், வைப்புக்களின் மீதான வட்டிகளுக்குரிய செல்லுகள்,

(ii) முன்கூட்டியே பற்று வைக்கப்பட்டு அதிகமாகச் செலவினத்தில் காட்டப்பட்ட தொகையின் மீட்பு,

(iii) தக்க அயல் நாட்டுச் செலாவணியிலிருந்து வரக்கூடிய வருவாய்கள்,

(iv) முதிர்வடைந்தவுடன் அல்லது இறந்தவுடன் ஆயுள் காப்பீட்டுக் கழகத்திலிருந்து வரக்கூடிய வருவாய்கள்,

(v) அனைத்து முதலீடுகளும் முதிர்வடைந்தவுடன் வரக்கூடிய வருவாய்கள், பங்கு அங்காடியில் முதலீடுகளை விற்பதால் வரக் கூடிய வருவாய்கள்,

(vi) ஒரு மாதத்தில் ரூ. 2,000 அல்லது ஒரு தடவையில் ரூ. 750-க்கு உட்பட்டச் செல்லுகள்.

குடியுரிமையற்ற தனியார் நிறுவனங்களின் கணக்குகளில் கீழ்க்கண்ட இனங்கள் முன் ஒப்புதல் இன்றிப் பற்று வைக்கப் படுகின்றன :

1. உள்நாட்டுச் செல்லுகள்.

2. ஆயுள் காப்பீட்டுக் கழகத்திற்குக் கட்டவேண்டிய கட்டணங்கள், நாட்டின் தற்காப்பு நிதி, தலைமை அமைச்சரின் நிவாரணத்திற்குக் கொடுக்கக்கூடிய உதவிப் பணம்.

3. இந்தியாவில் அவர்களைச் சார்ந்து இருக்கக்கூடியவர் களுக்கு ரூ. 1,000-க்கும் மிகாத படிகள் (allowances).

4. இந்திய அரசினர் ஈடுகளிலும், இந்திய யூனிட் டிரஸ்ட் டிலும் செய்யக்கூடிய முதலீடுகள்.

5. அவர்கள் இந்தியாவில் தங்கும்போது ஒரு மாதத்திற்கு ரூ. 2,000-க்கு மிகாமலும், மொத்தத் தொகை ஓர் ஆண்டுக்கு 10,000-க்கு மிகாமலும் (உள்ள தொகை).

மற்ற பற்றுக்களுக்கும், வரவுகளுக்கும் இந்திய ரிசர்வ் பாங்கின் முன் அனுமதி தேவை.

## தடைப்பட்ட கணக்கு
## (Blocked Accounts)

குடியுரிமையற்றவர்களுக்குரிய மூலதன வருவாய்களும் செல்லுகளும் ஆனால் அயல் நாடுகளுக்கும் செலுத்தப்பட

முடியாதவை தடைப்பட்ட கணக்குகளில் வரவு வைக்கப் படுகின்றன. அயல் நாடுகளுக்குக் குடி பெயர்ந்து செல்பவர்களின் இந்தியச் சொத்துக்களில் அவர்களுக்குச் செலுத்தியதுபோக எஞ்சி இருப்பவை தடைப்பட்ட கணக்குகளில் வரவு வைக்கப் படுகின்றன. தடைப்பட்ட கணக்குகளில் உள்ள இருப்புக்கள் யாவும் பாங்குகளின் தவணை வைப்புகளிலோ, அரசு முதலீடுகளிலோ போடப்படுகின்றன. தடைப்பட்ட கணக்கு ஆரம்பிக்கப்படும்போது இந்திய ரிசர்வ் பாங்கு அளித்த விவரப்படி மேற்சொன்ன முதலீடுகளிலிருந்து வரக்கூடிய வருவாய்களை அந்தந்த நாடுகளுக்குச் செலுத்தவேண்டும். 1961, ஜனவரி 1ஆம் தேதிக்கு முன்னர் குடிபெயர்ந்து செல்ல அனுமதிக்கப் பட்டவர்கள் தடைப்பட்ட கணக்குகளில் இருந்து வரக்கூடிய வருவாய்கள் அனைத்தையும் பெற்றுக்கொள்ள அனுமதிக்கப் படுகிறார்கள். 1968, ஏப்ரல், 30ஆம் தேதிக்குப் பிறகு குடி பெயர்ந்து செல்ல அனுமதிக்கப்பட்டவர்களுக்கு இச் சலுகை அளிக்கப்படுவதில்லை.

# 12. வாணிக உறுதிக் கடிதங்கள்

## (Letters of Credit)

ஒரு நாட்டிலிருந்து மற்றொரு நாட்டிற்குப் பணம் அனுப்புவதற்குப் பாங்குகள் துணைபுரிகின்றன. அவை உண்டியல்களை வசூலிக்கின்றன. பண்டங்களையும் பணிகளையும் அயல் நாடுகளுக்கு அனுப்புவதில் வணிகக் கடிதங்கள், வாணிக உறுதிக் கடிதங்கள் கொடுப்பதன்மூலம் பாங்குகள் பேருதவி புரிகின்றன. சிறு அளவே வெளியில் அறிமுகமான வியாபாரி ஒருவர் அயல் நாட்டுத் தயாரிப்பாளரிடமிருந்து சரக்குகளைப் பெற தன்னுடைய உயர்ந்த பெயரைப் பயன்படுத்த வாணிக உறுதிக் கடிதத்தின் மூலம் வணிகப் பாங்குகள் அனுமதிக்கின்றன.

வாணிக உறுதிக் கடிதத்தின்மூலம் ஏற்றுமதியாளருக்குப் பணம் செலுத்தவேண்டிய பொறுப்பைப் பாங்கு ஏற்கிறது. வெளியில் நன்கு அறிமுகமாகாத அல்லது அயல் நாட்டு வர்த்தகரால் நம்பமுடியாத இறக்குமதியாளருக்குப் பாங்கு வாணிக உறுதிக் கடிதம் வழங்குகிறது. ஒரு பாங்கிலிருந்து வாணிக உறுதிக் கடிதம் கிடைத்தவுடன் இறக்குமதியாளர் சிறிதளவே கண்காணிக்கப்படுகிறார். வாணிக உறுதிக் கடிதம் வழங்கும் நாணய நிலைமையே பெரிதும் பொருட்படுத்தப்படுகிறது.

வாணிக உறுதிக் கடிதத்திலுள்ள நிபந்தனைகளும் உட்பிரிவுகளும் அந்தந்த நாடுகளில் உள்ள வணிகச் சங்கங்களால் (Chamber of Commerce) தயாரிக்கப்படுகிற 'நாணயப் பத்திரங்களின் ஒரே தன்மையுள்ள பழக்கவழக்கப்படியே' (Uniform Customs and Practice of Documentary Credits) அடங்கி இருக்கும்.

## வாணிக உறுதிக் கடிதம் வழங்கும் முறை

அயல் நாட்டு ஏற்றுமதியாளரிடமிருந்து சரக்கு இறக்குமதி செய்ய இயலாத இறக்குமதியாளர் ஏற்றுமதியாளருக்கு ஆதரவாக வாணிக உறுதிக் கடிதம் வழங்க ஏற்பாடு செய்கிறார். அதாவது அவர் வாணிக உறுதிக் கடிதம் வழங்குமாறு தனது நாட்டிலுள்ள பாங்கு ஒன்றை வேண்டுவார். அப் பாங்கு ஏற்றுமதியாளர் நாட்டிலுள்ள அதன் தொடர்புப் பாங்கிற்கோ வேறு எந்த பாங்கிற்கோ ஏற்றுமதியாளருக்கு ஆதரவாகக் கடன் ஆரம்பிக்கப் பட்டு இருக்கிறது என்று தந்தி மூலமாகவோ; கடிதம் மூலமாகவோ தெரிவிக்கும். அத் தொடர்புப் பாங்கு இச் செய்தியை ஏற்றுமதியாளருக்கு வழங்கும். ஏற்றுமதியாளரால் வரையப் படும் பண விடைகளை வாணிக உறுதிக் கடிதத்தில் கண்டுள்ள நிபந்தனைகளுக்கு உட்பட்டு மதிக்கும் (honour) என்று ஏற்றுமதி யாளரிடம் உணர்த்தும். பணம் செலுத்தும் பொறுப்பு வாணிக உறுதிக் கடிதம் வழங்கும் பாங்கையே சாரும். ஏற்றுமதியாளரால் வரையப்படும் பண விடைகளை ஏற்கும் பாங்கு வாணிக உறுதிக் கடிதம் வழங்கும் பாங்கிடமிருந்துப் பணத்தைப் பெறுகிறது.

## வாணிக உறுதிக் கடிதத்தின் தன்மை

இங்கு வாணிக உறுதிக் கடிதம் எப்பொழுது வழங்கப்படுகிறது என்பது முக்கியமாகும். சரக்கு கப்பலில் ஏற்றப்படுவதற்கு வெகு நாட்களுக்கு முன்னரே அச் சரக்கினை வாங்குதல், விற்றலுக்குரிய ஒப்பந்தம் ஏற்றுமதியாளர் இறக்குமதியாளருக்கிடையே நிகழ் கின்றது. ஆகவே ஏற்றுமதியாளரால் வாணிக உறுதிக் கடிதம் பெற்றுக் கொள்ளக்கூடிய காலம் மிகவும் முக்கியமானது. ஒப்பந்தம் முடிவாகும் தேதியிலிருந்து வாணிக உறுதிக் கடிதம் பெற்றுக்கொள்ளும் தேதிவரையிலுள்ள இடர்ப்பாடுகள் முழு வதையும் ஏற்றுமதியாளரே ஏற்கிறார். அங்காடி விலைச் சரிவுள்ள காலங்களில் சரக்குக்குரிய ஆணையை நீக்கிவிடுகிறார். ஏற்றுமதி யாளர் தான் தயாரித்த அல்லது ஏற்றுமதி செய்யும்பொருட்டுக் கொள்முதல் செய்யப்பட்ட சரக்குடன் திண்டாடுகிறார். ஆகவே ஏற்றுமதியாளர்கள் முன்கூட்டியே வாணிக உறுதிக் கடிதம் தொடங்க விரும்புகின்றனர். சரக்கின் தன்மை அங்காடி நிலைமைகள், ஒப்பந்த ஆட்களின் பேரத் தன்மையைப் பொறுத்தே வாணிக உறுதிக் கடிதம் வழங்கப்படுகிறது.

சில காலங்களில் ஏற்றுமதியாளர் சரக்கினை ஒரே தவணையில் ஏற்றுமதி செய்யாமல் பல தவணைகளில் ஏற்றுமதி செய்யலாம்.

ஒவ்வொரு அனுப்பீட்டிற்கும் தனித்தனி பண விடையும், தனிப் பட்ட பத்திரங்களும் தயாரிக்கப்படுகின்றன. ஆகவே சில வாணிக உறுதிக் கடிதங்கள் ஒரு பகுதி ஏற்றுமதிக்கே வழங்கப்படுகின்றன. இது சம்பந்தமாக வாணிக உறுதிக் கடிதத்தில் தெளிவாகக் குறிப்பிட வேண்டும்.

வாங்குபவர் விற்பவர்களுக்கிடையேயுள்ள நிதி சம்பந்தமான நடவடிக்கைகளுக்கு மட்டுமே வாணிக உறுதிக் கடிதம் வழங்கப் படுகிறது. ஏற்றுமதியாளர், இறக்குமதியாளர்களுக்கு இடையே நிகழும் ஒப்பந்தம் சரக்குக் கொள்முதல் விற்பனையைத் தழுவியே இருக்கும். வாணிக உறுதிக் கடிதம் வழங்கும் பாங்கு சரக்கின் தன்மையைக் கருதாததால் சரக்கைப்பற்றி வாணிக உறுதிக் கடிதத்தில் குறிப்பிடப்பட்டிருக்காது. கொள்முதல் செய்பவர் உள்நாட்டு வணிகப் பழக்கச் சட்டப்படிப் பத்திரங்களைப் பெற விரும்பலாம். ஆனால் பாங்கு தனது செயல்வரம்பிற்கு உட்பட்டே வாணிக உறுதிக் கடிதம் எவ்வாறு வழங்குவது என்பதைத் தீர்மானிக்கிறது. சரக்குகள் பற்றிய தகராறுகளைப் பாங்கு கவனிக்காது.

கட்டுப் பட்டியல் (Packing lists) கேட்பதன்மூலம் உண்மையில் அனுப்பப்பட்ட சரக்குகளுக்கும், ஒப்பந்தத்தில் ஏற்றுக்கொள்ளப் பட்ட சரக்குகளுக்கும் வேறுபாடுகள் இல்லாமல் தவிர்க்கப் படுகின்றன. வாணிக உறுதிக் கடிதத்தின்கீழ் வரையப்பட்ட உண்டியல்களுடன் சில சரக்குகளின் தன்மை, ஆய்வு, எடை சம்பந்தமான அந்த அதிகாரிகளின் சான்றிதழ்களும் இணைக்கப் படுகின்றன.

## வாணிக உறுதிக் கடிதத்தின் சிறப்பியல்புகள்

வியாபார நடவடிக்கைகள் அதில் தொடர்புற்ற சரக்குகள் கடிதம் வழங்கும் பாங்கின் நடைமுறை விதிகளுக்கு உகந்தவாறு வாணிக உறுதிக் கடிதத்தின் சிறப்பியல்புகள் பொருந்தியிருக்கும். ஆனால் அனைத்து வாணிக உறுதிக் கடிதங்களும் சில பொதுவான சிறப்பியல்புகளைக் கொண்டுள்ளன. சில செய்திகள் தெளிவாகக் குறிப்பிடப்படவேண்டும். கீழ்க்கண்டவற்றிற்கும் மேலாக அதாவது சிறப்புச் செய்திகள் இருந்தால் அவை குறிப்பிடப்பட வேண்டும்.

1. வாணிக உறுதிக் கடிதம் வழங்கும் பாங்கின் பெயரும் முகவரியும் கடிதத்தின் தலைப்பில் குறிப்பிடப்படவேண்டும்.

வாணிக உறுதிக் கடிதத்தைப் பெறும் ஏற்றுமதியாளர் அப் பாங்கு தான் ஏற்றதா அல்லது இல்லையா என்று கண்டறிவார்.

2. ஏற்றுமதியாளரின் முழு முகவரியும், பெயரும் கடிதத்தில் குறிப்பிடப்பட்டிருக்கும்.

3. எவ்வளவு தொகைக்கு வாணிக உறுதிக் கடிதம் வழங்கப்பட்டிருக்கிறது? வாணிக உறுதிக் கடிதத்தின் தன்மை நிலையானதா அல்லது சுழல் முறையா (fixed or revolving) என்று குறிப்பிடப்பட்டிருக்கும்.

4. இறக்குமதியாளரின் பெயர்.

5. பண விடையின் காலம் (30 அல்லது 90 நாட்கள்).

6. பண விடையுடன் இணைக்கப்படக்கூடிய பத்திரங்களின் பட்டியல்.

இப் பட்டியல் இறக்குமதியாளரால் பாங்குக்கு அளிக்கப்படும். இப் பட்டியலில் தவறுகள் நிகழ்ந்தால் பண விடையை நிராகரிக்கப் பாங்குக்கு உரிமையுண்டு. சில சந்தர்ப்பங்களில் இறக்குமதி யாளரால் விரும்பப்படுகிறப் பத்திரங்கள் ஏற்றுமதியாளர் நாட்டில் பழக்கமில்லாததாக இருக்கலாம். இந்த இடர் பாட்டைத் தவிர்க்க ஏற்றுமதியாளர், பாங்கு அல்லது இறக்குமதி யாளரிடம் நேரடித் தொடர்பு கொள்ளலாம்.

7. எந்தத் தேதியில் நாணயக் கடிதம் முடிவடைகிறது அல்லது எந்த நாளுக்குள் அனைத்து நடவடிக்கைகளும் முடிவுற வேண்டும்? வாணிக உறுதிக் கடிதத்தில் குறிப்பிடப்பட்டுள்ள நாட்கள் ஏற்றுமதியாளருக்குப் போதாது என்றால் பாங்கு அல்லது இறக்குமதியாளரிடம் தொடர்பு கொண்டு அந் நாட்களை நீட்டி—மாற்றிக் கொள்ளலாம்.

8. வாணிக உறுதிக் கடிதத்தின் தன்மை—அதாவது உத்தரவு மாற்றக்கூடியது—மாற்றவியலாதது, உண்மையான உறுதிப் படுத்தியது—உறுதிப்படுத்தாதது என்று குறிப்பிடப்பட்டிருக்கும்.

9. இறக்குமதியாளரால் விரும்பப்பட்டு, இறக்குமதி, ஏற்றுமதியாளர்களுக்குள் ஏற்றுக் கொள்ளப்பட்ட வேறு பல நிபந்தனைகள் வாணிக உறுதிக் கடிதத்தில் காணப்படும்.

10. கப்பலில் ஏற்றக்கூடிய சரக்குகளின் விவரம்—சரக்கின் பெயர், தன்மை, விலை, கட்டுமானம், சரக்கு எங்கிருந்து

கிடைக்கிறது, நிபந்தனைகள், விலை, இன்சூரன்சு, சத்தம் (C I.F.) சத்தம் உள்ளடங்கிய விலை (C & F), கப்பலில் ஏற்றும் செலவு உட்பட்ட விலை (F.A.S.) முதலியன.

11. கப்பலில் சரக்கேற்றப்படும் காலம்.

12. உண்டியல்களுடன் இணைக்கப்படும் கப்பல் பத்திரங்களின் முழு விவரம்—கப்பல் இரசீது, இடாப்பு, இன்சூரன்சு, தோற்றுவாய்ச் சான்று, கன்சுலர் இடாப்பு முதலியன.

13. கப்பலில் சரக்கேற்றப்படும் துறைமுகம், இறக்குமதி செய்யப்படும் துறைமுகம்.

14. எவர் பெயரில் உண்டியல் எழுதப்படவேண்டும்? ஏற்பு வழிப்பத்திர முறையா (D/A) அல்லது செலுத்துவழிப் பத்திர முறையா? (D/P).

15. வாணிக உறுதிக் கடிதம் விண்வெளி அஞ்சல் மூலமாக அல்லது கடல் தந்தி மூலமாக அனுப்பப்பட வேண்டுமா?

16. வாணிக உறுதிக் கடிதம் வழங்குதல் பாங்கின், ஏற்றுமதியாளர்கள் நாட்டிலுள்ள, தொடர்புப் பாங்கு மூலமாகவா அல்லது ஏற்றுமதியாளர் நாட்டிலுள்ள ஒரு குறிப்பிட்ட பாங்கு மூலமாகவா?

17. பாங்கின் பதிலாள் அல்லது தொடர்புப் பாங்கு வாணிக உறுதிக் கடிதம் பெற்றுக் கொண்டது என்பதை உறுதிப்படுத்துதல். அவ்வாறு உறுதிப்படுத்துதலுக்குக் கட்டணம் கொடுப்பது கொள் முதலாளரைச் சார்ந்ததா அல்லது விற்பனையாளரைச் சார்ந்தா?

18. ஒரு கப்பலில் இருந்து இன்னொரு கப்பலுக்கு இடையில் சரக்கை மாற்றி ஏற்றுவது அனுமதிக்கப்பட்டிருக்கிறதா அல்லது இல்லையா?

ஏற்றுமதியாளரின் வாணிக உறுதிக் கடிதத்தை நன்றாக ஆய்ந்தறிந்து பண விடை எழுதுவதற்கும் அதனுடன் சேர்க்க வேண்டிய பத்திரங்களை இணைப்பதற்கும் ஏதுவாக இருக்கிறதா என்று பார்க்க வேண்டும். கப்பலில் சரக்கேற்றுதல், பண விடை எழுதுதல், அதனைச் சார்ந்த பத்திரங்களைப் பெறுதல், குறிப்பிட்ட பாங்கிடம் அவற்றை அனுப்புதல் எல்லாம் குறிப்பிட்ட காலத்திற்குள் முடிவு பெறவேண்டும். ஏதாவது ஒரு நிபந்தனையை நிறைவு செய்ய முடியாவிடில் உடனுக்குடன் வாணிக உறுதிக்

கடிதம் வழங்கிய பாங்கிற்குத் தெரிவித்து இறக்குமதியாளரின் அனுமதியுடன் வாணிக உறுதிக் கடிதத்தை மாற்றியமைக்க வேண்டும். வாணிக உறுதிக் கடிதத்தில் குறிப்பிட்ட காலத்திற்கும் சரக்குரிமைப் பத்திரங்களை ஏற்றுமதியாளர் பெற முடியாவிடில் அக் காலத்தை மேலும் நீட்டிக்கலாம்.

## வாணிக உறுதிக் கடிதத்தின் தன்மைகள்

கடிதத்தில் அடங்கிய நிபந்தனைக்குட்பட்டு விற்பனையாளர் வரையும் பண விடைகளைச் சரக்கு வாங்குபவர் கணக்கின் பெயரில் பாங்கு ஏற்று மதிக்கும் என்று பாங்கால் வழங்கப்படுகின்ற கடிதம் அல்லது பத்திரமே வாணிக உறுதிக் கடிதமாகும். வாணிக உறுதிக் கடிதம் வழங்கும் பாங்கின் பெயரிலோ, கடிதத்தில் குறிப் பிடப்பட்டிருக்கிற பாங்கின் பெயரிலோ, பண விடைகள் எழுதப் படுகின்றன. பணத்தைக் கொடுக்கும் இறுதிப் பொறுப்பு கொள்முதல் செய்பவரையே சார்ந்தாலும் பொறுப்புள்ள மூன்றாவது நபராகிய பாங்கு, பண விடைக்குரிய பணம் செலுத்தப் படும் என்று உறுதிமொழியை விற்பனையாளருக்கு அளிக்கும். கொள்முதல் செய்பவரின் நன்னடத்தையில் முழு நம்பிக்கை வைத்திருப்பதால்தான் பாங்கு விற்பனையாளருக்கு இந்த உறுதி மொழியை வழங்குகிறது. வாணிக உறுதிக் கடிதத்தை வழங்கும் பாங்கு கொள்முதல் செய்பவருக்கு ஒருவிதக் கடனை அளிக்கிறது. அக் கடன் அவரால் ஏற்றுக் கொள்ளப்படாவிடில் கொள்முதல் செய்பவர் பாங்குக் கணக்கில் ஒரு குறிப்பிட்ட அளவு பணத்தை வைப்பாகப் போடவேண்டும் அல்லது வாணிக உறுதிக் கடிதத்தில் கண்டுள்ள தொகை அளவுக்குப் பாங்கில் பணம் கட்ட வேண்டும்.

வாணிக உறுதிக் கடிதத்தில் கண்டுள்ள நிபந்தனைகளுக்குட் பட்டு வேறு எவ்வித நிபந்தனையும் இல்லாமல் பாங்குப் பத்திரத்தில் கண்டவாறு பணத்தைச் செலுத்தவேண்டும், தொகை, ஏற்றுமதிக்காலம், சரக்கின் தன்மை, பத்திரங்கள் முதலான வற்றுடன் தொடர்பு கொண்டு ஏற்றுமதியாளரால் அளிக்கப் படும் பண விடையுடன் சேர்ந்திருக்க வேண்டும்.

பண விடை அல்லது உறுதிப் பத்திரத்தினின்றும் வாணிக உறுதிக் கடிதம் வேறுபட்டது. சரியான பத்திரங்களுடன் ஒழுங்காக எழுதப்பட்டு, பத்திரங்களில் கண்ட காலங்களில் சேர்ப்பிக்கப்படும், பண விடைகளை ஏற்று, மதிக்கும் உறுதி

மொழியே வாணிக உறுதிக் கடிதமாகும். இக் கடிதம் ஒரு பொறுப்பை உணர்த்துகிறது. ஆனால் உண்டியல் போன்று இது ஒரு செலாவணிப் பத்திரமல்ல. சில சந்தர்ப்பங்களில் வேறு நபருக்கு மாற்றப்பட்டாலும் கையொப்பமிட்டு மூன்றாம் நபருக்கு இதனை மாற்றிக் கொடுக்கமுடியாது. ஆகவே வாணிக உறுதிக் கடிதம் என்பது பணம் செலுத்தும் வழியைவிட ஒருவித ஒப்பந்தமாகவே கருதப்படுகிறது.

## வாணிக உறுதிக் கடிதத்தின் செயல் முறைகள்

எடுத்துக் காட்டாக அயல் நாட்டிலிருக்கும் ஒரு விற்பனை யாளரிடமிருந்து சரக்குகளை வாங்க உள்நாட்டிலிருக்கும் ஒரு கொள்முதலாளர் விரும்புகிறார் என்று கொள்வோம். அவ் விற்பனை யாளர் கொள்முதலாளரின் நிலைமையைப் பற்றி அறியாதவர் என்றும் கொள்வோம். கொள்முதலாளர் அவ் விற்பனையாளருக் காதரவாக வாணிக உறுதிக் கடிதம் வழங்குமாறு அயல் நாட்டிலுள்ள பாங்கை வேண்டுவார். அதற்குரிய விண்ணப்பத்தை அனுப்புமாறு அக் கொள்முதலாளரைப் பாங்கு கேட்கும். வாணிக உறுதிக் கடிதத்தின் தன்மை, கடன் பேரில் எழுதப்படும் பண விடையைச் சார்ந்த பத்திரங்கள், எந்தத் தேதிவரையில் பண விடை சேர்ப்பிக்கப்பட வேண்டும் என்பது போன்ற முக்கிய செய்திகள் இந்த விண்ணப்பத்தில் அடங்கியிருக்கும். ஆய்வுச் சான்றிதழ், எடைச் சான்றிதழ் முதலானவைகளும் பத்திரங் களுடன் அடங்கும். கொள்முதலாளருக்கும், விற்பனையாளருக்கும் இடையேயுள்ள ஒப்பந்தத்திற்கேற்றவாறு ஏற்றுமதியாளரால் எழுதப்படும் பண விடை இருக்கும். விற்பனையாளரின் நன்மதிப் புக்காக அல்லாமல் கொள்முதலாளருக்கு எவ்விதப் பாதுகாப்பும் இது அளிக்காததால் இக் கடிதத்தைப் பற்றிய விவரம் அறிய அதிகமாக வற்புறுத்தப்படுவதில்லை.

இறக்குமதியாளரால் கையொப்பமிட்ட ஒப்பந்தக் கடிதத்தைப் பாங்கு பெறுகிறது. இந்த ஒப்பந்தத்தின் மூலம்,

(i) பண விடை முதிர்வடையும் காலத்தில் தேவையான பணத்தைப் பாங்கிற்கு அளிப்பதற்கும்; (ii) குறிப்பிட்டக் கழிவைப் பாங்கிற்குத் தருவதாகவும்; (iii) பாங்கிற்குச் சேர வேண்டிய பணத்தைக் கொடுக்கின்றவரையில் சரக்கு உரிமைப் பத்திரங்கள் பாங்கிடம் இருக்கும் என்றும்; (iv) சரக்கு சரிவரக் காப்பீடு செய்யப்படும் என்றும் கொள்முதலாளர் உறுதி கூறுகிறார். வேறு பல நிபந்தனைகளும் ஒப்பந்தத்தில் அடங்கி யிருக்கும்.

இறக்குமதியாளரின் நாணய நிலையைப்பற்றி பாங்கு மன நிறைவெய்தினுல் ஏற்றுமதியாளருக்கு வாணிக உறுதிக் கடிதம் வழங்கும். வாணிக உறுதிக் கடிதத்திலுள்ள நிபந்தனைகளுக்குட் பட்டு அக் கடிதம் வழங்கிய பாங்கின் பெயருக்குப் பண விடை அல்லது பண விடைகளை எழுத (drafts) ஏற்றுமதியாளருக்கு இக் கடிதம் அதிகாரம் வழங்குகிறது. சில சந்தர்ப்பங்களில் ஏற்றுமதி யாளர் நாட்டில் உள்ள தொடர்புப் பாங்குப் பெயருக்கு பண விடை எழுத இக் கடிதம் அதிகாரம் வழங்குகிறது வாணிக உறுதிக் கடிதம் ஏற்றுமதியாளர் பெயருக்கு எழுதப்பட்டாலும் எவன் ஒருவன் ஏற்றுமதியாளர் எழுதிய பண விடையின், புறக் குறியாள ஞகவும், உண்மையான உரிமையாளஞகவும் வருபவனுக்கு எழுதப் படுகிறது என்று கடிதத்தின் இறுதிப் பத்தியில் குறிப்பிடப்பட்டிருக் கிறது. ஆகவே ஏற்றுமதியாளரின் நாட்டுப் பாங்கு ஒன்று இப் பண விடையை வாணிக உறுதிக் கடிதத்தின் நிபந்தனைக்குட்பட்டு வாங் கினுல் அது இப் பண விடையின் புறக் குறியாளஞகவும் உண்மை யான உரிமையாளஞகவும் கருதப்படுகிறது. பண விடை எழுதிய வனுக்குள்ள உரிமைகள் அனைத்தும் பாங்கிற்கு வந்து சேருகிறது.

இந்த வாணிக உறுதிக் கடிதம் இறக்குமதியாளர் அல்லது பாங்குமூலம் ஏற்றுமதியாளருக்கு அனுப்பப்படுகிறது. வாணிக உறுதிக் கடிதம் எழுதும் பாங்கு தனது தொடர்புப் பாங்கு மூல மாகவோ, ஏற்றுமதியாளர் நாட்டிலுள்ள வேறு ஒரு பாங்கு மூல மாகவோ அவ்வாறு அனுப்பச் செய்கிறது. ஏற்றுமதியாளர் குறிப் பிட்ட காலத்திற்குள் கப்பலில் சரக்கினை ஏற்றி, பண விடை எழுதி வாணிக உறுதிக் கடிதத்தில் கண்டு உள்ள பத்திரங்களையும் இணைத்து, பத்திரங்கள் சேர்ந்த பண விடையை அவர் நாட்டி லுள்ள பாங்கிடம் விற்கிருர். அப் பண விடையை வாங்கிய பாங்கு இறக்குமதியாளர் நாட்டிலுள்ள அதன் தொடர்புப் பாங்கிற்குப் பணம் வசூல் செய்யும் பொருட்டு அனுப்பிவைக்கிறது. வாணிக உறுதிக் கடிதம் வழங்கும் பாங்கின் ஏற்புக்காக அல்லது பண விடையில் கண்டுள்ள பணத்தைச் செலுத்துவதற்காகத் தொடர்புப் பாங்கு பண விடையை அனுப்பிவைக்கிறது. பண விடையை ஏற்ற வுடனே பத்திரங்கள், வாணிக உறுதிக் கடிதம் வழங்கிய பாங்கிடம் சேர்ப்பிக்கப்படுகின்றன. பண விடை ஏற்கப்பட்டபின் தொடர்புப் பாங்கினுல் அப் பண விடைத் தள்ளுபடி அங்காடியில் தள்ளுபடி அல்லது கழிவு செய்யப்படுகிறது அல்லது கடிதம் வழங்கிய பாங்கு பணம் செலுத்தும் பொருட்டு முதிர்வு நாள்வரையில் அப் பண விடையைத் தொடர்புப் பாங்கு தன்வசம் வைத்திருக்கிறது.

பண விடையில் கண்டுள்ள தொகையில் முழுவதும் அல்லது ஒரு பகுதியை இறக்குமதியாளர் செலுத்தியவுடனே,

அவர்களுக்கிடையேயுள்ள ஏற்பாட்டின் கீழ் நம்பிக்கை இரசீதின் படியோ வாணிக உறுதிக் கடிதம் வழங்கிய பாங்கு இறக்குமதி யாளருக்குப் பத்திரங்களைக் கொடுக்கும். பணவிடையின் முதிர்வு நாளுக்கு ஒன்று அல்லது இரண்டு தேதிகளுக்கு முன்னரே அதற்குரிய பணத்தை இறக்குமதியாளர் செலுத்தலாம். வாணிக உறுதிக் கடிதம் வழங்கிய பாங்கு இறக்குமதியாளரிடமிருந்து பணத்தைப் பெற்றுக் கொண்டவுடனே இது சம்பந்தமான நடவடிக்கைகள் முடிவு பெறுகின்றன.

## வாணிக உறுதிக் கடிதம் வழங்கும் வங்கிக்கும் இறக்குமதியாளருக்கும் இடையே நிகழும் ஏற்பாடுகள்

வாணிக உறுதிக் கடிதம் ஒன்று வழங்க வேண்டுமென்று இறக்குமதியாளர் பாங்குக்கு விண்ணப்பித்திருந்தால், இறக்குமதி யாளரின் நாணயத்தை முதலில் பாங்கு பரிசீலிக்கின்றது. விண்ணபத்திற்கும் கடன் அளவும், இதற்கு முன்னர் எழுதப் பட்ட பணவிடையின் தொகையும் சேர்ந்து அனுமதிக்கப்பட்ட மொத்தக் கடன் தொகைக்கு மிகக்கூடாது. வாணிக உறுதிக் கடிதம் என்பது வாடிக்கையாளருக்கு ஒருவிதக் கடனே. இதில் கண்ட மொத்தக் கடனும் மற்ற கடன்களும் சேர்ந்து ஏற்கனவே அனுமதிக்கப்பட்ட கடன் தொகைக்கு மிகக்கூடாது. வாடிக்கை யாளரின் நிதி நிலைமை, சரக்கின் தன்மை, விற்பனைத் திறன் முதலானவற்றையும் பாங்கு கவனிக்கவேண்டும்.

மாற்று இறக்குமதிக் கட்டுப்பாடுகள் உள்ள நாட்டில் இறக்கு மதியாளர் தேவையான இறக்குமதி உரிமத்தைப் (license) பாங்கிடம் சேர்ப்பிக்க வேண்டும். வாணிக உறுதிக் கடிதம் வழங்கும் பாங்கு உரிமத்தைப் பரிசீலனை செய்து, இது வாணிக உறுதிக் கடிதம் வழங்கப்படும் காலத்திற்கு உகந்ததாக உள்ளதா என்று ஆராயும். ‘திறந்த பொது உரிமம்’ (Open general license) கீழ்ச் சரக்குகள் இறக்குமதி செய்ய வேண்டியதாக இருப்பின் அச் சரக்கு இறக்குமதி, வாணிக் உறுதிக் கடிதத்தல் கண்டுள்ள காலத் திற்குள் செய்யப்படுமா என்று பாங்கு அறிதல் வேண்டும்.

மாற்றுக் கட்டுப்பாடு நிலவும் நாட்டில் வாணிக உறுதிக் கடிதம் அதன் சட்ட திட்டங்களுக்கு உட்பட்டதாக இருத்தல் வேண்டும். கடன் அளவு, பல்வேறு நாடுகளில் இருந்து இறக்குமதி செய்யப் படுவதற்குரிய கடன் அளவு, இரண்டு அல்லது அதற்கு மேற்பட்ட நாடுகளில் இருந்து, இரண்டு அல்லது அதற்கு மேற்பட்ட சரக்குகள்

இறக்குமதி செய்வதற்குரிய உரிமம் (license) பெறுதல், எச் செலாவணியில் பணம் செலுத்துதல், கடன் கால அளவு அனைத்தும் மாற்றுக் கட்டுப்பாட்டுச் சட்ட திட்டத்தின்கீழ் அடங்கியிருக்கும்.

இந் நடைமுறைகள் அனைத்தும் கடைப்பிடிக்கப்பட்ட பிறகு தேவையான வாணிக உறுதிக் கடிதம் ஏற்றுமதியாளருக்கு நேராகவோ, ஏற்றுமதியாளர் நாட்டுப் பாங்கு மூலமாகவோ அனுப்பப்படும்.

கடன் முழுவிவரம் ஏற்றுமதியாளருக்குத் தெரிவிக்கப்படும். கப்பலில் சரக்கேற்றுதல், பண விடை எழுதுதல், மற்ற பத்திரங்களைச் சேர்த்தல், வேறுபல நடவடிக்கைகளைக் கடைப் பிடித்தல் அனைத்தும் வாணிக உறுதி கடிதத்தில் கண்டுள்ளவாறு ஏற்றுமதியாளரால் பின்பற்றப் படவேண்டும். சில சந்தர்ப்பங் களில் வாணிக உறுதிக் கடிதம் வழங்கும் பாங்கு தனது உறுதிப் படுத்தலையும் ஏற்றுமதியாளருக்கு ஆதரவாக வழங்கும்.

## மாற்றுக் கட்டுப்பாட்டிற்குகந்தவாறு வாணிக உறுதிக் கடிதத்தில் பின்பற்ற வேண்டிய நடைமுறைகள்

வாணிக உறுதிக் கடிதங்களில் உள்ள நிபந்தனைகளை இந்திய மாற்றுக் கட்டுப்பாட்டுச் சட்டம் நிர்ணயிக்கிறது.

(i) இறக்குமதி உரிமையின் அளவிற்கு ஏற்றுமதியாளருக்கு ஆதரவாக வாணிக உறுதிக் கடிதம் வழங்கப்படலாம்.

(ii) இக் கடிதம் எவ்வளவு காலத்திற்கு வேண்டுமென்றாலும் தரப்படலாம். ஆனால் இறக்குமதி முன் அனுமதியின் கால அளவிற்குப் பிறகு 30 நாட்களுக்கு மிகாமல் இருத்தல்வேண்டும், இறக்குமதி வணிகத்தில் 15 நாட்கள் சலுகை அளிக்கப்படு கின்றன. அதற்கு மேலும் 15 நாட்களுக்கு வாணிக உறுதிக் கடிதம் செல்லுபடியாகும்.

(iii) வெளிப்படைப் பொது உரிமையின்கீழ்ச் சரக்கு இறக்குமதி செய்யும் பொழுது 6 மாதங்களுக்கு மிகாமல் வாணிக உறுதிக் கடிதம் தொடங்கப் பெறலாம்.

(iv) ஒரே இறக்குமதி அனுமதியின்கீழ் இரண்டுக்கு மேற்பட்ட நாடுகளில் இருந்து சரக்கு இறக்குமதி செய்ய வேண்டி யிருப்பின் ஒவ்வொரு நாட்டிலிருந்தும் எவ்வளவு தொகைக்குச் சரக்கு இறக்குமதி செய்யப்படலாம் என்று வாணிக உறுதிக் கடிதத்தில் தனியாகக் குறிப்பிடப்பட வேண்டும்.

(v) ஒரே இறக்குமதி உரிமத்தில் பலவிதச் சரக்குகள் இறக்குமதி செய்யப்பட வேண்டியிருப்பின் ஒவ்வொருவிதச் சரக்கிற்கும் எவ்வளவு கடன் தொகை வழங்கப்பட்டிருக்கிறது என்று குறிப்பிட்டிருக்க வேண்டும். இரண்டிற்கு மேற்பட்ட நாடுகளில் இருந்து சரக்கு இறக்குமதி செய்யக் கடன் அனுமதி இருந்தால் ஒவ்வொரு நாட்டிற்கும் எவ்வளவு தொகை என்று குறிப்பிடப்பட வேண்டும்.

(vi) இந்திய ரிசர்வ் பாங்கின் இசைவின் பேரிலேயே எந்த நாட்டிலிருந்து சரக்கு ஏற்றுமதியாகிறதோ அந்த நாட்டுச் செலாவணியிலோ, இந்திய ரூபாயிலோ, ஸ்டெர்லிங்கிலோ அந்தந்த நாட்டு நடைமுறைகளுக்கு உகந்தவாறு பணம் செலுத்தப்படும்.

## வாணிக உறுதிக் கடிதத்திலுள்ள நபர்கள் (ஆட்கள்)

ஏற்றுமதியாளரிடமிருந்து சரக்கு வாங்க ஒப்பந்தம் ஏற்பட்டதற்கிணங்க ஏற்றுமதியாளருக்கு ஆதரவாக, இறக்குமதியாளரின் வேண்டுகோளுக்கு இணங்க பாங்கினல் வாணிக உறுதிக் கடிதம் வழங்கப்படுகிறது. ஆகவே இறக்குமதியாளர், ஏற்றுமதியாளர், வாணிக உறுதிக் கடிதம் வழங்கும் பாங்கு ஆகிய மூவருமே வாணிக உறுதிக் கடிதத்திலுள்ள நபர்களாவார்கள். ஆனல் இக் கடிதத்தின்மூலம் வேறுபல பாங்குகளும் வெவ்வேறு தகுதியில் இடம் பெறுகின்றன.

நம்பிக்கை பெற்ற வாங்குவோரும் நலம் பெறுவோரும் (The accredited buyer and the beneficiary): எந்த இறக்குமதியாளரின் வேண்டுகோளின்படி வாணிக உறுதிக் கடிதம் வழங்கப்படுகிறதோ அவரே நம்பிக்கை பெற்ற வாங்குவோர் (accredited buyer) அல்லது கணக்கு நபர் (account party) என்றழைக்கப்படுவார். ஏனென்றல் இவர்தான் ஏற்றுமதியாளரிடம் தொடர்பு கொண்டு சரக்கு வாங்க ஒப்பந்தம் செய்து வாணிக உறுதிக் கடிதம் வழங்கவும் ஏற்பாடு செய்கிருர். ஆகவே வாணிக உறுதிக் கடிதத்தின்கீழ் எழுதப்பட்ட பண விடைக்குரிய பணத்தைப் பாங்கில் இவர் செலுத்த வேண்டும். பாங்கு ஏற்றுமதியாளருக்குப் பணத்தைக் கொடுக்கும். ஏற்றுமதியாளருக்கு ஆதரவாக வாணிக உறுதிக் கடிதம் எழுதப்பட்டு அவர் பெயருக்கே அனுப்பப் படுவதால் அவர் நலம் பெறுவோராகக் கருதப்படுவார். வாணிக உறுதிக் கடிதத்தின்கீழ் பண விடையை எழுதி உரிய பணத்தைப் பெற உரிமை பெறுகிருர். சரக்கினைக் கப்பலில் ஏற்றியவுடன், உரிய பத்திரங்களைச் சேகரித்து, உண்டியல்களையும்

எழுதி அதனை மற்ற பத்திரங்களுடன் இணைத்து வாணிக உறுதிக் கடிதம் வழங்கிய பாங்குக்கோ, கடிதத்தில் குறிப்பிடப்பட்ட பாங்குக்கோ அனுப்புகிறார். சிறந்த வகை வாணிக உறுதிக் கடிதத்தைப் பெறுவதே நலம் பெறுவோரின் நோக்கமாக இருத்தல் வேண்டும். இவருக்கும் இறக்குமதியாளருக்கும் உள்ள ஒப்பந்தத் திற்கு உகந்தவாறு இந்த வாணிக உறுதிக் கடிதம் அமையும்.

## வாணிக உறுதிக் கடிதம் வழங்கும் வங்கி

இது நம்பிக்கை பெற்ற வாங்குவோரின் வேண்டுகோளுக் கிணங்க வாணிக உறுதிக் கடிதத்தை வழங்கும் பாங்காகும். வாணிக உறுதிக் கடிதம் வழங்குவதன்மூலம் அதன்மேல் எழுதும் உண்டியலுக்குரிய பணத்தைக் கொடுக்கும் பொறுப்பு அப் பாங்கைச் சாருகிறது. வேறொரு பாங்கு அப் பணத்தைக் கொடுத் தால் அந்த வேறொரு பாங்கிற்கு இப் பாங்கு அப் பணத்தை அளித்தல் வேண்டும். வாணிக உறுதிக் கடிதம் வழங்கிய உடனே நலம் பெறுவோரால் எழுதப்பட்ட உண்டியலுக்குரிய பணத்தைச் செலுத்துவதாக இப் பாங்கு தெரிவிக்கிறது. உண்டியல் சேர்ப் பிக்கப்பட்டவுடனே, தொடர்புப் பாங்குக்கு உண்டியல் சேர்ப் பிக்கப்பட்டதற்குரிய அறிவிப்பு கிடைத்தவுடனே, பணம் செலுத்தும் பொறுப்பு உறுதியாகிறது.

நம்பிக்கை பெற்ற வாங்குவோரின் விண்ணப்பத்தில் குறிப்பிட்டுள்ளவாறு அக் கடிதத்தின் தன்மையும் இருக்கும். இறக்குமதி, ஏற்றுமதியாளர்களுக்கிடையேயுள்ள ஒப்பந்தத்திற்கு உகந்தவாறு நிபந்தனைகள் அமையும்.

நலம் பெறுவோருக்கு நேராகப் பாங்கு மூலமாகவோ, இறக்குமதியாளர் மூலமாகவோ அக் கடிதம் அனுப்பப்படும். அவ்வாறு அனுப்பப்படாத கடிதம் சுற்று வணிக உறுதிக் கடிதம் என்று அழைக்கப்படும்.

வணிக உறுதிக் கடிதம் வழங்கும் பாங்கு நன்முறையிலும் செல்வாக்குடையதாகவும் இருந்தாலன்றி வணிக உறுதிக் கடிதத்தின் நோக்கம் நிறைவேறாது. ஏனென்றால் வணிக உறுதிக் கடிதம் வழங்கிய பாங்கின் நிதி நிலைமை நிலையற்றதாக இருப்பின் நலம் பெறுபவர் அதனை நம்பி ஏற்றுமதி செய்ய முடியாது. பாங்கு, ஏற்றுமதியாளர் நாட்டில் இருக்கலாம் அல்லது ஏற்றுமதி யாளருக்குத் தெரிந்ததாகவும் இருக்கலாம் அல்லது வேறு எந்த முக்கிய நாட்டிலும் இருக்கலாம். பொதுவாக வணிகர்கள்

பிரிட்டன் பாங்குமூலமாக வணிக உறுதிக் கடிதத்தைப் பெறுகிறார்கள். பிரிட்டன் பாங்குகளும் இவ் வழிகளில் சிறப்புத் தேர்ச்சி அடைந்து நல்ல செல்வாக்குடன் விளங்குகின்றன.

## செயல் துறை வங்கி

நலம் பெறுவோர் நாட்டிலுள்ள பாங்குமூலம் அந் நலம் பெறுவோருக்கு வணிக உறுதிக் கடிதம் போய்ச் சேருகிறது. அப் பாங்கு வணிக உறுதிக் கடிதம் வழங்கும் பாங்கின் கிளை அல்லது தொடர்புப் பாங்காகவோ இருக்கலாம். சில சந்தர்ப்பங்களில் இப் பாங்குக்குக் கடல் தந்திமூலம் இவ்வகைக் உறுதிக் கடிதம் தெரிவிக்கப்பட்டுப் பின்னர் அதற்குரிய சிறப்புப் படிவத்தில் எழுதப்பட்டு அனுப்பி வைக்கப்படுகிறது. மற்ற சந்தர்ப்பங்களில் இக் கடிதம் அஞ்சல்மூலம் பாங்குக்கு அனுப்பப்பட்டு ஏற்றுமதியாளரிடம் சேர்க்கப்படுகிறது. இப் பணியினைச் செய்யும் பாங்கு அறிவிப்புப் பாங்கு அல்லது செயல் துறை வங்கி என்று அழைக்கப்படும்.

இந்த அறிவிப்புப் பாங்கு நலம் பெறுவோருக்குத் தகுந்த அறிவுரை வழங்கிக் கடிதத்தின் விவரத்தைத் தெரிவிப்பதில் மிகவும் விழிப்பாக இருக்கிறது. அஞ்சல்மூலம் கிடைத்த வணிக உறுதிக் கடிதத்தைக் உடனுக்குடன் அனுப்பி வைக்கிறது. கடல் தந்திமூலம் அல்லது தந்திமூலம் கடிதம் கிடைக்கப்பெற்றால் அவ் வார்த்தைகளை எழுதுவதிலும் பின்னர் அதனை நலம் பெறுவோருக்குத் தெரிவிப்பதிலும் எச்சரிக்கையாய் இருத்தல் வேண்டும். இப் பணியினைச் செய்யும்போது, கடிதத்தில் தனது உறுதிப் படுத்துதலையும் தெரிவிக்கவேண்டுமென்று வேண்டிக்கொள்ளப் பட்டாலன்றி அறிவிப்புப் பாங்கு எந்தவிதப் பொறுப்பையும் ஏற்றுக்கொள்ளாது.

இப் பாங்குக் கடிதத்தை உறுதிப்படுத்தினால் இது கடிதத்தில் ஒரு நபராகக் கருதப்பட்டு பொறுப்பேற்றுக்கொள்கிறது. இதற்காக உள்ள தனிப்பட்ட கழிவை நலம் பெறுவோனிடமிருந்தோ, கடிதம் வழங்கும் பாங்கிடமிருந்தோ வசூலித்துக் கொள்ளும், அறிவிப்புப் பாங்கு வேறு எந்த பாங்காலோ உறுதிப்படுத்துதல் நலம் பெறுவோனுக்குப் பாதுகாப்பளிக்கிறது. ஆகவே இதனை ஏற்றுமதியாளர் வற்புறுத்துகிறார். ஏற்றுமதி இறக்குமதிகளுக்கிடையே உள்ள ஒப்பந்தத்திற்கு உகந்தவாறு இது இருக்கிறது.

## பணம் செலுத்தும் வங்கி
## (The Paying Bank)

வணிக உறுதிக் கடிதத்தின் அடிப்படையில் பணம் செலுத்தும் பாங்கின்மீது நலம் பெறுவோனல் உண்டியல்கள் எழுதப்பட்டு அவ்வுண்டியல்களுக்குரிய பணத்தைப் பாங்கு அளிக்கிறது. செயல் துறை வங்கி (Executing Bank) கூடப் பணம் செலுத்தும் பாங்காக இருக்கலாம். ஆனல் இது நலம் பெறுவோனிடம் அல்லது வேறு எங்காகிலும் உள்ள வேறொரு பாங்காகவும் இருக்கலாம்.

கடிதத்தில் பணம் செலுத்தும் பாங்கின் பெயர் குறிப்பிட்டிருந்தால் அக் கடிதத்திற்கு 'நேர்முக வணிக உறுதிக் கடிதம்' என்று பொருள்.

கடிதத்தில் கண்டுள்ள பண விடைகளுக்குரிய பணத்தைச் செலுத்துவதல்லாமல் வேறு எந்தப் பொறுப்பையும் பணம் செலுத்தும் வங்கி ஏற்றுக்கொள்வதில்லை. வணிக உறுதிக் கடிதம் தொடங்கிய பாங்கிடமிருந்து, இப் பணம் செலுத்தும் பாங்கு, இப் பணத்தைத் திரும்பப் பெறுகிறது. அதாவது நலம் பெறுவோன் பண விடைக்குரிய பணத்தைப் பெற்றவுடனே அவனுடைய வேலை முடிந்து விடுகிறது. மற்ற நடவடிக்கைகள் அனைத்தும் பணம் செலுத்தும் வங்கி, கடிதம் தொடங்கிய பாங்கிற்கிடையே நிகழ்கிறது.

## உண்டியல் மாற்று / செலாவணி வங்கி
## (Negotiating Bank)

வணிக உறுதிக் கடிதத்தில் பணம் செலுத்தும் பாங்கின் பெயர் குறிப்பிடாமலிருந்தால் நலம் பெறுவோர் எந்தப் பாங்கிடமாவது அணுகி உறுதிக் கடிதத்தின்மூலம் எழுதப்பட்ட பண விடையைச் செலாவணிச் செய்யும்படி/மாற்றும்படி வேண்டுவர். அப் பாங்கு அவ்வாறு செய்ய ஏற்றுக்கொண்டால் அப் பாங்கிற்குச் செலாவணி வங்கி அல்லது உண்டியல் மாற்று வங்கி என்பது பெயர். இப் பாங்கு வணிக உறுதிக் கடிதம் ஆரம்பித்த பாங்கின் தொடர்புப் பாங்காகவோ செயல் துறைப் பாங்காகவோ நலம் பெறுவோன் தொடர்பு வைத்திருக்கக்கூடிய வேறு எந்த பாங்காகவோ இருக்கலாம். பண விடை இவ்வாறு செலாவணியாகும் போது வணிக உறுதிக் கடிதத்திற்குச் செலாவணி வணிக உறுதிக் கடிதம் (Negotiation letter of credit) என்று பொருள்.

உண்டியல் செலாவணியானபின், செலாவணிப் பாங்கு அவ்வுண்டியல்களைக் கடிதம் அனுப்பிய பாங்கின் ஏற்பிற்காகவும், அதன்பின் பணம் பெறுவதற்காகவும் அதனிடம் அனுப்புகிறது. உண்டியல்களையும் அவற்றைச் சார்ந்த பத்திரங்களையும் ஆராய்ந்து பார்க்கும்போது கடிதத்தில் கண்டுள்ள நிபந்தனைகளுக்கு உட்பட்டு இருக்கின்றனவா என்று பார்க்கவேண்டும். இதில் ஏதாவது முறைகேடு இருப்பின் கடிதம் அனுப்பிய பாங்கு இவ்வுண்டியல்களை ஏற்காது. இச் சந்தர்ப்பங்களில் செலாவணிப் பாங்கு இவற்றில் கண்ட பணத்தைத் திரும்பப் பெறுவதற்கு நலம் பெறுவோரைத்தான் நாடவேண்டும்.

செலாவணிப் பாங்கின் உரிமைகளும் பொறுப்புக்களும் உறுதிக் கடிதத்திலுள்ள நிபந்தனைகளைப் பொறுத்துள்ளது. உண்டியல்கள் 'புகலிடம் அற்றவை'' (Without recourse) என்ற நிபந்தனையுடன் எழுதலாம் என்று கடிதத்தில் குறிப்பிட்டிருந்தால், செலாவணிப் பாங்கு பணம் செலுத்திய பிறகு ஏற்றுமதியாளரிடமிருந்து பணத்தைத் திரும்பப் பெற முடியாது. ஆகவே உண்டியல்களும், மற்ற பத்திரங்களும் கடிதத்தின் மற்ற நிபந்தனைகளுக்குட்பட்டு ஏற்றுமதியாளர் நடந்துகொண்டால் உண்டியல் செலாவணியில் எவ்வித இடர்ப்பாடும் இராது.

## உறுதிப்படுத்தும் வங்கி
## (Confirming Bank)

இறக்குமதியாளர் நாட்டுப் பாங்கால் பிறப்பிக்கப்படும் வணிக உறுதிக் கடிதம் தன்னுட்டுப் பாங்கு ஒன்றால் உறுதிப் படுத்தப்பட வேண்டும் என்று சில சந்தர்ப்பங்களில் ஏற்றுமதியாளர் நிபந்தனை விதிப்பார். ஆகவே வணிக உறுதிக் கடிதம் பிறப்பிக்கும் பாங்கு அக் கடிதத்தை உறுதிப்படுத்தும்பொருட்டு நலம் பெறுவோன் (ஏற்றுமதியாளர்) நாட்டிலுள்ள பாங்கு ஒன்றிடம் ஏற்பாடு செய்யும். இவ்வாறு கடிதத்தை உறுதிப் படுத்தும் பாங்குக்கு 'உறுதிப்படுத்தும் வங்கி' (Confirming Bank) என்றும், அக் கடனுக்கு 'உறுதிப்படுத்திய கடன்' (Confirmed credit) என்றும் பொருள். வணிக உறுதிக் கடிதத்தை உறுதிப்படுத்தும்போது அதன்மீது விடுக்கப்படும் பண விடைகளை நன்மதிப்பளிக்கும் (honour) பொருட்டுக் கடிதம் விடுக்கும் பாங்கின் பொறுப்புடன் தன் பொறுப்பையும் சேர்க்கும். அதாவது வணிக உறுதிக் கடிதம் விடுக்கும் பாங்கு அதன்பேரில் விடுக்கும் பண விடைகளை மறுக்க நேர்ந்தால் உறுதிப்படுத்தும்

பாங்கு பொறுப்பேற்றுக்கொள்ளவேண்டும். அதாவது வணிக உறுதிக் கடிதம் விடுக்கும் பாங்கு அதன்பேரில் விடுக்கும் பண விடைகளை மறுக்க நேர்ந்தால் உறுதிப்படுத்தும் பாங்கு பொறுப்பேற்றுக் கொள்ளவேண்டும்.

## உறுதிப்படுத்தப்பட்ட வாணிக உறுதிக் கடிதத்தின் நலன்கள்

*1.* வணிக உறுதிக் கடிதம் விடுக்கும் பாங்கு பன்னாட்டளவில் நற்பெயர் பெற்றிராவிடில் அல்லது பன்னாட்டு நிலைமைகளில் உறுதியற்ற நிலையில் இருந்தால் அல்லது அயல் நாட்டுச் செலாவணியில் மாற்றும்பொருட்டு நலம் பெறுவோர் நாட்டுப் பாங்கின் உறுதிப்பாடு தேவையாய் இருப்பின் இவ்வுறுதிப் படுத்தப்பட்ட வணிக உறுதிக் கடிதம் நலம் பெறுவோனுக்குப் பாதுகாப்பளிக்கிறது.

*2.* இக் கடிதத்தின்கீழ் அனுப்பப்படும் பண விடைகளை நலம் பெறுவோருக்குத் தெரிவித்த பாங்கும், அவர் நாட்டுப் பாங்கும் நன்மதிப்பளிக்கும் என்று நம்பலாம்.

*3.* உறுதிப்படுத்தப்படாத வணிக உறுதிக் கடிதம் புழக்கத்திலிருந்தால் பணம் செலுத்தும் பாங்கு அப் பணத்தை உறுதிக் கடிதம் அளித்த பாங்கிடமிருந்து திரும்பப் பெறவேண்டும் போது, நலம் பெற்றவரிடமிருந்து அப் பணத்தைக் கேட்டு அவருக்கு இன்னல் விளைவிக்கிறது. இத் தொல்லை உறுதிப்படுத்தப் பட்ட வாணிக உறுதிக் கடிதத்தில் இல்லை. இப் பணிக்காக உறுதிப்படுத்தும் பாங்கு இறக்குமதியாளரிடமிருந்து கடிதம் விடுக்கும் பாங்குமூலம் சிறுகட்டணம் வசூலித்துக்கொள்கிறது.

## வாணிக உறுதிக் கடிதத்தின் வகைகள்

வணிக உறுதிக் கடிதம் விடுக்கும் முறைகள், அக் கடிதத்தில் அடங்கியப் பல்வேறு நபர்கள், அவர்களின் உரிமைகள், பொறுப்புக்கள், நலம் பெறுவோனுக்கு வழங்கப்படும் காப்புறுதி இவைகளில் இருந்து வணிக உறுதிக் கடிதம் வெவ்வேறுவித வகைகளில் விடுக்கப்படுகின்றன.

**வெற்று / பத்திரங்கள் சேர்ந்த வாணிக உறுதிக் கடிதங்கள்: (Clean/Documentary letters of credit):** வணிக உறுதிக் கடிதங்

களின் அடிப்படையில் விடுக்கப்படும் பண விடைகள், சரக்குரிமைப் பத்திரங்கள் அல்லது பிணையப் பத்திரங்களுடன் இணைக்கப் பட்டிருந்தால் அவைகள் 'பத்திரங்கள் சேர்ந்த வணிக உறுதிக் கடிதங்கள்' (Documentary letters of credit) என்றும், அவ்வாறு இணைக்கப்படாவிடில் அவைகள் 'வெற்று வணிக உறுதிக் கடிதங்கள், (Clean letters of credit)என்றும் அழைக்கப்படும்.

ஓர் இடத்திலிருந்து மற்றோர் இடத்திற்கு நிதியினைப் (Funds) பாங்குகளாலும், பெயர் பெற்ற வணிக நிலையங்களாலும் மாற்று வதற்கு வெற்று வாணிக உறுதிக் கடிதங்கள் பயன்படுத்தப் படுகின்றன. சரக்கனுப்புவதில் இந்த வெற்று உறுதிக் கடிதங்கள் பயன்படுத்தப்படும்போது சரக்கனுப்பப் பெறுபவருக்கு நேராகச் சரக்குரிமைப் பத்திரங்கள் அனுப்பப்படுகின்றன. வணிக உறுதிக் கடிதம் விடுக்கும் பாங்குகளும், செலாவணிப் பாங்குகளும் சரக்கின்மீது எவ்விதப் பற்றுரிமையும் பெற்றிருக்க முடியாது. இவ்வித வணிக உறுதிக் கடிதங்கள் சிறந்த நிலைமையில் உள்ள நாணயம் உடையவர்களுக்கே பிறப்பிக்கப்படுகின்றன. விண்ணப் பிப்பவரின் நாணய நிலைமையில் மனநிறைவு எய்தாவிடில் கடிதம் விடுக்கும் பாங்கு கடிதத்திலுள்ள முழுத்தொகையையும் அதனிடம் விண்ணப்பிப்பவர் கட்டவேண்டும் என்று விரும்பும் அல்லது தகுந்த உத்தரவாதம் அளிக்கக்கோரும்.

சரக்கு மாற்றங்களில் பத்திரங்கள் சேர்ந்த வணிக உறுதிக் கடிதங்கள் புழக்கத்தில் உள்ளன. கடிதத்தில் கூறப்படும் பத்திரங்கள் ஏற்றுமதியாளர் விடுக்கும் பண விடைகளுடன் இணைக்கப்படவேண்டும். வணிக உறுதிக் கடிதம் விடுக்கும் பாங்கு இம் முறையில் மிகவும் மேன்மையான நிலையில் உள்ளது. ஏனென்றால் சரக்கு உரிமைப் பத்திரங்கள் அதன் பெயரில் அனுப்பப்படும்போது இப் பாங்கு சரக்கு உரிமையாளராகிறது. பத்திரங்கள் சேர்ந்த கடிதங்கள் ஏற்றுமதியாளருக்கும் சரக்கிற் குரிய பணத்தை விரைவில் பாதுகாப்பான முறையில் பெற்றுக் கொள்ளத் துணைபுரிகின்றன.

## உறுதிப்படுத்திய, உறுதிப்படுத்தப்படாத வாணிக உறுதிக் கடிதங்கள் (Confirmed and Unconfirmed Letters of Credit)

நலம் பெறுவோன் நாட்டுப் பாங்கின் உறுதிப்பாட்டுடன் விடுக்கப்படும் வணிக உறுதிக் கடிதம் உறுதிப்படுத்தப்பட்ட வணிக உறுதிக் கடிதம் (Confirmed letters of credit) என்றழைக்கப்படும்.

இக்கடிதத்தின் அடிப்படையில் விடுக்கும் பண விடைகளை உறுதிப் படுத்தும் பாங்கும் நன்மதிப்பளிக்கவேண்டும். இவ்வுறுதிப்பாடு நலம் பெறுவோனுக்கு அனுப்பப்படும் 'கருத்து அறிவிப்பின்' கீழ் காணப்படும். உறுதிப்படுத்தப்படாத வணிக உறுதிக் கடிதங் களின்கீழ் அனுப்பப்படும் பண விடைகளுக்குக் கருத்து அறிவிக்கும் பாங்கும் பணத்தைக் கொடுக்கலாம். ஆனால் கப்பலில் சரக்கு ஏற்றப்பட்ட பிறகு அளிக்கப்படும் பண விடைகளுக்குரிய பணத்தைக் கொடுக்க வேண்டும் என்ற பொறுப்பை ஏற்றுக் கொள்வதில்லை. அனுப்பப்படும் கருத்தறிவிப்பிலேயே இது உறுதிப்படுத்தப்படாத வணிக உறுதிக் கடிதம் என்று குறிப்பிடப் படுகிறது.

ஏற்றுமதியாளருக்கு உறுதிப்படுத்தப்பட்ட வணிக உறுதிக் கடிதம் தகுந்த பாதுகாப்பளிக்கிறது. வணிக உறுதிக் கடிதத்தை அவர் வேண்டுவது ஏனெனில் இறக்குமதியாளரிடமிருந்து எவ்வித நாணய இடர்ப்பாடுகளையும் விரும்பாமல் பணம் பெறுவதற்குப் பாங்கு உறுதிப்பாட்டின் பாதுகாப்பை நாடுகிறார். ஆனால் இங்குக் கடிதம் விடுக்கும் பாங்கின் நாணய இடர்ப்பாட்டையும் கருத்தில் கொள்ள வேண்டும். இறக்குமதியாளர் நாட்டிலுள்ள பணபலம் மிக்க பெயர் பெற்ற பாங்குகளால் விடுக்கப்படும் வணிக உறுதிக் கடிதங்களுக்கு மேலும் உத்தரவாதம் தேவையில்லை. வணிக உறுதிக் கடிதம் விடுக்கும் அயல் நாட்டுப் பாங்குபற்றி ஏற்றுமதி யாளர் சரியாக அறியாமல், எவ்வித நாணய இடர்ப்பாட்டையும் விரும்பாமல் இருந்தால் அவருக்குத் தெரிந்த பாங்கு ஒன்றின் உத்தரவாதத்தை வணிக உறுதிக் கடிதத்துடன் இணைக்கப்பட வேண்டுமென்று வற்புறுத்துவார். பொருளாதாரம், அரசியல் காரணங்களால் நாட்டில் உறுதியான நிலைமை இல்லாவிடில் கடிதம் வழங்கும் பாங்கு ஏற்றுமதியாளருக்குத் தகுந்த பாதுகாப்பு அளிக்க முடியாது. இக் காரணத்தினால் ஏற்றுமதியாளர் தம் நாட்டிலுள்ள ஒரு பாங்கால் அக் கடிதம் உத்தரவாதம் அளிக்கப் படவேண்டும் என்று விரும்பலாம்.

மேலும் உறுதிப்படுத்தப்படா வணிக உறுதிக் கடிதங்களின் மூலம் விடுக்கப்பட்ட பண விடைகளுக்குரிய பணத்தைக் கொடுத்த பாங்கு, கடிதம் கொடுத்த பாங்கு இப் பணத்தை நிராகரித்தால், அப் பணத்தை ஏற்றுமதியாளரிடமிருந்தே திரும்பப் பெறவேண்டி இருக்கும். இந்த இடர்ப்பாட்டை உறுதிப்படுத்தப்பட்ட வணிக உறுதிக் கடிதம் தவிர்க்கிறது. ஆகவே ஏற்றுமதியாளருக்கு மிகவும் பயன் உடையது. பண விடைகள் வணிக உறுதிக் கடிதத்தில் கண்டுள்ளவாறு எழுதப்பட்டிருக்கும்வரையில்

பணத்தைப்பற்றி ஏற்றுமதியாளர் எவ்விதக் கவலையும் அடைய வேண்டியதில்லை. கடிதம் விடுத்த பாங்கு பணம் கொடுக்காவிடில் ஏற்றுமதியாளர் பணத்தைத் திரும்பக் கொடுக்க வேண்டியதில்லை. ஆனால் உத்தரவாதமளித்த பாங்கு கடிதம் விடுத்த பாங்கிடம் இருந்து பணத்தைப் பெறுவதுதான் கடினமானது.

பின்னழிப்புச் செய்ய முடியா உறுதிப்படுத்தப்பட்ட வணிக உறுதிக் கடிதம் ஏற்றுமதியாளருக்கு விற்பனையாளர் அங்காடியில் தகுந்த, சிறந்த பாதுகாப்பானது என்று கருதப்பட்டாலும் போட்டி நிலைமைகளில் இது முடியாது. வணிக உறுதிக் கடிதத்தின் உண்மை நிலைமை ஏற்றுமதியாளர் இறக்குமதியாளர்களுக் கிடையே உள்ள ஒப்பந்தத்தைப் பொறுத்து வாங்குவோர் அங்காடியில் இறக்குமதியாளர் வணிக உறுதிக் கடிதம் உறுதிப் படுத்தப்படுவதற்கு உரிய செலவுகளை ஏற்க விரும்பமாட்டார். ஆரம்பத்தில் உறுதிப்படுத்தப்படாத கடிதம் விடுவிக்கப்பட்டு அதனை உறுதிப்படுத்தப்பட்ட வணிக உறுதிக் கடிதமாக மாற்றும்படி ஏற்றுமதியாளர் வேண்டினால் அதற்காகும் செலவுகளை ஏற்றுமதியாளரே ஏற்பார். அனைத்திலும் இது பொருந்த வேண்டுமென்பதில்லை. உலக நன்மதிப்பைப் பெற்ற பாங்குகளுக்கு இவ்வுறுதிப்பாடு தேவையில்லை. பாதுகாப்பு முக்கியமானதுதான். ஆனால் எல்லாவற்றிலும் இது செயல்பட வேண்டுமென்பதில்லை.

## பின்னழிக்கக்கூடிய / பின்னழிக்கமுடியா வாணிக உறுதிக் கடிதம் (Revocable and Irrevocable Letter of Credit)

பின்னழிக்கக்கூடிய வணிக உறுதிக் கடிதம் எந்த நேரத்திலும் அழிக்கப்படலாம் அல்லது மாற்றப்படலாம். கருத்தறிவிப்புக் கடிதத்தில் கீழ்க்கண்ட உறுப்பு அடங்கியிருக்கும். 'இக் கடிதத்தை உறுதிப்படுத்தவோ, அதன் பேரில் ஏற்படும் ஏற்பு அல்லது செலுத்துவதற்கு உத்தரவாதமளிக்கவோ எங்களுடைய முதல்வர் களிடமிருந்து அதிகாரம் பெறவில்லை. ஆகவே முன்னறிவிப்பின்றி இக் கடிதம் எந்த நேரத்திலும் நீக்கப்படலாம். மேற்கண்ட குறிப் புகள் தங்கள் பார்வைக்காக'—பின்னழிக்கக்கூடிய வணிக உறுதிக் கடிதம் உறுதிப்படுத்தப்படாததாகும். ஏற்றுமதியாளர் தன்னு டைய உண்டியல்கள் செலாவணியாவதற்குப் பாங்குகளுக்குச் சென்றலையாமல் ஒரே பாங்கிடம் தொடர்பு வைத்துக்கொண்டு நன்மையடையலாம் என்பதற்கே இக் கடிதம் ஏற்றுமதியாளருக்கு விடுக்கப்படுகிறது. இதன்மூலம் அனுப்பப்படும் உண்டியல்கள்

வணிக நிலையங்களால் வசூலிக்கப்படும் கழிவுக் கட்டணத்திற்குக் குறைவான வீதத்திற்கே தள்ளுபடி செய்யப்படுகின்றன. வணிக உறுதிக் கடிதம் தள்ளுபடி செய்யப்பட்டது என்ற முன் அறிவிப்பு செலாவணிப் பாங்கிடமிருந்து பெறுவதற்கு முன் கடிதம் விடுத்த பாங்கு அதன்மேல் எழுதப்பட்ட எந்த உண்டியலுக்கும் நன்மதிப் பளிக்கும் என்று சில சந்தர்ப்பங்களில் அக் கடிதத்தில் எழுதப் பட்டிருக்கும். கடிதம் பின்னழிக்கக்கூடியதாக இருந்தாலும் நலம் பெறுவோனுக்கு ஓரளவு பாதுகாப்பு அளிக்கிறது. கப்பலில் சரக்கேற்றப்பட்ட பிறகும் உண்டியல் செலாவணிக்கு அளிக்கப் படும்போதுதான் கடிதம் தள்ளுபடி செய்யப்படும்.

பின்னழிக்கக்கூடிய கடிதம் நலம் பெறுவோனுக்கு நேராக அனுப்பப்படமாட்டாது. அவன் நாட்டுப் பாங்குமூலமாகத்தான் அனுப்பப்படுகிறது. ஆகவே கடிதத்தில் செய்யப்படும் மாற்றம் அல்லது கடிதம் தள்ளுபடி செய்யப்படுதல், கருத்துத் தெரிவிக்கும் பாங்கு அதன் முன்னறிவிப்பைப் பெற்ற பிறகேதான் செல்லு படியாகும். நலம் பெறுவோனுக்கு எவ்வித முன்னறிவிப்பும் இன்றிக் கடிதம் மாற்றப்படுதல் அல்லது தள்ளுபடி செய்யக் கூடியதாக இருந்தாலும் அவ்வாறு முன்னறிவிப்புப் பெறுவதற்கு முன் கடிதத்தின்பேரில் கொடுத்த பணத்தைக் கடிதம் விடுத்த பாங்கிடமிருந்து திரும்பப் பெறலாம். ஆகவே பணமளிக்கும் பாங்கின் நிலைமை இங்குத் தெளிவாக இருக்கின்றது.

பின்னழிக்க முடியா (irrevocable letter of credit) வணிக உறுதிக் கடிதம், அதனை விடுத்த பாங்கு, அதில் கண்ட நிபந்தனை குட்பட்டு அதன்மேல் எழுதப்படும் எந்த உண்டியலையும் ஏற்றுப் பணமளிக்கும் என்று முழுமையான உறுதிப்பாட்டைக் கொண் டிருக்கும். நலம் பெறுவோன் அல்லது அதில் சம்பந்தப்பட்டவர் இசைவின்றிக் கடிதத்தைப் பின்னழிக்கவோ, மாற்றவோ முடியாது. கடிதத்தின் அனைத்து நிபந்தனைகளும் பொருந்தி யிருந்தால் அதனை விடுத்த பாங்கு அதன்மேல் விடுக்கப்படும் பண விடைகளுக்கு நன்மதிப்பளிக்க வேண்டும். பணம் செலுத்து வதற்கு இக் கடிதம் விடுக்கப்பட்ட பாங்கின் நிபந்தனையற்ற உறுதிப்பாட்டைக் கொண்டதாகும்.

பின்னழிக்க முடியா வணிக உறுதிக் கடிதம் உறுதிப்படுத்தப் பட்ட கடிதமாகவே இருக்கும். இறக்குமதியாளர், கடிதம் விடுத்த பாங்கு, கடிதத்தை உறுதிப்படுத்திய பாங்குகளின் நிலைமையைக் கருதாமல், பண விடைகள், கடிதத்தின் நிபந்தனை களுக்குட்பட்டு இருந்தால் அப் பண விடைகள் அளிக்கப்பட்ட

வுடனே பணம் கொடுக்கப்படும் என்ற தன் நிகரில்லா உறுதி மொழியைப் பின்னழிக்க முடியா உறுதிப்படுத்தப்பட்ட கடிதங்கள் கொண்டிருக்கும். கடிதம் விடுக்கும் பாங்கு, நலம் பெறு வோனுக்கு இடையேயும் அல்லது செலாவணிப் பாங்கு, நலம் பெறுவோனுக்கு இடையேயும் கடிதம் பின்னழிக்க முடியாது.

உறுதிப்படுத்தப்பட்ட பின்னழிக்க முடியா வணிக உறுதிக் கடிதம் ஏற்றுமதியாளருக்கும் மற்ற வகையைவிட மிகுந்த பாதுகாப்பளிக்கிறது. இக் கடிதத்தின்மூலம் ஏற்றுமதியாளர் கடிதத்தில் கண்டுள்ள நிபந்தனைக்குட்பட்டு விடுக்கப்பட்ட அனைத்துப் பண விடைகளையும் கடிதம் விடுக்கும் பாங்கு நன்மதிப் பளிக்கும் என்ற நிலையான உறுதிப்பாட்டைப் பெறுகிறார். அதனை உறுதிப்படுத்தும் பாங்கும் அதற்குச் சமமான பொறுப்பினை ஏற்கிறது. ஆகவே இக் கடிதத்தைப் பெற்றவுடன் ஏற்றுமதி யாளர் தன்னுடைய ஏற்றுமதிச் சரக்குத் தயாரிப்புத் தொழிலிலும் அல்லது சரக்கு வாங்குவதில் முழு மூச்சுடனும் ஈடுபடலாம். உறுதிக் கடிதத்தின்கீழ் எழுதப்பட்ட உண்டியல்கள் எளிதில் செலாவணி செய்யப்படும். கழிவு செய்யும் பொருட்டு எந்தப் பாங்கிடம் அளித்தாலும் குறைவான வீதத்திலேயே கழிவு செய்யப்படும்.

கடிதத்தை விடுக்கும் அயல் நாட்டுப் பாங்கின் பதிலாளியாகிய தன்னாட்டுப் பாங்கு ஒன்றிடம் ஏற்றுமதியாளர் உண்டியல்களை ஒப்படைப்பார். சில சந்தர்ப்பங்களில் கடிதம் விடுக்கும் பாங்கு நேராக நலம் பெறுவோனிடம் கடிதத்தை அனுப்பும்போது அந் நலம் பெறுவோன் தன் நாட்டிலுள்ள ஏதாவது ஒரு பாங்கிடம் உண்டியல்களைச் சேர்ப்பிக்கலாம். இச் செலாவணிப் பாங்கு, தான் செலாவணி செய்ததைக் கடிதத்தின்மேல் பதிவு செய்து கடிதம் விடுத்த பாங்கிடமிருந்து பணத்தைத் திரும்பப்பெற உரிமை பெறுகிறது.

வணிக ஒப்பந்தம் பின்னழிக்கக் கூடியதாக இருந்தால்தான் பின்னழிக்கக் கூடிய கடிதம் பின்னழிக்கப்படலாம். அதிலடங்கிய நபர்களின் இசைவின் பேரிலும் கடிதங்கள் பின்னழிக்கப்படலாம். பின்னழிக்கக்கூடிய கடிதத்தின் பேரில் எழுதப்படும் உண்டியல் களில்கூட கடிதம் விடுக்கும் பாங்கின் நிபந்தனைகளுக்குட்பட்டுச் செலாவணிப் பாங்கு அனைத்து விதத்திலும் செயல்படாவிடில் கடிதம் பின்னழிக்கக் கூடிய சந்தர்ப்பம் உருவாகிறது. இவ் விடர்ப்பாடு இருப்பதால் செலாவணிப் பாங்கு மிகவும் எச்சரிக் கையுடன் செயல்பட வேண்டும்.

நாணயம் (credit) நம்பிக்கையை உணர்த்தும். ஆனல் முன்னறிவிப்பு இன்றி பின்னழிக்கக்கூடிய வணிக உறுதிக் கடிதத்தில் நலம் பெறுவோனுல் எந்த நம்பிக்கையும் வைக்க முடியாது. சரக்கினைக் கப்பலில் ஏற்றித் தேவையான பத்திரங்களைச் சேகரித்த பிறகு உண்டியல் பாங்கிடம் சேர்ப்பித்தவுடன் வாணிக உறுதிக் கடிதம் பின்னழிக்கப்பட்டது என்று பாங்கு தெரிவிப்பதற்கும் சந்தர்ப்பம் இருக்கிறது. உண்டியல்கள், செலாவணிக்காகச் சேர்ப்பிக்கப்பட்ட பாங்குக் கடிதம் செயல் முறையில் இருக்கிறது என்றும், பின்னழிக்கப்படவில்லை என்றும் உறுதிப்படுத்தவேண்டும். ஆகவே ஏற்றுமதியாளர் தன்னுடைய உண்டியல்கள் செலாவணியாவதற்கு மிகுந்த இன்னலை உணர்கிருர். இவ்விதமான உறுதிக் கடிதங்கள் பாதுகாப்பானவை அன்று.

இத் தீமைகள் இருந்த போதிலும் பின்னழிக்கக் கூடிய வணிக உறுதிக் கடிதங்கள் செயல்முறையில் உள்ளன. பின்னழிக்க முடியாத கடிதங்களுக்கிருப்பதைவிட பின்னழிக்கக்கூடிய கடிதங்களுக்குக் கட்டணங்கள் குறைவாக இருப்பதே இதற்குக் காரணமாகும். ஒருவரைப்பற்றி மற்ருெருவர் முழு நம்பிக்கை உடைய இரண்டு வணிகர்கள் பின்னழிக்க முடியாக் கடிதங்களின் உயர்ந்த கட்டணத்தைத் தவிர்ப்பதற்காகவும் அதே நேரத்தில் உண்டியல் செலாவணிக்குப் பாங்குகளின் உதவிகளைப் பெறுவதற்கும் பின்னழிக்கக்கூடிய கடிதத்தை விரும்புவர். தனிப்பட்ட வணிகனின்மீது எழுதப்படும் உண்டியல்களைவிட பாங்குமூலம் பின்னழிக்கக்கூடிய கடிதத்தின் பேரில் அனுப்பப்படும் உண்டியல்கள் தகுந்த கட்டணங்களுடன் செலாவணி செய்யப்படுகின்றன. பலவீனமான வாடிக்கையாளருக்கு, பின்னழிக்கக்கூடிய கடிதத்தை அனுப்பவே பாங்கு விரும்பும். ஏனென்ருல் தவிர்க்க முடியாத சந்தர்ப்பங்களில் பாங்கு தனது பொறுப்பில் இருந்து தப்பித்துக் கொள்ளலாம்.

## உண்டியல் மாற்று வாணிக உறுதிக்கடிதம் அல்லது கொள்முதல் செய்வதற்கு அதிகாரம் பெறுதல் (Negotiation Letter of Credit or Authority to Purchase)

உண்டியல் மாற்று வணிக உறுதிக் கடிதங்களில் பாங்கின் மீதுதான் உண்டியல்கள் எழுதப்படவேண்டும். பாங்கினுல் விடுக்கப்படும் அனைத்துக் கடிதங்களும் இந்த வகையைச் சார்ந்தவை அன்று. சில சந்தர்ப்பங்களில் இறக்குமதியாளர், நேராகத் தன் பெயருக்கே, ஏற்றுமதியாளர் உண்டியல் எழுத

வேண்டும் என்று விரும்பும்போது 'ஆவண மாற்றுக் கடிதத்தை விடுக்குமாறு' தனது பாங்கை வேண்டுவார். இவ்விதக் கடிதங்களில் இறக்குமதியாளர் பாங்கு, தனது தொடர்பு அல்லது அயல் நாட்டிலிருக்கும் வேறு ஒரு பாங்கை ஒரு குறிப்பிட்ட நபர் அல்லது ஏற்றுமதியாளர் அல்லது வாடிக்கையாளர் ஒரு குறிப்பிட்ட தொகைக்குக் குறிப்பிட்ட நிபந்தனைகளின்பேரில் எழுதப்பட்ட உண்டியல்களை மாற்றுமாறு வேண்டிக் கொள்ளும். இக் கடிதத்தில் உண்டியல்களை மாற்றுவதற்கோ, வாங்குவதற்கோ அதிகாரம் பெற்று இருப்பதால் இது 'கொள்முதல் செய்வதற்கு அதிகாரம்' அல்லது 'மாற்றுவதற்கு அதிகாரம் பெற்றது' என்று கூறப்படும்.

உண்டியல்கள் இறக்குமதியாளர் பெயரிலேயே எழுதப்படுவதால் உண்டியல்களை நன்மதிப்பு செய்யவேண்டும் என்ற பொறுப்புக் கடிதம் பாங்குக்கு இல்லை. உண்டியல் விடுக்கப்பட்ட வாடிக்கையாளரின் நிதி நிலைமைப்பற்றிய கடித விடுப்புப் பாங்கின் குறிப்புத் தன்னிடம் இருப்பதால் உண்டியல் மாற்றுப் பாங்கு அதற்குரிய பணத்தைக் கொடுக்கலாம். உண்டியல் மாற்றுவதற்குரிய வேண்டுகோள் ஓர் ஆணை அல்லாததால் உண்டியல் மாற்றுப் பாங்கு துணைப் பிணையம் கேட்கலாம் அல்லது கடித விடுப்புப் பாங்கிடமிருந்து மேலும் கட்டளைகள் பெற விரும்பலாம். அல்லது தன்னுடைய பொறுப்பைத் தள்ளுபடிசெய்து அறிவிப்பதற்கு முன் மாற்றப்பட்ட உண்டியல்களைக் கடித விடுப்புப் பாங்கு நன்மதிப்பு செய்ய ஏற்றுக் கொள்ளாவிடில் உண்டியல்கள் முழுவதையும் மாற்றுவதற்கு உண்டியல்கள் மாற்றுப் பாங்கு மறுக்கலாம். ஆகவே உண்டியல் மாற்றுக் கடிதம், உறுதிப்படுத்தப்பட்ட கடிதம் அல்லது பின்னழிக்கக்கூடிய கடிதம் போன்றதாகும். ஆனால் இக் கடிதம், கடிதம் விடுக்கும் பாங்கின் பெயருக்கு எழுதப்படாமல் நேராக இறக்குமதியாளர் பெயருக்கே எழுதப்படுகிறது.

இது பாங்குக் கடன் அல்லாததால் இதன் பெயரில் எழுதப்படும் உண்டியல்கள் பாங்குக் கடன்களைப் போல் சிறந்த வீதத்தில் மாற்றப்படமாட்டா. உண்டியல் மாற்றுப் பாங்கு உண்டியல் எழுதுவோன் பெயரில் 'பரிகார உரிமை' (right of recourse) பெற விரும்புவதால், உண்டியலின் மேல் 'பரிகாரம் இல்லை' (without recourse) என்று எழுத அனுமதிக்காது. உண்டியல் மாற்றலில் இவ்வித உண்டியல்கள் சிறந்த வீதத்தைக் கொள்ளும்.

## நிலையான (Fixed), சுற்றுமுறை (Revolving) வாணிக உறுதிக் கடிதம்

ஒரு குறிப்பிட்ட மொத்தத் தொகைக்கு மட்டும் கடிதம் விடுக்கப்படும்போது, கடிதத்தில் குறிப்பிட்ட காலத்திற்குள் ஒன்று அல்லது அதற்கு மேற்பட்ட உண்டியல்கள் விடுக்கப் பட்டால் அத் தொகை தீர்ந்துவிடும். இக் காலமும், தொகையும் ஒரு குறிப்பிட்ட அளவிலேயே உள்ளதால் கடிதத்தில் குறிப்பிட்ட தொகை அல்லது காலம் தீர்ந்து விட்டால் இச் சலுகை ஏற்கப் பெறுகிறது. இவ்விதக் கடிதத்திற்கு 'நிலையான வணிக உறுதிக் கடிதம்' என்று பொருள்.

கடிதத்தில் கண்டுள்ள காலத்திற்குள் அதிலுள்ள தொகைக்குச் சரக்கு அனுப்பப்பட்டவுடன் அதே தொகைக்குக் கடிதம் தாகுகவே புதுப்பிக்கப்பட்டு விடுவதற்குச் 'சுற்றுமுறை வணிக உறுதிக் கடிதம்' என்று பொருள். கடிதத்தில் கண்டுள்ள அளவுத் தொகைக்கு உண்டியல் எழுதப்பட்டப் பிறகும் கடிதம் புதுப்பிக்கப்படுவதால் அதில் கண்டுள்ளவாறு மேலும் உண்டியல் பிறப்பிக்கப்படலாம்.

சுற்றுமுறை வணிகக் கடிதங்கள் பலவாருக இருக்கலாம்:
1. செலுத்தப்பட வேண்டிய உண்டியல்களின் தொகைக்கு உட்பட்டுக் கடிதம் தள்ளுபடி செய்யப்படும் வகையில் எத் தொகைக்கும் உண்டியல் எழுதப்படும் சலுகை உண்டு. கடிதத்தில் கண்டுள்ள தொகையின் அளவுக்கு உண்டியல்கள் எழுதப்பட்டு முதிர்வடையாமலும், செலுத்தப்படாமலும் இருந்தால் மேலும் உண்டியல்கள் எழுத அனுமதிக்கப்பட மாட்டா. இவ்வுண்டியல்கள் செலுத்தப்பட்டன என்ற குறிப்பு வந்தபிறகே மேலும் கடிதத்தில் கண்டுள்ள மொத்தத் தொகைக்கு உண்டியல்கள் எழுதப்படலாம்.

2. ஒரே நேரத்தில் ஒரு குறிப்பிட்ட தொகைக்கு ஒரே உண்டியல்தான் எழுதப்படலாம். இவ்வுண்டியல் செலுத்தப்பட்ட வுடன் அதே தொகைக்கோ, அதற்குட்பட்டோ மற்றெரு உண்டியல் எழுதப்படலாம்.

3. ஒரு குறிப்பிட்ட காலத்திற்கு ஒரு குறிப்பிட்ட தொகைக்குத்தான் கடிதம் கொடுக்கப்படுகிறது. அக் காலம் முடிவுற்றவுடன் அதே அளவு காலத்திற்கு அதே தொகைக்குக் கடிதம் தானே புதுப்பிக்கப்படுகிறது. கடிதத்தில் கண்டுள்ள

அளவிற்கு பயன்படுத்தப்படாத தொகை அடுத்த காலத்திற்கு மாற்றப்படமாட்டாது. (எ. கா): ரூ. 1,00,000-க்கு ஒவ்வொரு மாதத்திற்கும் உண்டியல்கள் எழுதப்படலாம். இச் சலுகை உள்ள வரையில் ஒவ்வொரு மாதத்திற்கும் இது நிகழலாம்.

இச் சுற்று முறை வணிக உறுதிக் கடிதம், இறக்குமதியாளர் அயல் நாட்டு ஏற்றுமதியாளரிடமிருந்து தொடர்ச்சியாக வாங்குவ வதற்கு வகைசெய்யும்பொருட்டு விடுக்கப்படுகிறது. கப்பலில் சரக்கேற்றப்பட்டவுடன் கடிதத்தில் கண்டுள்ள நிபந்தனைகளுக் குட்பட்டு அதற்குரிய உண்டியல்கள் செலுத்தப்பட்டவுடன் இறுதிக் கடிதம் தானுகவே புதுப்பிக்கப்பட்டு ஏற்றுமதியாளர் மேலும் தொடர்ந்து குறிப்பிட்ட அளவிற்குச் சரக்குகளைக் கப்பலில் ஏற்றி உண்டியல்கள் எழுதலாம்.

## ஏற்றுமதியாளர் கணக்கின்பேரில் உண்டியல் ஏற்பு
## (Acceptance on Exporter's Credit)

சில நாடுகளில் ஏற்றுமதியாளர் நாணயத்தின்பேரில் உண்டியல்கள் ஏற்றுக்கொள்ளப்படுகின்றன. சில சமயங்களில் எவ்விதக் கடிதமும் விடுக்க முடியாமலோ, விடுக்க விருப்பப் படாமலோ இறக்குமதியாளர் இருக்கும்போது ஏற்றுமதி யாளர் தனது பாங்கில் கடன் ஏற்படுத்தி ஏற்றுக்கொண்ட அளவிற்கு அதன்மேல் எழுதப்படும் உண்டியல்களைப் பாங்கு ஏற்கும். அவ்வாறு ஏற்றுக்கொள்ளப்பட்ட உண்டியல்கள் எந்தப் பாங்கிலும் குறைந்த அங்காடி வீதத்தில் கழிவு செய்யப்படும். ஏற்றுமதியாளரிடம் உள்ள சொந்த அனுபவத்தின்பேரிலும், ஏற்றுமதி செய்யப்பட்ட சரக்கீட்டின்பேரிலும் பாங்கு இவ்விதக் கடனை வழங்குகிறது. இச் சலுகைக்குப் பாங்கு தகுந்த கழிவைப் பெறுகிறது.

உண்டியல்கள் இக் கடன் வழங்கிய பாங்கின்மீதோ, இறக்குமதியாளர்மீதோ எழுதப்படுகின்றன. அதனல் இவை கடன் வழங்கிய பாங்காலே ஏற்றுக்கொள்ளப்படுகின்றன. இந்த நடவடிக்கை தொடர்புடைய பத்திரங்களைப் பாங்கு தனது கட்டுப்பாட்டின்கீழ் வைத்திருக்கும். இப் பத்திரங்கள் சேர்ந்த உண்டியல்கள் இப் பாங்கால் அயல் நாட்டிலிருக்கும் தம்முடைய கிளை அல்லது தொடர்புப் பாங்கிற்கு, சரக்குக்கு உரிய முழுத் தொகை செலுத்தப்பட்டவுடன் இறக்குமதியாளரிடம்செலுத்தப் படவேண்டும் என்ற ஆணையுடன் அனுப்பப்படுகின்றன. உண்டியல்கள் முதிர்ச்சியானவுடன் அவை சேர்க்கப்பட்டபோது

உண்டியல்கள் ஏற்ற பாங்கு பணமளிக்கும்பொருட்டு இச் செல்லுகள் ஏற்றுமதியாளர் நாட்டிற்கு அனுப்பப்படுகின்றன. குறிப்பிட்ட காலத்திற்குள் பணம் வந்து சேரவில்லை என்ருல் ஏற்றுமதியாளர் தகுந்த பணவசதி செய்யவேண்டும். குறிப்பிட்ட காலத்திற்குள் செல்லுகள் வந்து சேர்வதற்கு உறுதி செய்யும் பொருட்டு இக் கடன் காலம் சாதாரண வழக்கத்திலிருக்கும் உண்டியல்களுக்கு அனுமதிக்கப்படும் காலத்தைவிடச் சற்றுக் கூடுதலாகவே இருக்கும். மற்றவகைச் செல்லுகளை ஒப்பு நோக்கி பாங்குக் கழிவு, அன்ருட அங்காடி, தள்ளுபடி வீதம் ஆகிய செலவுகளைப் பொறுத்து இவ்வகை நடைமுறையில் இருக்கும்.

பெரும்பாலான நாடுகளில் இவ்வகைக் கடிதங்கள் ஏற்றுமதி யாளரால் அனுப்பப்படும் கடிதங்களைவிட மிகக் குறைவாகவே புழக்கத்திலுள்ளன. பாங்கு நிதி வணிகத்தில் ஏற்றுமதியாளர் நிதி நிலைமையைவிட இறக்குமதியாளர் நிதி நிலைமையே மிகவும் முக்கியமானதாகும். சிறப்பு வாய்ந்த நிதியானது, இறக்குமதி யாளர் தன்னுடைய கடன் வசதியைத் தானே செய்துகொள்ளக் கூடியவராகவும், நம்பிக்கையுள்ளவராகவும் இருக்கவேண்டும் என்று விரும்புகிறது.

## பரிகாரம் உடைய பரிகாரம் அற்ற வணிக உறுதிக் கடிதம் (With or Without Recourse Credit)

வணிக உறுதிக் கடிதங்களின்பேரில் விடுக்கப்படும் உண்டியல்கள் பரிகாரம் உடையனவா அல்லது பரிகாரம் அற்றனவா என்று குறிப்பிடப்பட்டிருக்கும். பரிகாரம் உடைய உண்டியல்கள் எழுதப் பெறுவோனுல் மறுக்கப்பட்டால் உண்டியல் மாற்றுப் பாங்கு உண்டியல் எழுதியவரிடம் பணத்தைத் திரும்பக் கேட்கும். ஆகவே பரிகாரம் உடைய வணிக உறுதிக் கடிதத்தில் விடுக்கப்பட்ட உண்டியல், கடிதம் விடுத்த பாங்காலும், இறக்குமதியாளராலும் மறுக்கப்பட்டால் நலம் பெறுவோன் உண்டியல் மாற்றுப் பாங்கிடம் அதற்குரிய பணத்தைத் திரும்பக் கொடுக்கவேண்டிய நிலைமை ஏற்படும். இவ்விடர்ப்பாட்டைத் தவிர்ப்பதற்கு ஏற்றுமதியாளர்கள் பரிகாரமற்ற வணிக உறுதிக் கடிதத்தை விரும்புவர். இப் பரிகாரமற்ற வணிக உறுதிக் கடிதத்தினுல் உண்டியல் மாற்றப்பட்டபிறகு நலம் பெறு வோனுக்கு (ஏற்றுமதியாளனுக்கு), எவ்விதப் பொறுப்பும் இல்லை. பிறகு உண்டியல் மாற்றுப் பாங்கு சரக்கினைத்தான் ஈடாகக்

கொண்டுள்ளது. இறக்குமதியாளர் பணம் செலுத்தத் தவறினுல் உண்டியல் மாற்றுப் பாங்கு சரக்கினை விற்றுத்தான் பணத்தினைத் திரும்பப் பெறவேண்டியிருக்கும். பரிகாரமற்ற வணிக உறுதிக் கடிதம் ஏற்றுமதியாளருக்குச் சிறந்த நன்மை விளைவித்தபோதிலும் அதன் அடிப்படையில் எழுதப்பட்ட உண்டியல்களை மாற்று வதற்குக் கடினமாக இருக்கும். பரிகாரமுடைய வணிக உறுதிக் கடிதம் உண்டியல் மாற்றுப் பாங்கிற்குத் தகுந்த பிணையமாக இருக்கிறது.

## வணிக உறுதிக் கடிதம்—உரிமை மாற்றம் (Transfer of Credit)

மூல நலம் பெறுவோன் வணிக உறுதிக் கடிதத்தை மூன்று மவனுக்கு மாற்றிக் கொடுக்கலாம் என்று அக் கடிதத்தில் கண்டிருக்கும். நலம் பெறுவோன் உண்மையாகச் சரக்களிப் பவனுக இல்லாமல் ஏற்றுமதிக்காகத் தயாரிப்பாளர்களிடமிருந்து வாங்குபவனுக இருப்பின் வணிக உறுதிக் கடிதத்தில் உரிமை மாற்றிக்கொடுக்கும் நிபந்தனையையும் சேர்க்கும்படி வேண்டுவான். நலம் பெறுவோன் இக் கடிதத்தைச் சரக்குத் தயாரிப்பாளருக்கு மாற்றம் செய்து அவ்வுண்மையைக் கடிதம் விடுத்த பாங்குக்கு அறிவிப்பார். கடிதம் மாற்றப்படலாம் என்று கடிதம் விடுத்த பாங்கால் அக் கடிதத்தில் குறிப்பிடப்பட்டிருந்தால்தான் கடிதம் மாற்றப்பட முடியும்.

மாற்று உரிமை உடைய வணிக உறுதிக் கடிதங்கள் மூன்றுமவருக்கு முழுமையாக மாற்றப்படலாம். ஆனுல் மூல நலம் பெறுவோன் இக் கடிதத்தைப் பகுதி பகுதியாகப் பிரித்துப் பல்வேறு நபர்கள் அல்லது நிறுவனங்களுக்கு மாற்றிக் கொடுக்கலாம் என்று இக் கடிதத்தில் கண்டிருந்தால் இக் கடிதம் மாற்று உரிமை உடையதும் பகிர்ந்து அளிக்கக் கூடியதாகவும் இருக்கும். மாற்று உரிமை உடைய கடிதங்களை நிலை நாட்டுபவர்கள் மிகவும் எச்சரிக்கையாக இருத்தல்வேண்டும். அவர்கள் மூல நலம் பெறுவோரின் நேர்மை, நிதி நிலைமை, பொறுப்புக்களை மதிக்கும் திறன் முதலானவற்றை அறிந்திருந்த போதிலும் கடிதம் மாற்றப் பெறுவோரைப்பற்றி ஏதும் அறிந்திருக்க மாட்டார்கள். பகிர்ந்தளிக்கக்கூடிய வணிக உறுதிக் கடிதம் பல நிறுவனங்களுக்குப் பிரித்து மாற்றப்படுகிறது. ஆகவே சரக்கு வாங்குபவரும், கடிதம் விடுக்கும் பாங்கும் இந்த ஏற்பாட்டிற்கு இணங்கும்போது மிகவும் எச்சரிக்கையுடன் இருத்தல் வேண்டும்.

குறிப்பிட்ட நலம் பெறுவோனுக்குச் சாதகமாக விடுக்கப் படும் வணிக உறுதிக் கடிதம், சரக்கு வாங்குபவனின் அதிகாரம், இசைவின்றி மற்றொருவனுக்கு மாற்றிக் கொடுக்கமுடியாது. ஏனென்றால் அவனுடைய தூண்டுதலின்பேரில்தான் பாங்கால் கடிதம் விடுக்கப்படுகிறது. மேலும் ஒரு பாங்கால் இக் கடிதம் உறுதிப்படுத்தப்படுகிறது. சரக்கு வாங்குபவர் சரக்கு ஏற்றுமதி செய்பவரிடம் முழுத் தொடர்பு வைத்துக்கொள்ள விரும்புவதால் வணிக உறுதிக் கடிதம் அந் நலம் பெறுவோனைத் தெளிவாகக் குறிப்பிடுகிறது. சரக்கு வாங்குபவர் நலம் பெறுவோனின் நேர்மையிலும் வணிக நிலைமையிலும் முழு நம்பிக்கை வைத்திருக்கிறார். இவ்விருவருக்கும் உள்ள வணிக ஒப்பந்தத்தில் குறிப்பிட்ட நிபந்தனைகளுக்குட்பட்டு அந்த நலம் பெறுவோர் தன்னுடைய பொறுப்புக்களை நிறைவேற்றுவார் என்றும் நம்புகிறார். பிறர்மேல் இக் கடிதம் மாற்றப்படலாம் என்று சரக்கு வாங்குபவர் வேண்டப்படும்போது, அவ்வாறு வேண்டும் சரக்கு விற்பவர், கடித மாற்று உரிமை தந்தால் கப்பலில் சரக்கேற்றும் காலம், சரக்கின் அளவு, தன்மை முதலியவற்றை ஒப்பந்தத்திற்கு உகந்தவாறு நிறைவேற்றுவார் என்ற நம்பிக்கையில் சரக்கு வாங்குபவர் அவ்வாறு மாற்றுவதற்கு இசைகிறார். வணிக உறுதிக் கடிதம் கீழ்க்கண்டவாறு மாற்றப் படுகிறது. இறக்குமதியாளர், ஏற்றுமதியாளர்க்கிடையே உள்ள வணிக ஒப்பந்தப்படி ஏற்றுமதியாளருக்குச் சாதகமாக விடுக்கப் படும் வணிக உறுதிக் கடிதம் பொதுவாகப் பின்னழிக்கக்கூடிய தாக இருப்பதால் அக் கடிதம் மூன்றும் நபருக்கு மாற்றப்படக் கூடியது என்று அதில் தெளிவாகக் குறிப்பிட்டிருக்கவேண்டும். வணிக உறுதிக் கடிதம் நலம் பெறுவோனுக்குத் தெரிவிக்கப்பட்ட உடனே அவர் ஆரம்பக் கடிதத்தின் தொகை, காலத்திற்குச் சற்றுக் குறைவாகவே இரண்டாம் நலம் பெறுவோனும் கடிதத்தை விடுக்குமாறு பாங்கிடம் வேண்டுவார். முதல் கடிதத்தில் அவ்வித மாற்றுக்காக அவர் கையொப்பம் இடுவார். முதல் நலம் பெறுவோனுக்குரிய கடிதத்தில் இறுதிச் சரக்கு அனுப்புபவர் கணக்கில் கடிதம் விடுக்கப்பட்டிருக்கிறது என்று கண்டிருக்கும். இரண்டாவது நலம் பெறுவோனுக்கு அனுப்பப்படும் கடிதத்தில் முதல் நலம் பெறுவோனின் கணக்கில் கடிதம் விடுக்கப்பட்டிருக்கிறது என்று கண்டிருக்கும். சரக்கு வாங்குபவரின் உறுதியான வேண்டுகோளின்படி வணிக உறுதிக் கடிதத்தின் ஒரு பகுதியையோ, முழுவதையுமோ மூன்றுமவனுக்கு நலம் பெறுவோன் மாற்றுவதற்கு அனுமதிக்க, கடிதம் விடுக்கும் பாங்க்கோ அதனை உறுதிப்படுத்தும் பாங்க்கோ தயங்காது. மாற்றப்படுபவர்கள் ஒன்றுக்கு மேற்பட்டு இருப்பின்

இதே முறைதான் பின்பற்றப்படுகிறது. வெவ்வேறு நபர்களுக்கு மாற்றப்படும் மொத்தத் தொகைமூலம் கடிதத்தில் கண்டுள்ள தொகைக்கு மிகக் கூடாது. மூல நலம் பெறுவோனைப் போன்றே மாற்றப் பெறுபவர்களும் கடிதத்தின் நிபந்தனைகளுக்கு உட்பட்டவராவார்கள். எந்த நிபந்தனைகளின் அடிப்படையில் பாங்கு பணம் கொடுக்கும் என்று கடிதம் மாற்றப் பெறுவோனுக்கு அறிவிக்கவேண்டும்.

இரண்டாம் நலம் பெறுவோன் தமது பத்திரங்களைக் குறிப் பிட்ட அல்லது பணம் செலுத்தும் பாங்கிடம் சேர்ப்பித்தவுடன் அவை யாவும் தக்கமுறையில் இருந்தால் அப் பாங்கால் பணம் செலுத்தப்படும். அப்பொழுது பாங்கு முதல் நலம் பெறுவோனிடமிருந்து அவன் இடாப்பைக் கேட்டு வாங்கி இரண்டாம் நலம் பெறுவோனின் பத்திரங்களுடன் சேர்த்து வைத்துக் கொள்ளும். பத்திரங்கள் அனைத்தும் சரியான முறையில் இருக்கின்றன என்று தெளிந்த பிறகு இரண்டாம் நலம் பெறு வோனின் இடாப்பிற்கும் வேறுபாடு இருப்பின் கடிதத்தில் கண்டுள்ள பணத்தை முதல் நலம் பெறுவோனுக்குப் பாங்கு அளிக்கும். இறுதிச் சரக்கு வாங்குபவர் இரண்டாம் நலம் பெறு வோன் பத்திரங்களையும், முதல் நலம் பெறுவோன் இடாப்பினையும் பின்னர் பெறுகிறன்.

மாற்று உரிமை உடைய வணிக உறுதிக் கடிதம் செயல் முறைக்குச் சற்றுக் கடினமானதே. கீழ்க்கண்ட நிபந்தனைகளில் சில சிக்கல்கள் இக் கடிதத்தில் உள்ளன :

1. வணிக உறுதிக் கடித மாற்றல் உறுதியாக அனுமதிக்கப் பட்டிருக்க வேண்டும். அந் நலன்களில் மாறுதல் என்று மட்டும் குறிப்பிடப்படுவதோடல்லாமல் அதில் அடங்கிய அனைத்து நிபந்தனைகளுக்கும் பொருந்தும் என்று குறிப்பிடப்படவேண்டும்.

2. ஒரு முறைதான் வணிக உறுதிக் கடிதம் மாற்றிக் கொடுக் கப்படலாம். பல நபர்களுக்கும் ஒரு கடிதத்தின் தொகையைப் பிரித்து மாற்றிக் கொடுக்கலாம். ஆனால், இரண்டாம் நலம் பெறு வோன் மூன்றுமவனுக்கு அதனை மாற்றிக் கொடுக்க முடியாது.

3. இரண்டாம் நலம் பெறுவோனுக்கு இறுதிச் சரக்கு வாங்குபவர் பெயரையும், இறுதிச் சரக்கு வாங்குபவருக்கு இண்டாம் நலம் பெறுவோன் பெயரையும் வெளிப்படுத்தக் கூடாது என்று, மாற்றப்பட்ட வணிக உறுதிக் கடிதத்தைச் செயல் படுத்தும் பாங்கு வேண்டும். இவ்வாறு பெயர்களை வெளிப் படுத்துவதால் முதல் நலம் பெறுவோனின் வியாபாரமும் இலாபமும் குறையும். இதனைப் பாங்கு தவிர்க்க முயல்கிறது.

4. முதல் நலம் பெறுவோன் நாட்டை அல்லாமல் வேறு ஒரு நாட்டை இரண்டாம் நலம் பெறுவோன் சேர்ந்தவனுக இருப்பின் அந் நாட்டு வழக்கத்திலிருக்கும் வணிக உறுதிக் கடிதத்தின் இறுதி நாள் கடிதம் விடுக்கும் பாங்கினுல் அனுமதிக்கப்பட்டு இருக்க வேண்டும்.

5. வணிக உறுதிக் கடிதம் 'கான்சுலர் இடாப்பை' வேண்டும்போது மற்ருெரு இன்னல் உருவாகிறது. இரண்டாவது நலம் பெறுவோன் அளிக்கும் கான்சுலர் இடாப்பில் கடித மாற்றல் செய்தவர் சரக்கு வாங்கியவர் என்றும் இரண்டாம் நலம் பெறுவோனின் இடாப்பில் கண்டுள்ளபடிச் சரக்கின் மதிப்பு இருக்கும். ஆகவே அவை இறக்குமதியாளர் நாட்டிலுள்ள இறக்குமதி அதிகாரிக்குக் குறைந்த மதிப்புடையதாகவே இருக்கும். இரண்டாவது நலம் பெறுவோன் கான்சுலர் இடாப்புக்குப் பதிலாக, இறக்குமதியாளர் நாட்டிலுள்ள 'கான்சல்' இறுதி வாங்குவோர் பெயருக்கு அனுப்பும் இடங்களேயும் முதல் நலம் பெறுவோன் இடாப்பில் கண்டுள்ள சரக்கின் மதிப்பை அளிப்பதன் மூலம் மேற்கண்ட இன்னல் தவிர்க்கப்படும்.

மாற்றப்படக்கூடிய வணிக உறுதிக் கடிதம் பாங்குக்கு மிகவும் கடினமானது. ஆகவே இது சம்பந்தமாக அது மிகவும் எச்சரிக்கையுடன் இருத்தல் வேண்டும்.

## பின்னுக்குப்பின் அல்லது ஈடுகட்டும் வணிக உறுதிக் கடிதம்
## (Back-to-Back or Countervailing Lettter of Credit)

பின்னழிக்க முடியா உறுதிப்படுத்தப்பட்ட வணிக உறுதிக் கடிதத்தில் கண்டுள்ள ஏற்றுமதியாளர், அயல் நாட்டு ஏற்றுமதியாளருக்கும் ஏற்றுமதியாளர் நாட்டைச் சேர்ந்த அல்லது வேறு நாட்டைச் சேர்ந்த சரக்களிக்கும் நிறுவனத்திற்கும் இடைநிலேயாளாக இருப்பார். கடித நலம் பெறுவோன் இறக்குமதியாளரிடமிருந்து கடிதத்தில் தகுந்த பாதுகாப்பு கேட்பது போன்று உண்மையான சரக்களிப்பவரும் பாதுகாப்பு கேட்பார். மாற்று உரிமை உடைய வணிக உறுதிக் கடிதமாக இருந்தால் அதனே அப்படியே முழுமையாகவோ, பகுதியாகவோ சரக்களிப்பவருக்கு மாற்றிக் கொடுப்பதன்மூலம் இப் பிரச்சினேயைத் தீர்க்கலாம். சில சமயங்களில் கடிதத்தில் மாற்று உரிமை இல்லாமல் போகலாம். அப்பொழுது நலம் பெறுவோன்

(ஏற்றுமதியாளர்) தன்னுடைய பாங்கு அல்லது கருத்தறிவிக்கும் பாங்கு அல்லது உறுதிப்படுத்தும் பாங்கிடம்தான் சரக்கு வாங்கக் கூடிய நிறுவனத்தின் பெயருக்குப் பின்னழிக்கமுடியா இரண்டா வது வணிக உறுதிக் கடிதத்தை அனுப்புமாறு வேண்டுவார். இதுவே 'பின்னுக்குப்பின்' (Back-to-Back) அல்லது 'ஈடுகட்டும் வணிக உறுதிக் கடிதம்' (Countervailing letter of credit) என்று அழைக்கப்படும். சரக்களிப்பவர் ஏற்றுமதியாளர் நாட்டைச் சேர்ந்தவராக இருப்பின் இவ்விரண்டாம் வணிக உறுதிக் கடிதம் உள்நாட்டைச் சார்ந்ததாக இருக்கும்.

இரண்டாவது வணிக உறுதிக் கடிதத்திலுள்ள நிபந்தனைகள், தொகை, காலத்தைத்தவிர மற்றெல்லாம் முன்னதுபோலவே இருக்கும். இரண்டாவது கடிதத்தின் இடாப்பில் கண்ட சரக்கு மதிப்பு, ஏற்றுமதியாளருக்கு ஓரளவு இலாபமளிக்கும் பொருட்டு முந்தியதைவிடச் சற்றுக் குறைவாகவே இருக்கும். ஏற்றுமதியாளர் சரக்கினைக் கப்பலில் ஏற்றுவதற்கும் அதற்குரிய பத்திரங்களை உண்டியலுடன் சேர்த்துப் பாங்குக்கு அனுப்புவதற்கும், பணம் செலுத்துவதற்கும் காலம் வேண்டியிருப்பதால் இண்டாம் வணிக உறுதிக் கடிதத்தின் காலம் முந்தியதைவிடச் சற்றுக் குறைவாகவே இருக்கும். பிறகு ஏற்றுமதியாளர் சரக்கினைக் கப்பலில் சேர்த்துத் தேவையான பத்திரங்களுடன் மாற்றுப் பாங்கிடம் அளிக்கிறார்.

சில சமயங்களில் இரண்டாவது கடிதத்தின் நலம் பெறுவோன் தானே நேராக இறக்குமதியாளருக்குச் சரக்கினைக் கப்பலில் ஏற்றி உரிய பத்திரங்களைச் சேகரித்து இரண்டாம் கடிதத்தில் கண்டுள்ள படித் தன்னுடைய உண்டியலைப் பத்திரங்களுடன் அனுப்புகிறார். பிறகு இப் பத்திரங்களுக்கும் உண்டியலுக்கும் பதிலாக தன்னுடைய பத்திரங்களையும் உண்டியலையும் முதல் கடிதத்தின் நிபந்தனைகள்படி மாற்றிப் பாங்கிடம் அனுப்புவிக்கிறார்.

இரண்டாவது வணிக உறுதிக் கடிதம் அனுப்புவதால் பாங்குக்குப் பெரும் இடர்ப்பாடு எதுவும் நிகழாது. அதன் நிபந்தனைகள் முந்தியதைப்போல் சற்றும் மாறுபடாமல் இருந்தால் பாங்கு அதற்குரிய பணத்தைக் கொடுக்கலாம். கால நீட்டிப்பு அல்லது வேறு எம் முறையிலோ இரண்டாவது கடிதத்தில் மாற்றம் இருந்தால், முதல் கடிதத்தில் அதனை விடுத்த பாங்கினால் அவ்வித மாற்றத்திற்கு அனுமதிக்கப்பட்டிருந்தால் ஒழிய பாங்கு பணத்தைக் கொடுக்காது. எப்படி இருந்தபோதிலும் இதில் சில இடர்களும் பாங்குக்கு உண்டு. சரக்கு குறிப்பிட்ட காலத்தில் அளிப்பவரால் அனுப்பப்பட்டாலும் முதல் கடிதத்தில் குறிப்பிட்ட

காலத்திற்குள் கப்பல் இரசீதைப் பெறுவதற்கு உகந்த நேரத்தில் சரக்கு ஏற்றுமதியாளருக்குப் போய்ச் சேராது. இரண்டாவது வணிக உறுதிக் கடிதத்திற்குப் பணமளித்த பிறகு ஏற்றுமதியாளர் நிறுவனம் (மறுத்தாலோ) நிராகரித்தாலோ, அவர் கப்பல் இரசீதைப் பெறுவதற்குத் தடையாக ஏதாவது வேலை நிறுத்தம் நிகழ்ந்தாலோ பாங்குக்கு இன்னல் ஏற்படும். இரண்டாவது கடிதத்தை விடுத்த பாங்கினுல் சரியானது என்று ஏற்றுக்கொண்ட பத்திரங்களை முதல் கடிதத்தை விடுத்த பாங்கு சரியானது அன்று என்று மறுக்கலாம். ஆகவே முதல் கடிதமும், இரண்டாவது கடிதமும் ஒரே பாங்கைச் சேர்ந்ததாக, இடாப்புத் தொகையைத் தவிர, ஒரே மாதிரியாக இருந்தால்தான் பாங்குக்குப் பொருந்துவதாக இருக்கும். எப்படி இருந்தபோதிலும் கூடுதல் நாணய இடர்ப்பாட்டை ஏற்க பாங்கு தயாராய் இருத்தல் வேண்டும்.

## சிறப்புப் பிரிவு

பல்வேறு உற்பத்தியாளர்களிடமிருந்து சரக்கினை வாங்கும் போது அவர்கள் உடனே பணம் கேட்டால் அவர்களுக்குக் கொடுக்கும் பொருட்டு ஏற்றுமதியாளருக்கு நிதி தேவைப் படுகிறது. சில சமயங்களில் அயல் நாடுகளில் சரக்கினை வாங்கித் தனக்கு அச் சரக்கினை ஏற்றுமதி செய்ய இறக்குமதியாளர் தனது ஆட்களை நியமித்திருக்கும்போது அச் சரக்காளர்களுக்குப் பணம் கொடுக்க இறக்குமதியாளருக்குப் பணம் தேவைப்படுகிறது. சரக்கினை வாங்கிக் கப்பலில் ஏற்றித் தேவையான பத்திரங்களைப் பெற்று உண்டியல் மாற்றுப் பாங்கிடம் உண்டியலைச் சேர்ப்பிப்பது வரையில் ஏற்றுமதியாளருக்குத் தகுந்த நிதிவசதி இராது. இறக்குமதியாளர் தன்னுடைய பணத்தை அயல் நாட்டிலிருக்கும் தனது பதிலாட்களின் விருப்பத்திற்குச் செலவு செய்ய அனுமதிக்க மாட்டார். இவ்விடர்ப்பாட்டைத் தவிர்க்கும் பொருட்டு வணிக உறுதிக் கடிதத்தில், சரக்கு வாங்கும் பொருட்டு நலம் பெறுவோனுக்குக் கடன் அளிக்குமாறு உண்டியல் மாற்றுப் பாங்குக்கு சிவப்பு வரிகளில் அதிகாரம் வழங்கப்படுகிறது. வெற்று இரசீதைப் பெற்றுக்கொண்டோ, சரக்கு சேமித்து வைத்திருக்கும் பண்டகங்களின் இரசீதுகளைப் பெற்றுக் கொண்டோ இக் கடன் வழங்கப்படுகிறது. இச் சிவப்புப் பிரிவு மிகவும் புதுமையானதே. இச் சிவப்பு பிரிவினைக் கொண்ட வணிக உறுதிக் கடிதம் பொதுவாகப் பின்னழிக்கக்கூடியதாகவே இருப்பதால் தகுந்த பாதுகாப்புடன் பாங்கு அதன்மீது கடன் வழங்க முடியாது. இக் கடிதம் உண்டியல் மாற்றுப் பாங்கிடம் சேர்ப்பிக்கப்பட்டு அக்

கடிதத்தின்கீழ் எடுக்கப்படும் அனைத்து நடவடிக்கைகளும் அம் மாற்றுப் பாங்கிற்கே உரிமை மாற்றிக்கொடுக்கின்றன. மொத்தக் கடன் தொகை, கடிதத்தில் கண்டுள்ள மொத்தத் தொகைக்கு மிகக்கூடாது. கடன் வழங்கப்படும் காலமும் கடிதத்தில் கண்டுள்ள காலத்திற்கு மிகக் கூடாது. நலம் பெறுவோன் தன்னுடைய உண்டியலைத் தன்னுட்டிலுள்ள எந்த மாற்றுப் பாங்கிடமும் கொடுக்கலாம் என்றபோதிலும் கடிதத்தில் கண்டுள்ள சிவப்புப் பிரிவில் குறிப்பிடப்பட்ட பாங்கிடமே, அதில் கண்டுள்ள சலுகைகளைப் பெறுவதற்குத் தொடர்பு வைத்துக் கொள்வர்.

சிவப்புப் பிரிவின்படி கடன் வழங்கும் பாங்கு, நலம் பெறுவோர் எவ்வாறு எம் முறையில் கடனைப் பயன்படுத்துகிறார், எவ்விதச் சரக்குகள் வாங்குகிறார் அல்லது அக் கடனுக்குப் பதிலாக எச் சரக்குகளை வாங்குகிறார் என்று கவனிக்க வேண்டிய பொறுப்பில்லை. கடன் வழங்குவது பாங்கின் விருப்பத்தைப் பொறுத்து இருந்தாலும் கடன் தவறான வழியில் பயன்படுத்தப்படவில்லை என்று பாங்கு நம்பவேண்டும். தவறான வழியில் கடன் பயன் படுத்தப்பட்டால் சரக்கு வாங்கியவரிடமிருந்து பணத்தைத் திரும்பப் பெறுவதற்குக் கடிதம் விடுத்த பாங்குக்கு மிகவும் சிரமமாக இருக்கும். வணிக உறுதிக் கடிதம் சில சமயங்களில் 'கட்டுக் கடன்' (Packing Credit) என்ற சொற்களைக் கொண்டிருந்தால் நலம் பெறுவோன் பல வழிகளிலிருந்து சரக்குகளை வாங்கி, அனைத்துச் சரக்குகளையும் சரியாகக் கட்டி இறுதி வாங்குவோருக்குக் கப்பல்மூலம் அனுப்பிவைப்பார்.

## உண்டியல் மாற்றுப் பாங்கின் கடமைகள்

வணிக உறுதிக் கடிதத்தின் அடிப்படையில் சேர்ப்பிக்கப்படும் உண்டியல்களுக்குப் பணம் அளிப்பதில் உண்டியல் மாற்றுப் பாங்கு சிறந்த பணி புரிகிறது. நலம் பெறுவோன் வணிக ஒப்பந்தத்தில் கண்டவாறு சரக்கினை வாங்கி அல்லது தயாரித்துக் கப்பலில் ஏற்றி, அதற்குரிய பத்திரங்களைப் பெற்று உண்டியல் எழுதி அப் பத்திரங்களுடன் இணைத்துப் பணம் செலுத்தக்கூடிய பாங்கிடமோ, வேறு எந்தப் பாங்கிடமோ சேர்ப்பிக்கிறார். இப்பொழுது பாங்கு இந்த உண்டியலுக்குரிய பணத்தைக் கொடுக்கலாம் அல்லது மறுக்கலாம். கடிதத்தில் குறிப்பிட்டுள்ள நிபந்தனைகள் உண்டியல், அதனைச் சேர்ந்த பத்திரங்களை நன்றாக எச்சரிக்கையுடன் பரிசீலனை செய்தபிறகுதான் பாங்கு எந்த முடிவுக்கும் வரவேண்டும்.

## உண்டியல் மாற்றுப் பாங்கின் பரிசீலனைகள்

வணிக உறுதிக் கடிதத்தின்கீழ் எழுதப்பட்ட உண்டியலைப் பெறும் பாங்கு மிகவும் எச்சரிக்கையுடன் (விழிப்புடன்) செயலாற்ற வேண்டும். தான் எந்தப் பொறுப்பையும் ஏற்றுக் கொள்ளாமல் வணிக உறுதிக் கடிதம் விடுத்த பாங்கின் கட்டளையை நிறைவேற்ற வேண்டும். கடிதத்தில் குறிப்பிட்டுள்ள படி முழுமையாக உண்டியல் மாற்றுப் பாங்கு நிறைவேற்ற வேண்டும். அவ்வாறு நிறைவேற்றத் தவறினால் கடிதம் விடுத்த பாங்கு அந்த உண்டியலை ஏற்க மறுக்கவோ, அவ் வுண்டியலுக்குரிய பணத்தைக் கொடுக்க மறுக்கவோ செய்யலாம். ஆகவே பலவகைகளில் உண்டியல் மாற்றுப் பாங்கு பரிசீலனை செய்யவேண்டும்.

முதலாவதாக வணிக உறுதிக் கடிதம் செயல்முறையில் இருக்கிறதா, அதற்குரிய காலம் முடியவில்லையா என்று உண்டியல் மாற்றுப் பாங்கு அறியவேண்டும். தனது கட்டுப்பாட்டிற்கு அடங்காத காரணங்களான வேலை நிறுத்தம், சமூகக் குழப்பம், இயற்கை நிகழ்ச்சி முதலானவற்றால் உண்டியல் மாற்று முடிவுபெறும் நாளும் வணிக உறுதிக் கடிதத்தின் முதிர்வு நாளும் ஒன்றாக இருக்குமானால் கடிதத்தின் செல்லுபடி நாள் அடுத்த வேலை நாள்வரையில் நீட்டிக்கப்படும். கடிதம் மேலும் செயல் முறையில் இருக்கிறது என்று உண்டியல் மாற்றுப் பாங்கு எண்ணினால் அக் கடிதத்தின் உண்மைப் பொருளையும் கடிதம் விடுத்த பாங்கு எவ்வளவு தூரம் பொறுப்பேற்றுச் செயல்படுத்து கிறது என்று ஆராய்தல் வேண்டும். வணிக உறுதிக் கடிதம் முறைப்படி எழுதப்பட்டிருக்கிறதா, பின்னழிக்கக் கூடியதா, பின்னழிக்க முடியாததா என்றும் உண்டியல் மாற்றுப் பாங்கு ஆய்ந்தறிதல் வேண்டும்.

கடிதத்தில் குறிப்பிட்டுள்ளபடிக் கடிதத்தின் இயற்றன்மை உள்ளதா என்றும் பார்க்கவேண்டும். உண்டியலுடன் சேர்க்கப் பட வேண்டிய பத்திரங்கள் தெளிவாகக் குறிப்பிடப்பட்டிருக்க வேண்டும். கடிதத்தில் குறிப்பிடப்பட்டிருப்பதற்கு முரணாக இருக்குமாறு பத்திரங்கள் மறுக்கப்பட வேண்டியிருக்கும். அதனால் கடிதம் விடுத்த பாங்கு உண்டியலை மறுக்க வேண்டிய நிலை ஏற்படும்.

பத்திரங்களில் காணும் இரு பொருள் மயக்கத்தை உண்டியல் மாற்றுப் பாங்கு நிர்வகிக்க வேண்டிய அவசியமில்லை. தகுந்த சந்தேகம் ஏற்பட்டால் பாங்கு பணம் கொடுக்க மறுக்கலாம்.

பின்னழிக்க முடியா உறுதிப்படுத்தப்பட்ட வணிக உறுதிக் கடிதங்களில் இயற்றன்மைக்கு உகந்தவாறு பத்திரங்கள் எழுதப் பட்டிருந்து அவற்றிற்குரிய உண்டியலின் பணத்தைக் கொடுக்க மறுப்பதால் நலம் பெறுவோர்க்கு ஏற்பட்ட நட்டத்தைப் பாங்கு ஈடுகட்ட வேண்டும். ஒழுங்கான முறையில் கடிதத்தில் கண்டுள்ள படி எழுதப்பட்ட உண்டியலுக்கு உரிய பணத்தைக் கொடுக்கக் கடிதம் விடுத்த பாங்கு மறுத்தாலும் நலம் பெறுவோர்க்கு ஏற்படும் நட்டத்தை அது ஈடுகட்ட வேண்டும்.

இக் கடித நடவடிக்கையில் பத்திரங்களைத்தான் பாங்குகள் ஆய்ந்தறிய வேண்டுமே தவிர அவை தொடர்புற்ற சரக்குகளைக் கவனிக்க வேண்டியதில்லை. சரக்கு வாங்குதல், எவ்விதம் தயாரித்தல், எவ்வாறு அவற்றைக் கட்டுதல், வணிகப் பத்திரங் களான கப்பல் இரசீது, கடன் இன்சூரன்சு பாலிசி முதலான வற்றைப் பாங்கு ஆராய வேண்டியதில்லை. அவற்றிற்கான பொறுப்பும் ஏற்றுக் கொள்ளவேண்டிய அவசியமில்லை. கடிதம் விடுத்த பாங்கும், உண்டியல் மாற்றுப் பாங்கும் பத்திரங்களை வணிக உறுதிக் கடிதத்தில் கண்டிருக்கும் நிபந்தனைகளுக்கு முரணாகை அப் பத்திரங்களில் இருப்பனவற்றையே குறிப்பிட வேண்டும். ஆகவே சரக்கு வாங்குபவர் பத்திரங்களின் அடிப் படையிலேயே பாங்கிடமிருந்து தனது உரிமையை நிலைநாட்ட முற்படுவர். ஆனால் சரக்கு அதன் தன்மை, அடிப்படையில் இருந்து கட்டுமானத்தில் தவறுகள் இருந்தால் சரக்கு வாங்குபவர் மறுப்புத் தெரிவிக்க மாட்டார்.

தகுந்த முறையில் அதிகாரம் வழங்கியிருந்தால் ஒழிய வணிக உறுதிக் கடிதத்தின் அடிப்படையில் ஏற்றுமதி செய்யப்படும் ஒரு பகுதி சரக்கிற்கு எழுதப்பட்ட உண்டியலை மாற்றுவதற்குப் பாங்கு மறுக்கும். எடுத்துக் காட்டாக 100 மூட்டைகள் கிராம்பிற்கு ரூ. 5,00,000 வழங்கப்பட்டிருந்தால் 20 மூட்டைகள் கிராம்பு ரூ. 1,00,000-க்கு எழுதப்பட்ட உண்டியலைக் கடிதத்தில் பகுதி ஏற்றுமதி குறிப்பிடப்பட்டிருந்தால் ஒழிய பாங்கு மறுக்கலாம். பகுதி ஏற்றுமதிக் கடிதத்தில் முறைப்படி அனுமதிக்கப்பட்டிருக்க வேண்டும்.

பத்திரங்களை ஆராய்தல்: வேறு எதையும் குறிப்பிடாமல் பத்திரங்கள் சேர்ந்த வணிக உறுதிக் கடிதத்தில் உண்டியலோடு கப்பல் பத்திரங்கள் மட்டுமே சேர்ப்பிக்கப்பட வேண்டும் என்று குறிப்பிடப்பட்டிருக்கும். இவ் வகையில், முழுமையான கப்பல் இரசீது, கடன் இன்சூரன்சு பாலிசி, அல்லது இன்சூரன்சு

அத்தாட்சிப் பத்திரம், இடாப்பின் நகல் முதலியவற்றைப் பாங்கு கேட்க வேண்டும் என்று அறிவுறுத்தப்படும். இவ்வனைத்துப் பத்திரங்களும் மாற்றிக் கொடுக்கப்படும் வடிவத்தில் இருக்கும். இவ்வித அறிவுறுத்தல்கள் இல்லாவிடில் எந்தெந்த பத்திரங்கள் ஒழுங்காக இருக்கின்றன அல்லது இல்லை என்று உண்டியல் மாற்றும் பாங்கு கண்டறியவேண்டும். பொதுவாகத் தேவையான பத்திரங்களின் விவரங்களை வணிக உறுதிக் கடிதம் குறிப்பிடும். இச் சந்தர்ப்பங்களில் வேண்டப்பட்ட பத்திரங்கள் சேர்க்கப்பட்டிருக்கின்றனவா அல்லது இல்லையா என்று பாங்கு கவனிக்க வேண்டும். பாங்கு ஒவ்வொரு பத்திரத்தையும் உன்னிப்பாகக் கவனித்து வணிக உறுதிக் கடிதத்தில் வேண்டப்பட்டிருப்பதற்கும் பத்திரங்களில் கண்டிருக்கும் விவரங்களுக்கும் வேறுபாடு இருக்கிறதா அல்லது இல்லையா எனக் கண்டறிய வேண்டும்.

கீழ்க்கண்டவற்றைப் பாங்கு கவனித்தல் வேண்டும்:

1. அனைத்துப் பத்திரங்களும் குறிப்பிட்ட கப்பலில் ஏற்றிய சரக்கைச் சார்ந்தனவா என்றும், பத்திரங்களில் குறிப்பிட்ட கப்பலில் ஏற்றப்பட்ட சரக்குகளின் விவரங்கள் வணிக உறுதிக் கடிதத்தில் வேண்டப்பட்டதுபோல் உள்ளதா என்றும் கவனித்தல் வேண்டும்.

2. இடாப்பின் மொத்தத் தொகை உண்டியலின் மொத்தத் தொகைக்குச் சரிசமமாக இருக்கிறதா என்று ஆராயவேண்டும். கடிதத்தில் கண்டுள்ள சரக்குகளின் விவரங்களையும், வகைகளையும் அவை ஒத்திருக்கின்றனவா, தோற்றுவாய்ச் சான்று, கான்சுலர் சான்றுகள் அவற்றுடன் இணைக்கப்பட்டுள்ளனவா என்றும் அறிதல் வேண்டும். இடாப்பில் சரக்கு வாங்குபவர் பெயர் தெளிவாகக் குறிப்பிடப்பட்டு மற்ற விவரங்களும் சரியாகக் குறிப்பிடப்பட்டிருக்க வேண்டும். வணிக உறுதிக் கடிதத்தில் குறிப்பிட்டுள்ளவாறு இடாப்பிலும் விலை குறிப்பிடப்பட்டிருக்க வேண்டும்.

3. இன்சூரன்சு பாலிசி தேவைப்பட்டிருந்தால், அது அச் சரக்குகளுக்குக் கொடுக்கப்பட்டிருக்கிறதா, வணிக உறுதிக் கடிதத்தில் கண்டுள்ள நிபந்தனைகளுக்குட்பட்டுத் தயாரிக்கப்பட்டுப் புறக்குறிப்பு இடப்பட்டிருக்கிறதா என்றும் ஆராய வேண்டும்.

4. முழுமையான கப்பல் இரசீது தம்மிடம் கிடைத்திருக்கிறதா என்று பாங்கு உறுதிப்படுத்திக் கொள்ளவேண்டும்.

கடிதத்தில் கண்டுள்ளவாறு அது புறக் குறிப்பிடப்பட்டிருக்க வேண்டும். கப்பல் சத்தம் கொடுக்கப்பட்டிருந்தால் அவற்றுடன் கப்பல் சத்த இரசீது சேர்க்கப்பட்டிருக்கும் அல்லது கப்பல் பத்திரங்களில் தெளிவாகக் குறிப்பிடப்பட்டிருக்க வேண்டும். கடிதத்தில் கண்டுள்ள நாளிலோ, அதற்கு முன்னரோ கப்பலில் சரக்குகள் ஏற்றப்பட்டு விட்டன என்று அப் பத்திரங்களில் கண்டிருக்க வேண்டும்.

5. பயணத்தின்போது சரக்குகள் வேறொரு கப்பலுக்கு மாற்றப்பட வேண்டியிருந்தால் முழுமையான கப்பல் இரசீது தேவைப்படும். கப்பல் இரசீதில் கப்பல் போகும் வழியை மாற்றுவதோ கப்பல் சத்தத்திற்காகக் கப்பல் உரிமையாளருக்குச் சரக்கின்மேல் பற்றுரிமை அளித்தலோ கப்பல் பத்திரத்தில் கண்டிருத்தல்கூடாது. வேறு ஏதாவது செய்திகள், பத்திரங்களை ஆராயும்போது காணப்பட்டாலும் அவை வணிக உறுதிக் கடிதத்தின் நிபந்தனைகளுக்கு உட்பட்டிருக்கின்றனவா என்றும் பார்க்கவேண்டும்.

உண்டியல் மாற்றுப் பாங்குதான் இப் பரிசீலனைகளை எல்லாம் செய்யவேண்டும். பத்திரங்கள் முழுமையாகவும் சரியாகவும் இருக்கின்றன என்று பாங்கு அறிந்தபிறகு உண்டியலை மாற்ற முற்படலாம். பத்திரங்களை அதனுடன் இருத்திக்கொண்டு, கடிதத்தில் கண்டுள்ளவாறு அவற்றின் ஒரு படித்தொகுதியை கடிதம் விடுத்த பாங்குக்கோ, இறக்குமதியாளருக்கோ பாங்கு அனுப்புகிறது. உண்டியலையும் ஏற்பதற்கோ, பணம் செலுத்துவதற்கோ அனுப்பி வைக்கிறது. வணிக உறுதிக் கடிதத்திற்கு உறுதிப்பாடு அளித்திருந்தாலொழிய உண்டியல் மாற்றுப் பாங்கு நலம் பெறுவோனுக்கோ, கடிதம் விடுத்த பாங்குக்கோ பொறுப்பாளி அல்ல. தன்னுடைய பாதுகாப்புக்காகத் தன்னால் மாற்றப்படும் உண்டியல்கள் சரியாக இருக்கின்றனவா என்று பாங்கு உறுதிப்படுத்திக் கொள்ளவேண்டும். அவற்றைக் கவனிக்கத் தவறினால் கடிதம் விடுத்த பாங்கிடமிருந்து பணத்தைப் பெற முடியாது. வணிக உறுதிக் கடிதத்தில் உண்டியல் மாற்றுப் பாங்கு மாற்றப்பட்ட உண்டியல் ஒவ்வொன்றையும் குறிக்கிறது. இவற்றைச் செய்யத் தவறினால் நலம் பெறுவோன் மோசடி முறையில் நலம் பெற்று அதனால் கடிதம் விடுத்த பாங்குக்கு ஏற்படும் நட்டங்களுக்கு உண்டியல் மாற்றுப் பாங்கு பொறுப்பாளியாக நேரிடும்.

## பொய்க் கையொப்பமிட்ட பத்திரங்களைச் சேர்ப்பித்தல்

பொய் கையொப்பமிட்ட பத்திரங்கள், மாற்றப்படுவதற்காக, உண்டியல்களுடன் சேர்ந்து வரும்போது அவை கண்டு பிடிக்கப்பட்டால் அவற்றிற்குப் பொறுப்பானவர் அப் பத்திரங்களுக்குரிய பணத்தைத் திரும்பக் கொடுத்துவிடவேண்டும். ஆனால் உண்மை என்று தென்படுகின்ற பத்திரங்களுக்கு நன்னம்பிக்கையுடன் பணம் அளிக்கும் பாங்கு பத்திரங்களின் உண்மைத் தன்மைக்கோ, கடிதம் விடுத்த பாங்குக்கோ, சரக்கு வாங்கியவருக்கோ பொறுப்பாளி அல்ல. பொய்க் கையொப்பமிட்ட பத்திரங்கள் என்று அறிந்த பிறகும் எப் பாங்கும் அவற்றை ஏற்கனவே அல்லது அவற்றிற்குரிய உண்டியலின் பணத்தைக் கொடுக்கவோ கட்டாயப்படுத்தப்படமாட்டாது.

## வணிக உறுதிக் கடிதத்தின் நலன்கள்

வெவ்வேறு விதமான வணிக உறுதிக் கடிதங்கள் பழக்கத்தில் இருந்தபோதிலும் ஒவ்வொன்றும் ஒவ்வொரு விதத்தில் நன்மை பயப்பன. சரக்கு வாங்குபவரும், சரக்கு விற்பவரும் இவற்றால் பயன் எய்துகின்றனர். ஏற்றுமதி, இறக்குமதி வணிகம் இவற்றால் நிதி வசதி செய்யப்படுகிறது.

## சரக்கு விற்போர் அடையும் பயன்கள்

சரக்கு விற்போர் கீழ்க்கண்டவாறு பயன் அடைகிறார்:

1. வணிக உறுதிக் கடிதங்கள் விற்பனையாளர்களுக்குக் கடன் ஈட்டை ஏற்படுத்தி நாணய இடர்ப்பாட்டைத் தவிர்க்கிறது. கடிதம் விடுக்கும் பாங்கின் உத்தரவாதத்தைப் பெறுகிறார். உறுதிப்படுத்தப்பட்ட கடிதங்களினால் அவருடைய உண்டியல்கள் நன்மதிப்பளிக்கப்படும் என்று உறுதிப்படுத்தும் பாங்கு உறுதி அளிக்கிறது. அவர் இறக்குமதியாளருடன் உள்ள ஒப்பந்தத்தை மட்டுமே நம்பியிருந்தால் அவ்விறக்குமதியாளரின் நிதி நிலைமை பற்றி எதுவும் அறியார். சரக்குக்குரிய பணம் வந்துசேரும் என்ற நம்பிக்கையும் அவருக்கு இருக்க வழியில்லை. ஆகவே அவருக்குத் தெரிந்த நபர்களால் உத்தரவாதமளிக்கப்படாவிடில் அவ்விறக்குமதியாளரோடு வியாபாரம் செய்ய விரும்பமாட்டார். வணிக உறுதிக் கடிதத்தின்மூலம் பாங்கு அல்லது பாங்குகளால்

உத்தரவாதம் கிடைக்கப் பெற்றால்தான் சரக்குக்குரிய பணத்தைப் பெறுவது உறுதி என்ற முழு நம்பிக்கையுடன் ஏற்றுமதி செய்யப் படுவதற்குரிய சரக்குகளைத் தயாரிப்பதிலோ, வாங்கு வதிலோ முழுமூச்சுடன் சரக்கு விற்பவர் ஈடுபடலாம். தனக்குச் சாதகமாக இறக்குமதியாளர் நாட்டிலுள்ள பாங்கினால் விடுக்கப்படும் வணிக உறுதிக் கடிதம் அவருக்குப் போதுமான ஈடாகக் கருதப்படுகிறது. இவ்வசதிகள் அளிக்கும் பாங்குகள் பொதுவாக நல்ல நிதி நிலைமையுள்ள பன்னாட்டுப் புகழ் பெற்ற பாங்காகவே இருக்கும். ஆனால் விற்பனையாளர் தன்னாட்டுப் பாங்கு ஒன்றால் அக் கடிதங்கள் உறுதிப்படுத்தப்பட வேண்டும் என்று கூடுதல் ஈடு கேட்கலாம்.

2. கப்பலில் சரக்கு ஏற்றப்பட்டவுடனே அதற்குரிய பணத்தை விற்பனையாளர் பெற வணிக உறுதிக் கடிதம் வழி செய்கிறது. அயல் நாட்டுச் சரக்கு வாங்குபவர்மேல் எழுதப்படும் உண்டியலுக்குப் பண அங்காடியில் தகுந்த பேரம் இராது. அதாவது உண்டியல் மாற்றுப் பாங்குகளால் ஏற்றுக்கொள்ளப்பட மாட்டா. எவ்விதத்திலும் ஏற்றுமதியாளர் தன் தேவையைப் பூர்த்தி செய்துகொள்ளப் பாங்கிலிருந்து பணம் பெற முடியாது. ஆனால் சரக்கு, இறக்குமதியாளரிடம் போய்ச் சேர்வதற்கு முன்னரே தான்எழுதிய உண்டியலை உண்டியல் மாற்றுப் பாங்கிடம் அளித்துப் பணத்தைப் பெற்றுக்கொள்ள வணிக உறுதிக் கடிதம் துணைபுரிகிறது. சரக்கு இறக்குமதியாளருக்குப் போய் சேரக்கூடிய பல வாரங்களுக்கு எந்த ஏற்றுமதியாளரும் தனது மூலதனத்தை அந்த ஏற்றுமதிச் சரக்குகளின்மீது போட்டு முடக்கி வைத்திருக்க முடியாது. அயல் நாட்டுச் சரக்கு வாங்குபவர்மேல் எழுதப்படும் உண்டியல்களைக் கழிவு செய்து தரப்படும் பாங்கு வசதி படைத்த ஏற்றுமதியாளருக்குக்கூட இவ் வகை உறுதிக் கடிதங்கள் கூடுதல் ஈடாகப் பயன்படுகின்றன. அவருடைய முழுத் தேவைக்கும் கடன்வசதி மிகுதியாக இல்லாதபோது இது மிகவும் பயன் படுகிறது. இவ்வாறு வணிக உறுதிக் கடிதங்கள் ஏற்றுமதி வணிகத்திற்கு மிகவும் நிதி வசதி அளித்துப் பெரிதும் துணை புரிகின்றன.

3. மூன்றாவதாக வணிக உறுதிக் கடிதம் ஏற்றுமதியாளருக்கு அயல் நாட்டு மாற்றுக்கும் ஈடாக அமைகிறது. மாற்றுக் கட்டுப் பாடுகள் மிகுதியாக நிறைந்த இறக்குமதியாளர் நாட்டிலிருந்து மாற்றுக் கட்டுப்பாட்டு அதிகாரிகளின் அனுமதியில்லாமல் ஏற்றுமதியாளர் நாட்டிற்குப் பணத்தை மாற்றிக் கொடுக்க முடியாது. தன்மேல் எழுதப்படும் உண்டியல்களுக்குரிய பணத்தை

இறக்குமதியாளர் உடனுக்குடன் செலுத்தலாம். ஏற்றுமதியாளர் சார்பாக வசூல் செய்யப்படும் பாங்கிலேயே அப் பணம் வைப்பாக இருக்கும். ஆனால் ஏற்றுமதியாளருக்கு அவர் நாட்டுச் செலாவணியில் பணம் கிடைக்காது. இவ் வைப்புகளுக்கு வட்டியும் இல்லை. இவ்வாறு ஏற்றுமதியாளரின் பணம் அவரது தொழிலுக்குதவாமல் வட்டியின்றி முடங்கிக் கிடக்கும். ஏற்றுமதி யாளருக்குச் சாதகமாக வணிக உறுதிக் கடிதம் பாங்கினால் விடுக்கப்படுகின்றது என்றால் பண மாற்றுக்குத் தேவையான அனுமதி அயல் நாட்டு நாணய மாற்று அதிகாரியிடமிருந்து கிடைக்கப்பெற்றிருக்கின்றது என்று பொருள். அயல் நாட்டுச் செலாவணியில் அவ்வயல் நாட்டுப் பாங்குக்குப் பணம் செலுத்த முடியும் என்றால்தான் ஒரு பாங்கு வணிக உறுதிக் கடிதத்தை விடுக்கும். இறக்குமதி செய்யப்படும் சரக்குகள் இறக்குமதி செய்யப்படும் நாட்டின் பொருளாதார முன்னேற்றத்திற்கு மிகவும் இன்றியமையாதது என்று உணர்ந்தபிறகே, அயல் நாட்டு நாணய மாற்று அதிகாரிகள் வணிக உறுதிக் கடிதம் விடுக்கப் பாங்குகளுக்கு அனுமதி வழங்குகிறார்கள். ஆகவே மாற்றுக் கட்டுப்பாடுகள், ஏற்றுமதியாளர் தனது அயல் நாட்டு அந்நியச் செலாவணிகளைப் பெறுவதற்குத் தடையாக இருக்கும் போது அல்லது குறுக்கிடும்போது, தனக்குச் சாதகமான வணிக உறுதிக் கடிதம் விடுக்கும்படி வற்புறுத்துவார். சரக்கு வாங்குபவர் மிகவும் நாணயமும், நிதி நிலைமையுள்ளவராகவும் இருக்கலாம். ஆனால் இச் சந்தர்ப்பங்களில் வணிக உறுதிக் கடிதம் மிகவும் இன்றியமையாதது.

## சரக்கு வாங்குபவர் அடையும் பயன்கள்

சரக்கு வாங்குபவரின் நிதி நிலைமை இறக்குமதி வணிகத்திலுள்ள சரக்கின் தன்மை முதலானவற்றின் சிறப்பியல்புகளைப் பாங்கு ஏற்றுக்கொண்டால்தான் சரக்கு வாங்கு பவரின் வேண்டுகோளுக்கு இணங்க பாங்கு வணிக உறுதிக் கடிதத்தை விடுக்கும். பொதுவாக வணிக உறுதிக் கடிதம் விடுக்கப் பட்டு இறக்குமதி செய்யப்படும் சரக்குகள் ஈடு வைக்கப்பட்டு அவற்றிற்குரிய பணத்தை இறக்குமதியாளர் செலுத்தியபிறகே அல்லது வேறு உகந்த ஏற்பாட்டின்படியோ அச் சரக்குகள் அவரிடம் அளிக்கப்படுகின்றன. கடிதம் விடுக்கும் பாங்கு இறக்குமதியாளரின் நன் நிதி நிலைமை அல்லது இறக்குமதி செய்யப்படும் சரக்குகளின் நன்மதிப்பை ஏற்காவிடில் அக் கடிதம் விடுக்கும்முன் ஒரு குறிப்பிட்ட அளவு பணத்தை அதனிடம் வைப்பாக வைக்கும்படி இறக்குமதியாளரை வற்புறுத்தும்.

வணிக உறுதிக் கடிதம், அயல் நாட்டிலுள்ள ஒரு விற்பனையாளரிடம் இருந்து சரக்கினை வாங்கச் சரக்கு வாங்குபவர்க்குத் துணைபுரிகிறது. அச் சரக்கு வாங்குபவரைப்பற்றி அயல் நாட்டில் உள்ள சரக்கு விற்பனையாளர்க்குப் போதிய விவரம் இல்லாவிடில் அவருக்குச் சரக்கு விற்பனை நிகழாது. இவ்வகை உறுதிக் கடிதத்தின் நலனால் சரக்கு வாங்குபவர் வெகுதூர நாடுகளிலிருந்து சரக்கினை வாங்க முடிகிறது. பாங்கு புரியும் பணியின் மதிப்பு வணிகக் கடிதத்திற்குச் செலவிடப்படும் பண மதிப்பைவிட மிகுதியானது. கடிதம் விடுப்பதற்காகப் பாங்கு விதிக்கும் கட்டணம் மிகக் குறைவே. கடிதம் ஒப்புறுதி செய்யப் படுவதற்கு ஏற்றுமதியாளர் அயல் நாட்டுப் பாங்கினால் விதிக்கப் படும் கட்டணம்கூடக் கடிதத்தில் குறிப்பிடப்பட்ட தொகையில் ஒரு சிறு பகுதியே ஆகும்.

உண்டியல் மாற்றப்படுவதற்குமுன் சரக்குகள் கப்பலில் ஏற்றப்பட்டுவிடும் என்ற உத்தரவாதத்தை வணிக உறுதிக் கடிதம் அளிக்கிறது, உண்டியல் மாற்றப்படுவதற்குப் பாங்கிடம் அளிக்கப்படும்போது குறிப்பிட்ட சரக்குரிமைப் பத்திரங்களையும் அவ்வுண்டியலுடன் சேர்த்து ஏற்றுமதியாளர் பாங்கிடம் அளிக்கிறார். அப் பத்திரங்களே, சரக்கு கப்பலில் சேர்க்கப்பட்டதற்குரிய சான்றாகும். இப் பத்திரங்கள் சரக்கின் விவரங்களை உள்ளடக்கி இருப்பதால் கப்பலில் ஏற்றிய சரக்கின் நல்ல தன்மைக்கு இப் பத்திரங்கள் ஓரளவு உத்தரவாதமளிக்கின்றன. இவ்வாறு சரக்கு வாங்குபவர் தான் அளிக்கும் பணத்திற்கு உரிய மதிப்புடைய சரக்குகளைப் பெறுவார் என்று வணிக உறுதிக் கடிதம் உத்தரவாதமளிக்கிறது.

பொதுவாகப் பாங்கிடம், சிறந்த நாணயமுள்ள சரக்கு வாங்குபவர்கள், பொறுப்புரிமை இரசீது (Trust receipt) கொடுத்தே சரக்குரிமைப் பத்திரங்களைப் பெற்றுக் கொள்கின்றனர். சரக்கு விற்பனையாளருடன் பாங்கு செலுத்தவேண்டிய பணத்தைச் செலுத்துகின்றார். ஆகவே அவர் பாங்கிடமிருந்து மிகுந்த கடன் வசதி பெறுகிறார்.

வணிக உறுதிக் கடிதங்களின் நலன்களை எல்லாம் ஆராய்ந்து பார்க்கும்போது சரக்கு வாங்குபவருக்குக் கிடைப்பதைவிட விற்பனையாளருக்கே மிகுந்த நலன்கள் கிடைக்கின்றன. பொதுவாக விற்பனையாளர்தான் தனக்குச் சாதகமான வணிக உறுதிக் கடிதம் விடுக்குமாறு கேட்கிறார். சரக்கு வாங்குபவர் தனக்குச் சாதகமான விலைக்குக் கிடைக்க வேண்டும் என்று இக்

கடிதத்தைப் பயன்படுத்திக் கொள்கிறார். விற்பனையாளர், அங்காடியில் தனக்குத் தகுந்த பாதுகாப்பளிக்கக்கூடிய வணிக உறுதிக் கடிதங்களைப் பெற்றுக்கொள்கிறார். சரக்கு வாங்குபவரின் நாணயத்தில் முழு நம்பிக்கை ஏற்பட்டுத் தன் நாட்டுப் பாங்கிடம் இருந்து பணத்தைப் பெற்றுக் கொள்ளலாம் என்றால் எவ்வித வணிக உறுதிக் கடிதம் கிடைத்தாலும் அதனை விற்பனையாளர் ஏற்றுக் கொள்வார். சரக்கு வாங்குபவரின் நாணயத்தில் முழு நம்பிக்கை வைத்திருந்த போதிலும், நாணய மாற்றுக் கட்டுப் பாட்டு அதிகாரிகளின் எவ்வித இடையூறும் இன்றி அவர் நாட்டுச் செலாவணியில் பணத்தைப் பெற்றுக் கொள்வதற்காக விற்பனை யாளர் வணிக உறுதிக் கடிதத்தைப் பிறப்பிக்குமாறு வற்புறுத் தலாம். இம் முறையில்கூட எவ்விதமான உறுதிக் கடிதம் கிடைத் தாலும் ஏற்றுமதியாளர் ஏற்றுக் கொள்வார்.

## ஆள்சார் வணிக உறுதிக் கடிதங்கள் (Personal Letters of Credit)

இறக்குமதி ஏற்றுமதி வணிகத்திற்கல்லாமல் வேறு பல காரணங்களுக்காகவும் வணிக உறுதிக் கடிதங்கள் விடுக்கப் படுகின்றன. வணிகமல்லாக் காரணங்களுக்காகவும், பயணிகள் பணம் ஒரு நாட்டிலிருந்து மற்றொரு நாட்டிற்கு இடம் பெயர் கிறது. இவற்றிற்குப் பாங்கு வணிக உறுதிக் கடிதங்கள் பயன் படுத்தப்படுகின்றன. இவ்வகைக் கடிதங்கள் ஆள்சார் வணிக உறுதிக் கடிதங்கள் எனப்படும்.

## பயணிகள் சுற்றுலா வணிக உறுதிக் கடிதம் (Travellers Circulating Letters of Credit)

அயல் நாட்டிற்குச் செல்லும் பயணி ஒருவர் தனக்குச் சாதகமாக ஒரு வாணிக உறுதிக் கடிதத்தை விடுக்குமாறு தனது பாங்கை வேண்டுவார். வாணிக உறுதிக் கடிதம் விடுக்கப்பட்ட அயல் நாட்டுப் பாங்கின்மீது காசோலை விடுக்க அவருக்கு அனுமதி வழங்கப்படுகிறது. இதற்குச் சுற்றுலா வாணிக உறுதிக் கடிதம் எனப் பெயர்.

சுற்றுலா வாணிக உறுதிக் கடிதம் வரையறுக்கப்பட்டது, வரையறுக்கப்படாமல் உலகம் முழுவதும் பயன்படுத்தக்கூடியது என்று இருவகைப்படும். வரையறுக்கப்பட்ட சுற்றுலா வாணிக உறுதிக் கடிதத்தைப் பெறும் நபர் ஒருவர் தான் செல்ல விழையும்

குறிப்பிட்ட இடங்களைக் கடிதம் விடுக்கும் பாங்குக்கு அறிவிப்பார். அவ்விடங்களில் உள்ள தனது கிளை அல்லது தொடர்புப் பாங்குகளுக்கு, இந் நலம் பெறுபவரின் மாதிரிக் கையெழுத்துக்களை அனுப்பி வாணிக உறுதிக் கடிதம் விடுக்கப்பட்டிருக்கிறது என்று கடிதத்தின்மூலம் வாணிக உறுதிக் கடிதம் விடுத்த பாங்கு தெரிவிக்கும். அவ் வாணிக உறுதிக் கடிதங்களின் அடிப்படையில் எழுதிய பண விடைகளுக்கு அளித்த பணத்தை, தொடர்புப் பாங்குகள் கடிதம் விடுத்த பாங்குக்கு அப் பண விடைகளை அனுப்பி அதனிடமிருந்து, திரும்பப் பெற்றுகொள்ளும்.

உலக முழுவதும் உள்ள இடங்களுக்கு வாணிக உறுதிக் கடிதம் விடுத்தால் பண விடைகளுக்காக அவ்வனைத்துப் பாங்குகளுக்கும் கடிதம் விடுத்த பாங்கு குறிப்பனுப்ப முடியாது. இவ் வகையில் கடிதம் விடுக்கும் பாங்கு வாணிக உறுதிக் கடிதத்துடன் வாடிக்கையாளர் கையொப்பம் அடங்கிய அடையாளக் கடிதத்தையும் (Letter of indication) அந் நலம் பெறுவோரிடம் அளிக்கும். தான் போகும் இடங்களிலும் தொடர்புப் பாங்குகளுக்கு நலம் பெறுவோன் காசோலை விடுப்பான். பணம் செலுத்தும் பாங்கிற்கு அடையாளக் கடிதத்திலுள்ள கையொப்பமே தகுந்த அடையாளமாகும். கடிதம் விடுக்கும் பாங்கு நலம் பெறுவோர்க்குத் தனது தொடர்புப் பாங்குகளின் பட்டியலை அளிப்பது வழக்கமாகையால் தனது காசோலைகட்குப் பணமளிக்கக்கூடிய பாங்குகளின் பெயர், முகவரிகள் அனைத்தும் அந் நலம் பெறுவோர்க்குத் தெரியும். சுற்றுலா வாணிக உறுதிக் கடிதம் பொதுவாக ரூ. 1,00,000, ரூ. 50,000, ரூ. 20,000 போன்ற முழு தொகைக்கே விடுக்கப்படுகிறது. கடிதம் விடுப்பதற்குரிய கட்டணம், அவர் நம்பிக்கையுள்ள பழைய வாடிக்கையாளராக இல்லாவிடில் அந் நலம் பெறுவோரின் கணக்கில் பற்று வைக்கப்படுகிறது.

சுற்றுலா வாணிக உறுதிக் கடிதம் ஒரு செலாவணிப் பத்திரம் அன்று. ஆனால் அதன்மேல் கையொப்பம் இட்டிருக்கும் நபருக்கு அனைத்து உரிமைகளும் உள்ளன. கடிதத்தில் குறிப்பிடப்பட்ட நபரின் பண விடைகளை மட்டுமே பாங்கு மாற்றிக் கொடுக்கும்.

## பண மாற்று வணிக உறுதிக் கடிதம்
## (Encashment Credit)

மற்றொரு நகரத்திலோ, அதே நகரத்திலுள்ள மற்றொரு பாங்கின் கிளை பாங்குக்கோ ஒரு குறிப்பிட்ட காலத்திற்கு ஏற்றுக் கொண்ட பண அளவிற்குள் நலம் பெறுவோரின் கணக்கின்மீது

விடுக்கும் காசோலைகளுக்குப் பணமளிக்குமாறு அதிகாரம் வழங்கப் படும் கடிதத்திற்கே பண மாற்று வாணிக உறுதிக் கடிதம் என்று பெயர். வாணிக உறுதிக் கடிதத் தொகைக்கு நலம் பெறுவோரின் கணக்கைக் குறிப்பிடுவது கடிதம் விடுக்கும் பாங்கிற்குப் பழக்க மாகும். இவ்வசதிகள் கடிதம் விடுத்த பாங்கினால் நீக்கப்படும் வரையில் கடிதத்தின் அடிப்படையில் விடுக்கப்படும் காசோலைகள் அனைத்திற்கும் அக் காசோலை மாற்றுப் பாங்கு பணமளிக்கும். அவ்வாறு பணமாக மாற்றப்பட்ட காசோலைகள் அனைத்திற்கும் கடிதம் விடுத்த பாங்கு பணமளிக்கும்.

## பயணிகள் காசோலைகள்
## (Travellers Cheques)

அயல் நாடுகளில் பயணம் செய்யும் பயணிகளுக்குப் பயணிகள் காசோலை மற்றொரு பயன்படக்கூடிய பத்திரமாகும். காசோலை விடுக்கும் பாங்கால் தனிப்பட அச்சிடப்பட்டு அப் பாங்குக்கே முகவரியிட்டுக் கொடுக்கப்படுகிறது. இக் காசோலைகளை வாங்கும் வாடிக்கையாளர் அப் பாங்கு அதிகாரி ஒருவர் முன்னிலையில் தன் கையொப்பத்தை இடுகிறார். இக் காசோலையில் காசோலை எழுது பவர் கையொப்பத்திற்காகக் காலியாக இருக்கும் இடத்தில் பணம் செலுத்தும் பாங்கின் முன்னிலையில் காசோலை எழுதுபவர் கையொப்பம் இடவேண்டும். இவ்விரு கையொப்பங்களும் காசோலை உடையோன் அடையாளத்தை நிரூபிக்கும். பயணிகள் காசோலைகள் ஒரு குறிப்பிட்ட தொகைக்கே விடுக்கப்படுகின்றன.

மாற்றுக் கட்டுப்பாடுகள் நிலவராக் காலங்களிலும், ஒரு நாட்டுப் பாங்கால் விடுக்கப்பட்டக் காசோலைகள் மற்ற நாடுகளில் உள்ள அதன் கிளை அல்லது தொடர்புப் பாங்குகளால் அந்த உள்நாட்டுச் செலாவணியிலேயே காசோலை விடுத்த பாங்கின் நாட்டுக் கொள்முதல் வீதத்திலேயே பணம் கொடுக்கப்பட்ட போது இப் பயணிகள் காசோலைகள் தன்னிச்சையாகப் பழக்கத்தி லிருந்தன. மாற்றுக் கட்டுப்பாடுகள் நிலவும்போது இப் பயணிகள் காசோலைகள் மிகவும் குறைந்துவிட்டன. இப் பயணிகள் காசோலைகள் ஒரு குறிப்பிட்ட பண முறை உள்ள இடங்களிலே தான் பயன்படுத்தப்படுகின்றன. அதாவது அக் காசோலைகளில் குறிக்கப்பட்டோ, புறக் குறிப்பிடப்பட்ட இடங்களில் மட்டுமோ இக் காசோலைகள் செல்லுபடியாகும்.

# 13. பன்னாட்டு நிதி நிறுவனங்கள்

தோற்றமும் நோக்கமும் : இரண்டாம் உலகப் போருக்குப் பிறகு ஏற்பட்ட பன்னாட்டுப் பொருளாதார மாறுதலானது பண, வணிக நிலையில் பன்னாட்டுக் கூட்டுறவைத் தோற்றுவித்தது. இரண்டாம் உலகப் போரின் போதும், அதற்கு முன்னரும் அப் போரினால் பாதிக்கப்பட்ட உலகப் பொருளாதாரத்தை உயர்த்தவும், நன்முறையில் பேணிக்காக்கவும், கூட்டு நடவடிக்கைதான் சிறந்தது என்று நேச நாடுகள் கலந்தாலோசித்து முடிவு செய்ததன் விளைவாகப் பன்னாட்டு நிறுவனங்கள் தோன்றின. உலகில் சீரான பண மேம்பாட்டை ஏற்படுத்துவதும், உலக வணிகத்தைப் பெருக்குவதும்தான் பன்னாட்டு நிறுவனங்களின் நோக்கங்களாகும்.

## பன்னாட்டுப் பண நிதி
## (International Monetary Fund)

பிரிட்டன் உட்டில் (Bretton Woods) 1944ஆம் ஆண்டு, ஜூலை மாதம் பல நேச நாடுகளும் கையொப்பமிட்ட ஒப்பந்தத்தின் விளைவாக, 1945ஆம் ஆண்டு, டிசம்பர் மாதம் பன்னாட்டுப் பண நிதி (International Monetary Fund) துவங்கப்பட்டது. உறுப்பு நாடுகளின் அயல் நாட்டுச் செலாவணியில் ஏற்படும் தற்காலிகப் பற்றுக்குறையை நிரப்புவதற்கு அந்நியச் செலாவணியை அளிப்பதே இந் நிதியின் அடிப்படை நோக்கமாகும். இந் நிதி அனைத்து உறுப்பு நாடுகளின் செலாவணிகளைப் பெற்றிருக்கிறது. செலுத்து நிலைகளில் ஏற்படும் இடுக்கண்களைக் களைவதற்குச் சில குறிப்பிட்ட நிபந்தனைகளின் பேரில் உறுப்பு நாடுகளுக்குள் இச் செலாவணிகள் பரிமாறிக் கொள்ளப்படுகின்றன.

## பன்னாட்டுப் பண நிதியின் நோக்கங்கள்

1. ஒரு நிலையான நிறுவனத்தின்மூலம் பன்னாட்டுப் பணக் கூட்டுறவை உயர்நிலைப்படுத்திப் பன்னாட்டுப் பணப் பிரச்சினைகளில் அறிவுரையையும், கூட்டுறவையும் ஏற்படுத்துதல் ;

2. உலக முழுவதும், சம அளவு பன்னாட்டு வணிகத்தை வளர்க்கவும், அதனை விரிவுபடுத்த ஊக்குவிப்பதும், அதன் உயர்நிலை வேலை வாய்ப்பு, உண்மையான வருமானத்தை நிலை நிறுத்தி உயர்நிலைப்படுத்துவதும் அதன் உறுப்பு நாடுகளின் உற்பத்தி வளங்களை உயர்நிலைப்படுத்துவதும்;

3. உறுப்பு நாடுகளிடையே மாற்று நடைமுறையை நன்முறையில் அமைக்க மாற்று நிலைபேறுடைமையை உயர்நிலைப் படுத்தி, போட்டி முறையில் உள்ள மாற்றுக் குறைமதிப்பைத் தடுப்பதற்கும் ;

4. உறுப்பு நாடுகளிடையேயுள்ள நடப்பு நடவடிக்கை களுக்குப் பன்முகச் செல்லு முறைகளை அமைப்பதற்குத் துணை புரிதல், பன்னாட்டு வணிக வளர்ச்சியைத் தடைப்படுத்தும் அந்நியச் செலாவணிக் கட்டுப்பாடுகளை நீக்குதல்;

5. தகுந்த பாதுகாப்புகளுடன் இந் நிதி வளங்கள் கிடைக்கச் செய்வதன்மூலம் உறுப்பு நாடுகளுக்கு நம்பிக்கையூட்டி, அவர்கள் அயல் நாட்டுச் செலுத்து நிலைகளில் ஏற்படக் கூடிய வேறு பாட்டைச் சரி செய்வதற்கு அவர் நாட்டு, பன்னாட்டு முன்னேற் றத்துக்கு ஊறு விளைவிக்கக் கூடிய செயல்களை மேற்கொள்ளாமல் தடுத்தல் ;

6. இறுதியாக உறுப்பு நாடுகளின் பன்னாட்டுச் செலுத்து நிலையில் ஏற்படும் சமநிலை அற்ற தன்மையின் காலத்தைச் சுருக்குவதும், குறைப்பதுமாகும்.

இப் பன்னாட்டு நிதி இவ்வாறு பன்னாட்டுப் பணக் கூட்டுறவு ஏற்படுத்தி அயல் நாட்டு நிலைபேறுடைமையை உயர்நிலைப் படுத்துதலை நோக்கமாகக் கொண்டு, சமநிலைப் பன்னாட்டு வாணிகத்தைப் பெருக்குவதற்கும், பன்முகச் செல்லுகளை ஏற்படுத்துவதற்கும் தேவையாக இருக்கிறது. போட்டி மாற்றுக் குறைப்பு இல்லாமல் அயல் நாட்டுச் செலுத்து நிலையில் உள்ள சமநிலையற்ற தன்மையைச் சரி செய்தல், பன்னாட்டு வாணிகத்தைப் பெருக்கி எங்கும் வேலை வாய்ப்பையும், உண்மை வருவாயையும் பெருக்குவதாகும்.

## பங்கு ஒதுக்கீடும், பங்கு வரிப்பணமும்
## (Quotas and Subscriptions)

பன்னாட்டுப் பண நிதியின் உறுப்பு நாடுகள் ஒவ்வொன்றுக்கும் 'பங்கு ஒதுக்கீடு' செய்யப்படுகிறது. இப் பங்கு ஒதுக்கீடுதான் இப் பண நிதியின் மூலதனத்துக்குத் தேவையான பங்கு வரிப் பணம், வாக்குரிமை, இந் நிதி வளத்தை ஒவ்வொரு நாடும் பயன்படுத்தக்கூடிய அளவு ஆகியவற்றை நிர்ணயிக்கும். இந் நிதி தொடங்கப்படும்போதே பங்கு ஒதுக்கீடும் நிர்ணயிக்கப் பட்டிருக்கிறது. ஆனால் அடிக்கடி இது திருத்தி அமைக்கப் படுகிறது. 1959ஆம் ஆண்டில் 50 சதவிகிதமும், 1966ஆம் ஆண்டில் 25 சதவிகிதமும் இப் பங்கு ஒதுக்கீட்டில் அதிகரிக்கப் பட்டுள்ளது. இப் பங்கு ஒதுக்கீட்டை நிர்ணயிப்பதும், பின்னர் மாற்றியமைப்பதும், பன்னாட்டு வணிகத்தில் உறுப்பு நாடுகளின் பங்கையும், அவற்றின் இயல்பான பற்று, இருப்புகளைச் சரிசெய்து கொள்வதற்கான தேவைகளையும் பொறுத்தது. அனைத்து உறுப்பு நாடுகளின் மொத்தப் பங்கு ஒதுக்கீடுகள் 21 ஆயிரம் கோடி டாலர்களுக்குச் (மில்லியன்) சமமாக இருக்கின்றன. அமெரிக் காவின் பங்கு ஒதுக்கீடு மட்டும் 51,560 கோடி டாலர்களாகும். இங்கிலாந்தின் பங்கு ஒதுக்கீடு 24,370 கோடி டாலர்கள், இந்தியாவின் பங்கு ஒதுக்கீடு 7,500 கோடி டாலர்கள் ஆகும்.

ஒவ்வொரு உறுப்பு நாட்டின் பங்கு வரிப் பணத்தின் ஒரு பகுதி பொன்னாகவும், மற்றொரு பகுதி அந்தந்த நாட்டுச் செலாவணிகளிலும் கட்டப்படுகிறது. இப் பணத்தின் பொன் பகுதி, அந் நாட்டுக்குரிய பங்கு ஒதுக்கீட்டில் 25 சதவிகிதமோ அல்லது அந் நாட்டுப் பொன் இருப்பில் 10 சதவிகிதமோ இதில் எது குறைவாக இருக்கிறதோ, அவ்வளவு இருத்தல் வேண்டும். இவ்வாறு செலுத்தப்பட்ட பணம் அந்தந்த நாட்டு மையப் பாங்கின் பன்னாட்டு நிதிக் கணக்கில் இருக்கும். மற்றொரு உறுப்பு நாட்டுக்கு விற்கத் தேவைப்படும்போது இப் பணம் இப் பன்னாட்டுப் பண நிதிக்குக் கிடைக்கப்படவேண்டும்.

## முகப்பு மதிப்பு
## (Par Value)

இப் பன்னாட்டுப் பண நிதியில் சேர்ந்துள்ள உறுப்பு நாடுகள் ஒவ்வொன்றும் 1944ஆம் ஆண்டு, ஜூலை மாதம் 1ஆம் தேதி அன்று பொன் அல்லது அமெரிக்க டாலர்களில் அந் நாட்டுச் செலாவணியின் முகப்பு மதிப்பு எவ்வளவு என்று தெரியப்படுத்த

வேண்டும் என்று அறிவிக்கப்பட்டது. இம் முகப்பு மதிப்பின் அடிப்படையில்தான் பன்னாட்டுப் பண நிதி நடவடிக்கைகள் நடைபெறுகின்றன.

ஒவ்வொரு உறுப்பு நாடும், இப் பன்னாட்டுப் பண நிதிக்குச் சமமாகக் கணிக்கப்பட்ட குறுக்கு விகிததத்துக்கு ஒரு சதவிகிதம் அதிகமாகவோ, குறைவாகவோதான் உடனடி நடவடிக்கைகளுக்கு மாற்று விகிதங்களை நிர்ணயித்துக் கொள்ளலாம். அதாவது உறுப்பு நாடுகள் 2 சதவிகித பரப்பளவுக்குள்தான் மாற்று நடவடிக்கைகளுக்குரிய மாற்றுக்களை நிலைப்படுத்திக் கொள்ளலாம்.

உறுப்பு நாடுகள் தங்கள் செலாவணிகளின் தொடக்க முகப்பு மதிப்பை அவற்றின் விருப்பப்படி 10 சதவிகிதத்திற்கு மிகாமல் மாற்றிக் கொள்ளலாம். இதனைவிட மிகுதியான விகித மாற்றமானது அந் நாட்டில் அயல் நாட்டுச் செலுத்து நிலையில் ஏற்படும் அடிப்படைச் சமநிலையற்ற தன்மையையும், அந் நிதியில் அதற்கேற்ற எதிர் விளைவு, அதன் உறுதியான தீர்மானத்தையும் பொறுத்தது. இவ்வாறு 1949ஆம் ஆண்டில் இங்கிலாந்து, இந்தியா போன்ற நாடுகள் 30·5 சதவிகிதத்தில் அவற்றின் செலாவணிகளை மதிப்புக் குறைப்புச் செய்ய அனுமதிக்கப்பட்டன. ஜூன், 1966-ல் இந்திய ரூபாயின் முகப்பு மதிப்பு மேலும் 36·5 சதவிகிதம் மதிப்புக் குறைப்புச் செய்யப்பட்டது. நவம்பர், 1967-ல் பவுண்டு-ஸ்டெர்லிங்கும் 14 சதவிகிதம் மதிப்புக்குறைப்புச் செய்யப்பட்டது. ஜெர்மன் மார்க்குகளும் இரு முறைகள் மதிப்புக் குறைப்புச் செய்யப்பட்டன. அயல் நாட்டு மாற்று நிலை பேறுடைமையை உயர்நிலைப்படுத்தவும், முறையான மாற்று ஏற்பாடுகளை நிலைப்படுத்தவும், போட்டி மாற்று விகிதத்தைத் தவிர்ப்பதற்கும், உறுப்பு நாடுகள் இந் நிதியுடன் ஒத்துழைப்பதில் உறுதிப்பாடு கொள்கின்றன. மேலும் அந் நாடுகள் வேறுபடுத்தப்பட்ட செலாவணி ஏற்பாடுகள் அல்லது பன்முகச் செலாவணிப் பழக்கங்களிலும் ஈடுபடக் கூடாது.

## பன்னாட்டுப் பண நிதியின் செயல்முறைகள்

உறுப்பு நாடுகளின் செலாவணிகளை வாங்கி, விற்பதே இப் பன்னாட்டுப் பண நிதியின் சிறப்புச் செயலாகும். முன்னர் கூறியபடி உறுப்பு நாடுகளின் பொன்னும், செலாவணிகளுமே இப் பண நிதியின் வளங்களாகும். பாதக அயல் நாட்டுச் செலுத்து நிலையில் உள்ள ஓர் உறுப்பு நாடு அதன் பொறுப்புக்களை

அடைக்க அதனிடம் போதுமான பொன், செலாவணிகள் இல்லாத நேரத்தில் அச் செலுத்து நிலைப் பற்றுக்குறையைச் சரிக்கட்ட ஏற்றுக்கொண்ட முகப்பு மதிப்பில் கடனீந்த நாட்டுச் செலாவணியை இப் பன்னாட்டுப் பண நிதியிலிருந்து பெற்றுக் கொள்ளும். ஒரு நாட்டுக்கு இந் நிதியின் மூலமான செலாவணி விற்பனையானது, இப் பண நிதியின்மூலம் கடன்பட்ட நாட்டுக்குக் கடனீந்த நாடு குறுங்காலக் கடன் அளிப்பதை ஒக்கும். இக் கடனைக் கடன் பெறும் நாடு கடனளிக்கும் நாட்டிடமிருந்து நேரிடையாகப் பெற்றுக் கொள்ளலாம். ஆனால் இந் நிதியின் மூலம் கடனைப் பெற்றால், இப் பன்னாட்டுப் பண நிதி அக் கடனுக்கு உத்தரவாதம் அளித்துக் கடன் எளிதில் கிடைக்க வழி கோருகிறது.

## செலாவணிகள் வாங்குவதற்குரிய நிபந்தனைகள்

இப் பன்னாட்டுப் பண நிதியிலிருந்து செலாவணிகளை வாங்கு வதற்குச் சில நிபந்தனைகள் விதிக்கப்படுகின்றன. ஒரு நாடு மற்றொரு நாட்டுச் செலாவணியை 12 மாத காலத்திற்குள் அதன் பங்கு ஒதுக்கீட்டில் 25 சதவிகிதத்துக்குமேல் வாங்க முடியாது. இந் நிபந்தனைக்குட்பட்டு அந்நியச் செலாவணி வாங்கும் உரிமை திரும்வரையில் வாங்கும் நாட்டின் செலாவணி அதன் பங்கு ஒதுக்கீட்டின் 200 சதவிகித அளவுக்குச் சமமாகும்வரையில் ஒவ்வோர் ஆண்டும் அந்நியச் செலாவணிகள் வாங்குவதைத் தொடரலாம். (எ. கா.): இப் பன்னாட்டுப் பண நிதியில் இந்தியாவுக்குரிய பங்கு ஒதுக்கீடான 7,500 கோடி டாலர்களில் 5,625 கோடி டாலர் அளவு இந்தியச் செலாவணியாகும். ஆகவே, இந் நிதிக்குரிய இந்திய மொத்தச் செலாவணி 15,000 கோடி டாலர்கள் ஆகும்வரையில் ஒவ்வோர் ஆண்டும் இந்தியா 1,875 கோடிகளுக்குச் சமமான அந்நியச் செலாவணிகளை வாங்கிக் கொண்டிருக்கலாம். அதாவது பல ஆண்டுகளிலும் இந்தியா இந் நிதியிலிருந்து 9,375 கோடி டாலர்கள் அந்நியச் செலா வணிகளைக் கடனாகப் பெற்றுக் கொள்ளலாம்.

ஒரு குறிப்பிட்ட ஆண்டில் இப் பண நிதியிலுள்ள அந் நாட்டுச் செலாவணி அதன் பங்கு ஒதுக்கீட்டில் 75 சதவிகிதத்துக்குக் குறைவாக இருந்தால் அதாவது மற்ற நாடுகள் அதன் செலாவணி களை அதே அளவில் வாங்க வேண்டியிருந்தால், அந்த அளவுக்கு அவ்வாண்டில் செலாவணிகளை வாங்குவதில் அந் நாட்டு வாங்குந் திறன் கூடுகிறது. இதே எடுத்துக் காட்டில் 12 மாத காலத்துக்குள் இந் நிதியில் இந்தியச் செலாவணியின் இருப்பு 5,000 கோடி

டாலர்களாக இருப்பின் அப் பன்னிரண்டு மாத காலத்திற்குள் இந்தியா 2,500 கோடி டாலர்கள் மதிப்புள்ள அந்நியச் செலாவணிகளை வாங்கும். இந்த அளவுத் தொகை வாங்குவது இந் நிதியில் உள்ள இந்தியச் செலாவணியின் இருப்பு அதன் பங்கு ஒதுக்கீட்டின் 75 சதவிகிதத்திற்கு மிகுதியான 25 சதவிகிதத்திற்குச் சமமாகும்.

## ஒரு நாடு அதன் செலாவணியையே திரும்ப வாங்குதல்

பன்னாட்டுப் பண நிதியின்மூலம், மற்றொரு நாட்டுச் செலாவணியை வாங்கிய ஓர் உறுப்பு நாடு குறிப்பிட்ட காலத்திற்குள், பொன், மாற்றவியலும் செலாவணிகளுக்கு மாற்றாக அந் நாட்டுச் செலாவணியைத் திரும்ப வாங்கக் கடமைப்பட்டுள்ளது. இந் நிதியில் ஒவ்வோராண்டும் அதிகரிக்கக்கூடிய அதன் செலாவணி இருப்பில் ஒரு பாதிக்குச் (50%) சமமான அதன் செலாவணியை ஒவ்வோர் ஆண்டு இறுதியிலும், ஒவ்வோர் உறுப்பு நாடும் வாங்கிப் பயன்படுத்திக் கொள்ள வேண்டும். ஓர் ஆண்டில் அந் நாட்டுப் பண இருப்பில் ஒரு பாதியை அதிகரிக்கக்கூடிய அல்லது குறைக்கக்கூடிய அளவில் அதனால் திரும்ப வாங்கக்கூடிய அளவு அதிகரிக்க வேண்டும் அல்லது குறைக்க வேண்டும். இந் நிதிக்குரிய அந் நாட்டுச் செலாவணிப் பங்கு ஒதுக்கீடு அளவில் 75 சதவிகிதத்திற்கோ, அதற்குக் குறைவாகவோ வந்துவிட்டால் இச் சரிக்கட்டல்கள் நடைபெறா. (எ.கா.): இந் நிதியிலிருந்து 1,000 கோடி டாலர்கள் அமெரிக்கச் செலாவணியை ஓர் ஆண்டில் வாங்கினால் அவ்வாண்டு இறுதியில் 50 கோடி டாலர்களுக்குச் சமமான அதன் சொந்தச் செலாவணிகளைத் திரும்ப வாங்க வேண்டிவரும்.

ஓர் ஆண்டில் இந்தியப் பொன், மாற்றக்கூடிய செலாவணியின் இருப்பு 20 கோடி டாலர்கள் அதிகரிக்கப்பட்டால் அதன் செலாவணியைத் திரும்ப வாங்கக்கூடிய அதன் பொறுப்பு அதன் பாதித் தொகைக்கு அதாவது 10 கோடி டாலர்கள் அதிகரிக்க வேண்டும். அதாவது மொத்தமாக 60 கோடி டாலர்களுக்குச் சமமான அதன் செலாவணிகளைத் திரும்ப வாங்கவேண்டி வரும். இந் நிதியில் இந்தியச் செலாவணி அதன் பங்கு ஒதுக்கீட்டில் 75 சதவிகிதத்தை எட்டும்வரையில்தான் இச் சரிக்கட்டல்கள் நடைபெறும்.

## நிலையான ஏற்பாடுகள்
## (Standby Arrangements)

இப் பன்னாட்டுப் பண நிதி அதன் உறுப்பு நாடுகளுடன் 'நிலையான ஏற்பாடுகளில்' இறங்குகிறது. இவ்வேற்பாட்டின்படி ஒரு குறிப்பிட்ட காலத்துக்குள் ஒரு குறிப்பிட்ட அளவுக்குள், உறுப்பு நாட்டின் நிலைமையில் எவ்வித மறுபரிசீலனையும் இல்லாமல், உறுப்பு நாடு ஒவ்வொன்றும் இந்நிதி வளங்களிலிருந்து செலாவணிகளை எடுத்துக் கொள்ளும். தனது மாற்றுக் கட்டுப் பாடுகளைத் தளர்த்திக் கொள்ள விரும்பும் நாட்டுக்கு இது ஓர் உதவியாகும். இதனால் அந் நாட்டின் பண இருப்பிலிருந்து அனைத்துப் பணமும் எடுக்கப்பட்டுத் தீர்ந்துவிடுமோ என்ற அச்சம் நிலவிக்கொண்டே இருக்கும். ஆனால் அவ்வாறு தீர்ந்துவிட்ட அந்நியச் செலாவணிகளைக் கொடுத்துக் காலி இடத்தை நிரப்பு வதற்கு இப் பன்னாட்டு நிதி ஒப்புக்கொள்கிறது.

## கிடைத்தற்கருமையான செலாவணிகள்

ஒரு குறிப்பிட்ட செலாவணியை உறுப்பு நாடுகள் அதிகமாக வாங்குவதால் அச் செலாவணியில் கிடைத்தற்கருமை ஏற்படும் போது இந் நிதி சில நடவடிக்கைகளை மேற்கொள்ளுகிறது. முதன் முதலாக உறுப்பு நாடுகளுக்கு நிலைமையை அறிவித்து எந்த உறுப்பு நாட்டுச் செலாவணியின் அளிப்புக் குறைவாயுள்ளதோ அந்த நாட்டின் அறிவுரையுடன் இந் நிலைமையைச் சமாளிக்கக் கூடிய வழிவகைகளைத் தெரிவிக்கிறது. இரண்டாவதாக அச் செலாவணியைத் தேவைப்பட்ட அளவில் வாங்க இந் நிதி முற்படுகிறது. செலாவணி கிடைத்தற்கருமையாக உள்ள நாட்டிடமிருந்து இப் பன்னாட்டுப் பண நிதி அச் செலாவணிகளைக் கடனாகப் பெறலாம் அல்லது அவ்வுறுப்பு நாட்டின் ஒப்புதலுடன் அந் நாட்டின் எல்லைக்குள்ளிருந்தோ, எல்லைக்கு வெளியில் இருந்தோ இந் நிதி அச் செலாவணியைக் கடனாகப் பெறலாம். மற்ற வழிவகைகளிலிருந்து தங்கள் செலாவணிகளை இந் நிதி கடனாக வாங்குவதற்கு ஒப்புதல் அளிக்க வேண்டும் என்ற பொறுப்பு உறுப்பு நாடுகளுக்கு இல்லை. மூன்றாவதாகப் பொன்னுக்கு மாற்றாக இச் செலாவணியை இப் பண நிதி வாங்கலாம். இறுதியாக இச் செலாவணி கிடைத்தற்கு அருமை யாகிவிட்டது என்று முறைப்படி அறிவித்து இவற்றை வாங்கக் கூடிய உறுப்பு நாடுகளின் தொடர்புற்ற தேவைக்குகந்தவாறு தம்மிடமுள்ள செலாவணிகளை இந் நிதி பங்கிட்டளிக்கிறது.

பிறகு கிடைத்தற்கருமையாக உள்ள இச் செலாவணிக்குரிய மாற்று நடவடிக்கைகளுக்குரிய தற்காலிக மாற்றுக் கட்டுப்பாடுகள் விதிப்பதற்காக உறுப்பு நாடுகளுக்கு இந் நிதி அதிகாரம் வழங்குகிறது.

## சிறப்பு எடுப்புரிமைகள்
## (Special Drawing Rights)

1960ஆம் ஆண்டின் தொடக்கத்தில் பொன் பண இருப்பில் கிடைத்தற்கருமை இருப்பதை உலகம் உணர்ந்தது. இவ்விடர்ப் பாட்டைப் போக்கும் பொருட்டு இப் பன்னாட்டுப் பண நிதி 'சிறப்பு எடுப்புரிமைகள்' (Special drawing rights) என்ற திட்டத்தைப் புகுத்தியது. 1970ஆம் ஆண்டின் தொடக்கத்தில் இத் திட்டம் செயல்முறைக்கு வந்தது. உறுப்பு நாடுகளின் பங்கு ஒதுக்கீட்டு (quotas) விகிதப்படி சிறப்பு எடுப்புரிமை வழங்கப் பட்டது. சரிநிகர் பற்றுப்பதிவு இல்லாமல் இந் நிதியுடன்கூடிய சிறப்பு எடுப்புரிமைக் கணக்குப் பதிவுகள் உறுப்பு நாடுகளுக்குக் கிடைக்கின்றன. உறுப்பு நாடுகள் இவ்வுரிமையின்கீழ் அவற்றின் எந்தப் பண இருப்பிலிருந்தும் செலாவணியை எடுத்துக் கொள்ளலாம். பாதகச் செலுத்து நிலையின்போது சிறப்பு எடுப்பு உரிமையின்கீழ் ஒரு பகுதியை மாற்றவியலும் செலாவணிக்கு மாற்றிக் கொள்ளலாம். தனது பண இருப்பின் நிலையை மாற்றிக் கொள்ள மற்றோர் உறுப்பு நாட்டின் ஒப்புதலுடன் சிறப்பு எடுப்புரிமையை அம் மற்றொரு நாட்டுச் செலாவணிக்கு மாற்றிக் கொள்ளலாம். (எ.கா.): அமெரிக்க டாலர்களின் இருப்பை மிகுதியாக்கிக்கொள்ள விரும்பும் ஒரு நாடு அமெரிக்க நாட்டுடன் அல்லது வேறு நாடுகளுடன் டாலர்களுக்காக அதன் சிறப்பு எடுப்புரிமை சிலவற்றை மாற்றிக் கொள்ளலாம். மிகுதியான டாலர்கள் வைத்திருப்பதாக ஒரு நாடு உணர்ந்தால் சிறப்பு எடுப்புரிமைக்காக அவ்வதிகமான டாலர்களை மாற்றிக் கொள்ளலாம். இவ்வனைத்து மாற்றுக்களும் சில குறிப்பிட்ட விதிகளின்படி நடைபெறுகின்றன. இச் சிறப்பு எடுப்பு உரிமைகள் யாவும் ஒரு நாட்டின் நீரகக் காப்பிருப்புக்களில் பொன் போலவே இருக்கின்றன. ஆகவே, அவை 'தாள் பொன்' (Paper Gold) என்று அழைக்கப்படுகின்றன.

## புனரமைப்பு, வளர்ச்சிக்குமான பன்னாட்டுப் பாங்கு
## (International Bank for Reconstruction and Development)

புனரமைப்பு, வளர்ச்சிக்குமான பன்னாட்டுப் பாங்கு அல்லது உலகப் பாங்கு என்பது பன்னாட்டுப் பண நிதி (I. M. F.) யைப்

போன்று பிரிட்டன் ஊட்ஸ் ஒப்பந்தத்தின் (Bretton Woods Agreement) விளைவாகத் தோன்றியதாகும். இப் பாங்கு 1946ஆம் ஆண்டில் தொடங்கப்பட்டது. அயல் நாட்டு மாற்று நிலைப் பேராக்கத்தை எய்துவதிலும் மாற்றுக் கட்டுப்பாடுகளை நீக்குவதிலும், குறுங்காலக் கடன்கள் அளிப்பதன்மூலம் ஓர் உறுப்பு நாட்டின் அயல் நாட்டுச் செலுத்து நிலைகளில் உள்ள சமநிலையற்ற தன்மையைச் சரி செய்வதிலும், பன்னாட்டுப் பண நிதி (I. M. F.) ஈடுபட்டுள்ளதைப்போன்று புனரமைப்பு, வளர்ச்சிக்குமான பன்னாட்டுப் பாங்கு (I. B. R. D.), உறுப்பு நாடுகள் தங்களது உற்பத்தி வளங்களைப் பெருக்கிக் கொள்வதற்காக நீண்ட கால மூலதனத்தை அளிக்கிறது. பன்னாட்டுப் பண நிதியில் உள்ள உறுப்பு நாடுகள் மட்டுமே புனரமைப்பு, வளர்ச்சிக்குமான பன்னாட்டுப் பாங்கில் உறுப்பினர்களாக இருக்கலாம்.

## புனரமைப்பு, வளர்ச்சிக்குமான பன்னாட்டுப் பாங்கின் நோக்கங்கள்

தமது உறுப்பு நாடுகளின் புனரமைப்பு, வளர்ச்சிக்குமான உற்பத்தி வளங்களைப் பெருக்கிக் கொள்ளும் பொருட்டு நீண்ட கால முதலீடு அளிப்பதே இப் பன்னாடுப் பாங்கின் அடிப்படை நோக்கமாகும். தனது வளங்களிலிருந்து கடன் வழங்குவதன் மூலமும், அயல் நாட்டு முதலீடுகளை ஊக்குவிப்பதன்மூலமும் இப் பாங்கு நீண்ட கால மூலதனத்தை அளிக்கிறது. ஆரம்ப ஆண்டுகளில் சில உறுப்பு நாடுகள் அவற்றின் போர்க் காலப் பொருளாதார நிலைமைகளிலிருந்து அமைதிக்கால நிலைமைக்கு மாற்றிக் கொள்ளும்பொருட்டு இப் பன்னாட்டுப் பாங்கு துணை புரிந்தது. பொருளாதார முன்னேற்றத்தில் பின்தங்கிய நாடுகளுக்கும் இப்பொழுது இப் பன்னாட்டுப் பாங்கு உதவிபுரிகிறது. உறுப்பு நாடுகளிடையே முதலீடுகளைப் பெருக்குவதன்மூலம் பன்னாட்டு வணிகத்தில் ஒரு விரிவையும், முறையான, ஒழுங்கான ஏற்பாட்டையும் இப் பாங்கு அளிக்கிறது. நாடுகளிடையே பன்னாட்டு வாணிகத்தை ஊக்குவிப்பதும் இப் பன்னாட்டுப் பாங்கின் மற்றொரு நோக்கமாகும்.

## புனரமைப்பு, வளர்ச்சிக்குமான பன்னாட்டுப் பாங்கின் முதல்

தொடக்கத்தில் இப் பாங்கில் அனுமதிக்கப்பட்ட மூலதனம் ஒரு லட்சம் டாலர்கள் முகப்பு மதிப்புள்ள பங்குகளாகப் பிரிக்கப்

பட்டு 10 ஆயிரம் கோடி டாலர்களாக இருந்தன. உறுப்பு நாடுகள் ஒவ்வொன்றுக்கும் அது முதலீடு செய்யும் திறனுக்குகந்த வாறு இப் பங்குகள் வழங்கப்பட்டிருக்கின்றன. 1959ஆம் ஆண்டில் அனுமதிக்கப்பட்ட மூலதனம் 21 ஆயிரம் கோடி டாலர்களாக உயர்த்தப்பட்டது. அதற்குகந்தவாறு உறுப்பு நாடுகளின் பங்கு வரித் தொகையும் உயர்த்தப்பட்டது. இப்பொழுது அமெரிக்காவின் பங்கு வரித் தொகை 63,500 கோடி டாலர்கள்; பிரிட்டன் 26,000 கோடி டாலர்கள், இந்தியா 8,000 கோடி டாலர்கள்; ஜப்பான் 6,660 கோடி டாலர்கள் ஆகும்.

தொடக்கத்தில் ஒவ்வொரு நாடும் அது பெற்றிருக்கும் மூலதனத் தொகையில் 20 சதவிகிதத்தைச் செலுத்த வேண்டும். அதாவது இவ்விருபது சதவிகிதத்தில் 18 சதவிகிதத்தை அந் நாட்டுச் செலாவணியிலும் பாக்கி 2 சதவிகிதத்தைப் பொன்னு கவும் செலுத்தவேண்டும். இவ்வாறு செலுத்தப்பட்ட மூலதனம் உறுப்பு நாடுகளுக்குக் கடன் வழங்க ஏதுவாக அமைந்துள்ளது. எந்த நாட்டுச் செலாவணியைக் கடனுகக் கொடுக்க வேண்டியிருந் தாலும் அக் கடன் கொடுக்கப்படுவதற்குமுன் அந் நாட்டின் முன் அனுமதி தேவைப்படுகிறது. உறுப்பு நாடுகளின் பங்கு வரித் தொகையில் எஞ்சியுள்ள 80 சதவிகிதத்தையும், முதலீடு செய்வ தற்காகப் பாங்கு விரும்பும்போதோ, தொழிலில் பாங்குக்கு நட்டம் ஏற்படும்போதோ செலுத்தும்படி இப் பன்ஞட்டுப் பாங்கு கேட்கலாம். கடன் அளிக்கப்படுவதற்காக ஒரு நாட்டுச் செலாவணி தேவைப்படும்பொழுது அந் நாட்டு மூலதன அங்காடியில் பத்திரங்களை விற்றுத் தேவைப்பட்ட செலாவணிகளை வாங்கிக் கொள்ளலாம். ஆனுல், அந்தந்த நாட்டின் இசைவின் பேரிலேயே அவ்விற்பனைகள் நிகழலாம். பல நாடுகளில் இவ்விதப் பத்திரங்களை பாங்கு வெளியிட்டிருக்கிறது.

## பன்னுட்டுப் பாங்கின் செயல் முறைகள்

தனது சொந்த நிதியிலிருந்து, தனது உறுப்பு நாடுகளின் மூலதன அங்காடிகளில் விற்கப்படும் பத்திரங்கள்மூலம் கிடைக்கும் நிதிகளிலிருந்தும் உறுப்பு நாடுகளுக்குப் பாங்கு கடன் வழங்குகிறது. மற்ற கடன் கொடுப்பவர்களுடன் பங்கேற்றுக் கொண்டு முறையாகக் கொடுக்கப்படும் கடன்களுக்கு இப் பாங்கு உத்தரவாதம் அளிக்கிறது. உறுப்பு நாடுகளின் அரசுகள், மையப் பாங்குகள், விவசாய, தொழில் நிறுவனங்களுக்குக் கடன் வழங்குதல், பங்கேற்றல், உத்தரவாதமளித்தல் யாவும் இப் பாங்கால் மேற்கொள்ளப்படுகின்றன. உறுப்பு நாடுகளின்

அரசு, மையப் பாங்கு அல்லது அதற்கிணையான ஏதாவதொரு அமைப்பு அளிக்கும் உத்தரவாதத்தின்பேரில் பாங்கு தனியார்களுக்குக் கடன் வழங்கும்.

## கடன் அளிப்பதற்குரிய நிபந்தனைகள்

சில குறிப்பிட்டுள்ள திட்டங்களுக்கு, அத் திட்டங்கள் சிறந்தன, உகந்தன என்று அவை தொடர்புற்ற வல்லுநர்களால் அளிக்கப்படும் அறிக்கையின்மீதுதான் கடன்கள் வழங்கப்படுகின்றன. எக் காரணங்களுக்காகக் கடன்கள் வழங்கப்பட்டனவோ, அக் காரணங்களுக்கே உறுப்பு நாடுகள் அக் கடன்களைப் பயன்படுத்த வேண்டும். உறுப்பு நாடுகளால் எச் செலவாணியில் எவ் விகிதத்தில் கடன் வேண்டப்படுகிறதோ அச் செலாவணியில் அவ் விகிதத்திலேயே கடன் வழங்கப்படுகிறது. வேறு வழிகளில் உறுப்பு நாடுகளுக்குக் கடன் கிடைக்காது என்றால்தான் தகுந்த நிபந்தனைகளின்பேரில் இவ்வுதவியைப் பாங்கு அளிக்கிறது. சொந்த நாட்டுப் பொருள்களையும், பணிகளையும் வாங்கச் சொந்த நாட்டுச் செலாவணியிலேயே கேட்கப்படும் கடன்கள் பொதுவாக மறுக்கப்படுகின்றன.

கடன் வழங்கப்படும்போது வட்டி விகிதம், கடன் காலம், கடன் திரும்ப அளிக்கப்படும் தவணைகள் எத்தனை, ஒவ்வொரு தவணைக்கும் செலுத்தப்படும் தொகையின் அளவு, கடன் தவணைக் காலம் முதலானவற்றைப் பாங்கு அதன் விருப்பப்படியே நிர்ணயிக்கும். இப் பாங்குக் கடன்களின் வட்டி விகிதம் பொதுவாக 3-லிருந்து 5 சதவிகிதம் வரையில் வேறுபட்டிருக்கிறது. கடன் பெற்ற நிதியிலிருந்து கடன் அளிப்பதற்கும், தனியார்கள் முதலீடுகளுக்கு உத்தரவாதமளிப்பதற்கும், இவ் வட்டி விகிதத்துக்கு மேலும் 1-லிருந்து $1\frac{1}{2}$ சத விகிதம் கழிவு (Commission) பாங்கு விதிக்கிறது.

## கடன்களுக்குரிய நிதிகள்

பாங்குத் தொகைகள் மூலம் கிடைக்கக் கூடிய செலாவணிகள் பொன், இலாபங்கள், கடன் பெறுதல் முதலானவைகளே கடன் அளிப்பதற்குரிய நிதிகளாகும். பொதுவாக ஒரு நாட்டுச் செலாவணியைக் கடனாக அளிக்கும்போது அந் நாட்டின் முன் அனுமதி கிடைத்திருக்க வேண்டும். ஆனால் இப்பொழுது உறுப்பு நாடுகள் அவற்றின் செலாவணிகளைப் பாங்கின் விருப்பத்திற்கேற்பப் பயன்

படுத்தும் வகையில் அளிக்கின்றன. ஆனால் ஒரு நாட்டின் மூலதன அங்காடியில் பணம் திரட்ட வேண்டியிருந்தால்தான் அந் நாட்டின் அனுமதி இப்பொழுது தேவைப்படுகிறது.

கடன் அளிப்பதற்காக ஒரு நாட்டிலிருந்து கடனாக வாங்கியச் செலாவணி வேறொரு நாட்டுச் செலாவணியாக மாற்றப்படும் பொழுது அவ்விரு நாடுகளின் அனுமதிகளும் தேவைப் படுகின்றன. (எ.கா.) இப் பாங்கு அமெரிக்க மூலதன அங்காடியில் கடனாகத் திரட்டப்பட்ட செலாவணிப் பணத்தை (டாலர்களை) வேறோர் உறுப்பு நாட்டுக் கடனாக சுவிஸ் ஃபிரான்கு களில் அளிக்கும்பொருட்டு, சுவிஸ் ஃபிராங்குகளாக மாற்ற முற்படுவதற்குமுன் அமெரிக்கா, சுவிட்ஸர்லாந்து ஆகிய நாடு களின் முன் அனுமதியைப் பெற்றிருக்க வேண்டும். ஒரு நாட்டுக்குக் கடன் வழங்கப்பட்டுவிட்டால் அந் நாடு அச் செலாவணியை எந்த நாட்டில் வேண்டுமானாலும் செலவு செய்யலாம்.

## உத்தரவாதங்கள்
## (Guarantee)

உத்தரவாதங்கள் வழங்குவதன்மூலம் ஒரு நாட்டிலுள்ள தொழிலகங்கள் வேறொரு நாட்டிலுள்ள முதலீட்டாளர்களிட மிருந்து கடன் பெற இப் பாங்கு துணை புரிகிறது. அயல் நாடு களில் இருக்கும் முதலீடுகளுக்கு ஏற்படும் இடர்ப்பாடுகளைப் பாங்கு உத்தரவாதம் குறைத்து மேலும் அவ்வித முதலீடுகளை ஊக்கு விக்கிறது. இத் தொழிலைச் செய்வதற்குமுன் பாங்கு எந்த நாட்டு அங்காடியில் நிதி திரட்டுகிறதோ, எந்த நாட்டுச் செலா வணியில் கடன் வழங்குகிறதோ, அவ்விரு நாடுகளின் அனுமதி களைப் பெற்றிருக்க வேண்டும். (எ.கா.): பிரிட்டனில் உள்ள முதலீட்டாளர், ஜெர்மன் மார்க்குகளில் இந்திய நிறுவனம் ஒன்றுக்கு வழங்கப்படும் கடனுக்கு, பாங்கு, உத்தரவாதம் அளிக்கும்முன் பிரிட்டன், ஜெர்மனி ஆகிய இரு நாடுகளின் அனுமதிகளையும் பெற்றிருக்க வேண்டும்.

## மற்ற பன்னாட்டு நிதி நிறுவனங்கள்

உறுதியான நிபந்தனைகளின்மீது நீண்டகாலக் கடன்களை அளிப்பதில் மட்டுமே பன்னாட்டுப் பாங்கின் செயல்கள் அமைந் துள்ளன. ஆனால் நாடுகள் எளிய நிபந்தனைகளின்பேரில் கடன்கள் வாங்க முற்படுகின்றன. இத் தேவையை நிறைவேற்ற

உலக பாங்கைச் சார்ந்த இரு நிறுவனங்கள் அமைக்கப்பட்டன முதன் முதலாக 1956ஆம் ஆண்டில் பன்னாட்டு நிதிக் கூட்டுரு (International Finance Corporation) ஏற்படுத்தப்பட்டது. பிறகு 1960ஆம் ஆண்டில் பன்னாட்டு வளர்ச்சிச் சங்கம் (International Development Association) அமைக்கப்பட்டது. இவ்விரண்டு கழகங்களும் வளர்ச்சிக் குன்றிய நாடுகளுக்கு நிதி வழங்குவதற்கே அமைக்கப்பட்டன.

## பன்னாட்டு நிதிக் கூட்டுரு (International Finance Corporation)

பன்னாட்டு நிதிக் கூட்டுரு அரசினர் உத்தரவாதமின்றியும் அநேக பாதுகாப்புகள் இன்றியும், தனியார் தொழில் நிறுவனங்களுக்குக் கடன்கள் அளிக்கின்றன. தொடக்க காலத்தில், கடன் பெறும் நிறுவனங்களின் முதல்களில் முதலீடுகள் செய்ய இக் கழகங்கள் அனுமதிக்கப்படவில்லை. ஆனால், 1969ஆம் ஆண்டில் இதன் சட்டம் திருத்தி அமைக்கப்பட்ட பிறகு அத் தொழில் நிறுவனங்களின் பங்குத் தொகைகளை வாங்கலாம். மேலும் பங்குகளை மொத்தமாக வாங்கியும் விற்கலாம்.

## பன்னாட்டு நிதிக் கூட்டுருவின் கைவளங்கள் (Resources)

இக் கூட்டுருவின் அதிகாரம் பெற்ற முதல், 1,000 கோடி டாலர்கள் ஆகும். 1962ஆம் ஆண்டு ஜூன் மாதம் இறுதிக்குள் 965 கோடி டாலர்களை உறுப்பு நாடுகள் கட்டிவிட்டன. உறுப்பு நாடுகளிடமிருந்து கூடுதல் நிதியைக் கடனாகப் பெறலாம். தொழில் நிறுவனங்களுக்குக் கடன் அளிப்பதால் கிடைக்கக்கூடிய ஈடுகளைத் தனி முதலீட்டாளர்களிடம் (Private investers) விற்று நிதியினைப் பெற்று மேலும் கடன் அளிக்கும் திறனை அதிகரித்துக் கொள்ளுகிறது.

## பன்னாட்டு நிதிக் கூட்டுருவின் செயல்கள்

புதிதாகத் தொழில் தொடங்க முற்படும் உள்நாட்டு, அயல் நாட்டு முதலீட்டாளர்களுக்கு இந் நிதிக் கூட்டுரு கடன் வழங்குகிறது. முதலீடு செய்ய விரும்பும் தனியார்கள், மொத்த மூலதனத்தில் பாதிக்குமேல் முதலீடு செய்ய வேண்டும். ஐந்திலிருந்து பதினைந்து ஆண்டுக் காலத் தவணைகளில் கடன்கள் அளிக்கப்

படுகின்றன. ஆனால் இக் கடன்கள் தவணை முறையில் திரும்பக் கொடுக்கப்படலாம். இக் கடன்களில் இடர்ப்பாடுகள் மிகுதியாக உள்ளதால் இவற்றின் வட்டி விகிதங்களும் சிறிது கூடுதலாகவே இருக்கும். இக் கூட்டுரு எச் செலாவணியிலும் கடனை அளிக்கும், திரும்பப் பெற்றுக் கொள்ளும். ஆனால் பொதுவாக அமெரிக்க டாலர்களிலேயே கடன்களை அளித்து அச் செலாவணியிலேயே அக் கடன்களைத் திரும்பப் பெற்றுக் கொள்ளுகிறது.

நிறுவனங்களின் நேர்மை முதலில் (Equity Capital) இப் பன்னாட்டு நிதிக் கூட்டுருவின் பங்குத் தொகை அதிகரித்துக் கொண்டே போகிறது. இப் போக்கு வளர்ச்சியுறும் நாடுகள் புதிய தொழில்கள் தொடங்குவதற்கும், ஏற்கனவே தொடங்கப் பட்ட தொழில்கள் நன்கு விரிவடைவதற்கும் பேருதவியாய் இருக்கிறது. பங்கு அங்காடிகள் முழுவதும் வளர்ச்சியடையா நாடுகளில் இக் கூட்டுருவின் 'பங்குகள் வாங்கி விற்கும் தொழில்' (Underwriting operations) பேருதவியாய் விளங்குகிறது.

## பன்னாட்டு வளர்ச்சிச் சங்கம்
## (International Development Association)

வளர்ச்சியடையா நாடுகளுக்குத் துணைபுரியும் பொருட்டுப் பன்னாட்டு வளர்ச்சிச் சங்கம் அமைக்கப்பட்டது. பொதுவாக வழங்கப்படும் கடன்களில் ஏற்படும் இடுக்கண்கள் இல்லாமல் மிகவும் எளிய நிபந்தனைகளின்பேரில் இச் சங்கம் கடன் வழங்குகிறது.

## பன்னாட்டு வளர்ச்சிச் சங்கத்தின் கைவளங்கள்
## (Resources)

இச் சங்கத்தின் அதிகாரம் பெற்ற மூலதனம் ஓர் ஆயிரம் கோடி டாலர்களாகும். இம் மூலதனத்தை உறுப்பு நாடுகள் தவணை முறையில் கட்டுகின்றன. உறுப்பு நாடுகள் இரண்டு வகைகளாகப் பிரிக்கப்பட்டிருக்கின்றன. முதல் பிரிவில் வலிமை பொருந்திய வளர்ச்சியடைந்த நாடுகள் உள்ளன. அவை தங்களுடைய பங்குத் தொகைகளைப் பொன்னாகவே செலுத்த வேண்டும். இரண்டாவது பிரிவில் வளர்ச்சி அடையா நாடுகள் உள்ளன. இவை தங்கள் பங்குத் தொகையில் 10 சதவிகிதத்தைப் பொன்னாகவும், பாக்கியுள்ள 90 சதவிகிதத்தைத் தங்கள் நாட்டுச் செலாவணிகளிலும் செலுத்தலாம். மற்ற உறுப்பு நாடுகளின்

செலாவணிகளை அவற்றின் இசைவின்பேரில் துணைப் பங்காகப் பெறுவதற்கு இப் பன்னாட்டு வளர்ச்சிச் சங்கத்திற்கு அதிகாரம் வழங்கப்பட்டிருக்கிறது.

## பன்னாட்டு வளர்ச்சிச் சங்கத்தின் செயல்கள்

உறுப்பு நாடுகளின் அரசுகளுக்கும், தனியார், பொதுத்துறை நிறுவனங்களுக்கும், பன்னாட்டு பொது, வட்டார அமைப்பு களுக்கும் இச் சங்கம் கடன் அளிக்கிறது. ஒரு வட்டாரத்திலுள்ள முழு வளர்ச்சியடைய வேண்டிய திட்டங்களுக்கு அவற்றின் உற்பத்தித் திறனைக் கவனிக்காமல், இச் சங்கம் கடன் வழங்கு கிறது. குடிநீர், வாழ்க்கைநல ஏற்பாடு, வீடு, கல்வி, ஆகியவை சார்ந்த திட்டங்களும் இச் சங்கத்திலிருந்து கடன் பெறத் தகுதி உடையன. வளர்ச்சிக்கான சிறப்புக்கள் இல்லாத திட்டங்கள் பொருளாதார அடிப்படையில் வகையுடையதாக இருந்தால்தான் கடன் பெறத் தகுதியுண்டு. உலகப் பாங்கு விதிக்கும் நிபந்தனை களைவிட எளிய நிபந்தனைகளின்பேரில்தான் இச் சங்கம் கடன் வழங்குகிறது. இச் சங்கம் வட்டி இல்லாமலோ, குறைந்த வட்டி விகிதத்திலோ கடன் வழங்குகிறது. கடன்கள் பொதுவாக நீண்ட காலத்திற்கும், திரும்பக் கொடுக்கும் தவணைத் தொகை குறைவாகவும் இருக்கிறது. கடன் வழங்கப்பட்ட பல நாட் களுக்குப் பின்னரே திரும்பக் கொடுக்க வேண்டிய தவணைகள் ஆரம்பமாகின்றன.

## செலாவணி மண்டலங்கள்
## (Currency Areas)

போர்க் காலத்துக்குப் பிறகு பன்னாட்டுப் பொருளாதாரக் கூட்டுறவு பல வடிவங்களில் ஏற்பட்டிருக்கிறது. அவற்றுள் ஒரு வகை, பண நிதிச் சிக்கல்களைத் தீர்ப்பதற்குத் தோன்றிய மேற் கண்ட பன்னாட்டு நிறுவனங்களாகும். மற்றொருவகை, செலாவணி வட்டாரங்களின் செயல்களாகும். இதன்படி பல நாடுகள் ஒரே செலாவணியில் கட்டுண்டு தங்களுக்கிடையேயுள்ள கணக்குகளை அச் செலாவணியில் தீர்த்துக் கொள்வதாகும். இவ்வகையில் 'ஸ்டெர்லிங் மண்டலம்' (Sterling Area) ஒன்றாகும். இது இரண்டாம் உலகப் போருக்கு முன் தோன்றியபோதிலும், இரண்டாம் உலகப் போர்க் காலங்களிலும் அதற்குப் பின்னருமே நெருங்கிச் செயல்பட்டது. 'ஸ்டெர்லிங் மண்டலம்' வேண்டு மென்றே கூட்டு முயற்சியால் ஏற்பட்டதல்ல, ஆனால் பல நாடு

களின் பொது நோக்கங்கள், நன்மைக்காகவும், பொறுப்புகளைச் சரிசெய்து கொள்வதற்காகவும் இம் மண்டலங்கள் தன்னிச்சை யாகத் தோற்றுவிக்கப்பட்டன.

## ஸ்டெர்லிங் மண்டலம்
## (Sterling Area)

1931ஆம் ஆண்டு செப்டம்பர் மாதத்திலிருந்து பிரிட்டன் பொன் திட்டத்திலிருந்து விடுபட்டது. மேலும் பல நாடுகள் பொன்னுடன்கூடிய தங்கள் செலாவணித் தொடர்பை நீக்கிக் கொண்டன. ஆனால் ஸ்டெர்லிங்குக்கு (Sterling) ஈடாகத் தங்கள் செலாவணிகளின் மதிப்பை நிலைநாட்டிக் கொள்ளத் தீர்மானித்தன. இச் சேர்க்கை நாடுகளை ஸ்டெர்லிங் மண்டலம் என்றழைக்கிறோம்.

## உறுப்பு நாடுகள்

இயல்பான ஒப்பந்தத்தின் அடிப்படையில் ஸ்டெர்லிங் மண்டலம் தோன்றியதன்று. உறுப்பினர்களின் எண்ணிக்கையும் வரையறுக்கப்படவில்லை. எந்த நாடு ஒன்று ஸ்டெர்லிங் மண்டலத் திற்குள் சேர்ந்து கொள்வது நலம் என்று கருதுகிறதோ, அது அம் மண்டலத்துக்குள் சேர்ந்து கொள்ளலாம். அதுபோல ஸ்டெர்லிங் மண்டலத்திலிருந்து பிரிந்துவிடுவது நலமெனக் கருதினாலும் அம் மண்டலத்திலிருந்து அந்த நாடு பிரிந்து கொள்ளலாம். கனடா, நியூஃபவுண்டுலாந்து, ஹாங்காங், நீங்கலாகப் பிரிட்டனின் பேரரசுக்கு உட்பட்ட மற்ற நாடுகளும், ஸ்காண்டிநேவியன் நாடுகள், 5 தென் அமெரிக்கநாடுகள், எகிப்து, எஸ்டோனியா, போர்ச்சுகல், ஸ்பெயின், ஜப்பான் ஆகியவை இம் மண்டலத்தில் உறுப்பு நாடுகளாகும். இப்பொழுது காமன்வெல்த்தில் அடங்கிய பர்மா, ஐஸ்லாந்து, ஜோர்டான், குவைட், லிபியா, பிரிட்டன் டிரஸ்ட் புரொடெக்டரேட்ச் புரொடெக்டட் ஸ்டேட்ஸ், டிரஸ்ட் டெரிடரீஸ் ஆகியவற்றைத் தவிர மற்ற நாடுகள் எல்லாம் இந்த ஸ்டெர்லிங் மண்டலத்துக்குள் அடங்கும்.

## போருக்கு முற்காலம்

இரண்டாம் உலகப் போருக்கு முன்னர் ஸ்டெர்லிங் மண்டலத்தின் அயல் நாட்டு மாற்றுக் கொள்கைகளின் சிறப்பியல்பு களாவன:

1. உறுப்பு நாடுகள் தங்கள் செலாவணிகளின் அதிகார மாற்று விகிதத்தை ஸ்டெர்லிங்குக்குகந்தவாறு வைத்திருந்தன. அதிகமாக ஸ்டெர்லிங்குகள் குவியாதிருக்கும் பொருட்டும் அல்லது குறையாதிருக்கும் பொருட்டும் உறுப்பு நாடுகள் தங்கள் மாற்று விகிதங்களை வேறுபடுத்திக் காட்டலாம். ஆனல் இவ்வுரிமையை எந்த நாடும் சரியாகப் பயன்படுத்தவில்லை.

2. தமது செலாவணிக்கும், ஸ்டெர்லிங்குக்கும் சமநிலை ஏற்படுத்த ஒவ்வொரு நாடும் ஸ்டெர்லிங் இருப்புக்களை வைத்திருந்தன. இந்த இருப்புக்களில் இங்கிலாந்து பாங்கு, இலண்டன் பங்குகளில் உள்ள நிலுவைகளும், ஸ்டெர்லிங் உண்டியல்கள், ஈடுகள், மற்ற பாங்கு முதலீடுகளும் அடங்கும்.

3. ஸ்டெர்லிங்கின் பொன் மதிப்பு ஏற்ற இறக்கத்திற்கேற்றவாறு பொன் திட்ட அடிப்படையில் உள்ள செலாவணி மதிப்பின் ஏற்ற இறக்கத்துக்கும் அனுமதிக்கப்பட்டது. பிரிட்டனில் செயல்படும் மாற்றுச் சமநிலைக் கணக்கின்மூலம் குறுங்கால வேறுபாறு தவிர்க்கப்படுகிறது.

4. ஸ்டெர்லிங் மண்டலத்திலடங்கிய அயல் நாட்டு மாற்று நடவடிக்கைகள் யாவும் இலண்டன் மூலமாக நடைபெறுகின்றன. ஒரு நாடு தனது சொந்தச் செலாவணி, மற்ற டாலர்கள், ஃபிராங்குகளைக் கொண்டும் பவுண்டுகளை வாங்கிற்று அல்லது விற்றது.

## போர்க் காலம்
## (War Time)

இரண்டாம் உலகப் போர் மூண்டவுடன் ஸ்டெர்லிங் மண்டலத்தின் நிலைமை மாறிற்று. இம் மண்டலத்திற்குள் செல்லுகள் தடையின்றிச் செலுத்தப்பட்டன. ஆனல் இம் மண்டலத்துக்கு வெளியில் உள்ள நாடுகளுக்குரிய இச் செல்லுகளுக்கு மிகுந்த தடைகள் விதிக்கப்பட்டன. பிரிட்டன் சிறந்த மாற்றுக் கட்டுப்பாட்டைப் புகுத்தியது. அதுபோல் இம் மண்டலத்தில் அடங்கிய நாடுகளும் பிரிட்டனின் வழியைப் பின்பற்றி மாற்றுக் கட்டுப்பாட்டை விதித்தன. அயல் நாடுகளிலிருந்து வரும் இறக்குமதிகள் அனைத்துக்கும் கடுமையான தடைகள் விதிக்கப்பட்டன.

## சிறப்பியல்புகள்

1. ஸ்டெர்லிங் மண்டலத்துக்குள் செல்லுகள் யாவும் தங்கு தடையின்றி ஸ்டெர்லிங் மூலமாகவே செலுத்தப்பட்டன. ஆனல் சில நாடுகள் மூலதனப் பெயர்ச்சிக்குத் தடை விதித்தன.

2. ஸ்டெர்லிங் மண்டலத்துக்குள் கிடைத்தற்கு அருமை யுடைய செலாவணி வருவாய்கள் அனைத்தும்–டாலர்கள்–பொன் மைய சேமிப்புத் தொகுதிக்குச் (Central Pool) சென்றுவிட வேண்டும். மாற்றுக் கட்டுப்பாடு விதிக்கப்பட்டிருக்கும் நாடுகள் தாங்கள் பெற்ற அந்நியச் செலாவணிகளை அதிகாரிகளிடம் கொடுத்துத் தங்கள் நாட்டுச் செலாவணிகளைப் பெற்றுக்கொள்ள வேண்டும். இவ்வதிகாரிகள் கிடைத்தற்கு அருமையுடைய செலாவணி வருவாய்களை மைய சேமிப்புத் தொகுதிக்கு அனுப்பி விடுகின்றனர். மாற்றுச் சமநிலைக் கணக்குமூலம் 'டாலர் சேமிப்புத் தொகுதி' அமைக்கப்பட்டது.

3. தேவைக்குகந்தவாறு உறுப்பு நாடுகள் கிடைத்தற் கருமையான செலாவணிகளை வாங்கிக் கொள்ளலாம். மாற்றுக் கட்டுப்பாட்டின்படி டாலர் மண்டலங்களிலிருந்து இன்றியமை யாதப் பொருள்களின் இறக்குமதிகளுக்குக்கூடத் தடை விதிக்கப் பட்டுள்ளதால் அவ்விதமான காரணங்களுக்குக் கிடைத்தற் கருமையான செலாவணிகள் அளிக்கப்பட்டன.

4. அயல் நாட்டு மாற்றுக்களடங்கிய மூலதனப் பெயர்ச்சியும், மிகுந்த தடைக்குட்பட்டது.

## போருக்குப் பிற்காலம்
## (Post—War Period)

போருக்குப் பிற்காலத்தில் ஸ்டெர்லிங் மண்டலத்தின் செயல்களில் சில வேறுபாடுகள் தோன்றின. போர் முடிந்த பிறகும் சில மாற்றங்களுடன் மாற்றுக் கட்டுப்பாடு தொடர்ந் திருக்கிறது. போரின்போது ஸ்டெர்லிங் மண்டல நாடுகள் பிரிட்டன் அரசுக்கு அதிகமான போர்ச் செலவுகளை ஸ்டெர்லிங்கு களிலேயே செய்ய வேண்டியிருந்ததால் அதிகமான ஸ்டெர்லிங் இருப்புக்களைச் சேர்க்க வேண்டியிருந்தன. போருக்குப் பிறகு இந் நாடுகள் ஸ்டெர்லிங் இருப்புக்களைக் கொண்டு பிரிட்டனிட மிருந்து சரக்குகள் வாங்கவேண்டும் அல்லது டாலர்களாக மாற்றி டாலர் மண்டலத்திலுள்ள நாடுகளிலிருந்து, சரக்குகளை வாங்க வேண்டும். டாலர் நாடுகள் பிறகு, பிரிட்டனிடமிருந்து சரக்குகள் வாங்க இந்த ஸ்டெர்லிங்குகளைப் பயன்படுத்திக் கொள்ளவேண்டும். இவ்விரு விகிதங்களிலுமே பிரிட்டன் தனது சரக்குகளை ஏற்றுமதி செய்து அதன் வளங்கள் வரண்டுவிடும் ஆதலால் இவ்விரு நடவடிக்கைகளையுமே பிரிட்டன் விரும்பவில்லை,

உறுப்பு நாடுகளிடையேயுள்ள ஒத்த ஒப்பந்தங்களின்பேரில் ஸ்டெர்லிங் இருப்பு வைத்திருக்கும் நாடுகள் நீண்ட காலத்தில் அந்த இருப்பைப் பயன்படுத்திக் கொள்ள அனுமதிக்கப்பட்டன.

## தற்கால நிலைமை

மூலதன நடவடிக்கைகளில் சில கட்டுப்பாடுகளைத் தவிர ஸ்டெர்லிங் மண்டலத்துக்குள் நிபந்தனையின்றி ஸ்டெர்லிங்குகள் மாற்றப்படலாம். இம் மண்டலத்துக்குள் அடங்கிய நாடுகளுக்கிடையே உள்ள செல்லுகள்யாவும் ஸ்டெர்லிங்குகளிலேயே நடைபெறலாம். இம் மண்டலத்துக்கு வெளியே உள்ள செல்லுகள் யாவும் பிரிட்டனின், உள்நாட்டுக் கட்டுப்பாட்டின்கீழ் உள்ளன. போருக்குப் பிற்பட்ட ஆரம்பக் காலங்களில் இம் மண்டலத்துக்குள் இறக்குமதி, தங்குதடையற்று, இறக்குமதி உரிமத்தின் பேரில் (Import license) நிகழ்ந்தது. இறக்குமதி அனுமதி அளிக்கும் போதே அதற்குரிய செல்லுகளுக்கும் அனுமதி அளிக்கப்படுகிறது. ஆகவே வாணிகத்தில் தடை இருக்கிறதே ஒழிய செல்லுகளில் தடையில்லை.

## செலாவணி மாற்றல்கள்
## (Currency Convertibility)

ஒரு செலாவணியைப் பெற்றிருப்பவர் தன் விருப்பப்படி அச் செலாவணியைக் கொண்டு பொன் அல்லது வேறு (டாலர்கள் போன்று) எந்த அந்நியச் செலாவணியாகவோ மாற்றிக் கொள்ளும்தன்மையே செலாவணி மாற்றல்கள் எனப்படும். அவ்வாறு பெறப்பட்ட பொன் அல்லது செலாவணியைப் பயன்படுத்துவதில் எவ்விதத் தடையும் இருக்கக் கூடாது. ஒரு நாட்டின் பண அதிகாரிகள் குறிப்பிட்ட ஒரு மாற்று விகிதத்தில் உள்நாட்டுச் செலாவணிக்கீடாகப் பொன் அல்லது அந்நியச் செலாவணியை வாங்கலாம் அல்லது அளிக்கலாம்.

## தேவையான நிபந்தனைகள்

சில நிபந்தனைகளுக்குட்பட்டுத்தான் ஒரு செலாவணி மாற்றப்படும்: 1. ஒரு நாட்டின் பண அதிகாரிகள் அயல் நாட்டு மாற்றுக்குத் தேவையான அந்நியச் செலாவணி, பொன் ஆகிய

வற்றை இருப்பாக வைத்திருக்கவேண்டும். அயல் நாட்டுச் செல்லுகளைச் செலுத்துவதற்குத் தேவையான அளவு இந்த இருப்புக்கள் இருத்தல் வேண்டும்.

2. மிகுதியான ஏற்றுமதிகளை ஏற்படுத்திக் கொள்ளக்கூடிய அளவில் ஒரு நாடு உற்பத்தித் திறன் பெற்றிருக்க வேண்டும். ஏற்றுமதி செய்வதன்மூலமாகத்தான் பொன் அல்லது பொதுவாக ஏற்றுக் கொள்ளக்கூடிய மாற்றுச் செலாவணிகளைப் பெறலாம்.

3. அயல் நாட்டுச் செல்லுகளில் ஒரு நாடு போதுமான இருப்பை வைத்திருத்தல் வேண்டும். தொடர்ச்சியான பாதக இருப்பானது இருப்புக்களில் வறட்சி ஏற்படுத்தி அதனை இல்லாமலேயே செய்துவிடும்.

4. உள்நாட்டு நிலைப் பேராக்கத்தின் பயனை ஒரு செலாவணி துய்த்தல் வேண்டும். பணவீக்கம் ஏற்பட்டால் மற்ற நாடுகளில் இருப்பதுபோல் இயல்பாகவே இருத்தல் வேண்டும். மற்ற நாடுகளில் இருப்பதைவிட பணவீக்கம் மிகுதியாக இருந்தால் அயல் நாட்டு வணிகத்தில் பாதக நிலைமையை ஏற்படுத்தி நாட்டுப் பண இருப்பு தீர்ந்துவிடும் நிலை ஏற்பட்டுவிடும்.

5. ஒரு நாட்டிலிருந்து திடீர் மூலதனப் பெயர்ச்சி ஏற்படா வண்ணம் அந் நாட்டில் அரசியல் நிலைபேறுடைமை இருத்தல் வேண்டும்.

## முழுவதும் அல்லது வரையறுக்கப்பட்ட மாற்றங்களுக்குரியன (Full or Limited Convertibility)

1. ஒரு நாட்டுக் குடிமக்களுக்கும், அயல் நாட்டினருக்குமிடையே உள்ள வணிக நடவடிக்கைகள் யாவும் தடையற்று நிகழவேண்டும். நாட்டிற்குள் வரும் இறக்குமதியும் மிகுதியாகத் தடை செய்யப்படுவதில்லை.

2. இந் நாட்டுக் குடிமக்களும், அயல் நாட்டினரும் தங்களிடம் இருக்கும் செலாவணிகளைப் பொன்னாகவோ பொதுவாக ஏற்றுக் கொள்ளக்கூடிய வேறு எந்த நாட்டுச் செலாவணியாகவோ மாற்றிக் கொள்ளலாம்.

3. இச் செலாவணி நடப்பு நடவடிக்கைகளுக்கும், மூலதன மாற்றங்களுக்கும் செலுத்தப்படலாம்.

4. இந் நாட்டின் பண அதிகாரிகள் பொன் அல்லது அந்நியச் செலாவணியை வாங்கும், விற்கும் விலையை நிர்ணயித்திருக்கிறார்கள்.

## வரையறுக்கப்பட்ட அல்லது ஒரு முகச் செலாவணி மாற்றம்
## (Limited or Partial Convertibility of Currency)

1. செலாவணியை ஒரு சிலர் மட்டுமே தடையின்றி மாற்றிக் கொள்ளலாம். (எ. கா.): ஸ்டெர்லிங் கணக்குகள் வைத்திருக்கும் அயல் நாட்டினர் அதாவது இலண்டனின் ஸ்டெர்லிங் கணக்குகள் வைத்திருக்கும் ஸ்டெர்லிங் மண்டலத்துக்கு வெளியில் உள்ள அரசு, மைய, வணிகப் பாங்குகள், தனியார்கள் அனைவரும் ஸ்டெர்லிங்கை டாலர்களாக மாற்றிக்கொள்ள அனுமதிக்கப் படுகின்றனர். ஆனால் உள்நாட்டினர் சில வரையறைகளுக்குட் பட்டே அவ்வாறு மாற்ற அனுமதிக்கப்படுகின்றனர்.

2. செலாவணி, நடப்பு, வணிக, நிதிச் செல்லுகளுக்கு மட்டுமே மாற்றிக் கொள்ளப்படலாம். ஆனால் மூலதனப் பெயர்ச்சிக்கு மாற்றிக் கொள்ளமுடியாது. ஆகவே மூலதன நடவடிக்கைகள் கடுமையான மாற்றுக் கட்டுப்பாட்டின்கீழ் உள்ளன.

3. ஒரு குறிப்பிட்ட தேதிக்குப் பிறகு பெற்ற செலாவணிகள் மட்டுமே தடையில்லா மாற்றத்திற்குரியன. அத் தேதிக்கு முன்னர் பெற்ற செலாவணிகள் சில கட்டுப்பாட்டுக்குட்பட்டு மாற்றப்படக் கூடும்.

இரண்டாம் உலகப் போரின்போது அனேக நாடுகள் கடுமையான மாற்றுக் கட்டுப்பாடுகளைப் புகுத்தி அவற்றின் செலாவணிகள் மாற்ற முடியாதவையாயின. போர் முடிந்து அதன் தொடர்ச்சியான காலங்களில் மாற்றுக் கட்டுப்பாட்டை நீக்கி அல்லது தளர்த்திக் கொள்ளும் நிலையில் இல்லாமல் செலாவணிகள் மாற்ற முடியா நிலைமையிலேயே தொடர்ந்திருந்தன. பல நாடுகளில் ஏற்பட்ட பலவிதச் செலாவணி நெருக்கடிகளும், தொழில் வீழ்ச்சிகளும் அவற்றின் பொருளாதார நிலைமையைப் பாதித்தன. 1950ஆம் ஆண்டுக்குப் பிறகுதான் சில நாடுகள்

முன்னேற்றப் பாதையில் இறங்கி அவற்றின் செலாவணிகள் மாற்றப் பெறும் தன்மையை எய்தின. 1958ஆம் ஆண்டின் இறுதியில் பிரிட்டன் முதலிய பல ஐரோப்பிய நாடுகள் தங்கள் செலாவணிகளை சில நிபந்தனைகளின்பேரில் பொன் அல்லது அமெரிக்க டாலர்களாகவோ, வேறு செலாவணிகளாகவோ மாற்றிக் கொள்ளலாம் என்று அறிவித்தன. (எ. கா.): ஸ்டெர்லிங் கணக்கை வைத்திருக்கும் அயல் நாட்டினர் எவ்விதத் தடையும் இன்றி அந்நியச் செலாவணிகளாகவோ, பொன்னாகவோ மாற்றிக் கொள்ளலாம். ஆனால், உள்நாட்டினர் அவ்வாறு மாற்றிக் கொள்ளமுடியாது.

## கடினமான (உறுதியான), மென்மையான செலாவணிகள் (Hard and Soft Currencies)

எளிதில் தங்குதடையின்றிப் பொன்னாக மாற்றப்படக்கூடிய செலாவணிகள் கடினமான அல்லது உறுதியான செலாவணிகள் (Hard Currencies) என்றும், அவ்வாறு மாற்றவியலாத செலாவணிகள் மென்மையான செலாவணிகள் (Soft Currencies) என்றும் அழைக்கப்படும். பொன் திட்டத்தின் வெளியேற்றத்திற்குப் பிறகு பொன்னாக மாற்றக்கூடிய செலாவணிகள் அதிகமாக நடைமுறையில் இல்லை. ஒரு செலாவணி உறுதித் தன்மையுடையது என்றால் அதன் தடையற்ற மாற்றவியலும் தன்மையையே குறிப்பதாகும். உறுதியான செலாவணியைத் தன்வசமுள்ள செலாவணிகளுக்கு மாற்றிக் கொள்ள எவரும் தயாராக இருக்கிறார்கள். மேலும் இச் செலாவணி பன்முக மாற்றலுக்குரிய செலாவணியாகும்.

சில நாடுகள் பல ஆண்டுகளாகத் தங்கள் அயல் நாட்டுச் செலுத்து நிலையில் மிகுந்த உபரியைப் பெற்றிருந்தன. இந் நாடுகள் தங்கள் நாட்டு ஏற்றுமதிகளுக்கு, இறக்குமதி செய்யும் கடனாளி நாடுகளின் செலாவணியை ஒரு குறிப்பிட்ட அளவுதான் ஏற்றுக் கொள்ளும். அந்த அளவுக்குமேல் பொன் அல்லது அவர்கள் நாட்டுச் செலாவணியையே ஏற்பர். அவர்கள் நாட்டுச் செலாவணிகளுக்கு மிகுந்த தேவை ஏற்பட்டு, அச் செலாவணிகள் பொதுவாக எச் செலாவணிகளுக்கும் மாற்றிக் கொள்ளப்படும். கடன் பெறும் நாடுகள் தங்கள் கடனைத் திரும்ப அடைப்பதற்குப் போதுமான இச் செலாவணிகளைப் பெற்றிருந்தால் இச் செலாவணிகளுக்குக் கிடைத்தற்கருமை ஏற்படுகின்றன. ஆகவே உறுதியான

செலாவணிகள் கிடைத்தற்கருமையுடையனவாகும். போர்க் காலத்திற்குப் பிந்திய ஆண்டுகளில் அமெரிக்க டாலர்களும், சுவிஸ் ஃபிராங்குகளும் உறுதியான செலாவணிகளாக இருந்தன. பெல்ஜியம் ஃபிராங்குகளும், கனடா டாலர்களும் தற்போதுதான் மாற்றக்கூடிய தன்மையை எய்தின.

ஒரு செலாவணி மண்டலம் உறுதியான செலாவணியை அதனுடைய செல்லுகளின் மத்திமமாகப் பயன்படுத்தினுல் அது உறுதியான செலாவணி அல்லது மாற்றத்திற்குரிய செலாவணி மண்டலம் என்றழைக்கப்படும். அம் மண்டலத்தின் உறுப்பு நாடுகள் அவற்றின் செலாவணிகளிலேயே செல்லுகளைச் செலுத்திக் கொள்வது மட்டுமல்லாமல் அம் மண்டலத்துக்கு வெளியிலும் அவற்றின் செலாவணிகளிலேயே செல்லுகளைச் செலுத்திக் கொள்ளலாம். டாலர் மண்டலம் இம் மாற்றவியலும் செலாவணி மண்டலத்துக்கு ஓர் எடுத்துக்காட்டாகும்.

## பன்னுட்டுக் கூட்டுறவு வாணிகம்
## (International Co-operation in Trade)

1930ஆம் ஆண்டில் ஏற்பட்ட வாணிக மந்த நிலைமையும் இரண்டாம் உலகப் போரின் விளைவுகளால் உலக வாணிகத்தில் ஏற்பட்ட இடையூறுகளும், அந் நிலைமைகளைச் சரிக்கட்ட நாடுகள் பன்னாட்டு வணிக ஒப்பந்தங்களில் ஈடுபடக் காரணங்களாயின. நாடுகளிடையே வாணிகங்களும், உடன்படிக்கைகளும் இரு புற ஒப்பந்தங்கள் வாயிலாகவே நிகழ்ந்தன. ஒரு நாடு வேறொரு நாட்டிலிருந்து சரக்கு இறக்குமதி செய்தால் அந்த ஏற்றுமதி நாட்டுச் செலாவணியிலேயே பணம் கொடுக்க வேண்டியிருக்கும். ஆகவே அம் மதிப்பிற்குரிய சரக்குகளைப் பணம் செலுத்த வேண்டிய நாடு ஏற்றுமதி செய்தல் வேண்டும். மூன்ருவது நாட்டுச் செலாவணிகள் அச் செல்லுகளுக்குப் பயன்படா. தனது அயல் நாட்டுச் செலுத்து இருப்புக்களை ஒவ்வொரு நாடும் தனித்தனியே வைத்துக் கொள்ளவேண்டும். இச் செயலுக்கு இரு புற ஒப்பந்தங்கள் துணைபுரிகின்றன.

வாணிகத்தை எளிதாக்கிப் பரந்த முறையில் நிலைநிறுத்தும் பொருட்டு 1947-ல் 23 நாடுகள் 'சுங்கவரி, வாணிகப் பொது ஒப்பந்தத்தின்'கீழ் (General Agreement on Tariff and Trade) கையொப்பமிட்டன. இவ்வொப்பந்தத்தின்படி நாடுகள் சுங்க வரித் தள்ளுபடியைப் பரிமாறிக் கொண்டு பொதுவாக வாணிகக் கொள்கையைக் கடைப்பிடித்தன.

## இரு புற வணிக ஒப்பந்தங்கள்
## (Bilateral Trade Arrangements)

போருக்குப் பிற்காலத்தில் பல நாடுகள் இரு புற வணிக ஒப்பந்தங்களின்கீழ் இயங்கின. ஒப்பந்த நாடுகளுக்கிடையே இறக்குமதிகளுக்கும், ஏற்றுமதிகளுக்கும் பங்கு ஒதுக்கீடு (quotas) செய்யப்பட்டன. தொடர்ந்து பல ஆண்டுகளாக ஒப்பந்த நாடு ஒவ்வொன்றும் ஒவ்வொராண்டும் மற்ற நாட்டிடமிருந்து குறிப்பிட்ட அளவு சரக்குகளை இறக்குமதி செய்து கொண்டிருக்க வேண்டும். இவ்வொப்பந்தத்தால் வணிகம் அடிக்கடி பண்ட மாற்றுதல் போலவே திகழ்ந்து கொண்டிருக்கிறது.

பல காரணங்களுக்காக இரு புற வணிக ஒப்பந்தங்கள் நாடுகளிடையே ஏற்படுகின்றன. தனது அயல் நாட்டுச் செலுத்து நிலையை மற்ற நாடுகளுடன் சரிநிகராக வைத்துக்கொள்ள முனைவதே இரு புற ஒப்பந்தத்தின் முதல் நோக்கமாகும். ஒரு நாடு மற்றொரு நாட்டுக்குச் செல்லுகள் செலுத்த வேண்டியதில் பற்றுக் குறை ஏற்பட்டால் அந் நாட்டுடன் இரு புற ஒப்பந்தத்தில் ஈடுபடும்பொழுது அந் நாடு பற்றுக்குறை நாட்டிடமிருந்து செய்யும் கொள்முதலைப் பெருக்கும் அல்லது அந் நாட்டுக்குரிய விற்பனையைச் சுருக்கும். சில சமயங்களில் பற்றுக்குறை நாட்டுக்குக் கடன் பேரில் சரக்குகள் வாங்க அனுமதி அளிக்கும்.

ஒரு நாடு தனது உபரிச் சரக்கை ஏற்றுமதி செய்வதற்கும் இந்த இரு புற ஒப்பந்தம் துணைபுரிகிறது.

கிடைத்தற்கருமையான சரக்குகளையும் ஒரு நாட்டிலிருந்து பெற்றுக் கொள்ள இந்த இரு புற ஒப்பந்தம் வகை செய்கிறது.

இரு புற ஒப்பந்தங்கள் பல வடிவங்களில் நிகழ்கின்றன. சில ஒப்பந்தங்கள் மொத்தக் கொள்முதலுக்கு வகை செய்கின்றன. அரசு வணிகப் பழக்கமுள்ள நாடுகள் மொத்தக் கொள்முதலில் இறங்குகின்றன. பொது உடைமை நாடுகளிடையே இது பொதுவாகும். வேறுவிதங்களில் ஒப்பந்த நாடுகள் சில குறிப்பிட்ட சரக்குகளுக்குரிய ஏற்றுமதி, இறக்குமதி அனுமதிகளைத் தனி வணிகர்களுக்கும் வழங்குகின்றன. ஆனால் இவ்வொப்பந்தங்களில் ஏற்றுமதி செய்யப்படக்கூடிய சரக்குகளைத் திரட்டுவதற்கு எவ்வித உத்தரவாதமும் அல்லது பதிலாளும் இல்லை. மேற்கு ஐரோப்பிய நாடுகளுடன் ஒப்பந்தம் செய்துகொண்ட பிரிட்டன், சுவீடன், போன்ற நாடுகள் அரசுக் கணக்கில் மொத்த விற்பனை அல்லது மொத்தக் கொள்முதல் செய்ய வழிவகை செய்யவில்லை.

மொத்தக் கொள்முதல் ஒப்பந்தங்கள் விற்பனையாளருக்கும் கொள்முதலாளருக்கும் சரக்களவு, விலையைப் பற்றி உத்தரவாத மளிக்கிறது. சரக்கு வாங்குபவர், கிடைக்கக்கூடிய சரக்கின் அளவு, விலை முதலியவற்றை முன்கூட்டியே தெரிந்து கொள்கிறார். ஏற்றுமதி நாட்டிலுள்ள சரக்கு உற்பத்தியாளர் எவ்வளவு சரக்கு, எந்த விலையில் ஏற்றுமதி செய்யப்பட வேண்டுமென்பதை முன் கூட்டியே அறிந்து கொள்வதால் அதற்குகந்தவாறு உற்பத்தியைப் பெருக்கிக் கொள்கிறார். ஆனால் இதில் ஏற்றுமதிகளும் இறக்கு மதிகளும் சந்தர்ப்பத்திற்குகந்தவாறு மாறுபடா. உரிமத்தின் (License) பேரில் நடைபெறும் கொள்முதல் விற்பனை, தனியார் வணிகத்தில் சரக்கின் அளவு, விலைபற்றி நிலையாகச் சொல்ல முடியாது. ஆனால் சந்தர்ப்பத்திற்குகந்தவாறு மாறு பாடடையும்.

வணிக ஒப்பந்தங்கள் யாவும் செலுத்து ஒப்பந்தங்களுடன் பிணைக்கப்பட்டிருக்கும். பற்றுக்குறை அயல் நாட்டுச் செலுத்து நிலை, உள்நாட்டு அயல் நாட்டுச் செலுத்து நிலையில் உபரியாக உள்ள நாட்டுடன் ஒப்பந்தம் செய்து கொள்ளும். இந்த ஒப்பந் தத்தின்கீழ் இறக்குமதி செய்யும் அவர்கள் நாட்டுச் செலாவணி யிலேயே செலுத்துகளைச் செலுத்தும். ஏற்றுமதியாளர்கள் இக் கணக்கின் பேரிலேயே செலுத்துகின்றனர். ஏற்றுமதி நாட்டின் செலாவணிகளைப் பெற்றிருக்கும் உபரி நாடு, பற்றுக்குறை நாட்டுக்குக் கடன் மாதிரியே அச் செலாவணிகளை வழங்கும். அதாவது ஒப்பந்தத்தில் குறிப்பிட்டுள்ள அளவுவரையில் அச் செலாவணியை அளிக்கும். அதற்குமேல் ஏற்படும் நடவடிக்கை களுக்குப் பொன் அல்லது மாற்றவியலும் செலாவணிகள்மூலமே தீர்த்துக் கொள்ளப்பட வேண்டும். பற்றுக்குறையைத் தவிர்ப் பதற்காக வணிகப் பங்கு ஒதுக்கீடு ஒப்பந்தங்கள் அடிக்கடி செலுத்து ஒப்பந்தங்களுடன் இணைந்து போகின்றன.

## சுங்கவரி, வணிகப் பொது ஒப்பந்தம்
## (The General Agreement on Tariff and Trade)

போர்க் காலத்துக்குப் பிறகு உலக நாடுகளிடையே பன்னாட்டு வணிகத்தை எளிதாக்குவதே இவ்வொப்பந்தத்தின் நோக்கமாகும். 1947ஆம் ஆண்டு, ஏப்ரல் மாதம், ஜெனீவாவில் 23 நாடுகளின் மாநாடுகூடி சுங்கவரி, வணிக ஒப்பந்தத்தில் (General Agreement on Tariff and Trade) கையொப்பமிட்டன. இவ்வொப்பந்தம் பன்முக அடிப்படையில் நாடுகளுக்கிடையே சுங்கவரிச் சலுகை

களுக்கான பல விதிகளை ஏற்படுத்திக்கொள்ள வகைசெய்தது. ஜெனீவா மாநாடு சுங்க வரிச் சலுகை முதலிய மற்ற வணிகக் கொள்கைகளை உலக நாடுகளிடையே வகுத்துக் கொள்ளக்கூடிய பல மாநாடுகளுக்கு முன்னோடியாகத் திகழ்ந்தது.

## சுங்கவரி, வணிகப் பொது ஒப்பந்தத்தின் சிறப்பியல்புகள்

1. ஒப்பந்த நாடுகள் சுங்கவரிச் சலுகையில் பரிமாற்ற முறையில் ஒத்துப்போக வேண்டும்.

2. ஒப்பந்த நாடுகளில் ஏதாவது ஒரு நாட்டுக்கு ஏதாவது ஒரு சலுகை அளிக்கப்பட்டால் அது மற்ற ஒப்பந்த நாடுகளுக்கும் பொருந்தும்.

3. ஒப்பந்த நாடுகளிடையே ஒரேவித சுங்கவரி விதிக்கப்பட வேண்டும். இதில் மாறுபட்ட நிலை இருக்கக்கூடாது.

4. இறக்குமதிகளுக்குள்ள கட்டுப்பாடுகள் தளர்த்தப்பட்டு சந்தர்ப்பத்திற்கு உகந்தவாறு நீக்கப்பட்டுவிட வேண்டும்.

5. கூடிய விரைவில் நடப்பு வணிக நடவடிக்கைகளிலும் துணை நடவடிக்கைகளிலும் உள்ள சத்தம், விலை, காப்பீடு நிலுவைகள் போன்றவற்றில் இருக்கும், மாற்றுக் கட்டுப்பாடுகள் அகற்றப்பட்டுவிட வேண்டும்.

இச் சுங்கவரி, வணிகப் பொது ஒப்பந்தம் உலக வணிகத்தில் பெரிதும் துணைபுரிந்து பன்னாட்டு நல்லெண்ணத்தையும் ஊக்குவித்தது. ஐரோப்பிய நாடுகளில் வணிகத் தடைகளை நீக்கிப் பல விதச் சரக்குகளின்மீதான சுங்க வரிகளைப் பரிமாற்ற முறையில் நீக்கிக் கொண்டு சில விகிதங்களில் இறக்குமதி வரிகளும் அறவே நீக்கப்பட்டன. இக் கொள்கைகள் இன்றியமையாத பொருள்களுக்கும், போர்க் கருவிகளுக்கும் கடைப்பிடிக்கப்படுவது கடினமாகும். வளர்ச்சியுறும் நாடுகள் தங்கள் இறக்குமதிகளுக்குரிய தடைகளைத் தளர்த்த முடியாது. ஏனென்றால் அப் பொருள்களின் உற்பத்தியே அம் முன்னேற்ற நாடுகளுக்கு அடிப்படை வித்தாகும்.

## ஆசிய வளர்ச்சிப் பாங்கு
## (Asian Development Bank)

ஆசிய, கீழ்த்திசை நாடுகளுக்குக் கடன், நிதிகள் வழங்குவதற்கும் முதலீடுகளை வளர்ச்சியடையச் செய்வதற்கும், வளர்ச்சி

யுறும் உறுப்பு நாடுகளுக்குத் தொழில் நுணுக்க உதவி அளிப்பதற்கும், ஆசிய நாடுகளிடையே தொழில் வளர்ச்சியையும், கூட்டுறவையும் வளர்ப்பதற்கும் ஆசிய வளர்ச்சிப் பாங்கு நிறுவப்பட்டது. ஆசிய, கீழ்த்திசை நாடுகளுக்காக ஏற்படுத்தப்பட்ட ஐக்கிய நாடுகளின் பொருளாதரக் குழுவின் பரிந்துரையின் பேரில் ஆசிய வளர்ச்சிப் பாங்கு அமைக்கப்பட்டது. ஆசிய, கீழ்த்திசைப் பொருளாதாரக் குழுவின் (Economical Commission for Asia and Far East—ECAFE) வட்டாரத்தில் உறுப்பு நாடாகிய பிலிப்பைன் நாட்டிலுள்ள மணிலாவில் 1966, டிசம்பர் 19ஆம் தேதி தோற்றுவிக்கப்பட்டு, 1967ஆம் ஆண்டு, ஜனவரி 1ஆம் தேதியிலிருந்து இப் பாங்கு தொழில் தொடங்கியது. இப் பாங்கில் உள்ள மொத்த மூலதனத்தில் 60 சதவிகிதம், அதற்கு மேலும் 21 வட்டார உறுப்பு நாடுகளால் செலுத்தப்படுகிறது. ஆசியாவிற்கு வெளியில் உள்ள நாடுகளும் இப் பாங்கில் உறுப்பினர்களாகச் சேர்ந்து பாக்கியுள்ள 40 சதவிகித முதலைச் செலுத்தலாம்.

## ஆசிய வளர்ச்சிப் பாங்கின் செயல்களும் நோக்கங்களும்

1. ஆசிய, கீழ்த்திசைப் பொருளாதாரக் குழுவின் (ECAFE) வட்டார நாடுகளிடையேயுள்ள முன்னேற்ற வளர்ச்சித் திட்டங்களுக்குப் பொது, தனியார் முதல்களை முதலீடு செய்வதற்கு இப் பாங்கு ஊக்குவிக்கிறது.

2. கிடைக்கக் கூடிய நிதி வளங்களைக் கொண்டு, அதன் வட்டாரத்திலுள்ள சிறிய வளர்ச்சியடையா நாடுகளுக்குக் குறிப்பாகவும், அனைத்து உறுப்பு நாடுகளுக்குப் பொதுவாகவும் அவற்றின் ஒன்றுபட்ட பொருளாதார முன்னேற்றத் திட்டங்களுக்கு நிதியுதவி அளித்தல்.

3. இதன் வட்டார நாடுகளின் அனைத்துத் திட்டங்களில் முன்னேற்றக் கொள்கைகளைக் கடைப்பிடிப்பதற்கும், கிடைக்கக் கூடிய வளங்களைச் சிறந்த முறையில் பயன்படுத்துவதற்கும், பொருளாதாரத்தை மேன்மையடையச் செய்வதற்கும், பன்னாட்டு வணிகத்தைப் பெருக்கிக் கொள்ளுவதற்கும் இப் பாங்கு துணை புரிகிறது.

4. பொருளாதார வளர்ச்சித் திட்டங்களைத் தயாரிப்பதற்கும் செயல்படுத்துவதற்கும் ஆசிய வளர்ச்சிப் பாங்கு தொழில் நுணுக்க, நிதியுதவி அளிக்கிறது.

5. ஐக்கிய நாடுகளின் நிறுவனம், அதன் துணை அமைப்புக்கள், ஆசியக் கீழ்த்திசை நாடுகளின் பொருளாதாரக் குழு முதலிய மற்ற பன்னாட்டு நிறுவனங்களுடன் கூட்டு சேர்ந்து கொண்டு பொது, தனியார் முதலீட்டு நிதி வளர்ச்சிக்குத் துணை புரிந்து, புதிதாகத் தொடங்கப்படும் முதலீடு, நிதியுதவி முதலிய அனைத்து உதவிகளையும் இப் பாங்கு அளிக்கிறது.

6. சந்தர்ப்பச் சூழ்நிலைக்குகந்தவாறு மற்றெல்லாச் செயல்களையும், பணிகளையும் இப் பாங்கு மேற்கொள்ளுகிறது.

## நிதி வளங்கள்
## ( Financial Resources )

ஆசிய வளர்ச்சிப் பாங்கின் அனுமதிக்கப்பட்ட (மூலதனம்) முதல் 1,100 கோடி அமெரிக்க டாலர்களாகும். இதில் வழங்கப் பட்ட முதல் 978 கோடி டாலர்களாகும். இதில் வழங்கப்பட்ட மூலதனத்தில் ஒருபாதி செலுத்தப்பட்ட முதலாகும். மற்றொரு பாதி தேவையுள்ளபோது அழைப்பு விடுக்கப்பட்டுப் பெற்றுக் கொள்ளப்படும். இவ்வழைப்பு முதலைக் கொண்டு உலக மூலதன அங்காடிகளில் இப் பாங்கு கடன் திரட்டுகிறது. செலுத்தப்பட்ட முதல் (Paid-up Capital) ஐந்து ஆண்டுகளில் ஐந்து சரிசமத் தவணைகளாகச் செலுத்தப்படலாம். ஒவ்வொரு தவணைத் தொகையின் ஒரு பாதியைப் பொன் அல்லது மாற்ற வியலும் செலாவணிகளில் செலுத்த வேண்டும். மறுபாதி அந்தந்த உறுப்பு நாட்டுச் செலாவணியில் செலுத்தலாம். அந்தந்த உறுப்பு நாட்டுச் செலாவணிக்குப் பதிலாக, அச் செலாவணி தேவையில்லாதபோது வட்டியில்லாக் கேட்பு உறுதிப் பத்திரங்களை இப் பாங்கு ஏற்கலாம். அனுமதிக்கப்பட்ட முதலின் அளவை அதிகரித்தும் பாங்கு அதன் நிதியைப் பெருக்கலாம். உறுப்பு நாடு அதன் பங்கு முதலையும் அதிகமாகச் செலுத்தலாம். பன்னாட்டுப் பண அங்காடிகளில் ஒவ்வொரு நாட்டின் ஒப்புதலுடன் பத்திரங்களை விற்றுப் பாங்கு நிதி திரட்டலாம்.

## உறுப்பு நாடுகள்

ஆசிய வளர்ச்சிப் பாங்கில், 1. ஆசிய, கீழ்த்திசை பொருளாதாரக் குழுவின் உறுப்பு நாடுகளும் (ECAFE), 2. அக் குழுவின் கூட்டாளி நாடுகளும், 3. அக் குழுவிற்கு வெளியில் இருக்கும் நாடுகளும் உறுப்பு நாடுகளாகச் சேர்ந்து

கொள்ளலாம். 1970ஆம் ஆண்டு, ஏப்ரல் 2ஆம் தேதியில் 21 நாடுகள் இக் குழுவின் வட்டார உறுப்பு நாடுகளாகவும் 13 நாடுகள் இவ் வட்டாரத்திற்கு வெளியில் உள்ள உறுப்பு நாடுகளாகவும் திகழ்ந்தன.

## வட்டார உறுப்பு நாடுகள்

1. ஆப்கானிஸ்தான், 2. ஆஸ்திரேலியா, 3. ஹாங்காங், 4. இந்தியா, 5. இந்தோநேசியா, 6. கம்போடியா, 7. இலங்கை, 8. சிங்கப்பூர், 9. சைனு, 10. மலேசியா, 11. ஃபிஜி, 12. ஜப்பான், 13. கொரியா, 14. லாவோஸ் (Laos), 15. நேபாளம், 16. நியூசிலாந்து, 17. பாகிஸ்தான், 18. பிலிப்பைன், 19. தாய்லாந்து, 20. வியட்நாம், 21. மேற்கு சமோவா (Western Samova).

## வட்டாரத்தைச் சேரா உறுப்பு நாடுகள்

1. ஆஸ்திரியா, 2. கனடா, 3. இத்தாலி, 4. சுவீடன், 5. சுவிட்ஸர்லாந்து, 6. ஐக்கிய அரசு (United Kingdom), 7. ஐக்கிய நாடுகள் (United States), 8. பெல்ஜியம், 9. டென்மார்க், 10. ஃபின்லாந்து, 11. ஜெர்மனி, 12. நார்வே, 13. நெதர்லாந்து.

இவ்வாறு பன்னாட்டு நிதி நிறுவனங்கள் பன்னாட்டுத் தொழில் வளர்ச்சித் திட்டங்களுக்கும், இறக்குமதி, ஏற்றுமதிப் பெருக்கத்திற்கும், கடன், நிதியுதவி அளித்துப் பன்னாட்டளவில் சமநிலை ஏற்படுத்த முயல்கின்றன.

# மேற்கோள் நூற்பட்டியல்


1. Monetary Theory : by **M. C. Vaish,** M.A., L.L.B , Ph.D.,

2. Finance and Foreign Trade and Foreign Exchange : by **G. S. Lall,** M A.,

3. 'Foreign Exchange-Principles and Practice' : by **K. K. Andely**

4. *வணிக இயலின் தத்துவங்கள்* : by கு. ஆளுடையப் பிள்ளை, எம்.காம்.,

5. *வணிக இயலுக்கு ஓர் அறிமுகம்* : by கு. ஆளுடையப் பிள்ளை எம்.காம்,

6. *பணம்-சிறு விளக்கம் தமிழாக்கம்* : by கோ. இராதாகிருட்டினன், எம்.ஏ.,

7. A.B.C. of the Foreign Exchanges : by **Norman Crump**

8. Finance of Foreign Trade and Foreign Exchanges : by **K. V. Venkatraman,** C.A., I.I.B.,

9. A Manual of foreign Exchange : by **H. E. Enit**

10. Economics of Money and Banking : by **Halm**

11. Money and Banking : by **Kent**

12. Foreign Exchange Practice and Policy : by **Southard Frank,** A.Jr.,

13. Foreign Trade and Foreign Exchange Their theory and Practice : by **Mackdonald and Evans**

14. Export and Import Banking: **by Sharterian, William, S.**

15. The Law Relating to Commercial Letters of Credit : **by A. G. Davis**

16. International Finance : **by Heming, Charley, N.**

17. International Commerce : **by Proth, Edward E.**

18. Technique of International Trade : **by Rosanthal, Morris, S.**

19. Reserve Bank of India Outline of Exchange Control in India, Bombay : **R. B. I., 1961**

20. Government of India, Foreign Exchange Regulations Act : **1947**

21. International Monetary Policy : **by Scamwell, W.M.**

22. International Trade and Commercial Policy : **by Toule Lawarance, W.**

23. International Economic Organisations : **by Alexandrawies, Charles, N.**

# கலைச்சொற்கள்

## A

| | | |
|---|---|---|
| Acceptance | — | ஏற்பு, ஒப்பு |
| Acceptance for honour | — | நாணயத்திற்காக ஏற்பு |
| Acceptor | — | ஏற்பவர் |
| Accomodation Bill | — | பணவசதி உண்டியல் |
| Accountancy | — | கணக்குப் பதிவியல் |
| Account | — | கணக்கு |
| Account, Current | — | நடப்புக் கணக்கு |
| Actual total loss | — | உண்மையான மொத்த நட்டம் |
| Advance | — | முன் பணம் |
| Advalorem duty | — | பெறுமான விகிதவரி |
| Advertisement | — | விளம்பரம் |
| Affairs, statement of | — | நிலை விவரக் குறிப்பு |
| Affreightment Contract | — | கப்பல் வாடகை ஒப்பந்தம் |
| After date | — | குறித்த தேதிக்குப்பின் |
| After sight | — | பார்த்த தேதியிலிருந்து |
| Agency | — | பதிலாண்மை |
| Agent | — | பதிலாள் |
| Agreement | — | உடன்பாடு |
| Arbitiarily | — | தன்முனைப்பாக |
| Assets | — | சொத்துக்கள் |
| Assumption | — | எடுகோள் |
| At sight | — | பார்த்தவுடன் |
| Audit | — | தணிக்கை |
| Average loss | — | சராசரி நட்டம் |

## B

Backed — தாங்கப்பட்ட
Bad debts — வராக் கடன்
Balances — நிலுவைகள்
Balancing the account — கணக்கை நேர்செய்தல்
Balanced — சரிசமமான
Balances of payment — அயல் நாட்டுக் கொடுப்பல் நிலை (அ) அயல் நாட்டுச் செலுத்துநிலை
Balance sheet — இருப்புநிலைக் குறிப்பு
Balance of visible trade — புலனாகும் வணிகக் கொடுப்பல் நிலை (அ) செலுத்து நிலை
Balance of invisible trade — புலனாகா வணிகக் கொடுப்பல் நிலை (அ) செலுத்துநிலை
Bank — பாங்கு, வங்கி
Bank draft — பாங்குப் பண விடை
Bank rate — பாங்கு வீதம்
Bankers Clearing House — பாங்குகளின் தீர்வகம்
Banker's lieu — பாங்கரின் பற்றுரிமை
Banking branch — கிளைப் பாங்குமுறை
Bankruptcy — திவால்
Barter — பண்ட மாற்று
Barratry — கப்பற்கலம்
Bearer — கொணர்பவர்
Bearer cheque — கொணர்பவர் காசோலை
Bearer Debenture — கொணர்பவர் கடன் பத்திரம்
Bill of Exchange — மாற்று உண்டியல், உண்டியல்
Bill, Acceptance of — உண்டியல் ஏற்பு
Bill, Discounting of — உண்டியல் கழிவுப்பாடு
Bill, Documentary — பத்திரங்கள் சேர்ந்த உண்டியல்
Bill, D/A — ஏற்புவழிப் பத்திர உண்டியல்
Bill, D/P — செலுத்துவழிப் பத்திர உண்டியல்
Bill, Foreign — வெளிநாட்டு உண்டியல்
Bill, Inland — உள்நாட்டு உண்டியல்
Bill of lading — கப்பல் இரசீது
Bimetallism — இரு உலோக முறை

Blank endorsement — வெறும் புறக் குறிப்பு
Bounties — அரசாங்கக் கொடைகள்
Branch — கிளை
Broker — தரகர்
Buyer — வாங்குபவர்
Buyer's market — வாங்குவோர் அங்காடி
Business unit — தொழில் நிலையம்

## C

Cable — கடல் தந்தி
C.I.F. (Cost, Insurance and Freight) — வி. இ. ச. (விலை, இன்சூரன்சு, சத்தம்)
Capital — முதல், மூலதனம், கைம்முதல்
Cartage — வண்டிச் சத்தம்
Cargo — கப்பற்சரக்கு
Central Bank — மையப் பாங்கு
Certificate of Origin — தோற்றுவாய்ச் சான்று
Charter Party — கப்பல் வாடகை ஒப்பந்தம்
Cheque — செக்கு, காசோலை
C. I. F. — விலை,இன்சூரன்சு உள்ளடங்கிய சத்தம் (வி. இ. ச.)
Clean Bill — ஆவணக்குச் சேரா உண்டியல்
Clearing House — தீர்வகம்
Commerce — வணிகவியல்
Commission agent — கழிவுப் பதிவாளர்
Commission, delcredere — நாணயச் சான்றுக் கழிவு
Commission, underwriting — ஒப்புறுதிக் கழி
Company — கம்பெனி
Constructive total loss — மொத்த நட்டம்
Consular invoice — கான்சல் இடாப்பு
Contract — ஒப்பந்தம்
Cost of Insurance — காப்புறுதிச் செலவு
Credit — நாணயம், கடன்
Creditor — கடனீந்தோர்
Crossing — கீறல்
Credit system — கடன் முறை
Cross rate — குறுக்கு வீதம்
Currency — செலாவணி

Currency crisis — செலாவணி நெருக்கடி
Current account — நடப்புக் கணக்கு
Customs of trach — வணிக வழக்கு
Customs duty — சுங்கத் தீர்வை, கடமை
Customer — வாடிக்கையாளர்

## D

Damage — நட்டஈடு
Days of grace — சலுகை நாட்கள்
Debenture — கடன் பத்திரம்
Debtor — கடனாளி
Del Credere agent — நாணயச் சான்றுப் பதிலாள்
Del Credere Commission — நாணயச் சான்றுக் கழிவு
Delivery — பட்டுவாடா
Delivery order — பட்டுவாடா உத்தரவு
Demand — தேவை
Demand draft — உடன் செலுத்துப் பண விடை
Demand schedule — தேவைப் பட்டியல்
Deficit — பற்றுக்குறை
Deflation — பணவாட்டம்
Deposits — வைப்புக்கள்
Depositor — வைப்பாளி
Deposit money — வைப்புப் பணம்
Deposit debts — வைப்புக் கடன்கள்
Depression — மந்தம்
Department of Commercial Intelligence and Statisties — வணிகச் செய்திப் புள்ளி விவரத்துறை
Depreciation — தேய்மானம்
Deviation — வழி மாற்றம்
Director — இயக்குநர்
Directory — விவரத் தொகுப்பு
Discharge of Contract — ஒப்பந்த முடிவு
Discount — தள்ளுபடி, கழிவு
Discounting Bill — உண்டியலை மாற்றல்
Discount House — கழிவகம்
Dishonour of Bill — உண்டியல் மறுப்பு
Disqualification — தகுதியிழப்பு

Discrepancy — முரண்பாடு
Discrimination — பேதங்காட்டுதல்
Disinflation — பண வீக்க நீக்கம்
Dislocation — சீர்குலைவு
Dissavers — சேமிப்பு செய்யாதவர்கள்
Distribution — பகிர்வு, பங்கீடு, வழங்கல்
Dissolution — கலைப்பு
Dividend — இலாப ஈவு
Dividend Warrant — இலாப ஈவு வழங்கும் ஆணை
Divisible Profit — பகிர்வு இலாபம்
Docks — கப்பல் துறைகள்
Dock Warrant — துறைமுக ஆணைச்சீட்டு
Documentary Bill — பத்திரங்கள் சேர்ந்த உண்டியல்
Document of title — உரிமைப் பத்திரங்கள்
Double Insurance — இரட்டிப்பு இன்சூரன்சு
Doctrine — தத்துவம்
Dogma — சித்தாந்தம்
Domestic gold standard — உள்நாட்டுப் பொன் திட்டம்
Domestic Industry — உள்நாட்டுத் தொழில்
Draft — பற்றுரிமைச் சீட்டு
Drawee — எழுதப் பெற்றவர்
Drawer — எழுதுபவர், விடுப்பவர்
Due — பாக்கி
Due date — தவணைத் தேதி
Duty and Clearing Charges — வரி, விடுப்புச் செலவுகள்
Duty — வரி, தீர்வை
Duty, Customs — சுங்கவரி
Duty, Export — ஏற்றுமதி வரி
Duty, Import — இறக்குமதி வரி
Durable goods — நெடுவாழ்வுப் பண்டங்கள்

## E

E — அடையாளங்கள்
Economics — பொருளாதாரம்
Economic Advantages — பொருளாதார நலன்கள்
Economic Control — பொருளாதாரக் கட்டுப்பாடு
Elasticity of Demand — தேவை நெகிழ்ச்சி
Encumbarance — வில்லங்கம்
Endorse — புறக்குறி

Endorsement — புறக்குறிப்பு, மேலெழுதுதல்
Enterprise — தொழில் துறைவாற்றல்
Enterpot trade — மறு ஏற்றுமதி வாணிகம்
Entrepreneur — தொழில் முயல்வோர், தொழில் துணிவோர்
Entry — பதிவு
Equation — குறிக்கணக்கு
Equilibrium — சமநிலை
Equilibrium rate of exchange — சமநிலை மாற்று வீதம்
Equity Shares — நியாயப் பங்குகள்
Estoppel — மறுக்க முடியாமை
Escrow — நிபந்தனைக்குட்பட்ட பத்திரம்
Exchange — நாணய மாற்று
Exchange Bank — நாணய மாற்றுப் பாங்கு
Excise duty — உற்பத்தித் தீர்வை
Exchange Clearings — மாற்றுத் தீர்வுகள்
Exchange Control — மாற்றுக் கட்டுப்பாடு
Exchange Equalisation Account — மாற்றுச் சமன் கணக்கு
Exchange Management and Control — மாற்று நிர்வாகமும், கட்டுப்பாடும்
Exchange Payment Agreements — மாற்றுச் செலுத்து ஒப்பந்தம்
Exchange Stability — மாற்றுக்களின் நிலைத்த தன்மை
Ex-Officio — பதவிவழி
Export — ஏற்றுமதி
Exporter — ஏற்றுமதியாளர்
Export Credit Insurance — ஏற்றுமதிக் கடன் இன்சூரன்சு
Expansion of Credit — கடன் அதிகரிப்பு
External Deficit — வெளிப் பற்றுக்குறை
External Limit — புறக் கட்டுப்பாடு
External Value — புறமதிப்பு
Ex-works — தொழிற்சாலை விலை
Ex-Ware house — பண்டக விலை

## F

Face Value — இயல் மதிப்பு, முகமதிப்பு
Factor — சரக்குடைப் பதிலாள்
Factors of Production — உற்பத்திக் காரணிகள்

F. A. S. (Free Alongside Ship) — துறைவரை செலவுட்பட
Fictitious — கற்பனையான, பெயரளவான
Favourable Balance of Trade — சாதக வணிகக் கொடுப்பல் நிலை அல்லது செலுத்து நிலை
Fiduciary Relationship — நம்பிக்கையுறவு
Finance — நிதியம், செல்வாதாரம்
Fire Insurance — தீ இன்சூரன்சு
Firm — (கூட்டு) நிறுவனம்
Finance Corporation for Industry — தொழில் நிதியக் கூட்டுரு
Flat Money — தட்டைப் பணம்
Fixed asset — நிலையான சொத்துக்கள்
Fixed Capital — நிலையான முதல்
Fixed charges — மாறாச் செலவுகள்
F. O. B. (Free on Board) — கப்பலில் ஏற்றும்வரை செலவுட்பட
Folio — பக்கம்
Franc — ஃபிராங்கு (நாணயம்)
Foreign Exchange — அயல் நாட்டு மாற்று, அயல் நாட்டுச் செலாவணி, அந்நியச் செலாவணி
Free Foreign Exchange — தடையிலா அயல் நாட்டு மாற்றங்கள்
Foreign Currencies — அயல் நாட்டுச் செலாவணிகள்
Foreign Exchange quotation — அயல் நாட்டு மாற்று விலைப் பட்டியல்
Foreign Exchange Market — அயல் நாட்டு மாற்றங்காடி
Foreign Exchange Transaction — அயல் நாட்டு மாற்றுப் பேரங்கள்
Forward Exchange — முன்னோக்கிய அயல் நாட்டுச் செலாவணி
Freight — சத்தம், வாடகை
Fraud — மோசடி

## G

Gain — இலாபம், ஆதாயம்
Gap — இடைவெளி
Gas — எரிவளி
Goods — பொருள்கள், சரக்குகள்

| | | |
|---|---|---|
| Gilt edged | — | உத்தரவாதமானவை |
| Gold import point | — | பொன் இறக்குமதி நிலை |
| Gold export point | — | பொன் ஏற்றுமதி நிலை |
| Golden Rule | — | பொன் விதி |
| Goodwill | — | தொழில் நன்மதிப்பு |
| Government Bonds | — | அரசாங்கக் கடன் பத்திரங்கள் |
| Guarantee | — | உத்தரவாதம் |

## H

| | | |
|---|---|---|
| Harbinger | — | முன்னறிவிப்பாளர் |
| Hard Cash | — | அயன் ரொக்கம் |
| Holder | — | வைத்திருப்பவர் |
| Holding Company | — | பிடிப்புக் கம்பெனி |
| Home Trade | — | உள்நாட்டு வியாபாரம் |
| Hot Money | — | அரும் பணம் (அ) சுடும் பணம் |
| Hypothecation, Letter of | — | அடமானக் கடிதம் |

## I

| | | |
|---|---|---|
| Implied Conditions | — | தொக்கிய நிபந்தனைகள் |
| Import | — | இறக்குமதி |
| Import duty | — | இறக்குமதி வரி |
| Indesunity | — | நட்டஈடு |
| Indent | — | தேவைப்படி |
| Indent House | — | திரட்டு நிலையம் |
| Index | — | முதற் குறிப்பகராதி |
| Inland Bill | — | உள்நாட்டு உண்டியல் |
| Insolvent | — | திவாலானவர், வக்கற்றவர், வகையற்றவர், முறிந்தவர் |
| Instalment Purchase System | — | தவணைக் கொள்முறை |
| Insurance | — | இன்சூரன்சு, ஈட்டுறுதி |
| International Trade | — | பன்னாட்டு வணிகம் |
| Inconvertible | — | மாற்ற இயலாத |
| Indirect Control | — | மறைமுகக் கட்டுப்பாடு |
| Index numbers | — | குறியீட்டெண்கள் |
| Inflation | — | பணவீக்கம் |
| Intermediary | — | இடையாள் |
| International Bank for Reconstruction and Development | — | புனரமைப்பு, வளர்ச்சிக்குமான பன்னாட்டுப் பாங்கு |

| | |
|---|---|
| International Clearing Union | — பன்னாட்டுத் தீர்வக ஒன்றிப்பு |
| International Consortiun | — பன்னாட்டு நிதியத் தொகுப்பு |
| International Economic Payment | — பன்னாட்டுப் பொருளாதாரச் செலுத்துக்கள் |
| International Exchange | — பன்னாட்டு மாற்று |
| International Monetary Fund | — பன்னாட்டுப் பண நிதி |
| International Trade Organisation | — பன்னாட்டு வாணிப நிறுவனம் |
| Interposition | — குறுக்கீடு |
| Intriusic Value | — அகமதிப்பு |
| I. O. U. | — ஐ. ஓ. யு. (கடன் வாக்குறுதி) |
| Investment | — முதலீடு |
| Investigation | — பரிசீலனை |
| Invoice | — இடாப்பு |
| Invoice, Proforma | — பெயரளவு இடாப்பு |
| Issue Department | — வெளியீட்டுத் துறை |

## J

| | |
|---|---|
| Jettison | — தூக்கி எறிதல் |
| Joint Stock Company | — கூட்டுப் பங்குக் கம்பெனி |
| Joint and Several Liability | — கூட்டு, தனிப் பொறுப்பு |

## L

| | |
|---|---|
| Lathe | — கடைசல் பொறி |
| League of Nations | — பன்னாட்டுச் சங்கம் |
| Legal Tender | — சட்ட நாணயம் |
| Lender of last Resort | — இறுதிக் கடன் ஈவோர் |
| Letter, Circular | — சுற்றுக் கடிதம் |
| Letter, of allotment | — ஒதுக்குக் கடிதம் |
| Letter of Credit | — வாணிக உறுதிக் கடிதம் |
| Letter of Indemnity | — நட்ட ஈட்டுக் கடிதம் |
| Liabilities | — பொறுப்புக்கள் |
| Licence | — உரிமம் |
| Lieu | — பற்றுரிமை |
| Life Insurance | — ஆயுள் இன்சூரன்சு |
| Liquid assets | — ரொக்கமாக்கக் கூடிய சொத்துக்கள் |

Liquidity — ரொக்கநிலை
Loan — கடன்
Local authorities — தன்னாட்சி மன்றங்கள்
Loco Price — செய்யுமிட விலை
Long term — நீண்டகால
Loose-Tools — துணைக் கருவிகள்
Loss — நட்டம்
Loss, Gross — மொத்த நட்டம்
Loss, Net — நிகர நட்டம்

## M

Manufacturers — செய்பொருள் உற்பத்தியாளர்கள்
Manufactured goods — செய்பொருள்கள்
Marginal Buyer — இறுதி நிலை வாங்குபவர்
Marginal cost of production — இறுதி நிலை உற்பத்திச் செலவு
Marginal Demand — இறுதி நிலைத் தேவை
Marginal Revenue — இறுதி நிலை வருவாய்
Marginal utility — இறுதி நிலைப் பயன்பாடு
Marine Insurance — கடல் இன்சூரன்சு
Marine Risks — கடல் இடர்கள், ஆபத்துக்கள்
Market — சந்தை, அங்காடி
Market Value — சந்தை மதிப்பு, அங்காடி மதிப்பு
Market Research — சந்தை ஆராய்ச்சி
Material alteration — முக்கிய மாறுதல்கள்
Mate's Receipt — கப்பலதிகாரியின் இரசீது
Maturity — தவணை முதிர்வு
Means of Payment — செலுத்தும் வகைகள்
Maximum — உயர்ந்த பட்சம்
Measure — அளவை
Measure of Value — மதிப்பளவை
Medium of Exchange — மாற்றுச் சாதனம், மாற்று மத்திமம்
Mercantile Agent — வணிகப் பதிலாள்
Minimum — குறைந்த பட்சம்
Mint Parity — நாணயச்சாலைச் சமன்பாடு
Money — பணம்

Money Market — பணச் சந்தை
Money at call — அழைப்புக் கடன்
Money at short notice — குறுங்காலக் கடன்
Monetary instability — பண நிலையின்மை
Money order — பண ஆணை
Mortgage — ஒற்றி
Mortgage Debenture — ஒற்றிக் கடன் பத்திரம்
Monopoly — சர்வாதீனம்
Monopolist — சர்வாதீனர்

## N

Naked Debenture — வெற்றுக் கடன் பத்திரம்
Nationalisation — நாட்டுடைமையாக்கல்
National Debt — நாட்டுக் கடன்
National Income — நாட்டு வருமானம்
National Savings Certificate — தேசியச் சேமிப்புச் சான்றிதழ்கள்
Near-Money — நெருக்கிய பணம்
Negative Balance of trade — எதிர்நிலை வாணிகக் கொடுப்பு நிலை
Negotiable Instrument — செலாவணிப் பத்திரம்
Nominal Value — பெயரளவு மதிப்பு, இயல்பு மதிப்பு
Non-negotiable — செலாவணித் தன்மையற்ற
Normal Price — இயல்பான விலை
Notary Public — குறிப்பாளர்
Note-Issue — நோட்டு வெளியீடு
Notice of Dishonour — மறுப்பறிவிப்பு
Not-Negotiable — செலாவணித் தன்மையற்ற
Novation — சாட்டுவித்தல்

## O

Object Clause — நோக்கச் சரத்து
Ocean Transport — கடல் போக்குவரத்து
Offer — அளிப்புக் கூற்று
Offer and acceptance — அளிப்புக் கூற்றும் ஏற்பும்
Office — அலுவலகம்
Office Allowance — அலுவலகப் படி

'On the spot' Transactions — உடனடிப் பேரங்கள் (அ) உடனடி நடவடிக்கைகள்
Open Cheque — கிறுச் செக்கு
Open Market Operation — வெளிச்சந்தை நடவடிக்கைகள்
Open Policy — பொதுப் பாலிசி
Order — ஆணை
Order Cheque — ஆணைச் செக்கு
Organisation — அமைப்பு
Oscillation — ஊசலாட்டம்
Output — உற்பத்தி
Over draft — அதிகப்பற்று
Over due — தவணை கடந்த
Over valuation — மிகை மதிப்பு
Outright inflation — வெளிச்சந்தை நடவடிக்கைகள்
Over Insurance — மிகை இன்சூரன்சு
Overhead charges — மேற்செலவு
Over Trading — மிகை வாணிகம்

## P

Packing — கட்டுதல்
Packing Charges — கட்டுக் கூலி
Paid-up-Capital — செலுத்திய முதல்
Paid-up-Policy — செலுத்திய பாலிசி
Paper Currency — தாள் நாணயம்
Paper Money — தாள் பணம்
Partial Endorsement — அரைகுறை புறக்குறிப்பு
Partial loss — அரைகுறை நட்டம்
Particular average loss — தனிச் சராசரி நட்டம்
Particular Lieu — தனிப் பற்றுரிமை
Partner — கூட்டாளி
Par-Value — முகப்பு மதிப்பு
Patent — உரிமைக் காப்பு
Payee — பெறுவோன்
Paying Banker — செலுத்தும் பாங்கர்
Payment for honour — நாணயத்துக்காகச் செலுத்துதல்

Perils of the sea — கடற் பேரிடர்கள்
Pegging — நிலைப்படுத்தல்
Pension — ஓய்வுச் சம்பளம்
Percent — சதவீதம்
Physical Control — பருப்பொருளியலான கட்டுப்பாடுகள்
Point — புள்ளி
Police — காவல்துறை
Policy — கைக்கோள், பாலிசி, நடைமுறை
Policy of Extension — பெருக்கக் கைக்கோள்
Post — அஞ்சல், தபால்
Postage — அஞ்சல் செலவு
Postal order — அஞ்சல் ஆணை
Post office — அலுவலகம்
Power — இயக்குவிசை
Post-dated — பின் தேதியிட்ட
Premium — கட்டணம், மதிப்புயர்வு
Press Publicity — பத்திரிகை விளம்பரம்
Pound — பவுண்டு
Position — நேர்நிலை (அ) நேர்க்கணிய
Positive Balance of trade — சாதக வாணிகக் கொடுப்பல் நிலை
Positive Savings — நேர்க்கணிய சேமிப்பு
Potentialities — உள்ளியல்புகள்
Practical — செயல் வகையான
Precisely — சரிநுட்பமாக
Price-curves — விலை வளைகோடுகள்
Price-stabilisation — விலையை நிலையானதாகச் செய்தல்
Price-quotation — விலை கூறல்
Prime-bills — முதல்தர உண்டியல்கள்
Privilege — பேருரிமை
Producers — உற்பத்தியாளர்கள்
Promise to pay — செலுத்தும் வாக்குறுதி
Propensity — நாட்டம்
Propensity to save — சேமிப்பு நாட்டம்
Profit — இலாபம்
Prospectus — தகவலறிக்கை
Protest (of a bill) — உண்டியல் மறுப்புச் சான்று

Proximate Cause — அண்மைக் காரணம்
Proxy — மாற்றுள்
Public Company — பொதுக் கம்பெனி
Public Enterprise — பொதுத்துறை தொழில் முயற்சி
Public Relation Department — பொதுத் தொடர்புத் துறை
Public Sector — பொதுத் துறை
Public utilities — பொதுப்பயன் தொழில்கள்
Publicity — விளம்பரம்
Purchase — கொள்முதல்
Purchasing Power — வாங்குந் திறன்
Purchasing Power Parity Theory — வாங்குந்திறன் சமநிலைக் கோட்பாடு
Pure Rent — தூய வாடகை

## Q

Qualification Shares — தகுதிப் பங்குகள்
Qualified Acceptance — நிபந்தனையுடன் ஏற்பு
Quantity of Currency — செலாவணிக் கணியம்
Quantity of Money — பணக் கணியம்
Quantity Theory — கணியக் கோட்பாடு
Quid Pro Quo — கைம்மாறு
Quote — பங்களவு

## R

Radio — வானொலி
Railway Freight — இரயில் சத்தம்
Railway Receipt — இரயில் இரசீது
Railway Transport — இரயில் போக்குவரத்து
Raw Materials — கச்சாப் பொருள்கள்
Real Wealth — உண்மைச் செல்வம்
Reaction — எதிர்விளைவு
Rebate — தள்ளுபடி
Redemption — மீட்சி
Redemption Yield — மீட்சி வருவாய்
Redistribution — மறுபகிர்வு
Reflation — மீட்சிப் பணவீக்கம்

Relative Value — ஒப்பிட்டு மதிப்பு
Re-insurance — மறு இன்சூரன்சு
Remittance — பணம் அனுப்புகை
Rendu — முழுச் செலவடங்கிய விலை
Report — அறிக்கை
Respordentia bond — கப்பல் சரக்கீட்டுக் கடன் பத்திரம்
Revocation — மறுப்பு, நீக்கம்
Reward — ஊதியம்
Rentenmark — ரென்டன்மார்க்கு (நாணயம்)
Restriction — தடை
Rising Phase — ஏறுமுகம்
Risk — விபத்து

## S

Safe custody — காவல் வைப்பு
Sale of goods — சரக்கு விற்பனை
Salesmanship — விற்பனைத்திறம்
Sales Promotion — விற்பனை உயர்வு
Sample — மாதிரிச் சரக்கு
Sans frais — செலவின்றி
Sans Recourse — பொறுப்புச் சாட்டின்றி
Savings — சேமிப்பு
Scarcity — கிடைப்பருமை
Security — ஈடு, பிணைப்பத்திரம்
Shares — பங்குகள்
Shipping Bill — ஏற்றுமதிப் பட்டியல்
Shipping Note — ஏற்றுமதிக் குறிப்பு
Shipping Order — ஏற்றுமதி ஆணை
Shipping Documents — கப்பல் பத்திரங்கள்
Short Bonds — குறுந்தவணைப் பத்திரங்கள்
Short-term — குறுகிய கால
Single Exchange — ஒற்றை மாற்றுமுறை
Slump — மந்தம்
Social Justice — சமூக நீதி
Social Services — பொதுநலப் பணிகள்
Solvent — வகையுள்ள
Soverignity — அரசுரிமை

Sound — நிறைவான
Special Lists — தனிப் பட்டியல்கள்
Specialisation — சிறப்புத் தேர்ச்சி, சிறப்பீடுபாடு
Specific Duty — அளவு விகிதவரி
Speculation — ஊக வணிகம்
Spot Rate of Exchange — உடனடி மாற்றுவீதம்
Standard Measure — பொது அளவை
Standard Price — நிலையான விலை
Static — எவ்வித மாற்றமும் அற்ற நிலை
Sterling — ஸ்டெர்லிங்
Sterling area — ஸ்டெர்லிங் மண்டலம், வட்டாரம்
Stale Cheque — நாட்பட்ட செக்கு
Stamp duty — முத்திரை வரி
Standardising — தரப்படுத்தல்
State trading — அரசு வணிகம்
Stimulus — ஊக்கி
Stinting — செலவு ஒடுக்கம்
Stock — பங்குத் தொகுப்பு
Stock Broker — பங்குத் தரகர்
Stock Exchange — பங்கு மாற்று நிலையம்
Stock-Jobber — பங்கு வர்த்தகர்
Stoppage in transit — நடுவழி நிறுத்தம்
Stock-Keeping — பண்டக் காப்பு
Store — பண்டகசாலை
Store of Value — மதிப்பின் நிலைக் களன்
Subnogation — பகர உரிமை
Subscribed Capital — ஒப்பிய முதல்
Subscription — ஒப்புதல்
Sub-agent — துணை பதிலாள்
Substituted agent — மாற்றுப் பதிலாள்
Super Profit — மிகை இலாபம்
Supply — அளிப்பு, கொடுப்பு
Surplus amount — உபரித் தொகை
Survey — அளவாய்வு
Symbol — குறியீடு
Symptom — அறிகுறி

## T

Tariff — சுங்கவரி வீதப்பட்டியல்
Taxes — வரிகள்
Telegram — தந்தி
Telephone — தொலைபேசி
Time Policy — காலவரம்புப் பாலிசி
Tight Money — பண முடை
Thrift — சிக்கனம்
Theory — கோட்பாடு
Till Money — பேழை ரொக்கம்
Time Deposit — தவணை வைப்புக்கள்
Token Money — ஒப்பு நாணயம்
Trade — வாணிபம்
Trade association — வாணிகச் சங்கம்
Trade Commisioner — வாணிக ஆணையர்
Trade Mark — வாணிகக் குறி
Trade Cycle — வாணிகச் சகடம்
Trade Mission — வாணிகத் தூதுக்குழு
Trade Union — தொழிற்சங்கம்
Tramps — வழி நிர்ணயமற்ற கப்பல்கள்
Transferee — மாற்றப் பெற்றவர்
Transactions — நடவடிக்கைகள்
Travelling Agent — பயணப் பதிலாள்
Travellers Cheque — பயணச் செக்கு
Transport — போக்குவரத்து
Travelling Expenses — போக்குவரத்துச் செலவு
Treasurer — கருவூலர்
Treasury Bills — கருவூல உண்டியல்
Treasury Deposits — கருவூல வைப்புக்கள்
Trust — நம்பிக்கை, டிரஸ்டு, பொறுப்புரிமை
Trustees — நம்பிக்கையாளர்கள், பொறுப்புரிமையாளர்கள்

## U

Uberimae Bidei — நன்னம்பிக்கை
Ultra Vires — அத்து மீறிய
Unascertained goods — அறுதியிடாச் சரக்குகள்

